# Bagavath Gita in Tamil According to Peace Scripture

Commentry By

Kirubanandan Pazhaniveluchamy



முன்னுரை !!





கிரிஸ்ணர் ஒரு இறைதூதர்--கடவுளின் பிரதிநிதி என்பதாக எடுத்துக்கொண்டு கீதையை படிப்பதும் அதன் உபதேசத்தை உள்வாங்கி கடைபிடித்து பக்குவப்பட்ட ஆத்துமாவாக மாற முயற்சிப்பது மனிதனுக்கு நல்லது!

கீதையில் கிரிஸ்ணர் தன்னை கடவுள் என்று சொன்னதாக சில வார்த்தைகள் உள்ளன!இந்த வார்த்தைகள்

திரிக்கப்பட்டவை என்பது என் கருத்து!கீதையின் மூலமான கருத்தையும் அதன் ஓட்டத்தையும் உள்வாங்குகிற ஒரு நபர் அவர் தன்னை கடவுள் என்று சொல்லியிறுக்கவே மட்டார் என்பதை உணரலாம்!அவர் கடவுளை அடைவதற்கு எது நல்ல பாதை என்பதைப்பற்றி விலா வாரியாக ;வழிபாடு என்கிற சடங்கு மட்டும் போதுமானதல்ல--ஒரு பக்தன் தன் மனதை;வாழ்வு முறையை திருத்த வேண்டும்--தன்னை உணர்ந்து தன்னைதானே சீர்திருத்த வேண்டும் என்கிற அறிவியல்பூர்வமான தத்துவ தெளிவை முன் வைத்தவர்!

அவரது காலம் அசுரர்கள் ஆதிக்கம் மேலோங்காத துவாபர யுகம் !--கலியுகம் தொடங்குவதற்கு முந்தய காலம்! கி.மு 5000 ஆண்டுகளுக்கு முற்பட்ட காலம் கலியுகத்திற்கு முன்பு அசுரர்கள் நேரடியாக பூமியில் கிரியை செய்தார்கள் அவர்களை

கிருஸ்ணர் அழித்தபிறகு அவர்கள் நேரடியாக கிரியை செய்யாமல் மனிதர்களின் சிந்தனையில் இச்சைகளை துண்டி ; இன ; மத வெறிகளை தூண்டி மனிதருக்கு மனிதர் தீங்கிழைத்துக்கொள்ள மறைமுகமாக - பின் புலத்தில் அரூபமாக செயல்படுபவர்களாக மாறிக்கொண்டனர் ! கலியுகத்தில் கொஞ்ச நாள் மனிதர்களின் சிந்தனைகள் அசுரர்களால் சீர் கெடுவதை அனுமத்தித்தும் - இப்படி நடக்கும் என சுட்டி காட்டி விட்டும்தான் கிருஸ்ணர் பரமேறினார்



கலியுகத்தில் ஆரிய தேசத்தில் (மத்திய கிழக்கு ஆசியாவில் ) ஆப்ராகாம் என்பவர் நல்ல பக்தராக கடவுளை தேடியதால் ; இதுவரை இந்தியாவில் - திராவிடர்களுக்கு மட்டுமே வேதம் வெளிப்படுத்தப்பட்டு மற்ற இனங்களுக்கு வேதம் இல்லாததை கொடுக்கவும் கடவுள் சித்தம் வைத்தார் ஆப்ரஹாம் மூலமாக வேதங்கள் யூதம் ; கிறிஸ்தவம் ; இசுலாம் ஆகியவை

வெளிப்படுத்தப்பட்டன
குரானுக்கு பின்பு ஆரியத்தில் வந்த ஒரு முக்கியமான மார்க்கம் பஹாய் கிருஸ்ணரை இறைதுதராக அங்கீகரித்துள்ளனர் அத்தோடு கலியுக முடிவில் உலகை நியாயம் தீர்க்க வரப்போகிறவர் என ஆப்ராகாமிய வேதங்கள் அங்கீகரித்துள்ள மேசியா கிருஸ்ணரே என ஒத்துக்கொண்டுள்ளனர்

பைபிளும் குரானும் வரப்போகிறவர் இயேசு என சொல்லும்போது அவ்வழியில் அடுத்து வந்த பஹாய் மார்க்கம் அது கிருஸ்ணர் என்பதை ஒத்துக்கொண்டுள்ளது



கீதை 4:6 நான் பிறப்பற்றவனாகவும்; அழிவற்ற எனது ஆத்துமசரீரம் நித்தியஜீவனுள்ளதாகவும் இருந்தாலும் நான் அதனை தாழ்த்தி யுகங்கள் தோறும் இப்பூமியில் அவதரிக்கிறேன்! எனென்றால் நானே இப்பூமிக்கு கடவுளின் பிரதிநிதியும்; பூமியில்உள்ள அனைத்து உயிரிணங்களின் யுகபுருஷனும் ஆவேன்!!

கீதை 4:7 எப்போதெல்லாம் எப்போதெல்லாம் ஆன்மீக மதிப்பீடுகள் தொய்வடைந்து அதர்மம் தலைவிரித்தாடுகிறதோ அப்போதெல்லாம் நான் பூமிக்கு இறங்கி வருகிறேன்!!

கீதை 4:8 பக்தர்களை ரட்சிக்கவும் தீமை புரிந்து பூமியில் குழப்பம் செய்வோரை அழிக்கவும் மீண்டும் தர்மத்தை நிலைநாட்டவும் யுகங்கள்தோறும் யுகங்கள்தோறும் இப்பூமியில் அவதரிக்கிறேன்!!



இந்து மார்க்கத்தினர் திரேதா யுகத்தில் ராமராக வந்தவர்தான் துவாபர யுகத்தில் கிருஸ்ணராக வந்தார் ; அவர்தான் கலியுக முடிவில் கல்கியாக சத்திய யுகத்தை நிறுவ வருவார் என்பதை அறிந்திருக்கின்றனர்

கலியுகத்தில் ஆரியத்தில் வந்த வேதத்தினர் யுக முடிவில் இயேசு வருவார் என

எதிர்பார்க்கின்றனர்

உண்மை யாதெனில் கிருஸ்ணர் தான் கலியுகத்தில் ஆரியத்தில் இயேசுவாக வந்தார் என்பது - இந்தியாவைத்தவிர்த்து - திராவிடர் அல்லாத மற்ற இனத்தாருக்காக அவர் இயேசுவாக அவதரித்தார்

துவாபர யுகத்தில் கிருஸ்ணர் அசுரர்கள் பூமியில் நேரடி தலையீடு செய்வதை அழித்தார் . கடவுளை அடைய 18 யோக சூத்திரங்களை கீதையாக அருளினார் ரிக் யஜூர் சாம அதர்வண வேதங்களில் ஆங்காங்கே மனிதர்களின் பிரார்த்தனைகளாக விரவிக்கிடக்கும் உண்மைகளை - சத்தியத்தை பிழிந்து ரசமாக கீதையாக கொடுத்து விட்டார் 4 வேதங்களை படித்தறிவதும் கீதையை அறிவதும் ஒன்றே



அவரைப்பற்றியும் மஹாபாரத யுத்தத்தை பற்றியும் கீதையை பற்றியும் செவி வழி

செய்தியாக நாடகமாக பல ஆண்டுகள் இந்தியாவில் வழங்கி வந்ததை `வியாச` முனிவர் தொகுத்து எழுதினார்!இதற்குள் பல திருத்தல்கள் நேர்ந்து விட்டது!கிரிஸ்ணர் என்ற இறைதூதர்-மலக்கு தூதர் காலத்திற்க்கும் வியாசருக்கும் நீண்ட கால இடைவெளி உள்ளது என்கிற கவணத்தோடு கீதையை ஆராயவேண்டும்!

கிரிஸ்ணர் ஒரு தூதர்--கடவுளின் பிரதிநிதி என்பதாக எடுத்துக்கொண்டு கீதையை படிப்பதும் அதன் உபதேசத்தை உள்வாங்கி கடைபிடித்து பக்குவப்பட்ட ஆத்துமாவாக மாற முயற்சிப்பது மனிதனுக்கு நல்லது!



யார் கடவுள் என்பதை அறிந்து கொள்வதால் ஒரு பிரயோஜனமுமில்லை!அதைவிட கடவுளை கடவுள் என்று மட்டும் எடுத்துக்கொண்டு அவருக்கு உகந்த வாழ்க்கையை எப்படி வாழ்வது என்பதை கற்றுக்கொள்வதும் பயிற்சி செய்வதும் சிறந்தது;மனிதர்கள் சரியான பாதையில்

முன்னேற விடாமல் தடுக்க இடைவிடாது முயற்சி செய்யும் அசுரர்களே ஒன்றுக்கும் உதவாத `யார் கடவுள்` என்கிற விசயத்தை பிரபலமாக்கி அதை தூண்டி மதசண்டை போடவும் ஒன்றைஒன்று வெறுத்து அதிலுள்ள உண்மைகளை அறிய விடாமல் தடுப்பதுமான சதியை செய்து வருகிறார்கள்!ஒருவர் கடவுள் யார் என்பதை அறிந்து இருந்தும் தங்களிடமுள்ள ஆணவம் ; கன்மம் ; மாயை ஆகியவைகளை விட முடியாமல் மண்ணாசை ; பொன்னாசை ; பெண்ணாசைகளில் உழன்று கொண்டிருந்தால் அவருக்கு ஒன்று ஆகப்போவதில்லை ஐந்து வேலை தொழுவதால் மட்டும் சிலரை சொர்க்கத்தில் கொண்டு போய் விட்டால் அந்த சொர்க்கமும் நாறிப்போய் கடவுள் வேறு இடம் பார்த்துக்கொண்டு போவதத்தை தவிர வழியில்லாமல் போய் விடும்



ஆகவேதான் பக்தி மார்க்கத்தில் உள்ள

நல்லோர்களையும் இப்பூமியிலேயே சத்திய யுகத்தில் வாழ வைத்து அவர்களை செம்மைப்படுத்த கல்கியோ அல்லது இயேசுவோ மீண்டும் பூமிக்கு வருவது கடவுளின் திட்டமாக இருக்கிறது எல்லா மதங்களிலும் கடவுளின் வெளிப்பாடு உள்ளது!அது போல் எல்லா மதங்களிலும் அசுர மாயைகளும் கலந்து விட்டன! கடவுளிடமிருந்து வராத மதங்கள் அனைத்தும் ஏற்கனவே அழிந்து போய் விட்டன . இவ்வளவு மதப்பிரச்சாரத்திற்கு பின்பும் ஒரு மதம் அழியாமல் இருக்கிறது என்றால் அது கடவுளிடமிருந்து வந்தது என்பதை எல்லா மதத்தினரும் உணரவேண்டும்



கடவுளால் இறைதூதர் என பிரபலபடுத்தப்பட்ட ஒரு தூதர் அதற்கான சாண்றுகளை அவர் வாழ்ந்த காலத்தில் வெளிக்காட்டி இருப்பார் !அப்படிப்பட்ட ஒரு நபர் உயிரோடு இறுக்கும் போது கடவுளின்

அதிகாரத்தின் பேரில் சொல்லுகிறது போல அவர் சென்று போன பிறகு அவர் எழுதியதை புரிந்து கொண்டு நடக்கிற நம்மை போன்ற சாதாரன மனிதர்கள் சொல்லக்கூடாது!

ஒரு இறைதூதருக்கு வெளிப்படுத்தப்பட்டது அன்றைய சுழ்நிலையைப்பொருத்து அவருக்கு மட்டுமே சொல்லப்பட்டது அதை நாம் வாசித்து விட்டு கடவுளின் ஏஜெண்டு போல கற்பனை செய்துகொள்ளகூடாது இன்றைக்கு இப்படிப்பட்ட கற்றுக்குட்டி ஏஜெண்டுகள் அநேகர் தோன்றி கடவுளுக்காக என நினைத்துக்கொண்டு மற்ற மனிதர்களை கொண்று நேராக நரகத்துக்கு சென்று கொண்டிருக்கின்றனர்

நாம் புரிதலில் குறைவுள்ளவர்கள் என்கிற தாழ்மை நம்மை கடவுளிடத்து நனமைகளை பெற்றுத்தரும்!

குர்ஆன்3:55 பின்னர் உங்களுடைய

திரும்புதல் என்னிடமே இருக்கிறது; (அப்போது) நீங்கள் தர்க்கம் செய்து கொண்டிருந்தது பற்றி நான் உங்களிடையே தீர்ப்பளிப்பேன்" என்று கடவுள் கூறியதை (நபியே! நினைவு கூர்வீராக)!

குருஷேத்திர யுத்தம் என்பது என்ன?

குருஷேத்திர யுத்தம் என்பது நடந்ததா ?நடக்கவில்லையா ?ஏன் நடந்தது என்பதை விட யுத்தம் தொடங்கும் முன் ஒரு மனிதனாகிய அர்ச்சுனனுக்கு உண்டான மன கலக்கம் என்பது அன்றாடம் மனிதர்களுக்கு --முக்கியமாக கடவுளை தேடி அவரை கண்டடைய முயலும் பக்தனுக்கு எதிர் வருகிற சவாலே ஆகும்! இத்தகைய சோதனைகள் --இடறல்கள் உண்டாகும் பொது அதனை எதிர்கொள்ள நமக்கு அறிவூட்டும் ஞான உபதேசமே கீதை!கீதை வாழ்க்கைக்கான உபதேசம் ;பக்தனுக்கு கடவுளை நோக்கிய பயணத்தில் அன்றாட

வாழ்வை கடந்தோட அனுபவ பூர்வமான
செயல்முறை பயிற்சி! உலக வாழ்க்கையில்
பல படித்தரமான நிலைமையில் மனிதர்கள்
படைக்க படுகிறோம்!ஒரு சக்கரத்தின்
அச்சுகள் பல உருப்புகள் எப்படி ஒன்றாக
இணைக்க பட்டு அது
சுற்றுகிறதோ;அதுபோல உலகவாழ்க்கை
செம்மையாக நடக்க பலவிதமான
வேலைகள்,பொறுப்புகள்,கடமைகள் பலரால்
செய்ய
படவேன்ண்டியுள்ளது!ஏற்றதாழ்வுகள்,பதவிக
ள்,
பட்டங்கள்,செம்மைகள்,வறுமைகள்,முரண்பா
டுகள் என கணக்கிலடங்கா பேதங்கள்
இருந்தாலும் எல்லோரும் கடவுளை
பொருத்து முக்கியமாணவர்களே!ஒரு சிரு
துரும்பும் அவரின் கண்காணிப்பிலும்
பேணுதலிலும் உள்ளன!அதுஅதற்குரிய
எல்லையும் சுதந்திரமும் கொடுக்க
படாமலுமில்லை!

**ஒரு காசுக்கு இரண்டு அடைக்கலான் குருவிகளை விற்கிறார்கள் அல்லவா? ஆயினும் உங்கள் பிதாவின் சித்தமில்லாமல், அவைகளில் ஒன்றாகிலும் தரையிலே விழாது.உங்கள் தலையிலுள்ள மயிரெல்லாம் எண்ணப்பட்டிருக்கிறது.(இயேசு;மத்தேயு 10:29)**

கடவுள் நம்மை ஜனிக்க செய்த நாள் முதல் நம்மோடே இருக்கிறார்;நம்மிடம் அவருக்கு ஒரு குறிப்பிட்ட பணி-திட்டமும் இருக்கிறது என்கிற உள்ளுணர்வு நமக்கு வேண்டும்!அவர் நம்மைப்பற்றிய நோக்கம் வைத்துள்ளார் என்கிற புரிதலே நமக்கு சந்தோசத்தையும் நம்பிக்கையையும் அவரிடம் உள்ளார்ந்த உறவையும் கொண்டுவந்து விடும்!உள்ளார்ந்த உறவை அனுபவிக்க தெறியாத--முடியாத நிலைமையிலேயே பக்தி செலுத்தியும் வழி விலகி போகிறார்கள் சிலர்!அது ஒரு அறியாமையே!

இப்பூமிக்குரிய வாழ்க்கை என்னும் குருஸேத்திர யுத்தத்தில் மனிதனாகிய அர்ச்சுணன் ஒரு போதும் தனித்துவிடப்படவில்லை!அவனுக்கு வழிகாட்டும் படியாக அவனருகில் இறைதூதனாகிய கிரிஸ்ணர் இருந்தார்!அன்றைய உலகில் இறைவனை நெருங்கிய நபராகிய கிரிஸ்ணர் என்பவரை அர்ச்சுணன் குருவாக ஏற்றுகொண்டிருந்தது அவனுக்கு கடவுளின் வழிகாட்டுதலை உறுதி செய்துவிட்டது!அவன் கடவுள் மீது பக்தியுள்ளவனாகவும் இறைதூதனால் நண்பன் என அழைக்கபடும் உறவுக்குள் உள்ளவனாகவும் இருக்க முடிந்தது!பக்தி உள்ளுக்குள் விளைந்து கடவுளோடு உறவாக பரிணமிக்க வேண்டும்!



எல்லா மனிதர்க்குள்ளும் கடவுளுடன் உறவை அனுபவிக்க முடியவில்லையே என்கிற இனம்காணாத துயரம் இருக்கிறது!எல்லா மனிதர்களுக்கும் ஆத்தும

தாகம் ஆழ்மனதில் இருக்கும் அது தனது உயிர் பிரிந்து வந்த கடவுளை குறித்தது! இந்த பிரிவு துயர் அடையாளம் மாறி உடலை தானாக என்னி மண்ணாசை பெண்ணாசை பொண்ணாசை ஆக மாறி நிற்கிறது இதில் முழுமையும் திருப்தியுமடைய முடியாமல் முட்டி மோதி தவிக்கும்போது இனம்புரியா வேதனை வெளிப்படும் விரக்தியாகவோ வக்கிரமாகவோ மாறவும் வாய்ப்புண்டு! இந்த ஏக்கம் நமது பிதாவாகிய கடவுளைக்குறித்த தேடலாக பக்தியாக பரிணமித்தால் இறைவனோடு இடைபடுதல் உண்டாகும்!அந்த தேடலுக்கு கடவுள் தன்னை உணர்ந்த மனிதர்களை நமக்கு குருவாக அனுப்பி வைப்பார்!



**யார் குரு?குருவிலும் பல படிகள் இருக்கிறதா ?சற்குரு யார் ?**

யாரிடமிருந்தும் கற்றுகொள்கிற மன நிலை முதலாவது கடவுளை தேடுகிற சாதகனுக்கு

வேண்டும்!ஏனென்றால் பூரண உண்மை,முற்றறிவு என்பது கடவுளின் தன்மை!முற்றறிவை நெருங்குவது என்பது குருடர்கள் யானையை தடவிய கதை என்பதை எப்போதும் நினைவில் கொள்ளவேண்டும்!

குருடர்கள் உணர்ந்ததெல்லாம் தவறு என ஒதுக்க முடியுமா?மனிதர்களின் முன்னேறிய அறிவு இப்படிபட்டதே!தும்பிக்கை கயிறு போலுள்ளது என்பது `பகுதி உண்மை`!கால் உலக்கை போலுள்ளதும் `பகுதி உண்மை`!இப்படிப்பட்ட பல `பகுதி உண்மைகள்` ஆண்மீக உலகில் வலம் வருகின்றன!இவை தவறல்ல!நான் கண்டதுதான் உண்மை மற்றது தவறு என புறந்தள்ளுவதில் தவறு வருகிறது!

யானை கயிறு என்பதிலும் எவ்வளவோ மனதை மயக்கும் விளக்கங்களும் நுணுக்கங்களும் இருக்கும்!இவைகளை அறிந்துகொள்வதும் கடவுளை தேடுகிற ஒரு

பாதையே!ஒரு பாதையில் கொஞ்சம் முன்னேறியவுடன் மற்ற பாதைகளில் உள்ள `பகுதிஉண்மைகளை` உள்வாங்கினால் முழுமையை நோக்கி முன்னேற முடியும்!ஆனால் தான் கண்டதுமட்டுமே உண்மை என்கிற மாயை தடுக்கிறது!அப்படியில்லாமல் மாற்று கருத்துகளை `விசாரம் செய்வது` உள்வாங்குவது கடவுளை நெருங்குகிற `யோகம்` என்கிறது கீதை!

பரமாத்துமாவை சிலர் தனக்குள்ளாக மூழ்கி தியானிப்பதாலும்;சிலர் தத்துவ விசாரம் செய்து முற்றறிவை விளையவைப்பதாலும்;இன்னும் சிலர் பலனில் பற்றுவைக்காத கர்மயோக உழைப்பினாலும் கண்டடைகிறார்கள்!--கீதை13:25

மனிதாபிமானம்,அஹம்பாவமின்மை,அஹிம்சை,சகிப்புதன்மை, எளிமை உடயவனாய் இறைதண்மை உணர்ந்த குரு ஒருவரை

அண்டி
சுயகட்டுப்பாடு,நிலைத்தமனம்,பரிசுத்தம் கற்று புலனிண்பங்களை விட்டவனும் ;பிறப்பு இறப்பு முதுமை வியாதி என்கிற பயத்தை கடந்து நான் என்கிற சுயத்தை அழித்தவனும் வீடு மனைவி பிள்ளைகள் செல்வம் என்கிற பந்தங்களில் தவிக்காதவனும் விருப்பு வெறுப்பு இரண்டிலும் மனசம நிலையை அடைந்தவனும் உள்ளார்ந்த பக்தியில் நிலைத்தவனும் தன்னை உணர்வதிலும் எல்லா தத்துவங்களையும் விசாரம் செய்து முற்றறிவை பெறுவதிலும் சலிப்பில்லாதவனுமாகிய இவைஅணைத்தையும் செய்கிறவனே ஞானி --இதில் ஒன்று குறைந்தாலும் அவன் அஞ்ஞானத்தில் உழல்பவனே!---கீதை 13:8

மேற்கண்ட குணாதிசயங்கள் அடையப்பெற்றவர் இறைதண்மை உணர்ந்த குரு!முழுமையடையாத ஒன்றிரண்டு கைவரப்பெற்றவரும் குருவாகிவிட

முடியும்!தன்னை விட பெரிய குருடனுக்கு சிறிய குருடன் சிறப்பாகவே வழிகாட்ட முடியும்!நாமும் கற்று கொள்ளவேண்டும்!ஆனால் அந்த குருவையே பெருமை பேசிக்கொண்டு தேங்கி நின்று விடாமல் அடுத்த அடுத்த படிகளில் உள்ள குருமார்களிடம் கற்றுகொண்டே வளறவேண்டும்!இதற்கு ஜன்னலை திறந்துவைத்து பழகவேண்டும்!மாற்று கருத்துகளை உள்வாங்கவேண்டும்!ஆனால் கிணற்று தவளை மனப்பாண்மை மனிதனை வஞ்சிக்கிறது!தெறிந்த விசயத்தையே திரும்ப திரும்ப பேசகேட்டு புளகாங்கிதம் அடையும் ஒருகூட்டத்தில் திருப்தியடைந்து விடுகிறோம்!நான் பெருசு நீ சிருசு என சண்டையும் போடுகிறோம்!மனித முயற்சியால் குருவாக உயர்ந்தவர்களிடம் கற்று கொள்ளவேண்டும்!ஆனால் அவர்களை கடந்து சற்குருவை நாடி செல்லவேண்டும்!``தேங்கிய தண்ணீர் சாக்கடை ``ஆகிவிடும் !நாம் தேங்காமல்

தேடவேண்டும் !

முற்றறிவாளன் கடவுள் ஒருவரே!அவர் தனது செய்தியை;வழிகாட்டுதலை;ஞானத்தை தனது வாயாக உலகிற்கு தானே அனுப்பிய இறைதூதர்கள் மூலமாக அவ்வப்போது வெளிபடுத்தியுள்ளார்!இந்த இறைதூதர்கள் மூலமாக அந்த காலகட்டத்திற்கு அருளபட்டவைகள் பின்னாளில் கலப்படமும் அடைந்து விடுகின்றன!இருந்தாலும் அவைகளை கவனத்துடன் ஆராய்ந்து வேதத்தை உள்வாங்க வேண்டும்!அவைகளில் கலப்படங்களை மட்டும் சுட்டிகாட்டி ஒதுக்கிவிடாமல் சாரத்தை பிழிய கற்றுகொள்ள வேண்டும்!



உலகின் சற்குருநாதர்கள் நால்வர் மட்டுமே ஒருவர் ஆத்மாவிற்கு சற்குருவான நாராயணன் அடுத்தவர் சரீரத்திற்கு சற்குருவான சிவன் . நன்மை தீமைகளை தூண்டி விடும் சற்குரு ஆதி சேஷன்

என்றால் அதில் அடி உதை பட்டு நிம்மதியை தேடுவோருக்கு பக்தி ; யோகம் ; சாந்தி சௌபாக்கியத்தை அருளும் ஆதிசக்தி .

சரீரத்தில் அப்பியாசிக்கப்படும் யோகக்கலைகள் - தியானம் தவம் வாசி யோகம் முதலானவை சிவனை - தட்சினாமூர்த்தியாக - வழிவழியாக சித்தர்கள் யோகிகள் மூலமாக உலகில் வந்துள்ளது



ஆத்மாவிற்கு வேதங்களாக (இந்து - ரிக் யஜூர் சாம அதர்வண வேதங்கள் - சதுர் வேதங்கள - இவற்றின் சாரமான கீதை ; ஆரியத்தில் யூதர்களின் தவ்ராத் ; கிறிஸ்தவர்களின் பைபிள் ; இசுலாத்தின் குரான் ) சிந்தையில் உணர்ந்து வாழ்வை சீர்படுத்துவதாக ; சமூக சட்டங்களாக ; பிராத்தனையின் மூலமாக கடவுளோடு உறவு கொள்வதாக உள்ளவை

ஆத்மாவிற்கு சற்குருவானவர்கள் 1)ஸ்ரீராமர் 2)கிரிஸ்ணர் 3)இயேசு 4)முகமதுநபி மட்டுமே!இவர்கள் அவதார துதர்கள் . இவர்களோடு கூட மனிதர்களில் மேம்பட்ட ஆத்மாக்கள் புத்தர் ; மகாவீரர் ; வள்ளலார் ஆதி சங்கரர் ; மத்வர் ; ராமானுஜர் குருநானக் ; ராகவேந்திரர் என்றால் ஆரியத்தில் மோசே முதலான ஆப்ராகாமிய துதர்கள் வரை மட்டுமே அந்த காலகட்ட சமுதாயத்தில் உள்ள சாதாரண மக்களும் இறைவனோடு ஒப்புறவு ஆக்கியவர்கள்!வேதம் கொணர்ந்தவர்கள்!

இவர்கள் எல்லொரும் ஏக இறைவனை வணங்க ஊக்கபடுத்தியவர்கள்! இவர்கள் எல்லோரையும் உள்வாங்கி கடவுளை நெருங்கி செல்ல முயற்சிப்பது நமது கடமை!இவ்வேதங்களில் சமூகத்தில் கலப்படங்கள் சீர்கேடுகள் அதிகரிக்கும் போது கடவுள் இன்னொரு இறைதூதரை அனுப்புவார்!அவரை அனுப்பும்படி நாமும்

வேண்டவேண்டும்! அதை விட்டு விட்டு எங்கள் தூதர் மட்டும்தான் துதராக இருக்கவேண்டும் வேறு யாரையும் அணுப்பகூடாது என கடவுளுக்கே கட்டுப்பாடு போடுவது குழந்தைதனமானது !!

கீதையின் மஹத்துவம் என்னவென்றால் எல்லா மனிதர்களும் அவரவர் உள்ள படியிலிருந்து கடவுளை அடைய 18 பாதையை மிக ஆழமாக விஞ்ஞான பூர்வமாக எளிமைபடுத்தி உபதேசித்துள்ளது!நாம் அறைகுறையாக செய்துகொண்டிருப்பதை பட்டைதீட்டி கொடுத்துள்ளது!கீதையின் சாரத்தை பிழிந்துகொண்டவன் மாத்திரமே ஆண்மீக வாழ்வில் தான் கடைபிடிக்கும் மார்க்கத்தை ஜீவனுடன் புரிந்து கொள்ளமுடியும்!கீதையை புரிந்துகொண்டால் மட்டுமே இந்து வேதங்களையும் பைபிளையும் குரானையும் புரிந்துகொள்ளமுடியும்!இல்லாவிட்டால் வெறுமையான வழிபாடாகவும் சடங்காகவும்

**சம்பிரதாயமாகவும் சண்டைபோடுகிறதாகவும் கலப்புள்ளதாகவும் முடியும்!**

உண்மைகளை மறக்கடித்து மாயம் செய்கிறவைகள் மனிதனது குணங்கள் மட்டுமல்ல!உபதேசங்களில் கலப்பையும்;திரித்து உபதேசிப்பதும் மனிதனை விட மேலான சக்திகளான அசுரர்களின் மாய்மாலங்களாகும்!மனிதர்கள் தேராமல் நியாயத்தீர்ப்பு நாளன்று தங்களுடன் அழிக்க படவேண்டும் என்பது அசுரர்களின் திட்டமாகும்!கடவுளால் படைக்க படுகிற மனித ஆத்துமாவை அவனது சரீரத்தின் புலனிச்சைகளை தூண்டி அதற்கு சந்தர்ப்பமும் ஏற்படுத்தி உலக மாயைகளில் உலலும் படி அசுரர்கள் செய்கிறார்கள்!மனிதன் தவறுக்கு போகும் போது அதற்கு ஒத்துழைப்பு அதிகம் உண்டாக்குவதும் அசுரர்களே ! அதே மனிதன் கடவுளை நாடும்போது அதற்கு

சொல்லொண்ணா முட்டுகட்டைகளை பிரச்சினைகளை உண்டாக்குவதும் அசுரர்களே !

ஒவ்வொரு மனிதனின் மூலமும் இறைசக்தியும் அசுர சக்தியும் ஒவ்வொரு நாளும் குருஸேத்திர யுத்தம் நடத்தி கொண்டுதான் உள்ளனர் ! மனிதனை தீங்குக்கு அழைக்க அசுரர்கள் படைதிறண்டு கவ்ரவர்களாய் தாக்குகிறார்கள்!



மனித சரீரமாகிய தேரில் குடிகொண்டு உள்ள ஆத்துமாவாகிய அர்ச்சுணன் மீது அசுரர்கள் தாக்கும்போது அர்ச்சுணன் தனது சாரதியாக--வழிகாட்டியாக இறைதூதனாகிய கிரிஸ்ணரை வைத்து அவரின் உபதேசத்தை கேட்டு அசுரர்களுடன் அனுதினம் யுத்தம் செய்து ஜெயிக்க வேண்டும் என்பதே குருஸேத்திர யுத்தம்!

இந்த யுத்த களத்தில் மனித ஆத்துமாக்கள் அசுரர்களுடன் போரிட்டே ஆகவேண்டும்

என்பதை பலர்
ஏற்றுகொள்வதில்லை!போர்க்களம் உணராத
போர்வீரனாய் இருப்பது அறியாமையின்
உச்சகட்டமாகும்!மனிதர்களிடம் உள்ள தீய
குணங்கள் அவர்களை மயக்கும்
மாயைகளை அவர்கள் அஹிரினை என
கருதுகிறார்களே தவிர அவைகளின்
பின்னணியில் அக்குணங்களை தூண்டி
விடும் அசுரர்கள் என்கிற உயர்திணை -
ஆவிமண்டல அசுரர்கள் ,உள்ளனர் !
அவர்கள் மனிதனை விட உயர்ந்த சக்திகள்!!



கடவுளை அடையும் பாதையில் தனகுள்ளும்
புறத்திலும் அசுரர்களுடன் மனிதன்
போராடியே ஆகவேண்டும் !எனவே கீதை
போர்க்களத்தில் வைத்து உபதேசிக்க
படுகிறது!!!

## தன்னுரை



ஏறக்குறைய ஏழு ஆண்டுகள் கடந்து விட்டது
கீதையை மறு பொழிப்பு செய்ய ஆரம்பித்து .
உண்மையாகவே இதைப்பற்றிய எந்த திட்டமும் எனக்கு இல்லை . வள்ளலாரைப்பற்றி கொஞ்சம்





அனுபவப்படவேண்டும் என்ற உணர்வு அப்போது இருந்தது .

ஆகவே நான் தைப்பூசம் அன்று வடலூர் சென்றேன் .
எல்லோரும் ஜோதி பார்க்க முட்டி கொண்டிருந்ததால் நான்

சித்தி வளாகம் சென்றேன் . கூட்டம் இல்லை . ஆகவே ஏகாந்தமாக தியானத்தில் ஆழ்ந்தேன் . .சற்று நேரத்தில் சிவந்த ஒளி ஒன்று தோன்றி என்னை நோக்கி வந்து என் நெற்றியின் ஊடாக எனக்குள் கலந்து விட்டது . உள்ளே ஒரு குரல் 2500 ஆண்டுகளுக்கு முன்பே இஸ்ரேல் தேசத்தில் முதல் முதலாக ஒளி தேகம் அருளப்பெற்றேன் . என்னைப்பற்றியும் அதில் உன்னைப்பற்றியும் கூட பைபிளில் எழுதப்பட்டுள்ளது . வரப்போகிற சமரச வேதத்திற்கான தரிசனத்தை முன்னெடு என்றது .




பைபிளில் யாராவ்து ஒளி தேகியாகி பரலோகம் போனாரா என தேடினால் எலியா என்றொரு தீர்க்கதரிசி கர்மேல்

என்ற மலையில் ஆசிரமம் அமைத்திருந்தார் எனவும் செத்தாரை எழுப்பினார் எனவும் ; குஸ்ட்டாரோகியன சிரியா நாட்டு படைத்தளபதியை குணமாக்கினார் எனவும் கடைசியாக உடலோடு பரலோகம் அழைக்க அக்கினிமயமான ரதங்களும் குதிரைகளும் பலர் பார்த்துக்கொண்டிருக்கும் போதே வானத்திலிருந்து வந்தன எனவும் அப்படி ஏறிப்போகும் போது அவரது சால்வையை எலிஜா என்ற சீடர் மீது போட்டார் எனவும் ; பின்பு எலிஜாவும் நிறைய சாதித்தார் எனவும் எழுதப்பட்டிருந்தது

தியான நேரம் போக நான் அங்கொரு குடிலில் ஓய்வெடுக்க படுப்பேன் . அப்போது அங்கே சிவனடியார் போல ஒருவரும் மற்றொருவரும் ஓய்வெடுப்பது போல இருந்துகொண்டு உரையாடுவது போல சன்மார்க்கிகள் கூட அறியாத பல விஷயங்களை வள்ளலாரைப்பற்றி பேசிக்கொண்டே இருந்தார்கள் . இப்படி இரண்டு நாளாளவும் எனக்கு தகவலாக தந்து எனக்குள் ஏற்றிக்கொண்டே இருந்தார்கள்

எதற்காக சமரச சத்திய என்று சங்கத்திற்கு பெயர் வைத்திருக்கிறீர்கள் என வள்ளலாரை கேட்டபோது தனக்கு பின்பு வருகிற தனித்தலைமைப்பதி சமரச சத்தியத்தை உங்களுக்கு அறிவிப்பார் .

இப்போது அதற்கான காலம் கணியாததால் தான் சொல்வதற்கில்லை எனவும் சமரச வேதாந்தி ஒருவர் வள்ளலாருக்கு பின்பு வருவார் எனவும் . தன்னை இன்னார் என நிரூபிக்க கலபட்டு ஐயா முதலானோரை உயிரோடு எழுப்பி வள்ளலார் கட்டியுள்ள எழுவார்மேடையில் சாட்சி சொல்ல வைப்பார்

அவரே வள்ளலாருக்கு பின்பு சமரச சத்திய சன்மார்க்க சங்கத்திற்கு தலைமையேற்று உலகம் சமரச சத்தியத்திற்குள் சுபீட்சம் பெருகும் .

சமரச வேதம் எப்படியிருக்கும் என மற்றவர் வினவ கீதை ; பைபிள் ,குரான் இவைகளுக்கிடையில் ஒன்றினால் ஒன்று செழுமையாகும்படியாக வசனங்கள் விரவி கிடப்பதாகவும் ; அந்த நபருக்கு அது தானாகவே வெளிப்படும் என்றும் சொல்லி முடித்துவிட்டு பின்பு அவர்கள் வரவில்லை

நானும் மூன்றாம் நாளில் எல்லோரும் சித்தி வளாகத்தில் முட்டி மோதிக்கொண்டிருக்க சத்திய ஞான சபையில் தியானித்து விட்டு ஊர் வந்து சேர்ந்தேன்

பின்பு முகநூலில் யாரோ கீதையின் ஒரு குறிப்பிட்ட சுலோகம் பற்றி விசாரம் செய்ய அதற்கு நான் விளக்கம் எழுத ;இப்படி தற்செயலாக கீதை மறுபொழிப்பு பணி ஆரம்பிக்கப்பட்டது .



ஒரு சுலோகத்தை பற்றி எழுதும் முன்பு அது தொடர்பாக அனுபவம் காரியம் வாய்க்கும்

அப்புறம் எழுத உள்ளுணர்வு பல முறை வந்த பின்பே எழுதுவேன்

கொஞ்ச நாள் கழித்து அதை வாசித்தால் அதற்கும் எனக்கும் சம்மந்தம் இல்லாதது போலவே இருக்கும்

கீதை உபதேசிக்கப்பட்ட காலத்தில் கிறிஷ்ணர் ; அர்ச்சுணர் ; சுற்றிலும் இருந்த கொஞ்ச பேர் மட்டுமே கேட்டார்கள் அதை ஞான திருஸ்ட்டியில் சஞ்சயர் கண்டு திருதராஷ்ட்ரருக்கு கூறினார்

அதை பிற்காலத்தில் பல ஆண்டுகள் கழித்து எழுதினார்கள் ஆகவே அது எழுதப்படும் முன்பே எவ்வளவோ கலப்படம் அடைந்து விட்டது

அதனால் முழுமையான கீதை இப்போது இல்லை என்பதே உண்மை
அதற்கு விரிவுரை எழுதியவர்களோ அவரவர் சம்பிரதாயங்கள் என்ற கண்ணாடியை போட்டுக்கொண்டு அந்த பார்வையிலேயே எழுதியதாலும் அதிலும் முழுமையான விளக்கம் இல்லை
கடைசியாக பொழிப்புரை சொன்ன பிரபுபாதா கூட கிறிஷ்ணரே முழு முதல் கடவுள் என நிரூபிப்பதே வேலை என்பதுபோல மாஞ்சு மாஞ்சு பக்கம் பக்கமாக எழுதியிருப்பார்
மார்க்கங்கள் ; சமயங்கள் ; யார் கடவுள் என ஆராய்வது என்பதற்கு அப்பாற்படு கீதை யோகங்களை ஆழ்ந்து விளக்கும் இலக்கண நூல்
இன்று உலகத்தில் அப்பியாசத்தில் உள்ள ; அத்தோடு இனிமேல் வரப்போகிற எந்த யோகக்கலையையும் 18 வகையான யோகங்களுக்குள் கிறிஷ்ணர் வரையறுத்துள்ளார்
அந்தந்த யோகத்தின் அடிப்படை என்ன ; அதன் கூறுகள் என்ன ; சிறப்புற கடைபிடித்து தேர்ந்து முன்னேறி செல்ல என்ன வழி என மிக அருமையாக உபதேசித்துள்ளார்
18 வகை யோகங்களே 18 அத்தியாயங்கள்
அந்தந்த யோகங்களை அந்தந்த யோகங்களில் நின்று நான் உணர்ந்தது எதுவோ அது பயன்படக்கூடிய யாருக்கேனும் பயன்படட்டும் என்பதற்கு மேலாக இந்த எழுத்தாக்கத்தில் எதுவுமில்லை
சில சுலோகங்களுக்கு பொழிப்புரை எழுதப்பட்டால் ; இதற்கும் எனக்கும் சம்மந்தம் இல்லை என 10 நிமிடமாவது தியானித்து மறந்தும் விடுவேன்

மும்மத சமரச வேதம் என்ற ஒப்புவமையும் எனக்கு வெளியாக்கப்பட்டதும் ஆங்காங்கு ஒன்றை ஒன்று செழுமைப்படுத்துகிறது . வரப்போகிறவரைப்பற்றிய பல வெளிப்பாடுகள் ; அவருக்கு இறைவன் கொடுக்கப்போகிற வாரங்கள் ; அற்புத அடையாளங்கள் என பல விபரங்கள் உணர்ந்துகொண்டேன்

இறைவனால் முன் குறிக்கப்பட்ட அந்த மகோன்னதமான ஆத்மா வெளியரங்கமாக வேண்டுமானால் அதற்காக பிரார்த்திக்கிற ஆத்மாக்கள் சிலர் முன்பு வந்து பிரார்த்திப்பார்கள் ; பரப்புரையும் செய்வார்கள்

பலரால் எதிர்பார்க்கப்பட்ட பின்பே அவரது வருகை சம்பவிக்கும் என்பதால் அந்த முன்னோடிகளில் நான் ஒருவன் என்ற பொறுப்பு இறைவனாலேயே சுமத்தப்பட்டே இந்த திசையில் பயணித்திருக்கிறேன் என்பது மட்டும் நிச்சயம்



நிச்சயமாக இதற்கும் எனது சிற்றறிவுக்கும் எந்த சம்மந்தமுமில்லை

இறைவனால் சுமத்தப்பட்ட பொறுப்பு என்னை இயக்கியிருக்கிறது என்பதை தாழ்மையோடு இறைவனுக்கு சமர்ப்பிக்கிறேன்

ஒவ்வொரு சம்பிரதாயிகளும் அவரவர் சம்பிரதாயம் என்ற கண்ணாடியை போட்டுக்கொண்டு கீதையை விளக்கம் செய்தது போல மும்மத சமரச வேதம் என்ற அடிப்படையில் இறைவனால் உணர்த்துவிக்கப்பட்ட படியே வசனங்கள் எடுத்தாளப்பட்டுள்ளன

கீதா உபதேசத்திற்கான காரணிகள்




துவாபர யுகத்தின் முடிவு நெருங்கிவிட்டது

ஒவ்வொரு யுகத்திற்கும் அதற்கென்று தகவமைக்கப்பட்ட மனித உடல் மற்றும் அதன் உள் கூறுகள் உள்ளன . துவாபர யுகத்துக்கென்று பிறக்க வைக்கப்பட அனைத்து ஆத்மாக்களும் ; அதே உடலுடன் கலியுகத்திற்குள் கடந்து செல்ல முடியாது

ஆத்மாக்கள் எதுவும் அழிவதில்லை ;
உடல்தான் அழிக்கப்படுகிறதே தவிர புதிய
உடலுடன் பூமியில் மறுபடி
பிறப்படைக்கிறார்கள்

ஒரு சிலர் மட்டுமே யுக மாறுதலுக்குள்
கடந்து செல்லும் தகவமைப்போடு
பிறந்தவர்களாக இருந்திருப்பார்கள்

முதல் மனித சமூகமான கிருத யுகமும் ;
அதன் லெமூரியா கண்டமும் ; 60 அடி
உயரமான மனிதர்களும் ; டைனோசர்
போன்ற உயரமான மிருகங்களும் கிருத
யுகத்திற்கு பிறகு பூமியில் இல்லை



பூமி முழுதும் ஜலப்பிரளயத்தால்
அழிக்கபட்டு ஒரு கும்பத்தில் அகத்தியரை
கொண்டு சில உயிர்கள் காப்பாற்றப்பட்டன
என தமிழக கும்பகோண கும்பமேழா
கதையிலும் ; வட இந்தியாவில்
சத்தியவரதன் கதையிலும் ஆப்ரகாமிய
வேதங்களில் நோவா @ நூவ் நபி பேழையில்

உயிர்கள் காப்பாற்றப்பட்டதாக வரலாறு சொல்லப்பட்டது

முதலாம் தமிழ்சங்கத்தில் ஆதம்நபி என்ற சிவனும் இறையனார் அகப்பொருள் என்ற கவிதை நூலை அரங்கேற்றியதும் தொல்காப்பியம் மூலம் அறிகிறோம்

தமிழகம் ; இமயமலை ; மக்கா அருகிலுள்ள அரபாத் புல்வெளி என பல்வேறு இடங்களில் சிவனார் வாழ்ந்து மனித குலத்தை ஆங்காங்கே உற்பத்தி செய்கதாக அறிகிறோம்



அதன்பின்னர் காரைக்குடி அருகிலுள்ள திருப்பத்தூரில் ஆதியோகியாக நீண்ட நெடிய தவம் இயற்றி அழிவுக்கேதுவான மனித சரீரத்தை மீண்டும் அழிவில்லாத ஒளி சரீரமாக மாற்றினார் என்பதை உலகின் முதல் வைரவர் என கோவிலில் ஸ்தலவரலாறு உள்ளது . அருகில் வைரவன்பட்டியில் வைரவனார் கோவிலும் ;

## வளரொளி நாதர் என்ற ஆத்ம லிங்கமும் ஆவணங்களாகும்

அப்படி மீண்டும் தேவர் என்ற தன்மையாகி சிவனார் பரலோகம் ஏகி இப்போது ருத்திர பதவி அதாவது ஆர்க் ஏஞ்சல் மிகாயேல் ஆக உள்ளார்

இரண்டாம் யுகம் ; தமிழ்சங்கம் பூம்புகார் ; ஆதிகடவூர் உள்ளிட்ட கபாடபுரம் ஆகும் . இங்கு அரசாண்ட சோழர்கள் ராமரின் அதே குலத்தை சேர்ந்தவர்கள்



மனுநீதி சோழனின் குறிப்பில் அவன் ரகுவம்ஸத்தில் வந்தவன் என்ற குறிப்பு உண்டு . எப்படி சிவனார் பூமியில் மூன்று இடங்களில் மனித குலத்தை கிருத யுகத்தில் தோற்றுவித்தாரோ ; அதுபோல திரேதா யுகம் என்ற இரண்டாம் யுகத்தின் வம்சம் ரகுவம்ஸம் ஆகும்

முதலாம் யுக முடிவில் ஜலப்பிரளயத்தின்

மூலமாக பேரழிவு சம்பவித்தே இரண்டாம் யுகம் துவங்கியது .

ஆனால் அந்த பேரழிவினைப்பார்த்து இறைவனே மனஸ்தாபத்திற்குள்ளானார் என தவ்ராத்ல் இறைவார்த்தை வந்துள்ளது

ஆதியாகமம் 9 : 9. நான் உங்களோடும், உங்களுக்குப் பின்வரும் உங்கள் சந்ததியோடும்,

10. உங்களோடே பேழையிலிருந்து புறப்பட்ட சகல ஜீவஜந்துக்கள்முதல் இனிப் பூமியில் உண்டாகப்போகிற சகல ஜீவஜந்துக்கள்பரியந்தம், பறவைகளோடும், நாட்டுமிருகங்களோடும், உங்களிடத்தில் இருக்கிற பூமியிலுள்ள சகல காட்டுமிருகங்களோடும் என் உடன்படிக்கையை ஏற்படுத்துகிறேன்.

11. இனி மாம்சமானவைகளெல்லாம் ஜலப்பிரளயத்தினால்

சங்கரிக்கப்படுவதில்லையென்றும், பூமியை அழிக்க இனி ஜலப்பிரளயம் உண்டாவதில்லையென்றும், உங்களோடே என் உடன்படிக்கையை ஏற்படுத்துகிறேன் என்றார்.

இப்படி யுகமாறுதலின் போது இனிமேல் பிரளயம் இல்லையே தவிர ; அதற்கொப்ப சிறு சிறு நிகழ்வுகள் ; மனித யுத்தகங்களால் சாவுக்கு பிறகே யுக மாறுதல் சம்பவிக்கிறது



இரண்டாம் திரேதா யுகத்தில் ராமருக்கும் லங்கேஸ்வரனுக்கும் யுத்தத்தில் பேரழிவு உண்டானது

மூன்றாம் துவாபர யுகத்தில் மகாபாரத யுத்தத்தில் உலகம் முழுவதிலும் பங்கெடுத்து பலர் மாண்டனர்

அந்த யுத்தத்தை முன்னெடுக்க வைக்க நரநாராயனர்களான யுகபுருஷன் ஸ்ரீகிறிஷ்ணரும் அர்ச்சுனரும் அவதரித்து

இருந்தனர் . கூடவே உயிர்களை அழிக்கும் காளியின் அம்சமான திரெளபதியும் அவதரித்து இருந்தனர் .

அபிராமி அந்தாதி

**77: பயிரவி, பஞ்சமி, பாசாங்குசை, பஞ்ச பாணி, வஞ்சர்**
**உயிர் அவி உண்ணும் உயர் சண்டி, காளி, ஒளிரும் கலா**
**வயிரவி, மண்டலி, மாலினி, சூலி, வராகி--என்றே**
**செயிர் அவி நான்மறை சேர் திருநாமங்கள் செப்புவரே.**



ருத்ரணனின் இணைவியான கொற்றவை ; சுடுகாடு காளி என்றும் சொல்வார்கள் ; அழிவின் தேவர் இவர் . யுக மாறுதலின் போது இவரின் செயல்பாடும் இருக்கும் .

இப்படி மூன்றாம் யுக முடிவிற்காக உலகிற்க்கு வந்தவர்களால் மகாபாரத யுத்தம் முன்னெடுக்கப்பட்டது .

ஆனாலும் அது ஏதோ பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்குமான பங்காளி சண்டை என்பதுபோல மேற்போக்காக இருந்தாலும் ; இந்த யுத்தத்தில் உலகம் முழுவதும் இருந்த அரசர்கள் தங்கள் தங்கள் சேனையுடன் திரளாக இரண்டு அணிகளிலும் எதற்காக திரண்டார்கள் ?

இதுவே இறை சித்தம் என்பது ; யுக அழிவு என்பது



இப்போதும் கூட உலகம் நான்காம் கலியுகத்திலிருந்து சத்திய யுகத்திற்குள்ளாக பிரவேசிக்கப்போகிறது . இதற்கான ஒரு பேரழிவாகவே கொரோனா விஷ ஜூரம் பாதித்து வருகிறது .

ஆனாலும் அருளாளர்கள் பலர் பிறந்து இடையறாது மன்றாடி பிரார்த்தித்து வருவதால் அழிவு குறைவாகவும் ; வியாதி தொற்று ஏற்பட்டு மருத்துவமனையில் தேறியோர் ; தொற்று பாதிப்பு வெளியே

தெரியாமலேயே தேறியோர் என ஒரு புதிய பிளாஸ்மா ரத்தத்தில் ஊறி வருகிறது .

இது மனித சரீரத்தை சத்திய யுகத்திற்குள் கொண்டு செல்வதற்கே தகுதி உண்டாக்குகிறது

ஆனாலும் சிலர் அழிவுக்குள்ளாகின்றனர் . இதன் தாத்பர்யம் இறைவனே அறிவார் . ஆனாலும் மனதிற்குள்ளாக இறைவனை நோக்கிய பிரார்த்தனை உள்ளோரே ; நற்கருமங்கள் புரிவோரே புண்ணியங்கள் உள்ளோரே தப்பித்தும் வருகின்றனர்

அப்படி துவாபர யுக முடிவுக்கான யுத்தமாக குருஷேத்திரத்தில் உலகின் 20 கோடி நபர்கள் அழிவுக்குள்ளாகினார் என்கிறார்கள் .

இந்த யுத்தத்திற்காக இரு தரப்பாரும் கூடியபிறகு மாமுனிவர் வியாசர் கண்ணில்லாத அரசன் திருதராஸ்ட்டரருக்கு போர்க்கள சம்பவங்களை அப்படியே சினிமா

பார்ப்பதுபோல போல பார்த்து அறிவிக்க ஞான திருஸ்ட்டியை அவரது மந்திரி ஸஞ்சயருக்கு அருளினார் . அதன் வாயிலாக போர்க்கள சம்பவங்களை உடனுக்குடனேயே லைவ் ஆக பார்த்தார்கள் .

கீதை துவக்க நிகழ்வுகள்

கீதை 1 : 1 திருதராஷ்ட்ரர் கேட்டார் ; ஸஞ்சயா ! தர்மபூமியான குருஷேத்ரத்தில் ஒருங்கே கூடி யுத்தம் செய்கிறவர்களான என்னவர்களும் பாண்டவர்களும் என்ன செய்கிறார்கள் ?;

கீதை 1 : 2 ஸஞ்சயன் கூறினார் : ராஜா துரியோதனன் அணிவகுத்து நிறுத்தப்பட்டிருந்த பாண்டவர் படையை பார்த்ததும் ஆச்சார்யார் துரோணரை அணுகி இந்த வார்த்தையை கூறலானார்

கீதை 1 : 3 ஆச்சார்யரே ! உங்களது புத்திசாலியான சீடனும் துருபதனின்

குமாரனுமான திருஸ்ட்டதும்ணனால் அணிவகுக்கப்பட்டுள்ள பாண்டவர்களின் சேனையை பாருங்கள்

கீதை 1 : 4 - 6 அந்தப்படையில் அதிரதர்கள் எனப்பட்ட பெரிய வில்லாளிகள் ; யுத்தத்தில் பீமனுக்கும் அர்ச்சுணனுக்கும் ;இணையான வீரர்கள் ; சாத்யகி , விராடன் , மகாராஜா துருபதன் , திருஷ்ட்டகேது , செகீதான் , காசிராஜன் , புருஜீத் , குந்திபோஜன் , சைப்யன் , யூதாமன்யு , உத்தமௌஜா , சுபத்ரையின் குமாரன் அபிமன்யு , திரேவ்பதியின் குமாரர்கள் ஐவர் இருக்கிறார்கள் .

கீதை 1 : 7 அந்தணர்களில் சிறந்தவரே ! அவ்வாறே நமது அணியிலும் யாரெல்லாம் பிரதான வீரர்களோ ; அதிரதர்களோ அவர்களை தேர்ந்து கொள்ளுங்கள் ; என்னுடைய படைத்தலைவர்களான அவர்களைப்பற்றி உங்களின் கவனத்திற்கு கொண்டுவருகிறேன் .

கீதை 1 : 8 யுத்தத்தில் தேர்ந்தவரான தாங்களும் , பாட்டனார் பீஷ்மரும் , கர்ணனும் , கிருபாச்சார்யாரும் , அசுவாத்தமானும் , விகர்ணனும் , பூரிசிரவஸ்ஸும்

கீதை 1 : 9 மேலும் உயிராசையை எனக்காக விட்டவர்களான வேறு பல சூரவீரர்களும் தங்களது ஆயுதங்களுடன் தயாராகவே நிற்கிறார்கள்



கீதை 1 : 10 பாட்டனார் பீஷ்மரால் நடத்தப்படும் நமது படை எந்த வகையிலும் எதிரிகளால் வெல்லப்பட முடியாதது . ஆனால் பீமானால் பாதுகாக்கப்படும் அந்தப்படை நம்மால் எளிதாக வெல்லப்பட கூடியதே .

கௌரவர் படையின் சேனாதிபதியான பீஷ்மர் அணிவகுத்த சேனையைப்பற்றி ; தன்னால் அவரிடம் பெருமை பேச முடியாது

என்பதாலும் ; ராஜா என்கிற முறையில் தனது மேலாண்மை இருப்பதாலும் ; துரியோதனன் தனது கருத்தை துரோணரிடம் போய் தெரிவிக்கிறான் . இது பீஷ்மரிடம் சேர்க்கப்படும் என்ற வகையில்

தனது படையினர் பீஷ்மர் நடத்துதலில் இருப்பதால் ; தங்களை வெல்வது கடினம் என சுய நம்பிக்கை கொள்கிறான் ; ஆனால் எதிராளிகள் யுகபுருஷன் ஸ்ரீகிறிஷ்ணரின் நடுத்துதலில் இருப்பார்கள் என ஆன்மீகரீதியாக அவனால் கணக்கீடு செய்யமுடியவில்லை



அதனால் பாண்டவ சேனைக்கு பீமனே பெரும் பலம் என நம்புகிறான்

எதிராளிகளை பற்றிய சரியான கணிப்பு இல்லாவிட்டால் தோல்வி நிச்சயம் .

ஸ்ரீகிறிஷ்ணர் ஒன்று எனது படையினர் அனைவரும் வேண்டுமா அல்லது ஆயுதம்

ஏந்தாத தான் வேண்டுமா எனக்கேட்டபோது அர்ச்சுணன் எங்கே படை வீரர்களை கேட்டுவிடுவானோ என பயந்து ; அவன் ஸ்ரீகிறிஷ்ணர் வேண்டும் என சரியான தேர்வு செய்தபோதும் கூட ஆகா அதிர்ஷ்டம் பெரும் படை கிடைத்தது என மனித பலத்தை நம்பியவன் துரியோதனன்

மனித பலம் ; மனித முயற்சி இறைவனின் சக்திக்கு முன்பு தூசு .



அதே தவறை எதிரணியில் தேரோட்டியாகவே நின்றாலும் யுகபுருஷன் நிற்கிறார் ; நிலைமைகளை அவ்வப்போது திசை திருப்பிவிடக் கூடியவர் என்ற உண்மை துரியோதனனுக்கு உணரவே இல்லை .

ஆனால் போர்க்கள ரீதியான ஒரு பின்னடைவை சரி செய்ய முயல்கிறான்

அது ஏதென்றால் சிகண்டி ஆணாக

மாறியிருந்தாலும் ; பெண்ணாக பிறந்தவள் என்பதாலும் ; பீஷ்மரை கொல்லுவதற்கே வரம் பெற்று பிறந்தவள் என்பதாலும் ; அவள் தன்நெதிரே வந்தால் ஆயுதத்தை துறந்து விடுவேன் என பீஷ்மர் ஏற்கனவே அறிவித்து விட்டார்

ஆகவே எக்காரணம் கொண்டும் சிகண்டி பீஷ்மர் முன்பு வந்துவிடாதபடி காப்பது தனது தரப்பு வீரகளின் கடமை என எச்சரிக்கை செய்கிறான்



கீதை 1 : 11 யுத்தகளத்தில் அவரவர் போர் முனையில் யுத்தம் செய்தாலும் ; பாட்டனார் பீஷ்மரை நீங்கள் அனைவரும் சுற்றியிருந்து காப்பாற்றுங்கள் .

கீதை 1 : 12 அப்போது குரு வம்சத்தில் முதியவரும் ; மிகுந்த பிர்ஸ்தாபம் உடையவருமான பீஷ்மர் சிங்க கர்ஜ்ஜனை போன்று சங்கநாதம் எழுப்பியதால் மகிழ்ந்தான் .

**கீதை 1 : 13 உடனே பற்பலரால் சங்குகளும் பேரிகைகளும் தாரை தப்பட்டம் கொம்புகளும் ஒருங்கே முழங்கின . அந்த ஒலி பயங்கரமாக இருந்தது .**

**கீதை 1 : 14 இதன் பிறகு வெள்ளை குதிரைகள் பூட்டப்பட்டிருந்த மகிமையான தேரில் அமர்ந்திருந்த மாதவனும் பின்பு அர்ச்சுணனும் திவ்யமான தங்கள் சங்குகளை முழங்கினார்கள்**



**மகிமையான தேர் என்று ஏன் சுட்டப்பட்டது என்றால் யுக மாறுதலுக்காக பல்லாயிரம் பேர்களை அழிக்கக்கூடிய அதிகாரம் பெற்ற அந்த தேரில் கொடியில் ஸ்ரீஅனுமானே அமர்ந்திருந்தார் என்ற உண்மை சஞ்சயனுக்கும் தெரிந்ததால் கூறப்பட்டது**

**கீதை 1 : 15 ஸ்ரீகிறிஷ்ணர் பாஞ்சஜன்யம் என்ற சங்கை ஊதினார் . பின்பு அர்ச்சுனன் தேவதத்தம் ஊதினார் . அவ்வாறே பீமன்**

பௌண்டீரம் ஊதினான்

கீதை 1 : 16 அவ்வாறே யுதிஷ்ட்ரர் அநந்தவியத்தையும் ,நகுலன் சுகோஷா வையும் சகாதேவன் மணிபுஷ்பகம் என்ற சங்குகளையும் முழங்கினார்கள்

இங்கு இறைநெறி உணர்ந்த மாந்தர்கள் செய்கை வெளியாக்கப்ப்டுகிறது . முதலில் குரு எடுத்துக்கொடுத்த பிறகே பின்பற்றி செல்லவேண்டும் என்ற நியதி கடைபிடிக்கப்பட்டது . அதுவே நாம் யாரை முன்னிறுத்துகிறோம் என்ற மகப்பெரிய ஆயுதமாகும் .



துரியோதணன் மானுஷிகமாக பீமனை பெரிய ஆளாக கணக்கு போட்டால் ; பாண்டவர்கள் ஆயுதம் ஏந்தாத ஸ்ரீகிறிஷ்னரை இங்கு முன்னிலைப்படுத்தி ; தாங்கள் அவரை சரணடைந்து இருப்பதை ; யார் யுத்தத்தை வழிநடத்தப்போகிறார் என்பதை அறிவித்துவிட்டார்கள்

**கீதை 1 : 19 அந்த தெய்வீக ஒலி ஆகாயத்திலும் பூமியிலும் எதிரொலித்தது .கௌரவ அணியினரின் இதயங்களில் கலக்கத்தை உண்டாக்கியது .**

ஏனெனில் யுகபுருஷன் ; நாராயணன் என்ற அதிதேவர் காப்ரியீலின் அவதாரம் . ஆகவே அவர் சங்கநாதம் முழங்கியபோது ; அந்த சத்தம் என்பது அருவ இறைவனின் முதலாவது சத்தத்திற்கு ஒப்பு ஆனது . எனவே அண்டசராசரங்களும் அதற்கு ஒப்ப அதிர்ந்தன . தேவர்களும் சங்கநாதம் செய்தார்கள் . ஆகவேதான் கௌரவ சேனை முழங்கியபோது ஆகாயத்தில் எதிரொலிக்காத முழக்கம் ; பாண்டவர் சேனை முழங்கியபோது தேவர்களாலும் பலமடைந்தது . அதனால் அசுரர்களும் கௌரவ அணியினரும் கலக்கமடைந்தனர் . இது அவர்களின் இதயங்களை பலகீனப்படுத்தியதால் அவர்கள் தோல்வி உறுதி செய்யப்பட்டது .

கீதை 1 : 20 - 22 இதன்பின்னர் அனுமக்கொடியை தேரிலே உடைய அர்ச்சுணன் ; அணிவகுத்து போர் புரிய தயாராக இருந்த கௌரவ அணியினரை பார்க்க விரும்பி ‘அச்சுதா ! ரதத்தை இரண்டு படைகளுக்கும் நடுவாக நிறுத்துங்களேன் ; இந்த யுத்தத்தில் எவரொருவருடன் நான் போரிட நெருமோ ; அதற்காக அணிவகுத்து நிற்கும் யாவரையும் நான் பார்க்கும்படியாக ரதத்தை நடுவே நிறுத்துங்களேன் ‘ என்று வில்லை நிமிர்த்திக்கொண்டு கூறினான்

இங்கு ஒரு சிறந்த போர் வீரனின் லட்சணம் சுட்டப்படுகிறது . எதிரிகளை சரியாக கணிக்கிறவனே யுத்தத்தில் வெற்றி பெற முடியும் . தனது வீரத்தை பலத்தை நம்பி மட்டுமே முரட்டுத்தனமாக யுத்தம் செய்வது விவேகமல்ல . எதிராளிகளை கவனிக்க வேண்டும் . அவர்களின் சாதக பாதக அம்சங்களை நிதானிக்க வேண்டும்

ஆகவே அவர்களுக்கு எதிரே பிரயாணிக்காமல் ரதத்தை இடையாக பக்கவாட்டில் நடத்தும்படியாக வேண்டினார் அர்ச்சுனன்

அப்படி இடையாக பயணிக்கும் போது ஏதேனும் பேச்சுவார்த்தைகள் முன்மொழியப்படலாம் என்பதால் யுத்தம் தொடங்க மாட்டார்கள் .

மேலும் யுகபுருஷன் அங்கிருந்ததால் யோகமாயையால் கட்டப்பட்டு இரு தரப்பாரும் செயலற்றவராக ஸ்தம்பித்தனர்

**யோகம் 1: விசாரணை யோகம் !!!**



**கீதை 1: 22 அர்ச்சுணண் கூறினான் :**
**அழிவற்றவரே ! யுத்தம் செய்ய விரும்பி இங்கு வந்திருப்போரை நான் அறிந்து கொள்ளும்படியும் ; கடுமையான யுத்த நிகழ்வில் பங்கெடுப்போர்களின் திறத்தை நான் கணிக்கும் படியும் ரதத்தை இரண்டு சேனைகளுக்கும் நடுவாக நிருத்துவீராக !**

**கீதை 1: 23 தீயவர்களான திருதராட்டர மகன்களை திருப்திபடுத்தும் நோக்கத்துடன் யுத்தம் புரிய வந்திருப்போர்களை நான் பார்க்கட்டும் !**

**கீதை 1: 24 இவ்வாறு அர்ச்சுணன்**

**கூறக்கேட்டதும் கிரிஸ்ணர் தேரை இரண்டு சேனைகளுக்கும் நடுவாக கொணர்ந்தார் ‼**

**கீதை 1: 25 பீஸ்மர் , துரோணர் மற்றும் உலக அரசுகளின் தலைவர்களெல்லாம் கூடியிருப்பதை காட்டி ``பார்த்தா ! குருவம்சத்தினர் எல்லோரும் கூடியிருப்பதை பார் ‼`` என்றார் கிரிஸ்ணர் ‼**

**கீதை 1: 26 அங்கு அர்ச்சுணன் சேனைகளின் இருபக்கத்திலும் தந்தைமார்களும் ; பாட்டண்மார்களும் ;ஆசிரியர்களும் ; மைத்துனர்களும் ; சகோதரர்களும் ; மகன்களும் ; பேரர்களும் ; மாமன்மார்களும் மற்றும் நலவிரும்பிகளும் குழுமியிருப்பதை கண்டான் ‼**

**கீதை 1: 27 குந்தியின் மகன் அனைத்து தரமான உறவிணர்களையும் ; நண்பர்களையும் கண்ட போது கவிரக்கத்தால் நிறைந்து புலம்பத்தொடங்கினான் ‼**

கீதை 1: 28 எனதருமை கிரிஸ்ணா !
போர்க்குணத்தால் உந்தப்பட்டுள்ள எனது
உறவிணர்களையும் நண்பர்களையும்
காணும் போது என் நரம்பு முடிச்சுகளும்
அதிர்ந்து ; என் வாய் திக்குகிறது !

கீதை 1: 29 என் முழு உடம்பும் ஸ்தம்பித்து ;
மயிர்க்கால்கள் கூச்செரிந்து ; என் காண்டீபம்
கைநழுவி போகிறது ! ஐயோ !என்
மேனியெங்கும் காந்துகிறதே !!

கீதை 1: 30 என் புத்தி பேதலித்து நிலை
தடுமாறுகிறேன் ! கெட்டவையே நடக்க
போவதை உணர்கிறேன் ! அசுரர்களை
அழிக்கிறவரே ! இனிமேலும் இங்கிருக்க
என்னால் முடியாது !!

கீதை 1:31 எனதருமை கிரிஸ்ணா ! எனது
சொந்தபந்தங்களை கொல்வதால் எவ்வாறு
ஏதாகிலும் நன்மை விளையக்கூடுமோ என
தெறியவில்லை ? அல்லது அந்த
வெற்றியால் விளையும் அரசாட்சியிலும்

**சுகபோகங்களிலும் எனக்கு விருப்பமில்லை !!**

**கீதை 1:32 யாருக்காக அரசாட்சியையும் சுகபோகங்களையும் தேடுகிறோமோ அல்லது வாழ்ந்துகொண்டிருக்கிறோமோ அவர்களெல்லாம் இந்த யுத்தகளத்தில் அணிவகுக்கும் தேவை என்ன ?**

**கீதை 1:33 மதுசூதனா ! அனைத்து ஆசான்கள் ; தந்தையர் ; பிள்ளைகள் ;பாட்டணார்கள் 'மைத்துனர்கள் ;மாமன்மார்கள் ; பேரன்மார்கள் சகோதரர்கள் மற்றும் அனைத்து உறவிணர்களும் தமது உயிரையும் உடமைகளையும் இழக்க சித்தமானவர்களாய் என்முன்னே நிற்கும்போது ; ஒருவேலை அவர்கள் என்னை கொல்வதாகவே இருந்தாலும் ஏன் நான் அவர்களை கொல்லவேண்டும் ?**

**கீதை 1:34 உயிரிணங்களை காக்கிறவரே ! இந்த பூவுலகிற்கு பகரமாக**

மூவுலகங்களையும் கொடுப்பதாகவே இருந்தாலும்கூட நான் அவரகளுடன் சண்டையிட தயாராயில்லை !

கீதை 1:35 திருதராட்டரரின் மக்களை கொல்வதால் என்ன மகிழ்சி கிட்டபோகிறது ?

கீதை 1:36 இத்தகைய எதிராளிகளை அழிப்பதால் பாவமே நம்மை மேற்கொள்ளும் ! எனவே திருதராட்டரரின் மக்களையும் சொந்தபந்தங்களையும் கொல்லுவது நன்மைக்கு ஏதுவானதல்ல !

கீதை 1:37 கிரிஸ்ணா ! நம் சொந்தபந்தங்களை கொண்ற பிறகு எவ்வாறு மகிழ்சியாக இருக்கமுடியும் ? அல்லது என்ன ஆதாயம் பெறமுடியும் ?

கீதை 1:38 ஜனார்த்தனா ! பேராசையால் மேற்கொள்ளப்பட்ட இதயத்தால் இந்தமனிதர்கள் நண்பர்களுடன் சண்டையிடுவதையும் ; குடும்பதார்களை

அழிப்பதையும் சரியெனவே கருதினாலும் குடும்பத்தை அழிப்பதை குற்றமென கருதும் நம்மைப்போன்றோர் ஏன் இந்த பாவகாரியங்களில் ஈடுபடவேண்டும் ?

கீதை 1:39 வம்சங்கள் அழிவதால் தெய்வீகத்தால் கட்டபடும் குடும்பமாண்புகள் சீரழிகிண்றன ! அதனால் எஞ்சிய மனிதர்களோ நெறிபிறழ்ந்தவர்களாய் மாறுவர் !!

கீதை 1:40 எப்போது குடும்பத்தில் நெறிபிறழ்ச்சி வேரூண்றுகிறதோ அப்போது பெண்கள் சீர்கேட்டை அடைவர் ! பெண்மையின் தரம் தாழும்போது முறண்பாடான சந்ததி உருவாகும் !!

கீதை 1:41 தரமற்ற சந்ததி பெருகும் போது குடும்ப வாழ்வு நரகவாழ்வாய் மாறிப்போகும் ! அதற்கு காரணமானவர்களையும் நரகத்தில் கொண்டு சேர்க்கும் ! பின் சந்ததியினரின் புண்ணியகர்மங்கள் எழும்பாததால்

முன்னோர்களின் ஆத்துமாக்களும் உய்விப்பார் இன்றி கீழ்நிலையடையும் !!

கீதை 1:42 அனைத்து சமூக மறுமலர்ச்சி மற்றும் குடும்ப நல காரியங்களும் வீணாகப்போகும் !!

கீதை 1:43 கிரிஸ்ணா ! சீடர் பரம்பரியத்திடம் நானும் கேள்விப்பட்டுள்ளேன் !`` யார் குடும்ப மாண்புகளை குலைத்தார்களோ அவர்கள் எப்போதும் நித்திய நரகத்தையே அடைவர் !!`` என்று !!

கீதை 1:44 மகத்தான பாவகாரியங்களை செய்ய நாம் தயராவது என்ன விந்தை ? அரச சுகபோகங்களை சுகிக்க சொந்தபந்தங்களையே கொல்ல தயாராகிறோமே ??

கீதை 1:45 யுத்தகளத்தில் நிராயுதபானியாகவும் எதிர்த்து தடுக்காமலும் நான் இருக்கும் போதே திருதராட்டிர

மக்களின் ஆயுதங்களால் கொல்லப்படுவதே எனக்கு மேலாக தெறிகிறது !!

கீதை 1:46 இவ்வாறு பேசிய அர்ச்சுணண் துக்கம் மேவியதால் வில்லையும் அம்புகளையும் எறிந்து விட்டு சோர்ந்து போய் ரதத்தில் அமர்ந்து விட்டான் !!

கீதை 2:1 சஞ்சயன் கூறினான் :புத்தி பேதலித்து பரிதாபத்தால் நிறைந்து கண்ணீரும் கம்பலையுமாய் தவிக்கும் அர்ச்சுணனை பார்த்து இறைதூதர் கிரிஸ்ணர் பின்வருமாறு உபதேசித்தார் :

கீதை 2:2 எனதருமை அர்ச்சுணா ! இந்த மனக்கலக்கம் எவ்வாறு உன் மேல் வந்தது ? வாழ்வின் அர்த்தம் உணர்ந்த மனிதனுக்கு இவை தகுதியல்லவே ! மறுமைக்கும் பரலோகத்திற்கும் பாத்திரனாவதற்கு பதில் அவமானத்தையல்லவோ கொண்டு வந்து சேர்க்கும் ?

கீதை 2:3 ப்ரதாவின் மகனே ! தகுதியை

குறைக்கும் பலவீணத்திற்கு இடம் கொடாதே ! எதிரிகளை சுக்குநூறாக்கும் உனக்கு இது ஏற்றதல்ல ! சிறுமையான மனத்தளர்ச்சியை துடைதெறிந்து விட்டு விளித்தெழுவாயாக !!

கீதை 2:4அர்ச்சுணன் கூறினான் :
மாயைகளை கலைகிறவரே ! தீமைகளை அழிக்கிறவரே ! மனதால் மதிக்கிற பீஸ்மரையும் துரோணரையும் எவ்வாறு அம்புகளால் தாக்குவேன் ?

கீதை 2:5 விலைமதிப்பில்லாத எனது ஆசாண்களான மகத்துவமிக்கவர்களை கொன்று என்னை நிலைநிறுத்தி கொள்வதை விட பிச்சை எடுத்து உயிர் வழ்வது மேலல்லவா ? உலகை ஆளும் நோக்கத்தை விட அவர்கள் அருமையானவர்களல்லவா ? அவர்கள் கொல்லப்பட்டால் நான் அடையும் இன்பங்கள் யாவும் அவர்கள் ரத்தம் தோய்ந்ததாய் தோன்றாதா ?

கீதை 2:6 அவர்களை வெற்றி கொள்வதும்

அல்லது அவர்களால் வெற்றிகொள்ளப்படுவதும் என்ன சிறப்பை கொண்டுவந்து விடும் ? திருதுராஸ்ட்டரின் புதல்வர்களை கொண்று விட்டு நாம் ஏன் வாழவேண்டும் ? யாரை நாம் கொல்ல விரும்பமாட்டோமோ அவர்களெல்லாம் நமக்கு எதிரே யுத்தத்திற்கு நிற்கிறார்களே ?

கீதை 2:7 என்ன செய்வது என உணரமுடியாத அளவு குழப்பமாக உள்ளது ! நிம்மதியை இழந்து பலகீணத்தால் தவிக்கிறேன் ! இந்த நிலையில் எது சிறந்தது என்பதைப்பற்றி எனக்கு உணர்த்தும் படி வேண்டுகிறேன் !ஏனெனில் நான் உமது சீடன் : உம்மை சரணடைந்த ஆத்துமாக்களில் ஒருவன் ! எனக்கு வழிகாட்டுவீராக !!

கீதை 2:8 ஐம்புலன்களையும் வரழசெய்யும் துக்கத்தை விரட்டும் வழியின்றி தவிக்கிறேன் ! சகல ஸவ்பாக்கியங்கள் நிறைந்த ஈடுஇணையற்ற அரசாட்சியை இப்பூமியில் நான் ஸ்தாபித்து

**தேவதூதருக்கொத்த மாட்சிமையை அடைந்தாலும் இந்த துக்கத்தை மறக்க இயலாதே !!**

**கீதை 2:9 இவ்வாறு புலம்பிய அர்ச்சுணன் கூறினான் : ``கிரிஸ்ணா !கோவிந்தா ! என்னால் போர் செய்யவே முடியாது !!``**

யோகம் 2 சாங்கிய யோகம் !



கீதை 2:14 ஓ!குந்தியின் மகனே!பருவ காலங்கள் எப்படி தோன்றிமறைகிறதோ அப்படியே இன்பமும் துன்பமும் தோன்றிமறைகிறது! மாறிமாறி வருகிறது!இது புலன்களின் உணர்ச்சியினால் நிலையானது போல தெரிகிறது!இவைகளால் பாதிப்படையாத-- புலன்களை கடந்த மன நிலையை கற்றுக்கொள்ளவேண்டும்!

2:15 மனிதர்களில் சிறந்தவனே!யார் இன்பத்தாலும் துன்பத்தாலும் பாதிப்படையாத மனநிலையை பெறுகிறானோ,மன சமநிலையை அடைகிறானோ அவனே இறைவனை

## நெருங்க தகுதி அடைகிறான்

உலகபந்தங்கள் துன்பதுயரங்களிலிருந்து விடுபட்டு ஆத்துமசுதந்திரத்தை அனுபவிக்க வேண்டுமா?

வெற்றிகளில் துள்ளாமல் இருக்க பழகிக்கொள்ளவேண்டும்

வெற்றிக்கு இறைவக்கு நன்றி செலுத்திவிட்டு நகன்றுவிடவேண்டும் வெற்றியில் தேங்கிநின்று கொண்டாட நம் மனம் பழகும்போது தோல்வியில் தேங்கிநின்று துயறத்திலும் களிவிறக்கம்படவும் தொடங்கிவிடும் கடவுளும் கண்டுகொள்ளாமல் விட்டுவிடுவார்

வெற்றியில் நன்றி தெறிவித்த பக்தனுக்கு துன்பத்தில் உதவவேண்டிய நெருக்கடி இறைவக்கும் உண்டாகிவிடுகிறது

நாம் மனச்சமநிலை அடைவது நம் பக்தியின் நிறைவுக்கு ஒரு அடையாளமாகும்

கோடையின் வெப்பம் நம்மை வாட்டி வதக்கும் போது அது நிலையானது போல தெரிகிறது!பனியில் நாம் உறைந்து போய் விடுவோம் போல உணர்கிறோம்!ஆனால் அது உண்மையல்ல!

நம் புலன்கள் நுகர்வுணர்ச்சிக்கு நம் சக்தியை மனமானது செலவளித்துக்கொண்டே இருப்பதால் நாம் சோர்ந்துபோய் விடுகிறோம்!அதை உணர்கிற நமது மனம் தான் நம் சோர்வுக்கு காரணமே தவிற புற காரணிகள் நம்மை வருத்துவதில்லை!

அது சில நாளில் கடந்துவிடும் என்கிற நம்பிக்கை-அறிவை இழந்து நம் மனமானது விரக்தியில் ஒடுங்குகிறது!மேலும் இந்த மனமானது தான் ஆத்துமா என்பதை மறந்து சரீரத்தின் புலன் உணர்வுகளுக்கு மதிமயங்கி

தன்னை சரீரமாகவே
நினைத்துக்கொண்டுள்ளது!

அழிவுள்ள சரீரத்தில் வாசம் செய்கிற
அழிவற்ற ஆத்துமா நான் என்கிற
மெய்யறிவு அதற்கு மங்கி தன் பலமறியாமல்
--ஆத்துமபலம் இழந்து சரீரத்திற்க்கு
அடிமையாகி உலக சுகதுக்கங்கள் என்கிற
குட்டையில் உழண்று கொண்டுள்ளது!

சரீரம் அழிவுள்ளது ஆனால் ஆத்துமாவோ
நியாயத்தீர்ப்பு நாள் வரை
அழிவற்றது!உலகில் நம் சரீரத்தை அழிக்க
பலவற்றால் முடியலாம்!நாம் பயப்பட
வேண்டியுள்ளது!

உண்மை
யாதெணில் இறைவன் அனுமதித்தாலொழிய
நம் சரீரத்தை யாராலும் அழிக்க
முடியாது;ஆனால் நம்
ஆத்துமாவை இறைவனைத்தவிற யாராலும்
அழிக்கவே முடியாது!

**மத்தேயு10:**28. ஆத்துமாவைக் கொல்ல வல்லவர்களாயிராமல், சரீரத்தை மாத்திரம் கொல்லுகிறவர்களுக்கு நீங்கள் பயப்படவேண்டாம்; ஆத்துமாவை நரகத்திலே அழிக்க வல்லவருக்கே பயப்படுங்கள். **-இயேசு**

**ஆத்துமா அழிவற்றது என்கிற மெய்யறிவும் அதன் ஆத்துமபலத்தை பெருக்கி சரீர ஆளுகையிலிருந்து விடுபடுவதும் கடவுளை நெறுங்கி செல்வதற்க்கு பாதையாகும்!**

**கீதை 2:58 ஆமை தன் அவயங்களை தன் ஓட்டிற்க்குள் இழுத்துக்கொள்வதைப்போல; யார் தன் சரீர புலன்களை, உணர்வுகளை தூண்டும் உலக காரணிகளிலிருந்து விவித்துக்கொள்ளுகிறானோ அவனே மெய்யறிவில் நிலைத்தவனாவான்!**

**ஆமையானது ஓட்டிற்குள் வாசம் செய்கிறது அந்த ஓட்டை சுமந்து திரிகிறது பார்ப்போர் அந்த ஓடு தான் ஆமை என**

நினைக்கின்றனர்!ஆனால் அந்த ஓடு அல்ல அந்த ஓட்டிற்க்குள் ஆமை இருக்கிறது!அது சாதகமான சூழ்நிலையில் ஓட்டிலிருந்து தன் அவயங்களை நீட்டி இந்த உலகில் இயங்குகிறது!சாதகமற்ற சூழ்நிலையில் ஓட்டிற்க்குள் தன்னை இழுத்துக்கொண்டு தன்னை பாதுகாத்துக்கொள்ளுகிறது

உலகத்திடமிருந்து தன்னை விவித்துக்கொள்ளுகிறது!அந்த ஆமையிடமிருந்து பாடம் கற்றுக்கொள்ளும் படி இறைதூதர் கிருஸ்ணர் வழிகாட்டுகிறார்!

அழிவற்ற ஆத்துமா நான் என்பதை உணர்ந்து அழிவுள்ள சரீரத்தில் சில நாள் வாசமாயிருக்கிறோம்;அது நமது ஓடே தவிற சரீரமும் சரீரத்தின் மூலம் நம்மை மயக்குகிற உலக மாயைகளும் இச்சைகளும் பந்தங்களும் நாமல்ல என தெளியவேண்டும்

புற உலக காரணிகள் எதுவும் நம் ஆத்துமாவை நாம் அதற்கு

இடம்கொடுத்தாலொழிய நம்மை மயக்கவும் எதுவும் செய்ய சக்தியற்றவை!

கீதை 2:23 இந்த உலகத்தின் எந்த கருவியாலும் ஆத்துமாவை துண்டுதுண்டாக வெட்டவே முடியாது;தீயினால் எரிக்க முடியாது அல்லது தண்ணீரில் கறைக்கமுடியாது;பெருங்காற்றினாலும் துகள்துகளாய் பறக்கடிக்க முடியாது!

கடவுள் பரமாத்மா--அவரால் உருவாக்க பட்ட அவரால் மட்டுமே அழிக்கபடக்கூடிய நான் ஜீவாத்மா என்பதை உணர்ந்து அவரோடு பக்தி பூண்ட மனிதன்--தன்னை உணர்ந்தவன் இந்த சரீரத்தை அடக்க கற்றுக்கொள்ளுகிறான்!

உலகத்தின் அதிபதியாகிய அசுரன் சரீரத்தை மயக்கி ஆத்துமாவை ஆள முயற்ச்சிக்கிறான்!ஆத்துமா மெய்யறிவிலும் கடவுளிலும் நிலைத்து பேரின்பத்தில் திளைத்து பழகிவிட்டால் அசுரனின் சிற்றின்ப

மாயங்கள் எடுபடாமல் போய் விடும்!

நிறை பக்தன் சரீரத்தை அடக்கி வெற்றி பெருகிறான்!அல்லது சரீரத்தை கடந்தவனாகிறான்! இங்கு சரீரத்தை மையமாக வைத்து `யுத்தகளம்` ஒன்று இறுதி நாள் வரை உள்ளது என்பது தான் `குருஸேத்திர யுத்தம்` என உருவக படுத்த படுகிறது!

யுத்த களத்தில் எதிரிகள் அசுரனும் அவனின் உலக மாயைகள் -- இன்பதுன்பம்,பட்டம்பதவி,அதிகாரம்ஆணவம், ஆசைதேவைகள்,அன்புவெறுப்பு என சரீரத்தை(தேரை) கவர்ந்து இழுத்து அதன் மூலம் ஆத்துமாவை ஆளுகை செய்வது அசுரனின் அணி!

தேரில் வீற்றிருக்கும் அர்ச்சுணன் ஆகிய ஆத்துமா அந்த தேரை இறைதூதனாகிய கிருஸ்ணரிடம் வழி நடத்த ஒப்படைத்தால் இறைதூதர் கடவுளின் வேதத்தை

உபதேசித்து போரில் வெற்றி பெறச்செய்வார்! இண்ணொரு உருவகமும் உள்ளது!

ஒரு மனிதனின் ஆவி,ஆத்துமா,சரீரத்தில் அவனது ஆவி--உயிரே தேரோட்டீ!கடவுளின் ஆவியில் ஒரு துளி மனிதனின் உயிராக ஓடிக்கொண்டு உள்ளது இந்த ஆவி எடுத்துக்கொள்ள பட்டால் சரீரம் அழிந்து ஆத்துமா நியாயத்தீர்ப்பு நாள் வரை நித்திரைக்கு போய் விடும்!

எனவே ஒரு மனிதனுக்கு கடவுளை நெருங்கிய ஒரு பொருள் அவனது ஆவி-உயிரே! அந்த உயிரில் ஆத்துமாவை ஒடுக்கி தியானம் அப்பியாசித்து வந்தால் உயிருணர்வு பெருகி கடவுளின் அருள் ஆத்துமாவில் பலம் பெருகும்!அப்போது சரீரத்தின் பின் செல்லுகிற ஆத்துமா சரீரத்தை அடக்கி கடவுளின் பின் செல்லுகிற ஆத்துமாவாக மாற்றம் பெரும்!

கடவுளோடு உறாவாடுகிற-பிரார்த்திக்கிற

மன நிலை எளிதில் சித்திக்கும்!இறைதூதர்கள் மூலம் வந்த வேதம் ஆழமாக புரிந்து ஜீவனோடு கடைபிடிக்க ஏதுவாகும்!இல்லாவிட்டால் இறைதூதர்கள் கொண்டுவந்த வேதத்தை கையிலே வைத்துக்கொண்டு சடங்காச்சாரமாக புரிந்து கொண்டு நுனிப்புல் மேய்ந்து கொண்டு நான் பெரிசு நீ பெரிசு என மதச்சண்டை போட ஊக்குவிக்கிற அசுர மாயையில் உலகம் மீண்டும் போய் விழுந்து விடும்!

## யோகம் 2: சாங்கிய யோகம் !!!

### அழியும் உடம்பினுள் உறையும் ஆத்துமா அழிவற்றது !!

கீதை 2:10 அப்போது கொந்தளிக்கிற சேனைகளின் மத்தியிலே சாந்தமுடன் புன்னகை பூத்த யுகபுருஷன் கிரிஸ்ணர் துக்கசாகரத்தில் மூழ்கிய அர்ச்சுணனுக்கு பின்வருமாறு உபதேசித்தார் !!

கீதை 2:11 இறைதூதர் கிரிஸ்ணர் கூறுகிறார் : பட்டறிவால் விளைந்த வார்த்தைகளையே பேசுகிறாய் அர்ச்சுணா ! நன்று ! ஆனாலும் துக்கப்பட தகுதியில்லாதைவகளுக்கு நீ அஞ்சலி செலுத்துகிறாய் !யார் ஞானம் விளைந்தவர்களோ அவர்கள் உயிரோடு இருக்கிறவர்களுக்கோ அல்லது மரித்தவர்களுக்கோ வெதும்புவதில்லை !!

கீதை 2:12 படைப்பின் துவக்கத்திலிருந்து நான் இல்லாத நேரம் இல்லை அல்லது நீயோ ஏன் இங்குள்ளோர் அனைவரும் இல்லாது போகும் நேரம் இனிமேலும் இல்லை !!

கீதை 2:13 உடலினுள் உறையும் ஆத்துமா இந்த உடம்பில் குழந்தை ; வாலிபம் மற்றும் வயோதிகத்துள் கடந்து போவதுபோல இறப்பிற்குப்பின்னும் ஆத்துமசரீரமாய் உடம்பையும் கடந்துபோகிறது ! உணர்ந்தோன் உடம்பு கடந்து போவதற்காய்

தடுமாற்றம் அடைவதில்லை !!

கீதை 2:14 நிலைத்த தன்மை அற்ற ``இன்பம் மற்றும் துன்பம்`` ஆகியவற்றின் தற்காலிக இருப்பும் அல்லது சின்னாளில் இல்லாதுபோவதும் குளிர்காலமும் கோடைகாலமும் மாறிமாறி வருவது போன்றதே ! பாரத குலத்தோன்றலே ! இவைகள் புலண்களின் நுகர்சியிலிருந்து தோன்றுபவையே ! அவைகளால் உண்டாகும் பாதிப்புகளை பொருட்படுத்தாத மனநிலையை கற்றுகொள்ளவேண்டும் !!

கீதை 2:15 மனிதர்களில் சிறந்தவனே ! யார் இன்பத்தாலும் துன்பத்தாலும் பாதிக்கபடாத மனநிலை உடையவனாய் இரண்டிலும் சமநிலை எய்தியவனோ அவனே விடுதலை பெற தகுதியுடையவன் !!

கீதை 2:16 உண்மையை உணர்ந்தவர்கள் நிலையற்ற பௌதீக பொருட்களுக்கு நீடிப்பும் : நிலைத்த ஆத்துமாவுக்கு முடிவும்

இல்லையென்றே தீர்க்கமாய் உரைக்கிறார்கள் ! உலகம் சார்ந்தவைகள் மற்றும் உள்ளார்ந்தவைகள் இரண்டின் இயல்புகளை ஆராய்ந்தே இந்த முடிவை எட்டியிருக்கிறார்கள் !!

கீதை 2:17 உடல் முழுவதும் நிறைந்திருக்கும் ``ஆத்துமா அழிவற்றது `` என அறியக்கடவாய் ! அழிவற்ற ஆத்துமாவை இப்போரினால் கொல்லமுடியாது !!

கீதை 2:18 கண்டறிந்து கைப்பற்ற இயலாத உள்ளார்ந்த மனித ஆத்துமா (ஜீவாத்துமா) அழிவற்றது ! அதன் பௌதீக உடல் நிச்சயம் ஒரு நாள் அழிந்துவிடும் ! ஆகவே போரிடுவாயாக !!

கீதை 2:19 தன்னைத்தானே அழித்துக்கொள்ளவோ அல்லது அடுத்த ஆத்துமவை அழிக்கவோ ஜீவாத்துமாவாலும் முடியாது ! ஆகவே யார் பிறரை கொல்லுவோம் அல்லது பிறரால்

கொல்லப்படுவோம் என நினைக்கிறார்களோ அவர்கள் அறிவீணர்களே !!

கீதை 2:20 ஆத்துமாவை பொறுத்தளவில் அதற்கு பிறப்போ இறப்போ எப்போதுமில்லை ! புதிதாய் வருவது அல்லது இல்லாமல் போவது என்பதும் அதற்கு இல்லை ! ஆத்துமா பிறப்பு இறப்பை கடந்தது ; நித்தியமானது ;எப்போதும் இருப்பது ஏற்கனவே இருந்தது ! உடல் அழிந்தாலும் ஆத்துமா அழிவதேயில்லை !!

கீதை 2:21 பார்த்தா ! ஆத்துமா அழிவற்றது ; நித்தியமானது :பிறப்புஇறப்பை கடந்தது ; கட்டிவைக்கபட முடியாதது என்பதை உணர்ந்த ஒருவன் ``கொல்லுவது கொல்லப்படுவது`` என்பதை கடந்துவிடுகிறான் !!

கீதை 2:22 ஒரு மனிதன் பழைய ஆடைகளை களைந்து புதிய ஆடைகளை அணிந்துகொள்ளுவது போல புதியபுதிய

உடல்களாக பரிணமித்துகொள்ளுகிறது ; தளர்ந்து பயனற்று போன உடலை விட்டுவிடுகிறது !!

கீதை 2:23 ஆத்துமாவை துண்டுதுண்டாக வெட்டமுடியாது ! தீயினால் எரிக்கமுடியாது ; தண்ணீராலும் பதப்படுத்தமுடியாது அல்லது காற்றினாலும் பறக்கடிக்க முடியாது !!

கீதை 2:24 அனைத்துமாகிய பரமாத்துமாவோ பிரித்துபார்க்க முடியாதது ; சாம்பலாக்கவோ கரைக்கவோமுடியாதது ; உலர்ந்தும் போகாதது !பரமாத்துமா முடிவே இல்லாதது ; எங்கும் நிறைந்தது ; மாற்றமடையாதது ; அகன்றுபோகாதது !!

கீதை 2:25 ஆத்துமா கண்ணால் காணமுடியாதது ; ஒடுக்கவோ உற்பத்தி செய்யவோ முடியாதது ! இவற்றை அறிந்தபின்பு லௌகீக உடலுக்காய் ஏன் துக்கபடவேண்டும் ?

**கீதை 2:26 போரில் வல்லவனே ! ஆத்துமா பிறக்கிறது அழிகிறது என நம்பிக்கொண்டிருந்ததாலேயே உனக்கு இந்த துக்கம் உண்டாகிறது !!**

**கீதை 2:27 இப்பிறவியின் உடல் நிச்சயம் அழிந்தே தீறும் ! ஆத்துமாக்கள் இப்பிறவிக்கு பிறகு அடுத்த யுகத்தில் பிரவேசிக்கின்றன ! ஆகவே உன் மேல் வந்த கடமைகளை நிறைவேற்ற துக்கம் கொள்ளாதே !!**

**கீதை 2:28 எல்லா படைப்பிணங்களும் படைப்பவரால் வெளிப்படுத்தபடாதபோது இல்லாதவைகளைப்போல இருந்தவைகளே ! தற்காலிகமாக வெளிப்படுத்தபட்டு இருப்பவைகளைப்போல செயல்படுபவைகளே ! முடிவில் அழிவடைந்து இல்லாதவைகளைப்போல ஆபவைகளே ! ஆகவே எவைகளுக்காய் துக்கபட என்ன இருக்கிறது ?**

**கீதை 2:29 சிலர் மட்டுமே அற்புதமான**

ஆத்துமாவை அறிந்து கொள்ளுகிறார்கள் ! சிலர் அற்புதமான ஆத்துமாவை பற்றி பேசிக்கொண்டு மட்டுமே உள்ளனர் ! சிலரோ கேள்விப்பட்டு மட்டுமே உள்ளனர் ! ஆனால் பலரோ எதுவுமே அறியாதவராகவே உள்ளனர் !!

கீதை 2:30 அழியும் உடலில் உறையும் ஆத்துமா அழிவற்றது ! ஆகவே அர்ச்சுணா ! எவருக்காகவும் நீ துக்கபட வேண்டிய அவசியமில்லை !!

**தர்மத்திற்கான யுத்த களம் மறுமையில் மேன்மைக்கான கதவு !!**

கீதை 2:31 சத்திரியனுக்கு நியமிக்க பட்ட தனித்த கடமை என்ற அளவில் தர்மத்திற்காக போரிடுவதை விட மேலான வேறு பொறுப்புகள் ஏதுமில்லை ! ஆகவே நீ தயங்குவதற்கு முகாந்தரமில்லை !!

கீதை 2:32 அப்படிப்பட்ட யுத்த களம் வாய்க்குமென்றால் அதற்காக ஆத்மதிருப்தி

கொள்ளும் சத்திரியர்கள் இருப்பார்கள் பார்த்தா ! ஏனெனில் மறுமையில் மேன்மைக்கான கதவு திறக்கப்பட்டதை அறிந்து உவகை அடைவார்கள் !!

கீதை 2:33 தர்மத்திற்காக போரிடுவதை தட்டிகளித்தால் கடமை தவறிய குற்றத்திற்கு ஆளாவதோடு போர்வீரன் என்ற கீர்த்தியையும் இழப்பாய் !!

கீதை 2:34 உலகோர் உன் இயலாமையை இகழ்வர் ! அத்தகைய அவப்பெயரை விட மதிப்புள்ளவருக்கு மரணமே மேலானது !!

கீதை 2:35 உனது பேரையும் புகழையும் கொண்டாடும் யுத்த வீரர்களின் தலைவர்கள் நீ பயந்து யுத்த களத்தை விட்டு ஓடியதாகவே நினைப்பர் ! அதனால் உன்னை கோழை என்பதாக முடிவு செய்வர் !!

கீதை 2:36 உனது எதிரிகள் வாய்க்கு வந்த படி வர்ணித்து சொல்லத்தகாத வார்த்தைகளால் இகழ்வர்! அதனை காட்டிலும் வேறு என்ன

மனநோவு வரும் ?

கீதை 2:37 குந்தியின் மகனே ! ஒன்று தர்மத்திற்காக யுத்த களத்தில் கொல்லப்பட்டால் மறுமையில் மேன்மையை அடைவாய் ! அல்லது போரில் வென்று உலக அரச போகத்தையும் அனுபவிப்பாய் ! ஆகவே மனதிடத்தோடு எழுந்து நின்று போரிடுவாயாக ‼

கீதை 2:38 இன்பதுன்பம் ; லாப நட்டம ; வெற்றி தோல்வி என்ற இருமைகளை கடந்து செயலுக்காக செயல் புரியும் மன நிலையில் போருக்காக போர் செய்க ! அப்படி செயல்பட்டால் பாவம் உன்னை பற்றாது ‼

மனச்சம நிலையில் செயலாற்றுவதே யோகம் ‼

கீதை 2:39 இதுவரை பவ்தீக பொருட்களின் அடிப்படையில் இந்த மெய் அறிவை உனக்கு உபதேசித்தேன் ! இப்போதோ பலன் விளைவில் பற்று கடந்த வேள்வியைப்பற்றி உனக்கு உபதேசிக்கிறேன் ! பிரதாவின்

மகனே ! அந்த அறிவில் நிலைத்து நின்று செயல்பட்டால் கர்மங்களால் உண்டாகும் தளைகளை தகர்த்து சுதந்திரமடைவாய் !!

கீதை 2:40 இந்த வேள்வியில் இழப்போ அல்லது குறைச்சலோ ஏற்படாது !மாறாக இவ்வழியில் சிறிது முன்னேற்றம் ஏற்பட்டாலும் ஒருவன் அதி பயங்கரமான பயத்தையும் கடந்து விடுவான் !!

கீதை 2:41 இவ்வழியில் நடப்போர் தங்கள் இலக்கில் தெளிவடைந்து ஒரே நோக்கத்திற்காய் செயல்படுவர் ! குருவம்சத்தில் சிறந்தவனே ! இலக்கில் தெளிவில்லாதவர்களின் அறிவுத்திறனோ பல பல வாய்க்கால்களில் வடிந்து போகும் !!

கீதை 2:42 ஆழ்ந்த அறிவற்றவர்கள் லோகாதாய பக்தி மார்க்கங்களின் ஜால வார்த்தைகளை வேதமென நம்பி அதன் பால் கவரப்படுகிரார்கள் ! அது வசதியையும் வாய்ப்பையும் அதிகாரத்தையும் ஆட்சியையும் அடைவதற்கு வாக்களித்து

அதன் மூலம் உயர்ந்த லோகத்தையும் அடைந்துவிடலாம் என நம்ப வைக்கிறது !

கீதை 2:43 ஆடம்பரமான வாழ்வையும் புலனின்பங்களை அனுபவிப்பதையுமே விரும்பி இதை விட மேலான சம்பத்து வேறு என்ன வேண்டும் என கூறிக்கொள்கின்றனர் !!

கீதை 2:44 புலனின்பங்களையும் டாம்பீக வாழ்வையும் அதனால் சுயபெருமையும் அடைந்தவர்கள் அந்த வழியில் மனம் லயித்ததனால் உன்னதமான் கடவுளுக்கு உள்ளார்ந்த பக்தி -இறைஅன்பு புலப்படாமலேயே போகின்றனர் !!

கீதை 2:45 தாமச, ரஜோ மற்றும் சத்வம் எனும் மூவகை குணங்களிலிருந்து பிறக்கும் அண்ணமயம், மனோமயம் ,மற்றும் விஞ்ஞானமயம் என்ற மூவகை கோஷங்களின் வெற்றிகரமான செயல்பாடுகளுக்கு அந்த லோகாயாத வேதங்கள் வழிகாட்டுகின்றன !

அர்ச்சுனா ! இந்த மூன்றையும் கடந்து மெய்ஞானமய கோஷத்தில் நுழைந்தால் எல்லாவகையான் இருமைகளின் தாக்கத்தை கடந்து ; வெற்றி தோல்வி வேட்கையை களைந்து பரிபூரணத்தில் தன்னில்தானே மகிழ்ந்திருப்பாய் !!

கீதை 2:46 பெரிய ஏரியால் கிடைக்கும் அனுகூலங்கள் எல்லாம் ஒரு கிணற்றிலிருந்தும் அடையப்பெறும் ! அதுபோல லோகாயாத வேதங்கள் அனைத்தினதும் அனுகூலங்கள் எல்லாம் அதனை கடந்த மெய்ஞானத்தை அடைந்தவனுக்கும் உண்டாகும் !!

கீதை 2 :47 உனக்கு விதிக்கப்பட்ட செயல்களை செய்வதற்கு மட்டுமே உரிமை உண்டு ; ஆனால் செயல்களின் பலன்களின் மேல் உனக்கு எந்த பொறுப்புகளும் இல்லை ! எப்போதும் உனது செயல்களின் விளைவுகளுக்கு நீ காரணன் என்று

எண்ணாதே ; அதற்காக கடமைகளை தட்டிகழிக்கவும் உன்னை ஆட்பாடுத்தாதே !!

கீதை 2 :48 வெற்றி தோல்வியின் மீது உள்ள பற்றுதல்கள் ஒழித்து விட்டு மன சமநிலையோடு உனது கடமைகளை செய்து வருவாயாக ! அர்ச்சுனா ! அந்த சம நிலையே யோகம் என்பதை அறிக !!

கீதை 2 :49 தனஞ்சய ! லோகாயாத செயல்பாடுகள் அனைத்தையும் ஒதுக்கி வைத்து :கடவுளையே சரனாகதியடைத்து அவருக்கு பக்தி தொண்டாக கருதி உன்மேல் வந்த கடமைகளை செய்து வருவாயாக ! அவ்வாறில்லாமல் பலன்களை அனுபவிக்கும் நோக்கில் செயல்படுவோர் துன்பத்தையே அடைவர் !!

கீதை 2 :50 யார் ஞானம் முதிர்ந்த பக்தி தொண்டில் தன்னை ஈடுபடுத்தி கொண்டார்களோ அவர்கள் இவ்வுலக வாழ்விலேயே நன்மையான செயல்கள் அல்லது தீமையான செயல்கள் என்ற

பேதத்தை கடந்து சுதந்தரமடைவர் ! ஆகவே அத்தகைய யோகத்தில் நிலைக்க பெருமுயற்சி செய்க ! அதுவே செயல்களில் சிறந்த செயலாகும் !!

கீதை 2:51 இவ்வாறான மெய்ஞான பக்தியின் மூலம் உன்னதமான கடவுளுக்கே தொண்டாற்றி மகரிஷிகளும் நல்லடியார்களும் உலகியல் வாழ்வில் கர்மங்களின் தளைகளிலிருந்து தங்களை விடுவித்து கொள்கிறார்கள் ! இப்பாதையில் நடப்பதால் எல்லாவகையான பிரவிப்பினியை வெல்லும் தகுதியடைந்து நித்திய ஜீவனுக்கு ஏதுவாகிறார்கள் !!

கீதை 2:52 மாயைகள் என்னும் அடர்ந்த வனத்தை உன் அறிவுத்திறன் கடந்து விட்டால் ; உலகம் அறிந்ததைதையும் இனிமேல் அறியப்போவதையும் விஞ்சிய நிலையடைவாய் !!

கீதை 2:53 எப்போது உன் மனம் லோகாயாத

**வேதங்களின் ஜால வார்த்தைகளால் மயங்காத நிலையடைகிறதோ ; தன்னை உணர்ந்து பரிசுத்தத்தின் மேல் பரிசுத்தம் அடைவதில் நிலைத்து நின்றுகொண்டே இருக்கிறதோ அப்பொழுதே நீ தெய்வீக உணர்வில் -மெய்ஞானமய கோஷத்தில் திளைக்க முடியும் !!**

**கீதை 2:54 அர்ச்சுணன் கேட்கிறான் : கிருஷ்ணா ! உன்னதமான ஞானமய கோஷத்தை எய்தியவன் அறிகுறிகள் எப்படி இருக்கும் ? அவன் பேச்சும் பாணியும் எப்படி இருக்கும் ? அவன் இருப்பும் அசைவும் எப்படி இருக்கும் ?**

## ஆத்தும விடுதலை !!

**கீதை 2:55 உன்னதமான கடவுளின் தூதர் கூறினார் : பார்த்தா ! மனதை மயக்கும் மாயைகளினால் எழும் புலனின்பம் தொடர்பான எல்லா இச்சைகளையும் கைவிடுகிற பயிற்சியால் மனம்**

தூய்மையடைந்து கொண்டே இருக்கிறவன் தன் ஆத்துமாவில் பூரணமெய்தி தன்னில்தானே திருப்தியடைவான் ! அவனே உன்னதமான ஞானமய கோஷத்தை எய்தியவன் !!

கீதை 2:56 உலகில் மூவகை கோஷங்களின் முரண்பாடுகளால் விளைகின்ற துயரங்களின் மத்தியிலும் பாதிப்படையாத மன நிலையும் ; மகிழ்ச்சியில் துள்ளாத மன நிலையும் ; எதன் மீதும் பற்று ,பயம் ,கோபம் அற்ற மன நிலையும் எய்தியவனே நிலைத்த மனதை அடைந்த மகரிஷி எனப்படுவான் !!

கீதை 2:57 இந்த லவ்கீக உலகில் நன்மையோ தீமையோ எது நேரினும் பாதிப்படையாதவன் எவனோ ; வெற்றியில் பெருமைபாராட்டாதவனும் தோல்வியில் வெம்பி வெதும்பாதவனும் எவனோ அவனே பூரண ஞானத்தில் நிலைத்தவனாவான் !!

கீதை 2:58 ஆமை தன் அவயங்களை

ஓட்டுக்குள் இழுத்து கொள்வதுபோல புலன்களை ஈர்க்கும் புற உலகினின்று புலன்களை விடுவித்து கொள்ளும் பக்குவத்தை எய்தியவன் எவனோ ; அவனே பூரண ஞானத்தை எய்தியவன் !!

கீதை 2:59 புலன் இச்சை புலன்களின் இயல்பாய் இருந்தாலும் ; உடலில் துலங்கும் ஆத்துமா புலனின்ப மயக்கத்திலிருந்து தன்னை விடுவிக்கும் இடையறாத பயிற்சியால் ஆத்துமபரிபூரணம் என்ற தனது உன்னத நிலையை உணர்ந்து விழிப்படையும் ! ஆத்துமபரிபூரணம் என்ற உன்னத சுவையை உணரஉணர ஆத்துமா ; கீழான புலனின்ப சுவையிலிருந்து விடுதலை அடையும் !!

கீதை 2:60 அர்ச்சுனா ! புலன்கள் வலிமையும் சக்தியும் மிக்கவை ! தன்னை உணர்கிற பக்குவத்துடன் புலன்களை கட்டுப்படுத்தும் முயற்சியில் உள்ளவரைக்கூட புலன்கள் மேற்கொண்டு தங்கள் பின்னே இழுத்து

செல்கின்றன !!

கீதை 2:61 யார் தன் புலன்களின் ஆதிக்கத்தை ஒடுக்கி ; அவைகளை முழுக்கட்டுப்பாட்டில் வைத்து ; உள்ளுணர்வை கடவுளின் மீதே நிலைக்க செய்கிறானோ ; அவனே நிலைத்த அறிவுடையோன் எனப்படுவான் !!

கீதை 2:62 புலன்களை ஈர்க்கும் புறஉலக பொருட்களின் மீது ஆர்வம் கொள்வதால் ஒருவன் அவைகளின் மீது ஈடுபாட்டை உடையவனாகிறான் ! அந்த ஈடுபாட்டால் இச்சை உண்டாகிறது ; அந்த இச்சை மூர்க்கத்தை வளர்க்கிறது !!

கீதை 2:63 அந்த மூர்க்கம் மனக்குழப்பத்தை உண்டாக்கி புத்தி பேதலிப்பில் போய் முடியும் ! புத்தி பேதலிப்பால் ஒருவன் அறிவுத்திறன் குறைந்து மழுங்கி மீண்டும் உலகமாயை என்னும் குட்டைக்குள் விழுந்து சகதியில் உழல்வான் !!

**கீதை 2:64 ஆனால் யார் எல்லா வகை புலனிச்சைகளிலிருந்து தன்னை விடுவித்து கொண்டு ; விருப்புவெறுப்புகளை கடந்து ;ஆத்தும விடுதலைக்காக புலன்களை நெறிப்படுத்துகிறானோ அவனே உன்னதமான கடவுளின் கிருபைக்கு முழுப்பாத்திரனாவான் !!**

**கீதை 2:65 அவ்வாறு ஆத்துமதிருப்தியடைந்தவனை உலகியலின் மூவகை இயல்புகளால் உண்டாகும் துன்பங்கள் தொடர்ந்து பீடிக்க இயலாது ! ஆத்தும திருப்தியால் ஒருவன் விரைவில் பூரனஞானம் சித்திக்க பெறுவான் !!**

**தெய்வீகத்தன்மை பெறுவதற்கான பாதை !!**

**கீதை 2:66 யார் உன்னதமான கடவுளோடு தன்னை தொடர்புபடுத்தி கொள்ளாதவனோ அவன் ஒருபோதும் உன்னதமான ஞானத்தையோ அல்லது நிலைத்த மனதையோ அடைவதில்லை ! இவைகளில்லாமல் ஒருவனுக்கு சாந்தி**

உண்டாவதில்லை ! சாந்தியில்லாமல் எந்த சந்தோசமும் நிலைப்பதில்லை !!

கீதை 2:67 வலிய காற்றில் படகானாது இழுத்து செல்லப்படுவது போல அலைபாய்கிற புலன்களில் ஒன்றிலாவது ஒருவனின் மனம் ஒத்திசைந்தால் போதும் அவனது அறிவுத்திறனை அது சிதறடித்து விடும் !!

கீதை 2:68 ஆகவே வலிமை உள்ளோனே ! யார் புலன்களை அவற்றின் நுகர்வுப்பொருட்களின் ஈர்ப்பினின்று விடுவித்து கொள்ள வல்லவனோ அவனே நிலைத்த மனதுடையவன் !!

கீதை 2:69 அத்தகைய சுய கட்டுப்பாடு உள்ளவன் தூங்காமல் தூங்கி விழித்திருக்கும் மெய்ஞானியாவான் ! அவன் உலகமே விழித்து பரபரப்பாய் இயங்கும் போதும் ஒய்ந்திருப்பவனைப்போலவும் ; உலகம் ஓய்ந்திருக்கும் போதும்

விழித்திருப்பவனைப்போலவும் இருப்பான் !!

கீதை 2:70 ஆறுகள் எவ்வளவு தண்ணீரையும் கொண்டு வந்து சமுத்திரத்தில் கொட்டினாலும் அதனை கரைத்து சமுத்திரம் சமுத்திரமாகவே இருப்பது போல ; எவ்வளவு வந்து நிறைந்தாலும் நிறையாததைப்போலவே இருப்பதைப்போல மனதுள் வந்து மயக்கும் வண்ணவண்ண இச்சைகளால் --விதவித மாயைகளால் பாதிப்படையாமல் தன்னில்தானே நிலைத்திருப்பவன் எவனோ அவனே சாந்தி எய்துவான் ! யார் இச்சைகளை பூர்த்தி செய்ய விளைகிறானோ அவன் சாந்தி எய்துவதில்லை !!

கீதை 2:71 எல்லா வகையான புலனின்ப நாட்டங்களை வென்றவனும் ; ஆசைத்தளைகளை அறுத்து சுதந்திரத்தில் திளைப்பவனும் ; உடமைகளைக்குரித்த தற்பெருமையை அறவே விட்டவனும் ; தான் என்ற ஆணவத்தை துறந்தவனும் எவனோ

**அவனே தெய்வீக சமாதாணத்தை எட்டியவன் !!**

**கீதை 2:72 இதுவே ஆன்மீக வாழ்வு மற்றும் தெய்வீகத்தன்மை பெறுவதற்கான பாதையாகும் ! இந்நிலையை அடைந்தவன் ஒருபோதும் தடுமாறுவதில்லை ! தன் வாழ்வின் கடைசி மணித்துளியில் கூட ஒருவன் இந்நிலையை அடைந்தால் அவன் பரலோக ராஜ்ஜியத்தில் பிரவேசிப்பது திண்ணம் !!**

**யோகம் 3`கடமையைச்செய் பலன் விளைவில் பற்றுவைக்காதே! `----கர்ம யோகம்!!**



**கீதை 3:9 கடவுளுக்கு அர்ப்பணம் என்பதாக வேலை செய்யப்படவேண்டும்;இல்லாவிட்டால் வேலைகள் இந்த லவ்கீக உலகில் மனனோவு உள்ளவைகளாக மாறிவிடும்!ஆகவே குந்தியின் மகனே!உனக்கு விதிக்கபட்ட வேலைகளை கடவுளின் திருப்திக்காக என ஈடுபாடோடு செய்வாயாக;இதனால் எப்பொதும் விடுதலை பெற்றவனாக இருப்பாய்!**

**பொதுவாக ஒரு வேலையை நாம் பிறருக்காக செய்ய வேண்டிய சூழ் நிலை**

வரும்போது அதனால் நமக்கு என்ன ஆதாயம் என்று சிந்தித்து அதில் ஈடுபாடில்லாமல் ஏனோதானோ என சொதப்புவது உலக வழக்காக இருக்கிறது

அரசுத்துறைகளில் ஆதாயம் வந்தால் அதற்கு ஒரு வேலை இல்லாவிட்டால் அதை ஓலட்டோஓலட்டு என்று ஓலட்டுவது ஒரு கலையாக கற்றுக்கொண்டு கடைபிடிக்கப்படுகிறது!

அது தற்காலிக வெற்றியே தவிற நீடித்த நோக்கில் நமக்கு நாமே நம் சந்ததிகளுக்கு வரவேண்டிய நன்மைகளின் அளவை குறைத்துகொள்ளுகிறோம்! பல வேலைகளில் நாம் உழைத்தும் பலனில்லாமல் போவது நம் முன்னோர்கள் இப்படி சொதப்பியதன் விளைவு  என்பது உண்மை!

ஒரு வேலையில் நமது சூழ் நிலையின் காரனமாக ஈடுபடாமலேயே இருந்து

விடலாம் அல்லது அவர்களுக்காக பிரார்த்தனை செய்து விட்டு சும்மா இருந்து விடலாம்! ஆனால் செய்யத்தொடங்கி அதனை சொதப்ப கூடாது!

செயலுக்காக செயலை ஈடுபாடுடன் செய்ய வேண்டும்! முடிந்த அளவு நேர்த்தியாகவும் முழுமையாகவும் செய்வது `கர்ம யோகம்` ஆகும்!

செயல் செயலுக்காக செய்யப்படுவது கர்ம யோகம்!

அதில் ஒரு ஆத்மதிருப்தி என்பது உள்ளே விழைவது! நம்மால் செய்யப்பட்ட செயலுக்கு உடனடி பலனை எதிர்பார்க்க வேண்டியதில்லை!

நம்மால் பலனடைந்தவர்கள் நமக்கு பதில் செய்வார்கள் என்றோ ;குறைந்தது உணர்ந்தவர்களாக இறுப்பர்கள் என்றும் எதிர்பார்க்க வேண்டியதில்லை!

கீதை 3:19 எனவே விளைவுகளின் பலன்களில் பற்றுவைக்காமல் ஒருவர் கடமையை கைக்கொள்ளவேண்டும்! யார் பற்றற்று கடமை செய்கிறார்களோ அவர்கள் கடவுளை அடைவர்!

கடவுளுக்காக எதையும் செய்வதாக நினைக்கிற கர்மயோக மனநிலையை அடைந்தவர்க்கு கடவுள் எல்லாவற்றிர்க்கும் ஏற்ற காலத்தில் பலனளிப்பவர்; அவர் கடனாளியல்ல என்பது நன்கு தெறியும்!

குரான் 11:51. "என் சமூகத்தார்களே! இதற்காக நான் உங்களிடம் ஒரு கூலியும் கேட்கவில்லை; எனக்குரிய கூலி எல்லாம் என்னைப்படைத்த அல்லாஹ்விடமே இருக்கிறது. நீங்கள் இதை விளங்கிக் கொள்ள மாட்டீர்களா? --முகமது நபி!

6:160. எவர் ஒருவர் (ஒரு) நன்மையைச் செய்கிறாரோ அவருக்கு அதுபோல் பத்துப் பங்கு (நன்மை) உண்டு; எவர் ஒருவர் (ஒரு) தீமையைச் செய்கிறாரோ அதைப்போன்ற

அளவுடைய கூலியே கொடுக்கப்படுவார் - அவர்கள் அநியாயம் செய்யப்படவும் மாட்டார்கள்.

4:173. ஆனால் எவர் ஈமான் கொண்டு, நற்கருமங்கள் செய்கிறார்களோ, அவர்களுக்கு அவர்களுக்குரிய நற்கூலியை முழுமையாக (அல்லாஹ்) கொடுப்பான்; இன்னும் தன் அருளினால் அவர்களுக்கு அதிகமாகவும் வழங்குவான்; எவர் அவனுக்கு வழிபடுதலைக் குறைவாக எண்ணி கர்வமும் கொள்கிறார்களோ, அவர்களை நோவினை செய்யும் வேதனைக் கொண்டு வேதனை செய்வான்; அல்லாஹ்வைத் தவிர, (வேறு எவரையும்) அவர்கள் தம் உற்ற நேசனாகவோ, உதவி புரிபவனாகவோ (அங்கு) காணமாட்டார்கள்.

நிறை பக்தன்; தான் செய்கிற செயலை ஆத்ம திருப்தியோடு நிறைவேற்றுகிறான்! இன்றைய வாழ்வு,சூழ்நிலை,முன்னேற்றம் இவற்றிர்க்கு கடவுளை நம்பியிருக்கிறான்

தனது அறிவையும் திறமையையும் ஆழமாக அவன் நம்புவதில்லை!

தனக்கு வருகிற வளர்ச்சிக்கு அவன் நன்றி செலுத்துகிறவனே தவிற குதுகலம் அவனை நிறப்புவதில்லை! தன் தோல்விகளுக்கோ ,தடங்கள்கலுக்கோ அவன் மனம் கலங்குவதுமில்லை! ஒரு குழந்தையைப்போல் அவன் மனம் கடவுளிடத்து நிலைத்திறுக்கிறது!

**கீதை 2:150 மனிதர்களில் சிறந்தவனே!யாரொருவன் இன்பத்திலும் துன்பத்திலும் பாதிப்படையாதவனோ;இரண்டிலும் சமநிலை அடைந்தவனோ அவனே விடுதலை பெற தகுதி உள்ளவன்!**

அனுபவத்தில்; ஒரு விசயத்தில் ஆவலும் எதிர்பார்ப்பும் நமக்கு இருக்கும் வரை அதில் நாம்தான் ஔப்பிக்கொண்டு இருப்பதாக இருக்கும்!ஆனால் எதிர்பார்ப்பு இல்லாத

மனச்சம நிலையை அடைந்து விட்ட விசயத்தில் விரைவில் வெற்றி வந்து சேரும்!ஏனெனில் அதில் கடவுள் செயல்பட தொடங்கி விடுகிறார்!

எங்கே நம் சுயம் அடங்குகிறதோ கர்மயோகம் ஆகுதியாக --வேள்வியாக --பிரார்த்தனையோடு செய்யப்படுகிறதோ அதில் கடவுளே விளைவுக்கு நிர்பந்தப்படுத்தப்படுகிறார்!

கீதை 18:6 எல்லா செயல்களும் பற்றற்று செய்வாயாக!விளைவுகளில் எந்த எதிர்பார்ப்பும் கூடாது!செயலுக்காக செயலை செய்!இதுவே என் முடிவான கருத்து!

யோகம் :3 கர்ம யோகம்!!!

கடவுளுக்கு அர்ப்பணம் என்பதாகவே வேலை செய்யப்படவேண்டும் !!!

கீதை 3;1 அர்ச்சுனன் கேட்கிறான் : ஜனார்த்தனா !கேசவா ! உலகியல் ஆதாய

செயல்களை விட ஞானம் கருதிய செயல்களே சிறந்தது என உபதேசிக்கும் தாங்கள் பின்னை எதற்காக கொடூரமான இந்த யுத்தத்தில் ஈடுபடுத்துகிறீர்கள் ?

கீதை 3;2 எதிரெதிராக தோன்றும் உமது உபதேசத்தால் என் புத்தி குழம்புகிறது ! ஆகவே தீர்க்கமாக இவை இரண்டில் எது எனக்கு மேண்மையானது என தெரிவிப்பீராக!!

கீதை 3;3 உன்னதமான கடவுளின் தூதர் கூறுகிறார் : தன்னை உணர்கிற அறிவில் வளர்கிற மனிதர்களில் பொதுவாக இரண்டு வகைப்பட்டவர்கள் உள்ளனர் ! சிலர் புற உலக செயல்பாடுகளின் தர்க்கவியல் நுட்பங்களை கண்டுணர்ந்தும் ;சிலர் பக்தி சேவையின் மூலமாகவும் அறிவில் வளர்கிறார்கள் !!

கீதை 3;4 செயல்களை விட்டு விலகியோடி தவம் செய்வதால் மட்டும் ஒருவன்

பாவவினை; எதிர்வினைகளிலிருந்து தப்பிக்க முடியாது ! அல்லது செயல்களை அர்ப்பணிப்பதால் மட்டும் பக்குவ நிலையை எய்தவும் முடியாது !!

கீதை 3;5 மனிதர்கள் இயற்கையாகவும் சுற்றுபுற சூழ்நிலைகாளாலும் உருவாக்க பட்ட இயல்புகளால் பந்தப்பட்டு தப்பிக்க முடியாதளவு கிரியை--ஏதாவது செய்துகொண்டே உள்ளனர் ! எனவே யாராலும் ஒரு நிமிடம் கூட சும்மா இருக்கவே முடியாது !!

கீதை 3;6 செயல்படும் புலன்களை உலகிற்காக கட்டுபடுத்தினாலும் மனதை புலன் நுகர்ச்சி பொருட்களின் மீது அலைபாய்வதிலிருந்து தடுக்க இயலாதவர்களாய் இருப்பவர்களும் தன்னைதானே ஏமாற்றி கொள்ளும் பொய்யர்களே !!

கீதை 3;7 இதற்கு மாறாக கர்மயோகம்

செய்கிறவர்கள் --அல்லது கிரிஷ்ண தெளிவில் நிலைத்தவர்கள் பலன் விளைவுகளில் பற்றை களைந்தவர்களாய் கடமை உணர்வோடு செயலாற்றி மனதாலும் செய்கையாலும் புலனிச்சைகளின் பந்தத்தை கடற முற்சி செய்கிறார்கள் !! அவர்களே சிறந்தவர்கள் !!

கீதை 3;8 ஆகவே உன் மேல் விழுந்த கடமையை மனப்பூர்வமாக செய்வாயாக ! அதுவே செயல்மறுப்பை விட சிறந்தது ;ஏனெனில் ஸ்தூல உடலை செயலில்லாமல் ஒருவனால் நிர்வகிக்கவே முடியாது !!

கீதை 3:9 கடவுளுக்கு அர்ப்பணம் என்பதாக வேலை
செய்யப்படவேண்டும்;இல்லாவிட்டால் வேலைகள் இந்த லவ்கீக உலகில் மனநோவு உள்ளவைகளாக மாறிவிடும்!ஆகவே குந்தியின் மகனே!உனக்கு விதிக்கபட்ட வேலைகளை கடவுளின் திருப்திக்காக என ஈடுபாடோடு செய்வாயாக! இதனால்

எப்பொதும் விடுதலை பெற்றவனாக இருப்பாய் !!

**பொருட்களின் வழி யாகங்களா ?**
**யோகங்களின் வழி யாகங்களா ?**

கீதை 3:10 படைப்பின் துவக்கத்தில் கடவுள் தேவதூதர்களையும் மனிதர்களையும் படைத்து மனிதர்களுக்கு உண்ணத்தக்க கால்நடைகளையும் படைத்து ஆசிர்வதித்தார் ! அவற்றை கடவுளுக்கான யாகங்களாக -- பாவ நிவாரண ;குற்ற நிவாரண பலிகளாக செலுத்தி கடவுளோடு ஒப்புறவாகும் மார்க்கத்தையும் உயிர்ப்பலி இட்டு அவற்றை உண்டு மகிழ்ந்திருக்கவும் அருள் செய்தார் !!

கீதை 3:11 தேவதூதர்களில் அசுரர்கள் ஆனவர்கள் மனிதர்கள் தங்களுக்காக பலிசெலுத்தி வழிபடுவதில் மகிழ்ந்து மனிதர்களின் பலவகை இச்சைகளை நிறைவேற்றுவதும் ;அதனால் அசுரர்களுக்கும் மனிதர்களுக்கும் இணக்கம்

உண்டாகி அசுரர் ஆளுமை செய்வதுமாய் ஆயிற்று !!

கீதை 3:12 உலகியல் வாழ்வின் மோஹறங்களுக்காக ; அசுரர்களை யாகங்காளால் திருப்தி படுத்துவதும் அசுரர்கள் மனிதர்களின் ஆடம்பர அலங்கார, ஆட்சிகளை நிறைவேற்றுவதுமாய் ஆனது ! அது கடவுளுக்கு சேரவேண்டிய மஹிமையை அசுரர்கள் திருடுவதாயிற்று !!

கீதை 3:13 அப்படியில்லாமல் முழுமுதல் கடவுளுக்கே முதல்மரியாதையாக யாகங்கள் --உயிர்ப்பலி செலுத்தி அதனை உண்ட அவரது நல்லடியார்கள் எல்லா பாவங்களிலிருந்தும் வீடுபேறு அடைந்தார்கள் ! மற்றவர்களோ தங்கள் சுய இச்சைகள் நிறைவேற யாகங்கள் செய்து பாவத்தையே உண்டார்கள் !!

கீதை 3:14 அதனாலேயே விதிக்கபட்ட கடமைகளில் யோகங்களாக யாகங்கள்

நிலைமாற்றம் செய்யப்பட்டன !இத்தகைய யோகங்கள் வழியான யாகங்களே மழை பெய்ய காரணமாகிறது ;அந்த மழையினால் உணவுதாணியங்கள் உண்டாகி அனைத்து உயிரிணங்களுக்கும் ஆதாரமாகிறது !!

கீதை 3:15 ஒழுங்குபடுத்த பட்ட கடமைகள் வேதங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன !அந்த வேதமோ முழுமுதல் கடவுளால் வெளிப்படுத்தபட்டவை !அத்தோடு உண்ணதமான தெய்வீக இயல்புகள் யோக நெறிமுறைகளில் பொதிந்துள்ளன!!

கீதை 3:16 எனதருமை அர்ச்சுணா ! வேதங்கள் காட்டுகிற யோக நெறிமுறைகளை வாழ்வின் ஒவ்வொரு செயல்பாட்டிலும் கடைபிடிக்காதவர்கள் பாவம் நிறைந்த பாதையிலேயே நடந்து வெறும் புலனிச்சைகளுக்காகவே வாழ்ந்து துக்கசாகரத்தில் மூழ்குகிறார்கள் !!

கீதை 3:17 யார் வாழ்வு நெடுகிலும் தன்னை

தானே உணர்கிறவனாய் ; தன்னில்தானே நிலைத்து திருப்தியுற்று ; தெய்வீக சமாதானம் எய்தியவன் பரிபூரணத்தை எட்டுகிறான் !அவன் செயல் செயலின்மையை கடந்தவனாகிறான்!!

கீதை 3:18 பரிபூரணமடைந்த மனிதனுக்கு ; விதிக்கபட்ட கடமைகளை நிறைவேற்ற பாடுபடுதல் என்ற நிர்ப்பந்தம் ஏதுமில்லை ! அல்லது அக்கடமைகளை நிறைவேற்றாமலிருக்க காரணங்களும் இல்லை ! அல்லது எதற்காகவேனும் பிறரை எதிர்பார்த்திருக்க வேண்டிய அவசியமுமில்லை !!

கீதை 3:19 ஆகவே பலன் விளைவுகளில் பந்தப்படாமல் செயலுக்காக செயலை ஒருவன் செய்துவரவேண்டும் !அப்படி பற்றில்லாமல் செயல்படுவதால் ஒருவன் கடவுளை அடைகிறான் !!

கீதை 3:20 விதிக்கபட்ட செயல்களை செய்வதன் மூலமாக ஜனகர் போன்ற

அரசர்கள் பூரணத்தை எய்தினார்கள் ! நீயும் அதுபோல பொதுமக்களுக்கு கற்றுகொடுக்கும் பொறுப்போடு கடமையை செய்வாயாக !!

கீதை 3:21 தலைவர்கள் எவ்வழியோ பொதுமக்களும் அவ்வழியே செல்கிறார்கள் ! முன்னுதாரமான செயல்பாடுகளில் தலைவன் என்ன தரத்தை வெளிப்படுத்துகிறானோ அதனையே அனைவரும் பின்பற்றுவார்கள் !!

கீதை 3:22 பிரதாவின் மகனே !மூவுலகங்களிலும் எனக்கு விதிக்க பட்ட கடமைகளும் ஏதுமில்லை ! நான் விரும்புகிறவைகளும் ஏதுமில்லை ! எதையாவது பெற்றுகொள்ள வேண்டிய அவசியமுமில்லை ! இருப்பினும் செயல்களில் ஈடுபட்டவனாகவே இருக்கிறேன் !!

கீதை 3:23 பார்த்தா ! என் மேல்வந்த கடமைகளை அக்கறையுடன்

செய்துகொண்டிருப்பதை ஒருவேலை நான் நிறுத்தினால் முழு உலகமும் என்னை பின்பற்றி பொறுப்புகளை தட்டிகழிக்காதா ??

கீதை 3:24 நான் செயல்படுவதை நிறுத்தினால் முழு உலகமும் சீரழிவில் விழுந்து வேண்டாத குழப்பங்கள் உருவாக காரணமாகிவிடுவேன் ! அதனால் உயிரிணங்கள் அனைத்தினதும் நிம்மதியை கெடுத்தவனாவேன் !!

கீதை 3:25 ஞானமில்லாதோர் பலன் விளைவுகளில் பற்று கொண்டோராய் செயல்பட்டால் ; வெளிப்பார்வைக்கு அறிவுள்ளோரும் அதேமாதிரியாகவே செயல்பட வேண்டும் ---உள்ளார்ந்து பலன் விளைவுகளில் பந்தமில்லாதவராக ! ஏனெனில் பொதுமக்களை உய்விக்கும் கடமை ஞானமுள்ளோர் மீதே உள்ளது !!

கீதை 3:26 கிரிஸ்ண தெளிவை கற்றுணர்ந்த ஞானமுள்ளோர் ; பலன் கருதி பணியாற்றும்

ஜனங்கள் மேலும் கெட்டுபோகாதபடி கடமையை தட்டிகழிக்க பழக்கலாகாது ! மாறாக கடவுளுக்கு அர்ப்பணமாக ; செயலுக்காக செயல் புரிந்து ஜனங்களை எல்லா வகையான செயல்களையும் செய்கிறவர்களாய் பழக்கவேண்டும் !!

கீதை 3:27 மூவகை(சத்துவ, ரஜோ &தாமச) குணங்களால் மயக்கமுற்றிருக்கும் ஆத்துமாக்கள் ; உலகிலே நால்வகை தொழிலிருந்து இயற்கையாக எழும்பும் செயல்பாடுகளை தாமே திட்டமிட்டு ; நிர்வகித்து செயல்படுவதாக நம்பிக்கொண்டுள்ளனர் !

கீதை 3:28 போர்க்கலையில் வல்லவனே !மெய்யறிவில் நிலைத்த ஆத்துமாக்களோ கடவுளுக்கு அர்ப்பணமாக செயல்படுவதற்கும் பலன் விளைவில் பற்று கொண்டு செயல்படுவதற்கும் உள்ள வித்தியாசத்தை உணர்ந்தவர்கள் ! புலன்களுக்கும் புலன்இச்சைகளுக்கும்

ஆட்பட்டு அதற்காக செயல்படுவதிலிருந்து தம்மை விடுவித்து கொள்கிறார்கள் !!

கீதை 3:29 நால்வகை தொழிலின் இயல்புகளால் குழம்பிய ஆத்துமாக்கள் ;அறியாமையால் உலகியல் செயல்பாடுகளை சாசுவதம் என நம்பி அதற்கு பந்தப்பட்டு கொள்கிறார்கள் ! ஞானமின்மையால் கீழ்னிலையடைந்த அவர்களின் செயல்பாடுகளை ஞானமுள்ளோர் ஒருபோதும் தடைசெய்யலாகாது !!

கீதை 3:30 ஆகவே அர்ச்சுணா ! கடவுளின் மீது மனம் நிலைத்தவனாய் ; அவரை முற்றிலும் சரணடைந்து தான்தனது என்ற அகம்பாவத்தை விட்டுவாயாக ! மனதாழ்மையுடனும் கவணத்துடனும் போரிடுவாயாக !!

கீதை 3:31 யார் எனது அறிவுறுத்தல்களை மனமுரண்பாடின்றி பக்திபூர்வமாக நம்பிக்கையுடன் கடைபிடிக்கிறார்களோ

அவர்களே பலன்விளைவில் பற்று கொண்ட செயல்பாடுகளின் பந்தத்திலிருந்து நிச்சயம் விடுதலை பெறுவர் !!

கீதை 3:32 யார் மனமுரண்பாட்டால் இந்த அறிவுறுத்தல்களை அவமதித்து ; பின்பற்ற மறுக்கிறார்களோ அவர்கள் எல்லா அறிவையும் இழந்து மதியீணராய் இருளுக்குள் அமிழ்ந்து அழிவை அடைவது திண்ணம் !!

உலகில் அழிவை உண்டாக்கும் எதிரி--இச்சை !!

கீதை 3:33 எல்லா மனிதர்களும் தங்களிடமுள்ள மூவகை குணங்களிலிருந்து எழும்பும் செயல்களை இயற்கையாகவே தன்னையறியாமல் செய்கிறார்கள் ! அதுபோலவே தன்னை உணர்ந்த ஞானியரும் தங்கள் இயற்கையின்படியே செயல்பட்டால் யாரை போய் கண்டிப்பது??

கீதை 3:34 தன்னை சுற்றிய பொருட்களின்

மீது ஈர்ப்போ வெறுப்போ கொள்ளுவது புலன்களின் இயல்பாகும் ! அதனை கட்டுப்படுத்தி முறையான வழிகளில் பழக்கவேண்டும் ! மாறாக புலன்களின் ஈர்ப்புக்கும் வெறுப்புக்கும் அடிமையாகக்கூடாது ! ஏனெனில் தன்னை உணர்வதற்கான பாதையில் அவை பெரும் தடைகற்களாகும் !!

கீதை 3:35 ஒருவன் அடுத்தவர் கடமைகளை மிகசரியாக செய்வதைகாட்டிலும் தனக்கு விதிக்கபட்ட கடமைகளை தவறுதலாக கூட செய்வது நல்லது !அடுத்தவர் கடமைகளில் சிக்கிகொள்வதை காட்டிலும் தனது கடமைகளை செய்து அழிவதாயினும் அதுவே தலைசிறந்தது !!

கீதை 3:36 அர்ச்சுணன் கூறினான் : விரிஸ்னி குலத்தோனே ! முழுமனதில்லாமலேயே பலவந்தப்படுத்தப்பட்டது போல ஒருவன் சிலசமயங்களில் பாவகாரியங்களை செய்ய ஏன் தூண்டப்படுகிறான் ??

கீதை 3:37 இறைதூதர் கிரிஸ்ணர் கூறிணார் : இச்சைகள் தான் காரணம் அர்ச்சுணா ! புற உலகாலுண்டாகும் மோகம் ரஜோ குணத்தால் மூர்க்கமாய் மாற்றமடைகிறது ! அந்த மூர்க்கமே எல்லா பாவத்திற்கும் காரணமாகி உலகில் அழிவை உண்டாக்கும் எதிரியாய் விளங்குகிறது !!

கீதை 3:38 நெருப்பு புகையால் சூழப்பட்டிருப்பது போல ;கண்ணாடியில் தூசி படிந்திருப்பது போல ;அல்லது கரு கருவறையால் சூழப்பட்டிருக்கிறது போல இப்பூவுலகின் எல்லா உயிரிணங்களும் இச்சைகளின் பலவகைப்பட்ட படிமானங்களால் சூழப்பட்டுள்ளன !!

கீதை 3:39 எல்லா மனிதர்களின் அறிவும் ஆண்மாவின் எதிரியான இச்சைகளால் நெருக்கி அமிழ்த்தப்படுகிறது ! அது ஒரு போதும் திரிப்தியடையாதது ;பற்றியெரிகிற நெருப்பாக தூய உணர்வுகளை சுட்டு

பொசுக்குவது !!

கீதை 3:40 புலன்கள் , மனம் மற்றும் மதிநுட்பம் ஆகியவைகளே இச்சை அமர்ந்து ஆட்சிபுரியும் இடங்களாகும் ! அவைகளை தூண்டி எல்லா மனிதர்களின் அறிவிலும் குழப்பத்தை உண்டாக்குகின்றன !!

கீதை 3:41 அர்ச்சுணா ! பாவத்தின் பெரிய அடையாளமான இச்சையை முளையிலேயே கிள்ளி எறிவாயாக ! பரதவர்களில் சிறந்தவனே ! தன்னை உணர்தலையும் ஞானத்தையும் அழிக்கிற இச்சையை முயற்சித்து வீழ்த்துவாயாக !!

கீதை 3:42 கர்ம இந்திரியங்கள்--புலன்கள் ஜடப்பொருள்களை விட உயர்ந்தவை ! மனம் புலன்களை விட உயர்வானது !அறிவோ மனதையும் விட உயர்வானது !ஆனால் ஆத்துமாவாகிய மனிதனோ அறிவையும் விட மிகமிக உயர்ந்தவன் !!

**கீதை 3:43 உலகம் ,புலன்கள் ,மனம் மற்றும் அறிவு எல்லாவற்றையும் விட தனது உண்ணதத்தை ஒருவன் உணரவேண்டும் ! யுத்தத்தில் வல்ல அர்ச்சுணா ! ஆண்ம உனர்வை விரிவடைய செய்து மனதை கீழ் நிலையினின்று உயர்த்தவேண்டும் ! இவ்வாறாக ஆண்ம பலமடைந்து வெல்லவே முடியாத எதிரியாகிய இச்சையை வெல்லவேண்டும் !!**

யோகம் 4 ஞான கர்ம சந்நியாச யோகம் !!!



கீதை 4 :1 இறைதூதர் கிருஷ்ணர் கூறினார் : நான் இந்த அழிவற்ற விஞ்ஞானமாகிய யோகமுறைகளை ஆதியிலே மனிதர்களின் தகப்பனான மண்ணு /மணுவிற்கு உபதேசித்தேன் !!! அவர் தமது மகனான இஷ்வாகிற்கு உபதேசித்தார் !!

கீதை 4 :2 இந்த உண்ணதமான விஞ்ஞானம் வழிவழியாக சீடர்களின் பாராம்பரியத்தால் பெறப்பட்டு; ராஜரிஷிகளாகிய அரசர்களால் உணர்ந்து கடைபிடிக்க பட்டு வந்தது! இருப்பினும் நாளடைவில் இந்த பாராம்பரியம் உடைந்து இன்றைய தினம்

காணப்படுவது போல இந்த உண்ணதமான விஞ்ஞானம் அறியப்படாமலேயே போயிற்று!!!

கீதை 4 :3 உண்ணதமான கடவுளோடு இயைந்து ஒருமித்து வாழும் அந்த ஆதி கலையை இன்று நான் உனக்கு உபதேசிக்கிறேன்!!! ஏனென்றால் நீ எனது நண்பனும் சீடனும் அத்தோடு உயிரோட்டமுள்ள நித்திய ஞானத்தை உணர்ந்து கொள்ள தகுதியுள்ளவனுமாய் இருக்கிறாய்!!!

கீதை 4 :4 அர்ச்சுனன் கேட்டான்: தாங்கள் பிறந்திருப்பது இப்போது! அப்படியிருக்க ஆதியிலே இந்த விஞ்ஞானத்தை எப்படி மனுவிற்கு உபதேசித்தீர்கள்?

கீதை 4 :5 கிரிஷ்ணர் கூறினார்: நீயும் நானும் பலபிறவிகள் இப்பூமியில் வந்துள்ளோம்!! ஆனால் அவை பற்றிய உணர்வு உனக்கு அருளபடவில்லை!! எனக்கு மறைக்க

படவில்லை!!!

கீதை 4:6 நான் பிறப்பற்றவனாகவும்; அழிவற்ற எனது ஆத்துமசரீரம் நித்தியஜீவனுள்ளதாகவும் இருந்தாலும் நான் அதனை தாழ்த்தி யுகங்கள் தோறும் இப்பூமியில் அவதரிக்கிறேன்! எனென்றால் நானே இப்பூமிக்கு கடவுளின் பிரதிநிதியும்; பூமியில்உள்ள அனைத்து உயிரிணங்களின் யுகபுருஷனும் ஆவேன்!!

கீதை 4:7 எப்போதெல்லாம் எப்போதெல்லாம் ஆன்மீக மதிப்பீடுகள் தொய்வடைந்து அதர்மம் தலைவிரித்தாடுகிறதோ அப்போதெல்லாம் நான் பூமிக்கு இறங்கி வருகிறேன்!!

கீதை 4:8 பக்தர்களை ரட்சிக்கவும் தீமை புரிந்து பூமியில் குழப்பம் செய்வோரை அழிக்கவும் மீண்டும் தர்மத்தை நிலைநாட்டவும் யுகங்கள்தோறும் யுகங்கள்தோறும் இப்பூமியில்

அவதரிக்கிறேன்!!

கீதை 4:9 யார் பூமியில் வெளிப்படும் எனது சரீரத்தின் தோற்றத்தையும்; நித்தியஜீவனுள்ள எனது ஆத்துமாவையும் உணர்ந்து அதன் செயல்பாடுகளில் தன்னை இனைத்துக்கொண்டு ஒத்திசைவாய் வாழ்கிறானோ அவன் இந்த லவ்கீகவாழ்வில் மீண்டும்மீண்டும் அல்லலுறுவதில்லை;மாறாக எனது நித்தியத்தின் மனநிலையை எய்துவான்!! நித்திய ஜீவனை அடைந்து என்னோடுகூட வாசம் செய்வான்!!

கீதை 4:10 பந்தத்திலிருந்தும் பயத்திலிருந்தும் கோபத்திலிருந்தும் விடுபட்டவர்களாய் ;முற்றிலும் கடவுளில் நிலைத்து கடவுளுக்குள் புகலிடம் தேடியவர்களாய் கடவுளை அறிகிற அறிவாலே நிறைய மனிதர்கள் தூய்மை அடைந்தார்கள்!! அதனாலே கடவுளின் நித்திய அன்பிலே நிலைத்தார்கள்!!

கீதை 4:11 என்னிடம் எல்லா விசயங்களையும் கற்றுக்கொண்டு என்னை பின்பற்றி நடந்து கடவுளை முழுசரணாகதி அடைந்தவர்கள் அனைவருக்கும் கடவுள் அவரவருக்கேற்ற கூலியை வழங்குவார்!!

கிரிஷ்ண தெளிவு !!!

கீதை 4:12 இப்பூமியில் பலன் கருதி பணியாற்றும் மனிதர்கள் சிலர் தாங்கள் நினைத்ததை அடைய அசுரர்களை வழிபடுகிரார்கள் ! அதனால் பூமிக்குரிய வாழ்வில் பல பலன்களையும் பெற்றுகொள்கிறார்கள் !!

கீதை 4:13 மூன்று வகையாகிய மனித குணங்கள் மற்றும் அவற்றோடு தொடர்புள்ள உலகியல் செயல்பாடுகள் செவ்வையுற நடக்க நால்வகை தொழில்பிரிவுகள் சமுதாயத்தில் கடவுளால் உண்டாக்க படுகின்றன ! இந்த நால்வகை தொழில்பிரிவுகளின் செயல்பாடுகளை

யுகபுருஷனாகிய நான் நிர்வகித்து பரிபாலித்தாலும் இவைகளால் பாதிக்க படாதவனாகவும் செயலற்றவனாகவுமே இருக்கிறேன் !

கீதை 4:14 எந்த செயல்பாடுகளும் என்னை பாதிப்பதில்லை; அல்லது அவற்றில் பலன் கருதி பணியாற்றுவதுமில்லை! யார் எனது செயல்பாட்டின் உண்மைத்தன்மையை உணர்ந்துகொண்டவனோ அவனும் பலன் கருதிய செயல்பாடுகளில் பட்டு உழல்வதில்லை !!

கீதை 4:15 நித்திய ஜீவன் அருளப்பட்ட எனது இயல்புகளை உணர்ந்து கொண்டவர்களாய் பலர் முந்தையகாலங்களிலேயே அதனை கடைபிடித்து விடுதலை பெற்ற ஆத்துமாக்களாய் மாறினார்கள்! அவர்களின் பாதையில் நடந்து உன் கடமைகளை செய்து வருவாயாக!!

கீதை 4:16அறிவுத்திறன் உடையவர்கள் கூட எது செயல் எது செயலை கடந்த தன்மை என்பதை நிதானிக்க முடியாமல் தடுமாற்றம் அடைகிறார்கள்! நான் எது செயல் என்பதை குறித்து விளக்குகிறேன் இதனை உணர்ந்து கடைபிடித்தால் தவறுகளிலிருந்து விடுபடுவாய்!!

கீதை 4:17 செயலின் நுட்பங்களை புரிந்து கொள்வது மிகவும் கடினமானது !அதற்கு முன்னால் செய்யக்கூடியது எது செய்யக்கூடாதது எது செயலைகடந்தது எது என்பதை புரிந்துகொள்வாயாக!!

கீதை 4:18 யார் தன் மீது சுமறும் எல்லா செயல்பாடுகளிலும் தன்னை ஈடுபடுத்தி கொண்டு வினையாற்றினாலும் செயலில் செயலை கடந்த மனநிலையும் செயல்படாத போதும் செயலை நிர்வகிக்கிற மனநிலையும் அடையப்பெறுகிறானோ அவனே அறிவுதிறமுடையவன்! நித்திய ஜீவனை அடைவதற்கான பரிபக்குவத்தில்

பயணிக்கிறவன்!!

கீதை 4:19 தனது புலன் இச்சைகளை
நிறைவேற்றும் நோக்கத்தை
வென்றவவனாய் யார் தனது அனறாட
செயல்பாடுகளை நிர்வகிக்கிறானோ அவனே
முற்றறிவை எய்தியவனாக கருதப்படுவான்!!

கீதை 4:20 பலன் விளைவுகளில் எவ்வித சிறு
பற்றையும் கைவிட்ட மனநிலை உடையவன்
தன்னில்தானே நிலைத்து பூரணத்தை எய்தி
வாழ்வின் எல்லா விசயங்களிலும்
செயல்படுவதால் பலன் விளைவில்
பற்றற்றவனாகிறான்

கீதை 4:21 இந்த பரிபூரணத்தை எய்தியவன்
தனது உடமைகளக்குறித்த பெருமைசிறுமை;
உயர்வுதாழ்வு மனப்பாண்மையை கைவிட்டு
மனதையும் அறிவையும் செம்மையாய்
கட்டுப்படுத்தி தனது வாழ்வின் அத்யாவசிய
தேவைகளை மட்டுமே தேடுகிறான் இவ்வாறு
செயலாற்றுவதால் பாவவிளைவுகளால்

பாதிக்கபடுவதில்லை!!

கீதை 4:22 இடைவிடாது செயலாற்றி கொண்டேயிருந்தாலும் அச்செயலில் அதுவாக விளையும் பலனில் திருப்தியுற்று இருமைகளை கடந்து எரிச்சலடையாமல் வெற்றிதோல்வி இரண்டிலும் பாதிப்படையாமல் நிலைத்தமனதுடையவர்கள் எப்போதும் கலக்கமடைவதில்லை!!

கீதை 4:23 மூவகை குணங்களில் பிணைப்பற்று ஜீவனுள்ள அறிவில் நிலைத்த மனிதனின் செய்கை அனைத்தும் ஞானத்தில் போய் முடிகிறது!!

கீதை 4:24 யார் இந்த தெளிவில் நிலைக்கிறானோ--அதாவது கிருஷ்ண தெளிவு அடைந்த மனிதன் நிச்சயமாக பரலோக ராஜ்ஜியத்தை அடைவான் ஏனெனில் அவனின் செயல்பாடுகளெல்லாமம் ஆன்மீகமாகவே

பரிமளிக்கும் அவன் விளைவித்ததெலலாம் ஆன்மீகமே அவன் உள்வாங்கியதெல்லாம் ஆன்மீகமே!!

## யாகம் -வேள்வி என்பது என்ன?

கீதை 4:25 யோகம் செய்கிறவர்களில் பலர் அசுரர்களை உபாவாசித்து அவர்களுக்கு பிரியமான பலவகைப்பட்ட உணர்வுகளை -- பலிகளை செலுத்துகிறார்கள் ! ஆனால் வெகுசிலரே உன்னதமான கடவுளின் ஞானத்தீயில் தங்களையே பலியாக அர்ப்பணிக்கின்றனர்!!

கீதை 4:26 இன்பவேட்கையில் ஈர்க்கபடாத துறவறத்தினர் சிலர் மனக்கட்டுபாடு என்னும் வேள்வியில் ஐம்புலன்களையும் புலன் நுகர்ச்சியையும் அர்ப்பணித்தும் முறையான இல்லறவாசிகள் சிலர் புலன் நுகர்வுகளில் அளவை அர்ப்பணித்து புலன்களையே வேள்வியாக்கியும் தங்களையே வேள்வியாக மாற்றுகின்றனர்!

கீதை 4:27 மற்றும் சிலரோ தன் மனதையும் புலன்களையும் அடக்கியாண்டு அனுபவத்தால் முகிழ்த்த ஞானத்தீயில் புலன்களின் இயக்கத்தையும் பிராணனின் இயக்கத்தையும் வேள்வியாக்கி தன்னை உணர்தல் என்னும் சாதனையில் பயணிக்கிறார்கள்!

கீதை 4:28 சிலர் கடும் தவத்தில் ``தான்தனது`` என்ற அகம்பாவத்தையும் பற்றுகளையும் வேள்வியாக்கி ஞானத்தை அடைகிறார்கள்! சிலர் கடும் விரதத்தால் அஸ்ட்டாங்கயோகம் பயின்றும் சிலர் வேதங்களை ஆய்வுசெய்வதாலும் உன்னதமான ஞானத்தை அடைகிறார்கள்!

கீதை 4:29 மற்றும் சிலர் மூச்சு பயிற்சியில் ஈடுபட்டு ஆழ்மன தியானத்தில் லயிக்கிறார்கள் ! அந்த லயத்தை எட்டியோர் வெளிமூச்சின் இயக்கத்தில் உள்மூச்சையும் உள்மூச்சின் இயக்கத்தில் வெளிமூச்சையும்

வேள்வியாக்குகின்றனர்!அந்த வேள்வியில் மூச்சை கடந்தும்; சிந்தனையை கடந்தும் ஆழ்மன தியானத்தில் நிலைக்கிறார்கள்!

கீதை 4:30 யாகம் -வேள்வி என்பதன் உன்மையான அர்த்தத்தை உணர்ந்தவர்களாய் மேற்கண்ட பயிற்சிகளில் ஒன்றில் ஈடுபடுவோர் பாவவினை மற்றும் எதிர்வினைகளிலிருந்து தூய்மைமேல் தூய்மை அடைந்து ஞானத்தீயினின்று விளையும் அமுதத்தை பருகி பரலோகத்திற்குரிய நித்தியஜீவனை அடைவது திண்ணம்!

கீதை 4:31 குருவம்சத்தில் சிறந்தவனே !இந்த பிரபஞ்சத்திலும், வாழ்விலும் இத்தகைய வேள்விகளின்றி ஒருவன் மகிழ்ச்சியாக வாழவே முடியாது! அப்படியிருக்க மறுமையை பற்றியென்ன?

கீதை 4:32 இப்படி பலவகைப்பட்ட செயல்பாடுகளில் கைக்கொள்ளப்படும்

மனநிலை யோகங்களால் உண்டாகிற யாகங்கள் மட்டுமே வேதங்களால் அங்கீகரிக்கபட்டவை ! இதன் நுட்பத்தை சரியாக புரிந்துகொள்வதால் மட்டுமே மாயைகளிளிருந்து விடுதலை பெற்ற ஆத்துமாவாய் மாற முடியும் !!

கீதை 4:33 எதிரிகளை நிர்மூலமாக்குகிற பார்த்தா ! யோகங்களின் வழியான யாகங்களே ; உலகத்தினர் பொருட்களால் செய்யும் யாகங்களை விட சரியானது ! செயல்பாடுகளின் வழியான யோகங்களே ஞானத்தையும் விளைவிக்க கூடியது !!

கீதை 4:34 ஆன்மாவை உணர்ந்த குரு ஒருவரை அணுகி அவருக்கு பணிவிடைகள் செய்தும் தாழ்மையுடன் விசாரித்தும் அவரிடமிருந்து உண்மையை உள்வாங்குவாயாக !தன்னை உணர்ந்த ஆத்துமாக்கள் மட்டுமே தாங்கள் அறிந்த அளவு உண்மையை உனக்கு உணர்த்த முடியும்!!

**கீதை 4:35 முழு உண்மையை நோக்கி வளரும் அறிவை அறிந்த பல ஆத்துமாகளிடமிருந்து நாளும் உள்வாங்குபவனாய் இருந்தால் தேங்கிப்போய் பின்தங்க மாட்டாய்! அத்தகைய அறிவால் எல்லா உயிரினங்களும் உன்னதமானவரின் அங்கங்களே மற்றும் அவரிலிருந்து வந்த அவருடையவைகளே என்ற மெய்யுணர்வில் திளைப்பாய் ‼**

**கீதை 4:36 பாவிகளில் பெரும் பாவியாய் ஒருவன் பிறந்திருந்தாலும் ; உன்னதமான ஞானம் என்கிற படகில் ஏறி விட்டால் ``துக்கசாகரம்`` என்ற பிறவிக்கடலை நிச்சயமாக கடப்பது திண்ணம் ‼**

**கீதை 4:37 கொளுந்து விட்டு பரவுகிற நெருப்பு எல்லாவற்றையும் எரித்து சாம்பலாக்குவது போல ஞானத்தீயானது உலகியல் செயல்பாடுகளால் விளையும்**

பாவங்கள் அனைத்தையும் எரித்து இருவினைகளையம் கடரச்செய்யும்!!

கீதை 4:38 உயிரோட்டமான--நித்தமும் வளர்கிற அறிவிற்கு ஈடுஇணையானதும் அதைப்போல தூய்மையானதும் இந்த உலகில் ஏதுமில்லை! அது எல்லா யோகங்களின் முற்றிய பலனால் விளைவது!! யார் ஆன்மீக பயிற்சியில் தன்னை முழுமையாக ஈடுபடுத்தி கொள்ளுகிராறோ அவர் தனக்குள்ளாகவே இந்த அறிவை ஏற்ற காலத்தில் துய்க்க தொட்ங்குவார்!!!

கீதை 4:39 இந்த உயிரோட்டமான அறிவில் லயித்த பக்தன் தனது புலண்களை அடக்குவதில் வெற்றி பெற்று ஞானம் சித்திக்கபெறுகிறான்! ஞானம் சித்திக்க பெற்று உண்ணதமான தெய்வீக சமாதானம் நிறம்பியவனாய் மாறுகிறான்!!!

கீதை 4:40 அவபக்தியுள்ளவர்களும் அறியாமையில் உழல்வோரும் கடவுளால்

**அந்தந்த காலத்திற்கு வெளிப்படுத்திய வெளிப்படுத்த போகும் வேதங்களில் சந்தேகம் கொள்ளுவதால் இந்த இறைஉணர்வை அடையமாட்டார்கள்!! அவர்கள் தங்கள் ஆன்மீகநிலையிலிருந்து மேலும் வீழ்சியடைந்து இம்மையிலும் மறுமையிலும் ஆனந்தத்தை இழப்பது திண்ணம்!!!**

**கீதை 4:41 யார் இந்த ஆன்மீக பயிற்சியிலும் பலனில் பற்று வைக்காத கர்மயோகத்திலும் அப்பியாசிக்கிராறோ அவரது சந்தேகங்கள் உயிரோட்டமான அறிவால் அழிக்கபடும்!! செயலின் விளைவுகளால் பாதிக்க படாத மன நிலையை எட்டி தன்னில்தானே நிலைத்திருப்பார்!!!**

**கீதை 4:42 ஆகவே அறியாமையினால் உனது மனதில் எழும் சந்தேகங்களை முற்றறிவால் துடைத்தெறிவாயாக!!! யோகங்களால் உன்னை பலப்படுத்திக்கொண்டவனாய் போரிடுவாயாக!!!**

**யோகம் 5 : கர்ம சந்நியாச யோகம் !!**



**கீதை 5:1 அர்ச்சுணன் கூறினான் : கிருஷ்ணா ! முதலில் செயல் விளைவில் பற்றற்று இரு என்றும் ;பின்னர் கடவுளுக்கான பக்தி தொண்டாக எச்செயலையும் செய்து வா என்றும் உபதேசிக்கிறீர்கள் ! அன்பு கூர்ந்து எதை செய்வது நல்லது என தெளிவாக கூறவும் !!**

**கீதை 5:2 உன்னதமான கடவுளின் தூதர் கூறினார் : செயல் விளைவில் பற்றற்று இருப்பதும் ; கடவுளுக்காக என்று எச்செயலையும் செய்வதும் வெவ்வேறானதல்ல ! இருப்பினும் கடவுளுக்காக என்று செயலாற்றுவதே**

மேலோட்டமாகவேனும் ஆத்தும
விடுதலைக்கு நல்லது !!

கீதை 5:3 தனது செயல்களின் விளைவுகளின் மீது யார் விருப்பு வெறுப்பு கடந்தவரோ அவரே செயல் விளைவில் பற்றற்றவர் எனப்படுவார் ! அப்படிபட்ட நபர் இருமைகளின் பாதிப்புகளை கடறும் பயிற்சியால் எளிதாக லவ்கீக தளைகளில் இருந்து விடுபட்டு ஆத்தும விடுதலையில் முழுமையடைவார் !!

கீதை 5:4 கடவுளுக்கு பக்தி தொண்டையும் சாங்கிய யோகத்தையும் வெவ்வேறானது என ஆழ்ந்த அனுபவமற்றவர்கள் நினைக்கிறார்கள் ! உண்மையில் அனுபவம் பெற்றவர்கள் இவை இரண்டில் ஒன்றிலாகிலும் முன்னேறியவுடன் அது மற்றதின் நிறைவிலும் வந்து முடிந்து இரண்டும் ஒன்றாகியதை உணர்வார்கள் !

கீதை 5:5 சாங்கிய யோகத்தில் ஆழ்ந்து

நிறைவடைந்தவர் அதே நிலையை பக்தியோகத்தில் நிறைவடைந்தவறும் அடைந்திருப்பதை உணர்ந்து ஒருவர் அனுபவத்தை ஒருவர் அனுபவமாக சுவீகரித்து கொள்ளுவார்கள் ! இரண்டும் கலந்த முதிர்ந்த யோகத்தில் நிலைப்பர் !!

கீதை 5:6 சாங்கிய யோக தத்துவ விசாரம் மட்டும் செய்கிறவர் முன்னேறிய நிலைமையிலும் பரிபூரணம் எய்தாமல் தவிப்பர் ! அந்நிலையில் உன்னதமான கடவுளின் மீது பக்தி கொண்டதும் பரிபூரண நிலையை உடனே எய்துவர் !!

கீதை 5:7 தனக்குள்ளாக மூழ்கி மனதையும் புலன்களையும் அடக்கி ஆத்தும தூய்மை எய்தியவர் ;கடவுளை ஏற்று பக்தி தொண்டாக கர்மயோகத்தை செய்யும் போது எல்லாம் அவருக்கு பிரியமாகவும் எல்லோருக்கும் அவர் பிரியமானவராகவும் ஆகும் ! எவ்வகை செயல்களாலும் அவர் பாதிக்க படுவதில்லை !!

**கீதை 5:8** அத்தகு மெய்ஞானமய கோஷத்தில் நிலைத்தவர் உலகியலில் பார்த்தல் , கேட்டல் , தொடுதல் , நுகர்தல் , உண்ணல் , நகர்தல் , தூங்குதல் சுவாசித்தல் என செய்தாலும் உள்ளார்ந்து எதுவுமே செய்யாதவரைப்போலவே உணர்வர் !

**கீதை 5:9** ஏனென்றால் அவரைப்பொறுத்து மேற்கண்ட இயக்கங்கள் அனைத்தும் உடலும் புலன்களும் அவற்றை ஈர்க்கும் பொருட்களுடன் இடைபடுவதால் தோண்றிமறைபவையே தவிர தானும் ஆத்துமாவும் அவைகளுக்கு அப்பாற்பட்டே இருப்பார் !!

**கீதை 5:10** தண்ணீரில் தாமரை இலை இருப்பதுபோல ; செயல் விளைவில் பற்றற்று செயலின் விளைவுகள் அனைத்தையும் யார் கடவுளுக்கே அர்ப்பணிக்கிறார்களோ அவர்களின் மீது பாவங்கள் சுமறுவதில்லை !!

கீதை 5:11 யோகிகள் எனப்படுவோர் எல்லா பற்றுக்களையும் களைந்து ; உடலாலும் , மனதாலும் , அறிவாலும் , புலன்களாலும் கடவுளுக்கென்றே செயல்பட்டு ஆத்தும தூய்மை எய்துகிறார்கள் !!

கீதை 5:12 பக்தியில் நிலைத்த ஆத்துமா கலப்பில்லாத சாந்தியை எய்தும் ; ஏனெனில் தனது எல்லா செயல்பாடுகளின் விளைவையும் அவன் கடவுளுக்கே அர்ப்பணிக்கிறான் ! கடவுளுடன் ஒத்திசைவை கற்றுக்கொள்ளாதவனோ தனது சுயமுயற்சியின் பலன்களின் மீது ஆசை கொண்டு தடுமாற்றம் அடைகிறான் !!

கீதை 5:13 உள்ளார்ந்த ஆத்துமா தன்னை உணர்ந்து தெளிந்து ;உடலை ஆழுமை செய்து ; தனது எல்லா செயல்பாடுகளின் விளைவையும் அர்ப்பணித்து விடுமானால் ஒன்பது வாயில்கள் கொண்ட உடலில் பரிபூரணம் எய்தி சுகித்திருக்கும் ! ஆத்துமா

கர்மம் செய்வதுமில்லை : கர்மத்தின் விளைவை அனுபவிப்பதுமில்லை !! மனதளவில் அவன் கர்மத்தை துறந்தவனாகிறான் !!

கீதை 5:14 உள்ளார்ந்த கடவுளின்ஆவியாகிய உயிரே ; உடலுக்கும் ஆத்துமாவுக்கும் இயக்கு சக்தியாகும் ! அது எச்செயல்களையும் உருவாக்குவதுமில்லை ; செயல்களின் பலன்களை பெற்றுக்கொள்வதுமில்லை ! அல்லது மனிதர்களை செயல்படும் படி தூண்டி விடுவதுமில்லை ; உடலின் மூவகை இயல்புகளிலிருந்தே கர்மத்தளைகள் உற்பத்தியாகி ஆத்துமாவை பிணைக்கிறது !!

கீதை 5:15 உண்ணதமான கடவுள் பூமியில் ஒருவர் பாவத்தையோ ; நெருக்கடிகளையோ செய்யும் படி ஒருபோதும் பணித்ததில்லை ! உடலில் உறையும் உயிரும் , ஆத்துமாவும் உடலால் எழும் மயக்கத்தால் தனது மெய்யுணர்வை மறந்து தடுமாற்றம்

அடைகின்றன !!

கீதை 5:16 இருப்பினும் ஆத்துமா
விளிப்படைந்து ஞானத்தால் அஞ்ஞானத்தை
அழிக்குமானால் ; ஒருவன் எல்லாவற்றிலும்
தெளிவடைவான் ! சூரியன்
எல்லாவற்றையும் வெளிச்சமாக்குவது போல
ஞானம் எல்லாவற்றையும் வெளிப்படுத்தும் !!
கீதை 5:17 எப்போது ஒருவனின் புத்தி . மனம்
, பக்தி , அடைக்கலம் உண்ணதமான
கடவுளின் மீது நிலைக்கிறதோ அப்பொழுதே
அவன் பரிசுத்தம் அடைவதிலும் ; ஞானத்தை
அடைவதிலும் ; தவறுகளிலிருந்து
விடுபடவும் தொடங்கி ஆத்தும
விடுதலைக்கான பாதையில் சரியாக
முன்னேறுவான் !!

கீதை 5:18 மனத்தாழ்மை -- அடக்கம் நிறைந்த
சாதுக்கள் தங்களது ஞானத்தால் ;
கல்விமான்கள் , ரிஷிகள் , பசு . யானை ,
நாய் ஏன் நாயை உண்போரைக்கூட
சமநோக்காகவே காண்பர் ! வெளிநோக்கு

சம நோக்காகவே இருக்கும் !!

கீதை 5:19 ஏக இறைவனுடன் ஒருமைப்பாட்டிலும் ; இருமைகளை கடந்த மனநிலையிலும் நிலைத்தவர்கள் எவரோ ; அவர்கள் ஏற்கனவே பிறப்பு இறப்பை தளையை வெண்று நித்தியஜீவனை அடைந்தவர்களே ! அவர்கள் உண்ணதமானவரில் நிலைத்திருப்பதால் அவரைப்போலவே மாசுமருவற்றவராகவே ஆவர் !!

கீதை 5:20 மனம் விரும்பும் ஒன்றை சாதித்ததால் மகிழ்சியடையாதவர் எவரோ ; மனம் விரும்பாத ஒன்றை அடைந்ததால் துக்கிக்காதவர் எவரோ ; முற்றறிவில் நிலைத்து தடுமாற்றம் இன்றி கடவுளை அறிகிற அறிவில் வளர்கிறவர்கள் எவர்களோ அவர்களே ஞானத்தில் நிலைத்தவராவர் !!

கீதை 5:21 ஆத்தும விடுதலை அடைந்த நபர்

லவ்கீக புலன் கவர்ச்சியின் சிற்றின்பங்களில் ஈடுபாடு கொள்ளமாட்டார் ; ஏனென்றால் தனக்குள் மூழ்கி ஆத்தும பரிபூரணத்தின் பேரின்பத்தில் திளைத்தவராகவே இருப்பார் ! அவர் உண்ணதமானவரில் நிலைப்பதால் தன்னுணர்வு பெற்று வற்றாத பேரின்பத்திற்கு ஏதுவாவார் !!

கீதை 5:22 ஞானவான் ஒருபோதும் துன்பத்திற்கு காரணமானவைகளில் பங்கு பற்றவே மாட்டார் ! அவைகள் புலன்கள் உலகோடு கொள்ளும் தொடர்புகளாலேயே உருவாகின்றன ! குந்தியின் மகனே ! அவ்வகை சிற்றின்பங்கள் துவங்குவது போன்றே விரைவில் முடியக்கூடியவை !நிலையற்றவைகளை ஞானவான் கொண்டாடுவதில்லை !!

கீதை 5:23 இந்த உடலை விட்டுவிடும் முன்னர் ஒருவர் புலன்களின் தகிப்பில் சாந்தி உண்டாக்குவாரானால் ; இச்சையையும் கோபத்தையும் தடுத்து நிறுத்தும்

வல்லமையுள்ளவரானால் ; அவர் உண்ணத நிலையை எட்டி ; இவ்வுலகிலும் ஆனந்ததில் திளைப்பவராவார் !!

கீதை 5:24 யார் தனக்குள்ளாகவே திளைக்கிறாரோ ; தனக்குள்ளாகவே விளித்திருந்து ஆனந்தத்தை கண்டவரோ ; அவர் தனக்குள்ளாக மூழ்கி ஆத்தும பரிபூரணத்தை எட்டி உண்ணதமானவருடன் ஆத்துமதொடர்பு பெறுவார் ! அப்படியே முடிவில் பரமாத்துமாவுடன் ஐக்கியமடைவார் !!

கீதை 5:25 அஞ்ஞானத்திலிருந்து விளையும் இருமைகளை கடந்தவர் எவரோ ; தனக்குள்ளாக நிலைத்து ஆத்தும விளிப்படைந்தவர் எவரோ ; உலகில் நன்மைகளின் பக்கம் இடைவிடாமல் பங்களித்துக்கொண்டிருப்பவர் எவரோ ; அவரே உலகியலின் பாவத்தளைகள் அனைத்தையும் அறுத்து ; உண்ணதமானவருக்குள் ஆத்தும விடுதலை

எய்துவார் !!

கீதை 5:26 கோபத்திலிருந்தும் இச்சைகளிலிருந்தும் விடுபடுபவர் எவரோ ; தன்னை உணர்கிறவர் எவரோ ; தன்னை தானே ஒழுங்குபடுத்துபவர் எவரோ ; பரிபூரணத்தை எட்ட இடைவிடாமல் உழைப்பவர் எவரோ ; அவரே கூடிய விரைவில் கடவுளில் ஆத்தும விடுதலை பெற வாக்களிக்க பட்டவராவார் !!

கீதை 5:27 எல்லா புலன் வழி நுகர்வையும் அடைத்து ; புருவ மத்தியில் கண்களையும் உணர்வையும் நிலைநிருத்தி ;உள்மூச்சும் வெளிமூச்சும் ஒடுங்கிய நிலையை எய்தி ; மனதையும் , புத்தியையும் ,புலன்களையும் அடக்கி ; ஆத்துமவிடுதலைக்காக யோகசாதனை செய்து வருக !!

கீதை 5:28 இவ்வாறாக மனதையும் , பத்தியையும் ,புலன்களையும் அடக்கி ; ஆத்துமவிடுதலைக்காக யோகசாதனை

செய்கிறவர்கள் இச்சை , பயம் , கோபத்தை கடற பெறுவர் ! அவ்வாறு கடந்த நிலையடைந்தால் ஆத்தும விடுதலை அடைவது திண்ணம் !!

கீதை 5:29 அகில உலகங்கள் ,தேவதூதர்கள் அனைத்திற்கும் அதிபதியானவரும் ; இம் மண்ணுலகில் அனைத்து உயிரிணங்களையும் காக்கிறவரும் உணவளிப்பவரும் ; எல்லா யாகங்களும் யோகங்களும் யாரின் தயவை நாடி செய்யப்பட வேண்டுமோ ; அந்த உண்ணதமான கடவுளை அறிகிற அறிவிலே வளர்கிறவர்கள் உலகியலின் துன்பங்கள் அனைத்தையும் கடந்து சாந்தியிலும் சமாதானத்திலும் நிலைப்பர் !!

யோகம் 6 ஆத்ம சமநிலை யோகம் ‼



## தன்னை உணரும் ஆத்துமாவுக்கு மனமே சிறந்த நண்பனும் பகைஞனும் ஆகும் ‼

கீதை 6:1 இறைதூதர் கிரிஸ்ணர் கூறினார் : பலன் விளைவில் பற்றற்றவனும் ; தன் மீது சுமரும் செயலுக்காக செயலை செய்கிறவனும் எவனோ அவனே மெய்யான யோகியும் வாழ்வை வேள்வியாக்கும் மெய்யான துறவியும் ஆவான் ! அப்படியில்லாமல் வேள்விக்கு தீ மூட்டுபவனும் செயலை தட்டிகழித்து சும்மா இருப்பவனும் ஒருபோதும் யோகியும்

துறவியும் ஆகான் !!

கீதை 6:2 யோகங்களில் நிலைப்பவனும் தன்னை உண்ணதமானவரில் நிலைபெற செய்கிறவனும் மட்டுமே துறவில் நிலைத்தவனாவான் ! பாண்டுவின் மகனே ! புலன் இச்சைகளை திருப்திபடுத்த விளைவதை துறக்காதவன் ஒரு போதும் யோகத்தில் நிலைப்பதில்லை !!

கீதை 6:3 அஸ்ட்டாங்கம் எனப்படும் யோகத்தில் பயிற்சி செய்யும் புதியவர்களுக்கு ஜட செயல்பாடுகளை (சரியை &கிரியை) செய்வது ஒன்றே வழி முறையாகும் ! ஆனால் அதுவே யோக சாதனைகளில் முன்னேற்றமடைந்தவருக்கோ சரியை மற்றும் கிரியைகளை கடந்து விடுவதுவே வழிமுறையாகிறது !!

கீதை 6:4 லவ்கீக வாழ்வுக்கான அனைத்து இச்சைகளை துறந்தவரும் , புலன்

இச்சைகளை திருப்தி செய்ய முயற்சிக்காதவரும் , பலன் விளைவுகளில் பற்றுகொண்டு பாடுபடாதவரும் யாரோ ; அவரே யோகத்தில் சாதனை செய்கிறவராவார் ‼

கீதை 6:5 தனது மனத்தின் உதவி கொண்டு யோக சாதகன் தன்னைதானே விடுதலை ஆக்கிகொள்ளவேண்டுமே ஒழிய தன்னைதானே தரம்தாழ்த்திகொள்ளக்கூடாது ! தன்னை உணர்ந்து சீர்திருந்தும் ஆத்துமாவுக்கு அந்த மனமே சிறந்த நண்பனும் பகைஞனும் ஆகும் ‼

கீதை 6:6 எவ்வாறெனில் யார் மனதை அடக்கி ஆள்பவனோ அவனுக்கு அந்த மனமே நண்பர்களுக்கெல்லாம் சிறந்த நண்பனாகும் ! மாறாக மனதிற்கு அடங்கியவனுக்கோ அந்த மனமே எதிரிகளை விட கேடு செய்வதாகும் ‼

கீதை 6:7 யார் மனதை அடக்கி ஆள்பவனோ

அவன் ஆத்துமசமநிலையை அடைகிறபடியால் அவனது ஆத்துமா (ஜீவாத்துமா) பரமாத்துமாவுடன் ஒத்திசைவை அடையும் ! அத்தகைய மனிதன் இன்பத்தையும் துன்பத்தையும் ; குளிரையும் வெப்பத்தையும் ; புகழையும் இழிவையும் ஒன்று போலவே கருதி இருமைகளை கடந்துவிடுவான் !!

கீதை 6:8 ஒரு மனிதன் முற்றறிவிலும் ; தன்னை உணர்வதிலும் முன்னேறி ஆத்துமதிருப்தி அடையும்போது அவன் பரிபூரணத்தை எட்டியவனாகவும் யோகியாகவும் பரிணாமம் அடைகிறான் ! அவன் சுய கட்டுப்பாட்டிலும் ஞானத்திலும் நிலைபெறுகிறான் ! அவன் சகலவற்றையும் --- பொன்னையும் மண்ணையும் ; கல்லையும் மாணிக்கத்தையும் ஒன்று போலவே பாவித்து இருமைகளை கடந்துவிடுவான் !!

கீதை 6:9 ஒரு மனிதன் அன்பால் நிறைந்த நலவிரும்பிகளையும் ; கீழ்படிதலுள்ள

சீடர்களையும் ; தன்போக்கில் போபவர்களையும் ; நடுவில் நிற்பவர்களையும் ; சுற்றத்தாரையும் ; நண்பர்களையும் எதிரிகளையும் இறையச்சம் உள்ள சண்மார்க்கத்தினரையும் இறையச்சம் அற்ற துண்மார்க்கத்தினரையும் மனசமனிலையோடு பாவிப்பானானால் அவன் பரிபூரணத்தில் மென்மேலும் முன்னேறுகிறான் !!

கீதை 6:10 ஞானமார்க்கத்தான் என்பவன் உடலாலும் மனதாலும் உயிராலும் உண்ணதமான கடவுளோடு உறவில் திளைக்க வேண்டும் ! அவன் தனித்திருந்து விளித்திருந்து தனது மனதை அடக்கி ஆளவேண்டும் ! இச்சைகளிலிருந்தும் உடைமைகளை குறித்த பெறுமைகளிலிருந்தும் தன்னை விடுவித்துக்கொண்டே இருக்கவேண்டும் !!

# இறைதூதர் கிரிஷ்ணரின் ``யோக சூத்திரங்கள் ``

கீதை 6:11 யோகத்தை அப்பியாசிக்க ஒருவர் தனித்த ஒரு இடத்தை தேர்ந்து கொள்ளவேண்டும் ! அங்கு ஒரு ஆசணத்தை அமைக்க தரையின் மீது தர்ப்பை புல்லை பரப்பவேண்டும் !அதன் மீது மான் தோலை விரித்து அதன் மீது மெல்லிய துணியால் மூட வேண்டும் ! இந்த ஆசணம் உயரமாகவோ தாழ்வாகவோ இருக்க கூடாது !முக்கியமாக அந்த இடத்தில் தூய்மையான சிந்தனைகள் மட்டுமே சிந்திக்கபட்டதால் தூய்மை நிறம்பியதாக மாற்றம் பெறவேண்டும் !

கீதை 6:12 அதன் மீது சாதகன் அமர்ந்து தன் மனத்தை ஒன்றின் மீது குவித்து அப்பியாசிப்பதால் மனதையும் ;புலன்களையும் ; செயல்களையும் கட்டுபடுத்த பயின்று அதன் மூலம்

``ஆத்துமசுத்தி`` பெறுவதால் பரிசுத்தம் அடையவேண்டும் !!

கீதை 6:13 உடலையும் கழுத்தையும் இதயத்தையும் நேர்கோட்டில் இறுத்தி நுனிமூக்கின் மீது மனதை குவிக்கவேண்டும் ! இவ்வாறாக அலையும் மனதை அடக்கி ; பயத்தை நீக்கி ; உடலுறவை தவிர்த்து உண்ணதமான கடவுளை மனதிற்குள் தியானித்து வரவேண்டும் ! கடவுளுடன் ஒத்திசைவதையே வாழ்வின் லட்சியமாக்கி கடவுளுக்குள் நிலைக்க பயிலவேண்டும் !!

கீதை 6:14 இவாறாக மனதையும் ;புலன்களையும் ; செயல்களையும் தொடர்ந்து கட்டுப்படித்தி பழக்குவதால் யோகசாதகனின் மனம் பரிசுத்தம் அடைந்து ஞானத்திற்குள் வளர்ந்து கடவுளின் பரலோக ராஜ்ஜியத்தின் தொடர்புக்கு உள்ளாகிறான் !!

கீதை 6:15 அதாவது கிரிஸ்ண குருகுலத்தின் பாதுகாப்பில் வளர்ந்து லவ்கீக உலகின்

ஆளுமையை உடைத்து பரலோக
ராஜ்ஜியத்தின் பிரஜை ஆகிறான் !!

கீதை 6:16 அத்தகைய சாதகன் அதிகமாகவோ அல்லது குறைவாகவோ உண்ணலாகாது ! அதுபோல அதிகமாகவோ அல்லது குறைவாகவோ தூங்கலாகாது ! அது அவனின் முன்னேற்றத்தை தடுத்து விடும் !!

கீதை 6:17 உணவு ,தூக்கம் , பொழுதுபோக்கு ,உழைப்பு இவற்றில் அளவுமுறையை கற்றுகொண்டு கடைபிடிப்பதால் உலக ஆளுமையை தடுத்து கொண்டு ஒருவன் யோகசாதனைகளில் எளிதில் முன்னேறமுடியும் !!

கீதை 6:18 யோகசாதகன் யோகத்தை அப்பியாசிக்கும் போது தனது மனதின் செயல்பாடுகளை நெறிப்படுத்தி அடக்கி ஆள்வதால் உண்ணதமானவரோடு ஒத்திசைந்து லவ்கீக இச்சைகளிலிருந்து விடுபடுகிறான் ! பேரின்பசுவையை

உணர்வதால் சிற்றின்ப தாகம் உடையபெறுகிறான் ! அப்படிப்பட்டவனே யோகத்தில் நிலைத்தவனாவன் !!

கீதை 6:19 காற்று வீசாத இடத்தில் விளக்கின் பிளம்பு ஆடாமல் இருப்பதுபோல ; மனம் கட்டுபட்ட சாதகன் தனது தியானத்திலேயே மூழ்கி தன்னிலும் உன்னதமானவரிலும் நிலைக்கிறான் ! அவனே ஞானம் விளைவிக்க பெற்றவனாகிறான் !!

கீதை 6:20 யோகத்தை அப்பியாசிப்பதால் மெய்ஞானம் எனப்படும் முற்றுணர்வை அடைந்த நிலையில் சாமாதி நிலை சித்திக்கிறது ! அந்த நிலையில் உடல் மற்றும் மனதின் செயல்பாடுகள் அனைத்தையும் கடந்து ஆத்துமா உன்னதமானவரோடு அய்க்கியம் அடையும் !

கீதை 6:21 முற்றுணர்தல் என்ற நிலையில் ஒருவன் தூய்மையடைந்த மனதால் தன்னை

ஆத்துமசொருபமாய் தெளிந்து ஆத்துமபரிபூரணத்தை உனர்ந்து தன்னில்தானே நிறைந்துள்ள ஆனந்தத்தை கண்டடைவான் ! அந்த ஆனந்த பெருநிலையில் மட்டுமே ஒருவன் ஞானேந்திரியங்கள் விளிக்க பெற்று உண்ணதமான கடவுளின் எல்லையில்லா பேரானந்தத்தை உணர்ந்து அதில் திளைக்க முடியும் !!

கீதை 6:22 இன்னிலையை எய்தியவன் ஒருபோதும் தெய்வீக பேரானந்தத்தை விட்டு விலகி செல்லான் !ஏனெனில் இதை விட பெரிய வெறு எதுவும் எங்கும் இல்லை என்பதை அறிவான் !!

கீதை 6:23 இந்த நிலையில் அவன் எதனாலும் அசைக்கபடுவதில்லை ! மாபெரும் துண்பத்தின் மத்தியிலும் அவன் கலங்காதிருப்பான் ! இந்த லவ்கீக உலகிலிருந்து எழும்பும் அனைத்து துயறங்களிலிருந்தும் உண்மையான

விடுதலை அடையும் வழி இதுவே !!

கீதை 6:24 யோக அப்பியாசத்தில் ஒருவன் உறுதியாகவும் நம்பிக்கையாகவும் ஈடுபடவேண்டும் ;ஒருபோதும் வழிவிலகி செல்லலாகாது ! மன மயக்கங்களால் எழும்பும் எல்லா இச்சைகளையும் கொஞ்சம் கூட இடம் கொடுக்காமல் அகற்றிவிட வேண்டும் ! எல்லா புலன்களையும் எல்லா வகையிலும் அடங்கிய மனதால் அடக்கி நெறிபடுத்த வேண்டும் !!

கீதை 6:25 கொஞ்சம் கொஞ்சமாக ; படி படியாக முன்னேறி சுய அறிவை ஒடுக்கி உண்ணதமான ஞானத்தில் நிலைவரப்பட வேண்டும் இவ்வாறாக மனமானது ஆத்துமாவில் ஒடுங்கி அதற்குள் நிலைக்க வேண்டும் ; வேறெதையும் மனம் நாடலாகாது !!

கீதை 6:26 நிலையில்லாமல்

எதைப்பற்றியாவது ஓயாது சிந்திக்கும் இயல்பால் மனமானது அலைபாயும் போது ; ஒருவன் அதை மீண்டும் இழுத்து ஆத்துமாவுக்குள் ஒடுக்க வேண்டும் !

கீதை 6:27 என் மூலமாக மனதை உண்ணதமான கடவுளில் நிலைபெற செய்கிற யோகியானவன் எளிதில் மிக உயர்ந்த முற்றுணர்வை அடைந்து பேரானந்தத்தில் திளைப்பான் ! அவன் ஸ்தூல உடம்பால் விளையும் மூவகை குணங்களிலிருந்தும் விடுபட்டு ; பரமாத்துமாவின் இயல்போடு தொடர்புடைய தனது ஜீவாத்துமாவை கண்டறிவான் ! இவ்வாறாக தன் மேல் வந்த பரம்பரை பாவங்கள் மற்றும் கடந்தகால பாவங்களின் பதில் விளைவுகளிருந்து தப்புவான் !!

கீதை 6:28 இவ்வாறாக தன்னை தானே கட்டுபடுத்துவதில் வெற்றியடைந்த யோகி

;இடையறாத சகஜயோக பயிற்சியால் லவ்கீக உலகின் அனைத்து சீரழிவுகளிலிருந்தும் தப்புவான் ! உண்ணதமான கடவுளின் பரிபூரண பேரானந்தத்தில் திளைத்து பொங்கி வழியும் அன்பால் பக்தி தொண்டாற்றுவான் !!

கீதை 6:29 உண்மையான யோகி எல்லா மனிதர்களிலும் கடவுளின் ஆவியையும் பரமாத்துமாவையும் உணர்வான் !அத்தோடு அவர்களனைவரும் கடவுளின் சொரூபங்கள் என்பதையும் அறிவான் ! மேலும் தன்னை உணர்ந்த மனிதன் என் மூலமாக எங்கெங்கும் எல்லாவிடத்தும் உண்ணதமான கடவுளையே உணர்வான் !!

கீதை 6:30 யார் எங்கும் கடவுளை உணர்கிறானோ ; யார் அனைத்தையும் கடவுளின் பகுதியாய் உணர்கிறானோ ; அவன் என்னை விட்டு விலகுவதுமில்லை ; நான் அவனை கைவிடுவதுமில்லை ! என் குருகுலத்திற்குள் எப்போதும் வாசம் செய்வான் !!

**கீதை 6:31 அப்படிப்பட்ட யோகியானவன் கடவுளுக்கு பக்தி தொண்டாகவே அனைத்தையும் செய்து வரும் நிலையில் குருவாகிய என் மூலமாகவே கடவுளை தொடர்பு கொள்ளுவதால் எப்போதும் எந்த சூழ்நிலையிலும் என்னிலும் கடவுளிலும் நிலைத்திருப்பான் ‼**

**கீதை 6:32 அந்த முற்றறிவு நிறம்பிய ஞானியானவன் ; தன்னைபோலவே பிறறையும் பாவிப்பான் ! அவர்கள் இன்பத்தையும் துன்பத்தையும் ; நிறையையும் குறையையும் தனதாகவே பாவித்து பொறுமையும் பிரார்த்தனையும் செய்வான் ! ஆறுதலும் செய்வான் ‼**

# யோகத்தில் தடுமாற்றம் அடைந்தவன் இரண்டுங்கெட்டானா ?

கீதை 6:33 அர்ச்சுணன் கேட்கிறான் : மதுசூதனா ! தாங்கள் உபதேசிக்கும் யோகமுறைகள் நடைமுறைக்கு சாத்தியமானதாகவும் ; ஒத்துவருவதாகவும் எனக்கு தெறியவில்லை ! ஏனென்றால் மனமானது நிலைத்துநில்லாமல் ஓய்வின்றி அலைவதாயிருக்கிறது !!

கீதை 6:34 மனமோ ஓய்வற்றதும் ; குழப்பமே தொழிலானதும் ; அடங்காததும் ; தினவெடுத்ததும் ஆயிற்றே ! கிருஷ்ணா ! அதனை அடக்குவதை விட காற்றை அடக்குவது எளிதானதாக இருக்கும் !!

கீதை 6:35 இறைதூதர் கிருஷ்ணர் கூறினார் : வலிமையான ஆயுதங்கள் கைவரப்பெற்ற குந்தியின் மகனே ! ஓய்வற்ற மனதை அமர்த்தி வைப்பது அவ்வளவு எளிதானதல்ல என்பதில் சந்தேகம் இல்லை !ஆனாலும் பற்றுகளை களைவதாலும் ; தகுந்த பயிற்சியினாலும் அது சாத்தியமே அர்ச்சுணா

!!

**கீதை 6:36 ஒடுக்கப்படாது திமிறும் மனதை உடையவன் தன்னை உணர்வது இயலாத காரியமாகிவிடும் ! ஆனாலும் யார் மனதுடன் இடைவிடாது போராடியவாறு கடவுளை நோக்கிய பாதையில் முயற்சி செய்து கொண்டே இருக்கிறானோ அவன் வெற்றியடைவது நிச்சயம் ! இதுவே எனது முடிந்த முடிவு !!**

**கீதை 6:37 அர்ச்சுணன் கேட்கிறான் : கிருஷ்ணா ! வெற்றியடையாது தேங்கும் யோகசாதகனின் முடிவு என்னவாகும் ? துவக்கத்தில் தன்னை உணர்கிற பாதையில் நம்பிக்கையோடு போராடி முன்னேறி பின்னாளில் உலகியல் மாய்மாலங்களின் கவர்சிக்குள் மூழ்கி யோகசாதனைகளில் முழுமையடையாமல் போபவர்களின் கதி என்ன ?**

**கீதை 6:38 கிருஷ்ணா !உண்ணதமான**

யோகத்தை அப்பியாசித்து தடுமாற்றம் அடைந்தவன் , ஆன்மீக சாதனைகளிலும் வெற்றியடையாமல் ; உலக வாழ்விலும் வெற்றியடையாமல் இரண்டுங்கெட்டானாய் அவப்பேரடைய மாட்டானா ? சிதறுண்ட மேகம் போல பூமியில் காணாமல் போய் விடமாட்டானா ?

கீதை 6:39 இதுவே என் பெருத்த சந்தேகம் கிருஷ்ணா ! முற்றிலுமாக இதை விளக்கியருளும் படி வேண்டுகிறேன் ! இந்த சந்தேகத்தை இப்போது பூமியில் உங்களைத்தவிர வேறு யாராலும் தீர்த்து வைக்க முடியாது !!

கீதை 6:40 இறைதூதர் கிருஷ்ணர் கூறினார் : பிரதாவின் மகனே ! யோக சாதகன் நற்செயல்களுக்கான பயிற்சியில் இருப்பதால் ஒருபோதும் உலக வாழ்வியலிலோ ; ஆன்மீக சாதனைகளிலோ அழிவுறான் ! நண்பனே ! நன்மையை தீமையால் வெல்லவே முடியாது !!

**கீதை 6:41 யோக அப்பியாசத்தில் தடுமாற்றம் அடைந்து தேங்கிய சாதகன் ஒருவன் நல்லோர்களுக்குள்ளும் செல்வசெழிப்பிலும் மீண்டும் மீண்டும் பிறந்து நிறைவை அடைகிறான் ! தேக்கத்தை பல பிறவிகளில் கடறுகிறான் !!**

**கீதை 6:42 மீண்டும் மீண்டும் முதிர்வடைந்து ஞானத்திலும் யோகத்திலும் தேறிய பிறவி எடுக்கிறான் ! அப்படிப்பட்ட பிறவி அபூர்வமாகவே இவ்வுலகில் நடைபெறுகிறது !!**

**கீதை 6:43 அந்த பிறவியில் இதற்கு முந்தய பிறவியில் எட்டிய தேவஞானத்தை அவன் உணர்ந்து வெளிப்படுத்தி ;மேலும்மேலும் முயன்று முழுமையை எய்துகிறான் !**

**கீதை 6:44 முந்தய பிறவியின் தேவஞானத்தாலேயே அவன் யோகமார்க்கங்களில் யாரும்**

ஊக்குவிக்காமலேயே ஈர்க்கப்பட்டு சாதனைகள் கைவரப்பெருகிறான் ! இத்தகைய இறைதேடல் உள்விளைந்த யோகசாதகன் சாஸ்த்திர சம்பிரதாயங்களில் கைதேர்ந்தவர்களைக்காட்டிலும் எப்போதும் உயர்ந்த தரத்தை வெளிப்படுத்துகிறான் !!

கீதை 6:45 அத்தகைய யோகி மென்மேலும் வளர்வதற்கு உள்ளார்ந்த தேடல் உள்ளவனாததால் பலபல பிறவிகளின் பயிற்சிகளின் பலனால் எல்லாவகையான மாயைகள் ; இருள்கள் ; பாவங்களிலிருந்தும் விடுபட்டு நிறைஞானத்தை எய்தி உன்னதமானவரை அடைகிறான் !!

கீதை 6:46 பலனில் பற்றுவைத்து செயல்படுபவர் ; உலகியல் தர்க்கஞானம் உள்ளவர் ; தவம் புரிபவர் எல்லோரையும் விட யோகவானே சிறந்தவன் ! ஆகவே அர்ச்சுனா ! எல்லா சூழ்நிலைகளிலும் யோகம் புரிபவனாக நீ ஆகிவிடு !!

கீதை 6:47 பல படித்தரங்களில் உள்ள யோகிகளுள் யார் ஆழ்ந்த பக்தியுடன் கடவுளுக்கு கீழ்படிபவனோ ; கடவுளுக்குள்ளாகவே மூழ்கியிருப்பவனோ ; எதை செய்தாலும் கடவுளுக்கு பக்திதொண்டாகவே செய்து வருபவனோ ; அவனே உள்ளார்ந்து கடவுளுக்குள் நிலைத்த யோகவானும் யோகிகளுக்கெல்லாம் சிறந்த யோகியுமாவான் ! இதுவே எனது முடிந்த முடிவாகும் அர்ச்சுணா !!

**யோகம் 7 ஞான விஞ்ஞான யோகம் !!**



**கீதை 7:1 இறை தூதர் கிருஷ்ணர் கூறினார் : பிரதாவின் மகனே ! கடவுளை பற்றிய முழுஉணர்வில் நிரம்பி எவ்வாறு யோகத்தை அப்பியாசிப்பது ? கடவுளை பற்றிப்பிடித்த மன நிலையால் சந்தேகமற அவரை எவ்வாறு உணர்ந்தறிவது என்பதைப்பற்றி இப்போது கேள் !!**

**கீதை 7:2 எதை அறிந்தால் இனிமேலும் நீ அறியவேண்டுவது ஏதுமில்லையோ அந்த முற்றறிவை இப்போது உனக்கு அறிவிப்பேன் !!**

**கீதை 7:3 ஆயிரம் பேரில் ஒருவனே ஞானம்**

சித்திக்க தகுதியடைகிறான் ! அப்படி ஞானம் சித்திக்க பெற்றவர்களிலும் மிக கடிணமாக ஒருவனே கடவுளையும் என்னையையும் பற்றிய உண்மையை கண்டறிகிறான் !!

கீதை 7:4 நீர் , நிலம் , நெருப்பு , காற்று , ஆகாயம் . மனம் , மதிநுட்பம் , மற்றும் கேடான அஹம்பாவம் ஆகிய எட்டு அடிப்படைகளும் கடவுளிளிருந்தே தோன்றிய ஜட சக்திகளாகும் !!

கீதை 7:5 இந்த ஜட சக்திகளையும் ; இவற்றை சுரண்டியே வாழும் தாழ்ந்த தன்மையுள்ள உயிரிணங்கள் அனைத்தையும் தன்னகத்தே உறையவைத்தும் தாங்கியும் வருகிற இவற்றையும் விட மேலான சக்தியும் ஒன்று உள்ளது அர்ச்சுனா ! அதுவே கடவுளின் தெய்வீக சக்தி என்பதை அறிவாய் !!

கீதை 7:6 படைப்பினங்கள் அனைத்தும் இந்த இரண்டு சக்திகளிளிருந்தே தங்களின் ஆற்றலை பெறுகின்றன !

லவ்கீகமானவைகள் ஜட சக்திகளிலிருதும் ஆன்மீகத்தில் விளைந்தவைகள் தெய்வீக சக்தியிலிருந்தும் ஆற்றலை பெறுகின்றன ! இரண்டு வகை உயிரினங்களுக்கும் ஆதியும் அந்தமும் கடவுளே என்பதை அறிவாய் !!

கீதை 7:7 செல்வத்தில் திளைப்பவனே ! கடவுளை விட மேலான உண்மை ஏதுமில்லை ! எல்லாமே கடவுளிலே நிலைத்தும் ஊசலாடியும் வருகின்றன ! சாரத்தில் தொங்கும் முத்துகளை போலவே ஊசலாடுகின்றன !!

கீதை 7:8 குந்தியின் மகனே ! தண்ணீரின் சுவையும் ; சூரியன் சந்திரனின் வெளிச்சமும் ; வேத வாக்கியங்களில் ஓம் என்ற அட்சரமும் ; ஆகாயத்தின் பிராணசத்தமும் ; மனிதனுக்குள்ளிருக்கும் வல்லமையும் கடவுளே என்பதை அறிக !!

கீதை 7:9 நிலத்தின் பூர்வீக வாசனையும் ; தீயின் வெப்பமும் ; எல்லா உயிரினங்களின்

உயிரும் ; தவம் செய்வோரின் தவயோகமும் கடவுளே !!

கீதை 7:10 இருப்பவைகளின் மூல வித்தும் ; அறிஞர்களின் ஞானமும் ; அதிகாரம் உடைய மனிதர்களின் அதிகாரமும் கடவுளே !!

கீதை 7:11 பலவான்களின் பலமும் ; தாபத்தால் தவிக்காத ஆசையும் ; பொறுமை மீறாத தேவையும் ; சமூக ஒழுங்கு கெடாத உடலுறவும் கடவுளே !!

கீதை 7:12 எல்லா வாழ்வு நிலைகளும் ; இருப்புகளும் அவை சத்துவம் ; ரஜஸ் ; தமஸ் எவையாகிலும் கடவுளின் சக்தியிலிருந்தே உண்டானவையே ! ஒரு விதத்தில் எல்லாம் கடவுளே ! ஆனாலும் எல்லாமும் கடந்த தனித்தன்மையானவரும் கூட ! ஜட இயற்கை முக்குனங்களுக்கு அவர் உட்பட்டவறல்ல ! மாறாக அவை அவரிலிந்தே விளைந்தவை !!

கீதை 7:13 சத்துவம் ; ரஜஸ் ;தமஸ் என்ற முக்குனத்தால் கலப்படைந்து உலகம் முழுமையும் கடவுளை உணர முடியாமல் -- அவர் எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டவர் ; எல்லையற்றவர் ; தனித்தவர் என உணரமுடியாமல் மயங்கிக்கிடக்கிறது ! தன்னைப்போலவே அவரை கற்பித்துகொள்ள முயலுகிறது !!

கீதை 7:14 லவ்கீக உலகின் மூவகை இயல்புகளை தன்னகத்தே கொண்ட மாயை எண்ணும் சக்தி வெல்லுவதற்கரியது ! ஆனால் யார் கடவுளிடம் சரணாகதி அடைகிறானோ அவனால் மட்டுமே மாயைகளை ஒவ்வொன்றாக எளிதில் கடற முடியும் !!

கீதை 7:15 பூமியில் தீமைகளை விளைவிக்கும் முழு மூடர்களும் ; மனித தன்மையில் கடை நிலையில் உள்ளோரும் ; மாயைகளால் கவரப்பட்ட அறிவுடையோரும் ; ஆவி மண்டல அசுரர்களின் ஆதிக்கத்திற்கு

இடம் கொடுத்தோரும் கடவுளை சரணடைவதில்லை !!

கீதை 7:16 பாரதவர்களில் சிறந்தவனே ! நால் வகையான நல்லோர்கள் கடவுளுக்கு பக்தி தொண்டாற்ற தொடங்குகின்றனர் ! துயறத்திற்கு ஆட்பட்டோர் ; சமூக நல் வாழ்வை விரும்புவோர் ; தத்துவ விசாரம் உள்ளோர் ; ஞானம் விளைந்ததால் பூரண ஞானத்தை நாடி வளர்வோர் தாமாகவே கடவுளுக்கு பக்தி தொண்டாற்றும் நிலைக்கு வந்து சேருவார்கள் !!

கீதை 7:17 இவர்களுள் யார் பூரண ஞானத்தை எய்தியதால் எதை செய்தாலும் அதை கடவுளுக்கு பக்தி தொண்டாகவே பாவித்து செய்யும் மன நிலையை அடைகிறானோ அவனே கடவுளுக்கும் எனக்கும் பிரியமானவன் !! அவன் எங்களிடத்தும் நாங்கள் அவனிடத்தும் வாசமாயிருப்போம் !!

கீதை 7:18 இந்த பக்தர்கள் எல்லோரும் ஐயமற பெருந்தகையாளர்களே ! இருப்பினும் யார் என்னைப்பற்றிய (யுக புருஷன் ) அறிவில் தெளிந்தவனோ அவனை நானாகவே கருதி என் குருகுலத்தில் காத்து கொள்ளுகிறேன் ! என் உபதேசத்தின் படி உண்ணதமான யோகத்தை பக்திதொண்டாக செய்கிறவன் நிச்சயமாக கடவுளை அடைந்து உயர்வான பூரணத்தை எட்டுவான் !!

கீதை 7:19 பலமுறை பிறந்தும் இறந்தும் வாழ்வில் கடவுளை சரணடைய தெளிவடைந்தவன் ; எல்லா விளைவுகளுக்கும் விளைவானவராகவும் எல்லாமுமானவராகவும் கடவுளை கண்டுணர்வான் ! அத்தகைய மகாத்துமா பிறவியெடுப்பது மிக ஆபூர்வமானது !!

கீதை 7:20 யாருடைய மதிநுட்பம் லவ்கீக ஆசைகளால் கவரப்பட்டுள்ளதோ ; அவர்கள் தங்கள் தேவைகள் நிறைவேற அசுரர்களை சரணடைகிறார்கள் ! அவர்களை

பிரியப்படுத்த சடங்குகளையும் வழிபாடுகளையும் மதமாச்சரியங்களையும் உருவாக்கி சிறையாகி கொள்ளுகின்றனர் !!

கீதை 7:21 எல்லோரின் இதயத்திலும் பரமாத்துமாவாய் வாசம் செய்யும் கடவுள் ; ஒருவன் அசுரர்களை பின்பற்ற தொடங்கியதும் அவன் எதை நினைக்கிறானோ அதுவாகவே ஆகும் படி விட்டு விடுகிறார் !!

கீதை 7:22 எதை விரும்புகிறானோ ; அதற்கான அசுரனை பின்பற்றி அதையும் அடைந்து கொள்ளுகிறான் ! எதை நினைக்கிறானோ அதுவாகவே ஆகும் படி கடவுள் தான் அனுமதித்தார் என்பதை அறியாமலேயே போகிறான் !!

கீதை 7:23 சிற்றின்ப நாட்டமுள்ள சிறு மதியுடையோர் ; அது அதற்கான அசுரனை வழிபட்டு அதனை அடைந்து கொண்டாலும் ; அந்த பலன்கலெல்லாம்

தற்காலிகமானவையும் குறைந்த நிம்மதியை தறுபவை ஆகும் ! அவர்கள் பூமிக்குரியவைகளை நாடி பூமியிலேயே பிறந்து பிறந்து இளைக்கிறார்கள் ! ஆனால் எனது சீடர்களோ உண்ணதமான கடவுளின் பரலோகத்தை அடைவார்கள் !!

கீதை 7:24 ஞானமற்ற மனிதர்கள் என்னை பூரணமாக அறிந்து கொள்ள முடியாமல் நான் இதற்கு முன்பு இல்லாமலிருந்து இப்போது இறைதூதர் கிரிஷ்னர் என்ற நபராக வந்திருப்பதாக நினைக்கிறார்கள் ! அவர்களின் சிற்றறிவால் எனது அழிவற்ற நித்திய ஜீவனையும் ; யுக புருஷன் என்ற உண்ணத தன்மையையும் உணராதவர்களாக இருக்கிறார்கள் !!

கீதை 7:25 மூடர்களுக்கும் ஞானமற்றவர்களுக்கும் என்னை நான் வெளிப்படுத்தி கொள்ளுவதில்லை ! அவர்களுக்கு எனது உள்ளார்ந்த தன்மை மறைக்க பட்டுள்ளது ! ஆகவே நான் பிறப்பு

இறப்பு அற்றவன் என்பதை அறியார்கள் !!

கீதை 7:26 அர்ச்சுணா ! யுக புருஷன் என்ற நிலையால் இதுவரை நடந்தது அனைத்தும் நான் அறிவேன் ! இப்போது நடந்து கொண்டிருப்பதும் இனிமேல் நடக்க போவதும் கடவுளால் எனக்கு மறைக்க படவில்லை !! அனைத்து உயிரிணங்களையும் நான் அறிவேன் ; ஆனால் அவைகளோ என்னை அறியாமலிருக்கின்றன !!

கீதை 7:27 பரத குலத்தோன்றலே ! எதிரிகளை வெல்வோனே ! எல்லா ஜீவாத்துமாக்களும் மயங்கிய நிலையிலேயே பிறந்துள்ளன ! அவை விருப்பு ; வெறுப்பு என்னும் இருமைகளால் குழம்பியுள்ளன !!

கீதை 7:28 ஜீவாத்துமாக்களில் எவை முந்தய பிறவிகளில் நன்மைகளையே செய்து இப்பிறவியிலும் நல் வழியில் நடக்கிறார்களோ அதனால் பாவங்கள்

முற்றிலுமாக துடைக்கப்பட்டால் மயக்கத்தின் இருமைகளை கடறுகிறார்கள் ! அவர்களே எனது வழியில் திட மனதுடன் கடவுளுக்கு பக்தி தொண்டாற்ற தொடங்குகிறார்கள் !!

கீதை 7:29 ஞானம் விளையப்பெற்றோர் பிறப்பு இறப்பு தளையிலிருந்து வீடு பேறடைய என் குருகுலத்தில் புகளிடம் தேடி பக்தி தொண்டாற்றுவர் ! அவர்களே உண்மையான பிராமனர்கள் ! எனென்றால் அவர்களே உண்ணதமான யோக வாழ்வின் நெறி முறைகள் அனைத்துமறிந்து கடைபிடிப்பவர்கள் !!

கீதை 7:30 அவர்கள் கடவுளையும் என்னையும் பற்றிய முழு உண்மையை -- இப்பூவுலகம் என் மூலமாகவே படைக்க பட்டு எனது ஆளுமையிலேயே வைக்கபட்டு உள்ளது ; கலகம் செய்யும் அசுரர்களின் குழப்பங்களிலிருந்து விடுபட்டு அனைத்து விதமான வழிபாடுகளும் யாகங்களும்

**யோகங்களும் என் மூலமாகவே உண்ணதமான கடவுளுக்கு செலுத்தப்பட வேண்டும் என்பதை இறக்கும் தருவாயிலாவது அறிந்தால் நித்திய ஜீவனை பெறுவார்கள் ‼**

## கீதை 8 : ஆதிமூல பிரம்ம யோகம் !!



கீதை 8:1 அர்ச்சுணன் வினவுகிறான் : என் குருவே ! யுக புருஷனே ! கடவுள் என்பது என்ன ? அகம் என்பது என்ன ? புறம்--பவ்தீக பொருட்களின் உருவாக்கம் எவ்வாறு ? அடிக்கடி லோகாயாத செயல்பாடுகள் ஆன்மீக செயல்பாடுகள் என்கிறீரே அவை எவை ? தேவர்கள் அசுரர்கள் என்கிறீரே அது யார் ? எனக்கு விளக்கியருள்வீராக !

கீதை 8:2 வேள்விகளின் புருஷன் யார் ? அவர் எவ்வாறு சரீரங்களை ஆளுமை செய்கிறார் ? மதுசூதனா ! உமது குருகுலத்தில் பக்தி தொண்டாற்றுபவர்களுக்கு இறக்கும்

தருவாயில் உம்மால் ஆவது என்ன ?

கீதை 8:3 உண்ணதமான கடவுளின் தூதர் கூறினார் : எது அழிவற்றதோ ' எல்லாவற்றிர்க்குள்ளும் உயிரோட்டமாய் இயங்கிக்கொண்டிருப்பது எதுவோ அதுவே பிரம்மம் -- கடவுள் ! அவரின் உள்ளார்ந்த இயல்பே ஆதிமூலம் அல்லது அகம் ! அதுவே புறத்தில் பொருட்களாகவும் ; இயங்கும் படைப்பினங்களாகவும் வெளிப்பட்டு அவைகளின் இடைபடுதலால் உருவாகும் செயல்கள் `` கர்மம் `` அல்லது லோகாயாத செயல்பாடுகளாக அறியப்படுகின்றன !

கீதை 8:4 உடலுள்ளவைகளில் சிறந்தவனே ! பவ்தீகப்பொருட்கள் ஒன்று மற்றொன்றாய் வளர்சிதை மாற்றம் அடைந்துகொண்டே உள்ளன ! இது ஆற்றல் சுளர்ச்சி அல்லது ``ஆதிபுத்தா`` எனப்படும் ! இந்த வளர்சிதை மாற்றமே பொருட்களின் உருவாக்கமாக வெளிப்படுகின்றன ! கடவுளின் சர்வவியாபகமோ சகலத்தையும்

உள்ளடக்கியது ! வானவர்களான தேவர்கள் அசுரர்கள் அதிதேவதைகள் அல்லது தேவதூதர்கள் என அறியப்படுகின்றனர் !சூரியசந்திர நட்சத்திரங்கள் உள்ளிட்ட வானமண்டலசேனைகள் மற்றும் பூமியிலுறையும் படைப்பினங்கள் அனைத்தும் எதிலிருந்து உருவாக்கபட்டதோ அந்த பரமாத்வான நானே ``ஆதியஜ்னா `` அல்லது வேள்விகளின் புருஷனாவேன் !

கீதை 8:5 யார் உயிர் பிரியும்போது கடவுளையும் என்னையும் மட்டுமே உணர்கிறானோ அவன் நிச்சயமாக என் நிலையை அடைவான் என்பதில் ஐயமில்லை !

கீதை 8:6 உயிர் பிரியும்போது ஒருவன் எதை உணர்கிறானோ அதுவாகவே ஆகி விடுகிறான் !

கீதை 8:7 ஆகவே அர்ச்சுணா எப்போதும் என்னை யுகபுருஷன் என்ற நிலையில்

சிந்துத்து உணர்ந்தவனாய் இரு ! அத்தோடு உணக்கு வாய்க்கும் கடமையை கர்மயோகமாய் செய்துவா ! காரியங்கள் யாவற்றையும் கடவுளுக்கு அர்ப்பணித்து ; மனதையும் அறிவையும் அவரில் நிலைபெற செய்வாயானால் நிச்சயமாக என் நிலையை அடைவாய் என்பதில் சந்தேகமில்லை !

கீதை 8:8 யார் என்னை கடவுளின் பிரதினிதியான யுகபுருஷன் என்பதை உணர்ந்து என்னை வழிகெடாது பின்பற்றி கடவுளையே இடைவிடாது தியானித்து வருகிறானோ அவன் நிச்சயமாக என் நிலையை அடைவான் !

கீதை 8:9 ஒருவன் கடவுளை எவ்வாறு தியானித்து வரவேண்டும் ? எல்லாம் அறிந்தவராக ; ஆதியந்தமாக ; சகலத்தையும் ஆள்பவராக ; சகலத்தையும் பராமரிக்கிறவராக ; சகலத்திற்கும் பெரியவராக ; அணுவுக்கும் அணுவாகவும் அதே சமயத்தில் எல்லா ஜடத்தண்மைக்கும்

அப்பாற்பட்டவராகவும் ; நீக்கமற எங்கும் நிறைந்தவராகவும் அதே சமயத்தில் தனித்த ஒரு நபராகவும் அவரை உணர்ந்து தியானிக்க வேண்டும் ! அவர் சூரியனைப்போல காந்தி உள்ள ஒளிமயமானவர் ! ஜட இயல்புகளுக்கு அப்பாற்பட்ட உயிப்புள்ளவர் !

கீதை 8:10 யார் உயிர் பிரியும்வேளையில் உயிர்த்துடிப்பை புருவமத்தியில் நிறுத்தி ; யோக அப்பியாசத்தின் வலிமையால் மனம் அலைபாய்வதை அடக்கி ; உண்ணதமான கடவுளின் மீது பக்தியில் நிலைக்கிறானோ அவன் நிச்சயமாக யுகபுருஷனின் வாசஸ்தலத்தை அடைவான் !

கீதை 8:11 இந்த கிருஸ்ண தெளிவை உணர்ந்தவனாய் ஓங்காரத்தை ஜபித்தவனாய் ; துறவில் உயர்ந்த நிலையை எட்டிய சாதுவாய் யார் வாழ்கிறானோ அவன் பிரமத்திற்குள் வாழ்பவனாகிறான் ! அந்த ஞானம் பேரானந்தத்தை அனுபவிக்க

செய்யும் !

கீதை 8:12 அந்த யோக நிலையில் புற உலகால் ஈர்க்கப்படும் புலன்களிலிருந்து ஒருவன் விடுபட்டிருப்பான் ! புலன்களின் வாசல்கள் அனைத்தையும் அடைத்தவனாய் மனதை உயிர் மூச்சில் நிறுத்தி உயிர்த்துடிப்பு உச்சந்தலையில் நிலைக்கபெற்றால் அவன் யோகம் கைவரப்பெற்றவனாகிறான் !

கீதை 8:13 இந்த யோகத்தில் நிலைத்த பிறகு ஒருவன் `` ஓரிறைவனையே துதிக்கிறோம் `` என்பதின் சுருக்கமான `` ஓம் `` -- ஐ ஜபித்தவனாய் உண்ணதமான கடவுளையே நினைத்து ஒன்றவேண்டும் ! இந்த முழுமையான யோகத்தை அப்பியாசிக்கிறவன் பரலோக ராஜ்ஜியத்தை கண்டடைவான் !

கீதை 8:14 எதைச்செய்தாலும் அதை கடவுளுக்கு பக்தி தொண்டாகவே வேள்வியாக அர்ப்பனித்து ; யார் ஒருவன்

கடவுளின் ஞாபகத்தை விடாமால் இருக்கிறானோ அவன் எளிதில் கடவுளை உணர்வான் !

கீதை 8:15 பக்தியில் யோகம் விளைந்த மகத்துவமான ஆத்துமாக்கள் யுகபுருஷனின் வாசஸ்தலத்தை அடைந்தபிறகு துயறங்கள் நிறைந்த தற்காலிகமான இப்பூவுலகுக்கு எப்போதும் திரும்ப வரவே மாட்டார்கள் ; ஏனென்றால் அதிஉண்ணத வெளிச்சத்தை அவர்கள் அடைந்து கொண்டார்கள் !

கீதை 8:16 பிறப்பும் இறப்பும் திரும்பதிரும்ப சம்பவிக்கும் இப்பூவுலகில் வளமிக்க இடங்கள் முதல் வளம்குறைந்த இடங்கள் வரை எங்கும் துயறங்களே நிறைந்துள்ளன ; ஆனால் யுகபுருஷனாகிய எனது வாசஸ்தலத்தை வந்தடைந்தவனோ மரணமில்லாபெருவாழ்வு அடைகிறான் !

கீதை 8:17 மனித கணக்கில் ஆயிரம்

தலைமுறைகள் கூடியது கடவுளின் ஒரு பகல் மற்றும் இரவுடன் கூடிய ஒரு நாளாகும் !

கீதை 8:18 கடவுளின் பகலில் பல ஆத்துமாக்கள் நித்திரையிளிருந்து வெளிப்படுகின்றன ! அதுபோல இரவில் பல ஆத்துமாகள் மீண்டும் நித்திரையில் மரிக்கின்றன !

கீதை 8:19 கடவுளின் ஒவ்வொரு நாளிலும் இவ்வாறு பல ஆத்துமாக்கள் பிறப்பதும் தப்புவிப்பாரின்றி மரிப்பதுமாக உள்ளன !

கீதை 8:20 பிறப்பு இறப்பை கடந்த நித்தியஜீவன் அருளப்பெற்ற ஆத்துமாக்கள் மரணமில்லாபெருவாழ்வு என் றொரு உண்ணதமான நிலையை அடைகின்றன ! அவைகள் ஒருபோதும் மரிப்பதில்லை ! இவ்வுலகம் முழுமையும் அழிவுக்குள்ளான பிறகும் அவைகள் மாத்திரம் மரணமில்லா பெருவாழ்வில்

நிலைக்கின்றன !

கீதை 8:21 மரணமில்லாபெருவாழ்வு என்று தத்துவஞானிகளால் வர்ணிக்கப்படும் அந்த உன்னத இலக்கை அடைந்த பிறகு ஒருவன் ஒருபோதும் திரும்பபூமிக்கு வருவதில்லை ! அந்த இடமே எனது பரலோக வாசஸ்தலமாகும் - யுகபுருஷனின் இருப்பிடமாகும் !

கீதை 8:22 சகல ஆத்துமாக்களையும் விட பெரியவரான பெருமாள் - யுகபுருஷன் கலப்படையாத பக்தியால் எளிதில் அடையப்படக்கூடியவரே ! பரலோக வாசஸ்தலத்தில் அவர் இருந்தாலும் அவர் மூலமாக படைக்கபட்ட இந்த பூலோகத்தில் எங்கும் விரவியிருக்கிறவராகவும் ; உண்டான சகலமும் அவருக்குள்ளேயே நிலைபெற்றிருக்கிறவராகவும் உள்ளார் !

கீதை 8:23 பரதவர்களுள் சிறந்தோனே ! இப்பூவுலைகை விட்டு கடறும் யோகிகள்

பலர் மீண்டும் இப்பூமிக்கு திரும்ப வருவார்களா அல்லது வரமட்டார்களா என்பதை அவர்கள் கடறும் காலத்தை பொருத்து நிர்னயைக்கலாம் என்பதை உணக்கு அறிவிக்கிறேன் !

கீதை 8:24 யார் உண்ணதமான கடவுளை உணர்ந்து அறிந்தவர்களோ அவர்கள் ஒளிமயமானவரான கடவுளின் ஆதிக்கத்திற்குள்ளாகி ஒளிமயமாகி பரலோகத்தை அடைவர் ! வளர்பிறையிலோ அல்லது உத்திராயணத்திலோ ஒரு நாளின் பரிசுத்தமான பகல்நேரத்தில் அவர்கள் பூமியை கடறுவார்கள் ! அவர்கள் திரும்ப வருவதில்லை !

கீதை 8:25 யோகிகள் ; பக்திமான்களில் யார் உண்ணதமான கடவுளை உணர்ந்து அறியாதவர்களோ அவர்கள் புகைமயமாகி சந்திரனை அடைவர் ! தேய்பிறையிலோ அல்லது தட்சினாயணத்திலோ ஓர் இரவில் அவர்கள் பூமியை கடறுவார்கள் ! அவர்கள்

திரும்ப பூமிக்கு வருவார்கள் ! பிறவியை தொடர்வார்கள் !

கீதை 8:26 வேதங்களில் சுருக்கமாக ஒளியிலோ அல்லது இருளிலோ பூமியை கடறுதல் என இரண்டு விதமாக சுட்டப்பட்டுள்ளது ! இதில் ஒளியில் கடறுகிறவர்கள் பூமிக்கு வருவதில்லை ஆனால் இருளில் கடறுகிறவர்கள் நிச்சயமாக பூமிக்கு வருவார்கள் !

கீதை 8:27 இந்த இரண்டு பாதைகளைப்பற்றி பக்திமான்கள் அறிந்திருந்தாலும் என்ன சம்பவிக்கும் என்பதைப்பற்றி அவர்கள் கலக்கமுறுவதில்லை ! அதைப்போலவே பக்தியில் நிலைத்திருப்பாயாக !

கீதை 8:28 பக்தி தொண்டை அப்பியாசிக்கிற ஒரு நபர் வேதங்களை கற்கும்போது தோன்றுகிற வேறுபாடுகளைக்கண்டோ ; புனித சடங்குகளை கைக்கொள்ளுவதில் வேறுபாடுகளையோ தானதர்மங்களை

யாருக்கு செய்வது என்பதிலோ அல்லது தத்துவ விசாரங்களிலோ பூமிக்குரிய தொழில்களிலோ பேதலிக்க வேண்டுவதில்லை ! மாறாக சகலத்தையும் கடவுளுக்கு பக்திதொண்டாக பாவித்து வேள்வியாக செயலாற்றினால் எல்லாவற்றிலும் குழப்பங்களை வெல்கிறவனாகவும் முடிவில் தெய்வீக பரலோக வாசஸ்தலத்தை அடைகிறவனாகவும் மாறுவான் !

கீதை : 9 ராஜ வித்யா ராஜ குக யோகம் !!



கீதை 9:1 இறைதூதர் கிருஷ்ணர் கூறினார் : எனதருமை அர்ச்சுனா ! நீ எப்போதும் எனக்கு முரண்பட்டதில்லை ; ஆகவே எதை அறிந்தால் லவ்கீக உலகின் துன்பங்களிலிருந்து ஒருவன் தன்னை விடுவித்துக்கொள்ள முடியுமோ அந்த வெளிப்பாட்டையும் ரகசிய ஞானத்தையும் உன்னுள் விளைய வைக்கிறேன் !!

கீதை 9:2 இந்த அறிவே கல்விக்கெல்லாம் தலையாயது ! ரகசியங்களுக்கெல்லாம் ரகசியமானது ! இதுவே கலப்படமில்லாத தூய அறிவு ! இது தன்னை உணர்வதால் உண்டாகிற ஞானத்தை முழுமையாய்

தரவல்லது ! எல்லா மதங்களின் ஞானத்தை தரவல்லது ! நித்தியமானது ! நிறைவோடு கைக்கொள்ள கூடியது !

கீதை 9:3 எதிரிகளை நிர்மூலமாக்குகிறவனே ! பக்தி தொண்டில் விசுவாசமற்றவன் ஒருபோதும் என்னை அடையவே முடியாது ! ஆகவே அவர்கள் மீண்டும் இந்த லவ்கீக உலகின் பிறப்பு இறப்பு சக்கரத்தில் விழுகிறார்கள் !!

கீதை 9:4 எனது யுகபுருஷன் என்ற அருபத்தண்மையில் இந்த முழு பிரபஞ்சமும் பொதிந்திருக்கிறது ! எல்லாம் எனக்குள் இருக்கிறது ; ஆனால் நானோ அவைகளை கடந்தும் இருக்கிறேன் என்பது எனது இயல்பாகும் !!

கீதை 9:5 நானே படைக்கபட்ட எல்லாவற்றையும் நிர்வகித்தாலும் ; நானே எங்கும் விரவி இருந்தாலும் அசுரர்களின் மாயையால் படைப்பினங்கள் என்னில் நிலைபெறாமால் சுயம் -

தன்முனைப்படைகின்றன !! அனைத்தும் என் மூலமாக கடவுளால் படைக்கப்படவையே ஆயினும் என்னில் ஒன்றாமல் கலக்கமடைகின்றன !!

கீதை 9:6 பலத்த காற்று எங்கும் சுற்றிசுழன்று வீசினாலும் அது வானத்தில் நிலைபெற்றிருப்பதைப்போல எல்லா உயிரினங்களும் சுயமாய் வினையாற்றினாலும் என்னிலேயே நிலைத்திருக்கின்றன என்பதை புரிந்துகொள்ள முயற்சி செய்வாயாக !!

கீதை 9:7 குந்தியின் மகனே ! யுக முடிவில் எல்லா ஜட வெளிப்பாடுகளும் எனது அரூபத்தில் மறைகின்றன ! அதே போல அடுத்த யுகத்தில் நானே என்னிலிருந்து அவற்றை வெளிப்படுத்துகிறேன் !!

கீதை 9:8 இந்த முழு பிரபஞ்ச இயக்கமும் எனது ஆளுகையிலேயே உள்ளது ! எனது சித்தத்தால் அவைகள் மீண்டும் மீண்டும் வெளிப்படுத்தப்படுகின்றன ! அதே போல

முடிவில் அவைகள் மீண்டும் மீண்டும் அழிக்கவும் படுகின்றன !!

கீதை 9:9 தனஞ்ஜயா ! இருப்பினும் இவ்விவகாரங்கள் எதுவும் என்னை பாதிப்பதேயில்லை ! ஜட இயற்கை செயல்பாடுகளில் பந்தப்படாமல் தனித்தும் சலனமற்றும் ஓய்ந்தும் இருக்கிறேன் !!

கீதை 9:10 ஜட இயற்கையானது எனது சக்திகளில் ஒரு பகுதி மட்டுமே ! எனது வழிகாட்டுதலின் படி அது உயிரற்ற உயிருள்ள அனைத்தையும் உருவாக்குகின்றது ! அந்த இயற்கை விதிகளின் படி திரும்பதிரும்ப பிரபஞ்சமானது உருவாக்க பட்டும் அழிக்க பட்டும் வருகிறது !!

கீதை 9:11 அப்படியிருந்தும் இந்த பூமியில் நான் அவதரிக்கும் போதெல்லாம் அறிவீணர்கள் என்னை வெறுக்கிறார்கள் ! படைக்கப்பட்டவைகளின் தலைவன் - பெருமாள் என்ற எனது உண்ணதமான அருப

இயல்பை அவர்கள் அறிந்திருக்கவில்லை !!

கீதை 9:12 இந்த உண்மையை ஏற்காமல் தடுமாற்றம் அடைகிறவர்கள் அசுரர்களாலும் நாத்திகவாதிகளாலும் ஈர்க்கபடுகின்றனர் ! குழம்பிய நிலையில் பலன் விளைவில் பற்றுகொண்ட செயல்பாடுகளில் விழுந்து ஞான வளர்ச்சியில் தோல்வியடைந்து ஆத்தும விடுதலைக்கான நம்பிக்கையை இழந்து போகிறார்கள் !!

கீதை 9:13 பிரதாவின் மகனே ! யார் கலப்படமடையாதவர்களோ ; அத்தகைய சிறந்த ஆத்துமாக்கள் கடவுளின் அருளுக்குள் பாதுகாக்கபடுகிறார்கள் ! என்னை யுகபுருஷன் என்றும் இறைதூதன் என்றும் ; மூலமும் அழிவுமற்றவன் என்றும் உணர்ந்ததால் அவர்கள் எப்போதும் பக்திதொண்டில் நிலைத்திருப்பார்கள் !!

கீதை 9:14 எனது மஹிமையை உணர்ந்து புகழ்ந்துபாடிக்கொண்டும் ; என்னை வழிகெடாது பின்பற்றிக்கொண்டும் ;

உண்ணதத்தை அடையும் உறுதியான லட்சியத்துடன் அவர்கள் கடவுளை துதித்து பக்தி செய்வார்கள் !!

கீதை 9:15 யோகத்தால் மெய்ஞானத்தை விருத்தி செய்வோர் உண்ணதமான கடவுளை இனைவைக்காமலும் பலராக குழப்பாமலும் ஏக இறைவனையே வழிபடுவர் !!

கீதை 9:16 கடவுளை நோக்கிய எல்லா சடங்குகளும் நானே ! யோகங்களும் நானே ! குணமாக்கும் மூலிகையும் நானே ! உண்ணதமான மந்திரங்களும் நானே ! திருப்புகழும் நானே ! யாகங்களில் வெண்ணெயும் தீயும் பலியும் நானே !!

கீதை 9:17 இந்த பிரபஞ்சத்தின் தாயும் தகப்பனும் நானே ! தாங்குவோனும் தேற்றரவாளனும் நானே ! ஞானத்தின் முதிர்ச்சியும் பரிசுத்தம் செய்வோனும் `` ஓம் `` என்ற அட்சரமும் நானே ! மேலும் ரிக் சாம யஜூர் வேதங்களில் மறைக்கபட்ட உண்மைகள் நானே !!

கீதை 9:18 தங்குமிடமும் செல்லுமிடமும் ;துன்பத்தில் புகலிடமும் நானே ! சகலத்திற்கும் சாட்சியும் ; தக்கவைப்போனும் ; வழிகாட்டுவோனும் நானே ! நல்ல நண்பனும் நானே ! படைப்பும் அழிப்பும் நானே ! எல்லாவற்றிற்கும் அடிப்படையும் ; அவை நிலைத்திருக்கும் இடமும் அவைகளின் தெய்வீக வித்தும் நானே !!

கீதை 9:19 வெப்பத்தை தருபவனும் ; மழையை பெய்விப்பவனும் நிறுத்துவோனும் நானே ! நித்தியமும் மரணமும் நானே ! ஜடமும் ஜீவனும் நானே !!

கீதை 9:20 இந்திர லோக இன்பங்களை நாடி ரிக் சாம யஜூர் வேதங்களை வாசிப்போர் ; குண்டலினி சக்தியை பெருக்குவோர் மாற்று வழியில் என்னை பின்பற்றுவோரே ! பாவங்கள் நீங்கப்பெற்றால் இந்திர லோகத்தில் நல்லோர் மத்தியில் பிறந்து புண்ணியத்தின் பலனை அனுபவிக்கிறார்கள் !!

கீதை 9:21 இவ்வாறு இன்ப வாழ்வை நுகர்ந்து புண்ணியம் சமப்பட்டதும் மீண்டும் அவர்கள் நித்தியமற்ற இப்பூலோக வாழ்வுக்கு திரும்புகிறார்கள் ! இவ்வாறு அம் மூன்று வெதங்களில் காட்டியுள்ள இன்ப வாழ்வுக்கான வழியை கடைபிடிப்போர் மீண்டும்மீண்டும் பிறப்பு இறப்பு சக்கரத்திலேயே சுழல்கின்றனர் !!

கீதை 9:22 ஆனால் யார் எனது யுகபுருஷன் என்ற அரூபத்தை உணர்ந்து தியானித்து உள்ளர்ந்த பக்திதொண்டுடன் என்னை பின்பற்றி கடவுளை வழிபடுகிறார்களோ அவர்களின் குறைவை நான் சுமந்து நிறைவை காத்து பெருக்குகிறேன் !!

கீதை 9:23 யார் பலரை கடவுளுக்கு இணைவைத்து உள்ளார்ந்த பக்தி செலுத்துகிறார்களோ அவர்களின் பக்திதொண்டை நான் மதிக்கிறேன் ! ஆனாலும் அவர்கள் தவறான வழியில் பக்திதொண்டு செய்கிறார்கள் !!

கீதை 9:24 எல்லா யஞ்னங்கள்-யாகங்கள் யோகங்களின் துய்ப்பாளனும் தலைவனும் நானே ! அவ்வாறிருக்க யார் யுகபுருஷன் என்ற எனது உண்ணதமான நிலையை உணர்ந்தறிய முடியாதவர்களோ அவர்கள் ஆண்மீக நிலையில் வீழ்ச்சியே அடைவர் !!

கீதை 9:25 யார் ஞானிகளையும் மஹான்களையும் வழிபடுகிறார்களோ அவர்கள் அவர்கள் பிறவியெடுத்துள்ள இடத்தில் பிறப்பர் ! யார் முன்னோர்களை வழிபடுகிறாற்களோ அவர்களும் அவர்கள் பிறவியெடுத்துள்ள இடத்தில் பிறப்பர் ! யார் அசுரர்களை வழிபடுகிறாற்களோ அவர்களும் அவர்களின் ஆதிக்கம் உள்ளோரிடத்தில் பிறப்பர் ! ஆனால் யார் என் மூலமாக கடவுளை வழிபடுகிறார்களோ அவர்கள் எனது நித்திய இடத்தை அடைந்து பிறவாப்பெருனிலை பெறுவர் !!

கீதை 9:26 ஒருவர் என் மூலமாக உள்ளார்ந்த பக்தியுடன் இலையையோ , பூவையோ ,

கணியையோ அல்லது தண்ணீரையோ சமர்ப்பித்தாலும் அதனை கடவுள் அங்கீகரிப்பார் !!

கீதை 9:27 நீ எதை செய்தாலும் ; எதை உண்டாலும் ; எதை கொடுத்தாலும் ; எதை சமர்பித்தாலும் எந்த புண்ணிய சடங்குகளை செய்தாலும் அதை கடவுளுக்கு பக்திதொண்டாகவே என் மூலமாக அர்ப்பணிப்பாயாக !!

கீதை 9:28 இவ்வாறு செயல்பட்டால் நீ பாவபுண்ணிய விளைவுகள் என்ற கர்மத்தளையிளிருந்து விடுபட்டவனாவாய் ! மனதை என்னிலே நிலைபெற செய்து பலன் விளைவுகளில் பற்றற்றவனாய் செயல்பட்டால் நீ விடுதலை பெறுவாய் ! என்னிடமும் வந்து சேருவாய் !!

கீதை 9:29 யாரையும் நான் பட்சாபாதம் செய்வதுமில்லை ; யாரையும் எதிரியாகவும் கருதுவதுமில்லை ! எல்லோரையும் சமமாகவே பாவிக்கிறேன் ! ஆனால் யார்

கடவுளுக்கு பக்திதொண்டாக என்னை பின்பற்றுகிறார்களோ அவர்கள் எனக்கு நண்பனும் என்னில் நிலைத்தவருமாவார் ! நானும் அவர்களுக்கு நண்பனுமாவேன் !!

கீதை 9:30 இத்தகு பக்திதொண்டில் நிலைத்திருப்போர் ஒருவேளை தன்னை அறியாமல் கொடுமையான காரியத்தை செய்ய நேரிட்டாலும் அவர் புண்ணியராகவே கருதப்படுவர் !!

கீதை 9:31 அவர் இந்த தூய மார்க்கத்தில் நிலைத்திருப்பதால் விரைவில் நேர்வழி பெற்று தூய்மையடைந்து மங்காத சமாதானத்தை அடைவார் !! ஆகவே அர்ச்சுணா ! எனது சீடன் ஒருபோதும் அழிவதில்லை என்பதை உரத்து சொல்வாயாக !!

கீதை 9:32 யார் என்னிடம் அடைக்கலம் பெற்றார்களோ அவர்கள் பிறப்பால் எத்தனை தாழ்ந்தவர்கள் ஆயினும் ; பெண்ணானாலும் வணிகர்களானாலும் கடைநிலை

ஊழியர்களானாலும் உண்ணதமான எனது இருப்பிடத்தை அடைவது திண்ணம் !!

கீதை 9:33 தன்னை உணர்ந்து தெளிந்த ஆண்மீகவாதிகள் ; சிறந்த பக்தர்கள் ; புனிதமான ஆட்சியாளர்கள் போலவே எனது சீடர்கள் உண்ணதமடைவர் !! ஆகவே துன்பமும்துயறமும்  நிறைந்த தர்காலிகமான இப்பூவுலகில் வந்ததின் நோக்கம் ஈடேறும் வகையில் என் மூலமாக பக்திதொண்டாற்றுவாயாக !!

கீதை 9:34 மனதை எப்போதும் என்னில் நிலைபெற செய்து ; எனது சீடனாகி ; எனது வழிகாட்டுதல்களை கைக்கொண்டு கடவுளை வழிபடுவாயாக ! அப்போது முற்றிலுமாக என்னுள் நீ உள்வாங்கப்பட்டு எனது உண்ணத நிலையை நிச்சயம் அடைவாய் !!

கீதை 10 விபூதி யோகம் !!



கீதை 10 : 1 உன்னதமான இறைவனின் தூதுவர் கூறினார் : வலிமையான புஜங்களையுடைய அர்ச்சுணா ! நீ என் மனங்கவர்ந்த சிநேகிதன் ஆதலால் உனக்கு மேலும் நன்மை விரும்பி இதுவரை நான் உனக்கு விளக்கியதைக்காட்டிலும் சிறந்ததை உணர்த்துகிறேன் !!

கீதை 10 : 2 தேவதூதர்களும் மகா மகரிஷிகளும் ஒவ்வொரு சிறு விசயங்களுக்கும் ஆதாரமாய் என்னையே சார்ந்திருந்தாலும் அவர்கள் கூட என் தோன்றலின் மூலத்தையும் என் மகிமையையும் முழுமையாய் உணர்ந்திருக்க

வாய்ப்பில்லை !!

கீதை 10 : 3 யாறொருவன் என்னை பிறக்காதவனாகவும் உருவாக்கப்படாதவனாகவும் பிரபஞ்சத்தின் அதிபதியாகவும் அறிந்து உணர்கிறானோ அவன் மட்டுமே அசுரர்களால் கலப்படமடையாமல் பாவங்களிலிருந்து விடுபடத்தகுதியடைவான் !!

கீதை 10 : 4 புத்திக்கூர்மை , ஞானம் , சந்தேகத்திலிருந்தும் குழப்பத்திலிருந்தும் தெளிவுறுதல் , மண்ணிக்கும் மாண்பு , உண்மை , புலணடக்கம் , மனக்கட்டுப்பாடு ,பேரானந்தம் , அஹிம்சை , எதிலும் சமநிலையடைதல் , நிறைவு , புண்ணியம் , செழிப்பு , மங்காத புகழ் ஆகிய அனைத்தும் ஒருவனில் என்னாலேயே உருவாக்கப்படுகிறது ; மாறுபாடான மகிழ்ச்சி துக்கம் , பிறப்பு இறப்பு ,பயம் பயமின்மை , புகழ் இகழ் ஆகிய சுழலுக்குள்ளும் ஒருவன் என்னாலேயே அமிழ்த்தப்படுகிறான் !!

கீதை 10 : 5 சப்த (ஏழு) மகாரிஷிகளும் ; அவர்களுக்கு முந்தய நாலு ரிஷிகளும் ; மனித இனங்களின் மூதாதைகளான மனுக்களும் என்னிலிருந்தே வந்தனர் !!

கீதை 10 : 6 எல்லா லோகங்களிலும் வாழும் சகல ஜீவராசிகளும் என்னிலிருந்தே வந்தவை !! அதாவது எனது சித்தத்தாலேயே உறுவாக்கப்பட்டவை !!

கீதை 10 : 7 யாறொருவன் இந்த உண்மையை -- எனது மறைசக்தியை ; மகிமையை உணர்ந்து விசுவாசிக்கிறானோ அவன் சந்தேகம் தெளிந்தவனாக திடமான பக்திதொண்டில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக்கொள்வான் !!

கீதை 10 : 8 எல்லா பவ்தீக மற்றும் அமானுஸ்ய உலகங்களின் ஆதாரம் நானே ! ஒவ்வொன்றும் என்னிடமிருந்தே வெளிப்படுகின்றன ! மிகச்சரியாக

புரிந்துகொண்ட ஞானவான்கள் முழு இதயத்தோடு என்னை பின்பற்றி பக்தி தொண்டாற்றுவார்கள் !!

கீதை 10 : 9 தூய்மையான எனது சீடர்களின் சிந்தை எப்போதும் என்னிலேயே நிலைத்திருக்கிறது ! அன்றாட வாழ்வையே பக்திதொண்டாக வேள்வியாக்கி ஒருவரை ஒருவர் உபதெசித்துக்கொள்ளுவதிலும் என்னைப்பற்றியே பேசிக்கொள்வதிலும் பேரானந்தமும் பரம திருப்தியும் அடைகிறார்கள் !!

கீதை 10 : 10 உள்ளார்ந்த அன்புடன் அத்தகைய பக்திதொண்டாற்றுபவர்களுக்கு நானே என்னை அடைவதற்கு உணர்வை அருளுகிறேன் ! எங்களுக்கிடையிலான புரிதலை அதிகப்படுத்துகிறேன் !!

கீதை 10 : 11 எனது தனிப்பட்ட கருணையை காட்ட நானே அவர்களுக்குள் வாசமாகி ; அவர்களின் இதயத்தில் பிரகாசிக்கும் ஞான

சுடர் விளக்காகி அறியாமையின் இருளை அகற்றுகிறேன் !!

xxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxx

சகலங்களின் ஆதாரம் நானே ! சகலமும் என்னிலிருந்தே வந்தவை என்கிறார் கிரிஸ்ணர் ! பக்தர்களின் இதயத்தில் வாசமாகி ஞான சுடர் விளக்காகவும் பிரகாசிக்கிறேன் என்கிறார் ! இக்குணங்களெல்லாம் கடவுளின் குணமாகவும் அவரது இயல்பாகவுமல்லவா இருக்கிறது !!

சகல பவ்தீகமும் வெளிப்பாடுகளும் படைக்கப்பட்டவை அனைத்தும் அவரிலிருந்தே வந்தவை ! அப்படியாயின் படைத்தவர் அவர்தானே ! மேலோட்டமாக பார்த்தால் அது சரியே ! ஆனால் இன்னும் கொஞ்சம் ஆழமாக நிதானித்தால் படைப்பின் ரகசியம் புரியும் ! ஒன்றுமேயில்லாத

வெற்றிடத்தில் படைக்கப்பட்டது !
அப்படியாயின் படைப்புக்கு முன்பு படைத்த ஒருவர் அங்கிருந்திருக்க வேண்டும் ! அவர் அரூபமாகவும் இருந்திருக்க வேண்டும் !
அவர்தான் கடவுள் ! ஆதிமூலம் !

சரி அவர் படைப்பிற்கு என்ன செய்தார் ?

படைப்பிற்கு தெவையான மூலக்கூறுகளை தயார் செய்து அவற்றை கலந்து ஒன்றை உறுவாக்கினாரா ? கடவுள் மனிதர்களைப்போல அப்படி செய்யவேண்டியதில்லை ! அவர் செய்வதெல்லாம் `` ஆகுக `` என பேசினால்போதும் ! அது ஆகிவிடும் !

குர்ஆன் 36:82. எப்பொருளையேனும் அவன் படைக்க நாடினால், அதற்கு அவன் கட்டளையிடுவதெல்லாம்; ஆய்விடுக என்று கூறுவதுதான்; உடனே அது ஆகிவிடுகிறது.

2:117. வானங்களையும், பூமியையும்

இல்லாமையிலிருந்து உண்டாக்கினான்; அதனிடம் ஆகுக- என்று கூறினால், உடனே அது ஆகிவிடுகிறது.

உலகில் வந்த எந்த வேதங்களும் நிலை பெற்றுள்ள மதங்களும் கடவுள் அருளில்லாமல் வந்தவையல்ல ! மனித முயற்சியாலும் அசுர ஆவிகளாலும் வந்தவை நிலைப்பதில்லை நிலைத்துள்ளவை அனைத்தும் கடவுளால் வந்தவையே !

ஆனால் இந்திய வேதங்களை அப்படியே புறந்தள்ளி பைபிளை தூக்கிவைத்து ஆடுவதும் ; பைபிளை புறந்தள்ளி குரானை தூக்கிவைத்து ஆடுவதும் ; இரண்டையும் ஓரக்கண்ணால் கூடப்பார்க்காமல் இந்திய வேதங்களை தூக்கிவைத்து ஆடுவதுமான மனித தவறுகள் தவறான வியாக்கியாணங்கள் பகையை தூண்டி விடுகின்றான !

ஆனால் வர உள்ள சமரச வேதம் எல்லா வேதங்களின் சரியான உண்மைகளை மட்டும் சுவீகரித்து அவைகளின் அடிப்படைகள் ஒன்றிற்கு ஒன்று ஒத்தே இருப்பதை நிலைனாட்டி முழுமையான ஞானத்தை எட்டுவதுவே !

யோவான் 1:1 ஆதியிலே வார்த்தை இருந்தது, அந்த வார்த்தை தேவனிடத்திலிருந்தது !

ஆக அரூபமான கடவுள் வெற்றிடமும் இருளுமான இடத்தில் முதலாவதாக பேசினார் ! முதல் வெளிப்பாடு சத்தம் ! அந்த சத்தமே நாராயணன் !

நரல் என்றால் சத்தம் ! நரல்+ ஆய +நன்= நாராயணன் !

நரணாய் ஆன அதாவது அருப இறைவனிடமிருந்து பௌதீகமாக வெளிப்பட்டவர் நாராயணன் -- நரணாய் ஆனவன் !

அதனால்தான் சங்கை கையில் போட்டார்கள்
ஆக்கமும் அழிவும் அவருக்கள்ளிருந்து
தோன்றி அவருக்குள் மறைவதால்
சக்கரத்தை போட்டார்கள் !

இந்த நாராயணனே கடவுளிடமிருந்து
முதலாவது வெளிப்பட்டவர் ! அந்த
ஆதாரத்தின் மீது ஆதாரத்திலிருந்து சகல
படைப்புகளும் வெளிபட்டு அவருக்குள்ளேயே
அழிந்தும் விடுகின்றன !

அதாவது கடவுள் சகலவற்றையும்
நாராயணனுக்குள் நாராயணனிலிருந்தே
படைக்கிறார் ! ஆனாலும் நாராயணன்
பிறக்காதவர் உறுவாக்கவும் படாதவர் !
ஏனென்றால் அவர் கடவுளின் வார்த்தையாய்
கடவுளிடமே இருந்தவர் ! குரானின்
பைபிளின் வெளிச்சத்தில் இந்த உண்மையை
உணரவேண்டும் ! (கீதை 10 : 1 - 8)

அதனால்தான் நாராயணனுக்கு கடவுளின்
குணாதிசயங்கள் உள்ளன ! ஆனாலும்

ஆழமாக படைப்பு நாராயணன் என்றால் அந்தப்படைப்பையும் விஞ்சி வெளியேயும் கடவுள் இருக்கிறார் என்பது உண்மை ‼

நரன் + ஆயணன் படைக்கப்படவைகளை தேற்றுகிறவன் ! (கீதை 10 : 9 - 11)

யோவான் 15:7 நீங்கள் என்னிலும், என் வார்த்தைகள் உங்களிலும் நிலைத்திருந்தால், நீங்கள் கேட்டுக்கொள்வதெதுவோ அது உங்களுக்குச் செய்யப்படும். !

மீண்டும் இந்த நாராயணனும் அமானுஸ்யமே ! அதாவது மாயோன் ! அவர் யுகங்கள் தோறும் பூமிக்கு இறங்கி அவதரிப்பது சேயோன் அல்லது குமாரன் அல்லது இறைதூதன் !

அவ்வாறு அவதரித்த திரேதா யுக ராமனும் துவாபர யுக கிரிஸ்ணனும் கலியுக இயேசுவும் ஒருவரே ‼ -- நாராயணனே !

குர்ஆன் 4:171. வேதத்தையுடையோரே! நீங்கள் உங்கள் மார்க்கத்தில் அளவு கடந்து செல்லாதீர்கள். கடவுளைப் பற்றி உண்மையைத் தவிர வேறெதையும் கூறாதீர்கள்; நிச்சயமாக மர்யமுடைய மகனாகிய ஈஸா மஸீஹ் கடவுளின் தூதர் தான்; இன்னும் ஆகுக என்ற கடவுளின் வாக்காகவும் அதனால் உண்டானவராகவும் இருக்கின்றார்; அதை அவன் மர்யமின்பால் போட்டான்; (எனவே) அவரும் அவனிடமிருந்து (வந்த) ஓர் ஆன்மா தான்; ஆகவே, கடவுளின் மீதும் அவன் தூதர்கள் மீதும் பக்தி கொள்ளுங்கள்;

சடங்காச்சார முஸ்லீம்கள் குரானின் வசணத்தையே சரியாக புரிந்துகொள்ளாமல் இயேசுவை வழிபடும் கிரிஸ்தவர்களை கொண்றொழித்தது கொஞ்சநஞ்சமல்ல ! ஆனாலும் குரான் அவரை கடவுளின் வார்த்தையானவர் அதாவது நாராயணன் என்றுதான் குறிப்பிடுகிறது ! பைபிளும்

அதைதான் குறிப்பிடுகிறது !!

**யோவான் 1:14 அந்த வார்த்தை மாம்சமாகி,
கிருபையினாலும் சத்தியத்தினாலும்
நிறைந்தவராய், நமக்குள்ளே
வாசம்பண்ணினார்; அவருடைய
மகிமையைக் கண்டோம் !**

**யோவான் 12:44 அப்பொழுது இயேசு
சத்தமிட்டு: என்னிடத்தில்
விசுவாசமாயிருக்கிறவன் என்னிடத்தில்
அல்ல, என்னை அனுப்பினவரிடத்தில்
விசுவாசமாயிருக்கிறான்.**

**யோவான் 12:46 என்னிடத்தில்
விசுவாசமாயிருக்கிறவனெவனும் இருளில்
இராதபடிக்கு, நான் உலகத்தில் ஒளியாக
வந்தேன்.**

**யோவான் 14:1 உங்கள் இருதயம்
கலங்காதிருப்பதாக; கடவுளிடத்தில்
விசுவாசமாயிருங்கள், என்னிடத்திலும்**

விசுவாசமாயிருங்கள்.

ராமர் , கிரிஸ்ணர் , இயேசு அல்லது நாராயணன் மூலமாக கடவுளை வழிபடுவதே வேதங்களால் அங்கீகரிக்கப்பட்டது !

யோவான் 16:23 அந்த நாளிலே நீங்கள் என்னிடத்தில் ஒன்றுங் கேட்கமாட்டீர்கள். மெய்யாகவே மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன், நீங்கள் என் நாமத்தினாலே பிதாவினிடத்தில் கேட்டுக்கொள்வதெதுவோ அதை அவர் உங்களுக்குத் தருவார். !!

xxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxx
xxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxx

கீதை 10 : 12 அர்ச்சுணன் கூறினார் : நீரே அரூப கடவுளின் உயர்தரமான முதல் வெளிப்பாடானவர் ! மனிதர்கள் அடையக்கூடிய உன்னதமான பரமபதமும் நீரே ! பரிசுத்தரும் பரிபூரண உண்மையும் நீரே ! அழிவற்றவரும் நித்திய ஜீவனும்

வழிகாட்டியும் நீரே ! சகல ஆத்துமாக்களுக்கும் மூலமான பரமாத்துமாவும் , அதிபதியும் , பிறப்பிறப்பை கடந்தவரும் நீரே !

xxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxx

யோவான் 14:6 அதற்கு இயேசு: நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன்; என்னாலேயல்லாமல் ஒருவனும் கடவுளிடத்தில் வரான். என்றார் !

யோவான் 10:7 இயேசு அவர்களை நோக்கி: நானே ஆடுகளுக்கு வாசல் என்று மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

யோவான் 10:9 நானே வாசல், என் வழியாய் ஒருவன் உட்பிரவேசித்தால், அவன் இரட்சிக்கப்படுவான், அவன் உள்ளும் புறம்பும்சென்று, மேய்ச்சலைக்

கண்டடைவான்.

யோவான் 10:14 நானே நல்ல மேய்ப்பன்; கடவுள் என்னை அறிந்திருக்கிறதுபோலவும், நான் கடவுளை அறிந்திருக்கிறதுபோலவும்,

யோவான் 7:29 நான் அவரால் வந்திருக்கிறபடியினாலும், அவர் என்னை அனுப்பியிருக்கிறபடியினாலும், நானே அவரை அறிந்திருக்கிறேன் என்றார்.

xxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxx

கீதை 10 : 13 நாரதர் , அசிதர் தேவலர் மற்றும் வியாசர் போன்ற மாமகரிஷிகளும் இந்த உண்மையை உறுதிப்படுத்தியுள்ளனர் ! இப்போதோ தங்களைப்பற்றி தாங்களே எனக்கு உணர்த்தும் பாக்கியத்தைப்பெற்றேன் !!

கீதை 10 : 14 கிரிஸ்ணா ! நீர் கூறிய யாவையும் சத்தியமானவை என அப்படியே

ஏற்றுக்கொள்ளுகிறேன் ! சற்குருவே ! இவ்வுண்மையை - உமது இயல்பை மகிமையை தேவதூதர்களும் அசுரர்களும் கூட முழுமையாக புரிந்திருக்கமாட்டார்கள் !!

கீதை 10 : 15 பரமாத்மனே ! சகல படைப்புகளுக்கும் மூலமே ! சகலவற்றின் அதிபதியே ! பிரபஞ்சத்தின் தலைவனே - ஜகநாதரே ! தேவதூதர்களுக்கும் அதிபதியே !

கீதை 10 : 16 இந்த அகிலம் முழுமையும் நீர் விரவி நிற்கும் உமது அமானுஸ்ய மகிமையை -- தெய்வீக இயல்பை அடியேனுக்கு உணர்த்துவீராக !!

கீதை 10 : 17 உன்னதமான கடவுளின் பிரதினிதியே ! அதிசயத்தின் உச்சமே ! உம்மை நான் எவ்வாறு உணர்ந்தறிவது ? உமது பல்வேறான படிமானங்கள் எவற்றையெல்லாம் நினைவுகூற வேண்டுவது ? சதா உம்மையே சிந்தித்து உம்மிலே முழ்கித்திளைப்பது எங்கனம் ?

கீதை 10 : 18 ஓ ஜனார்த்தனா ! உமது மகிமையின் அமானுஸ்ய சக்திகளைப்பற்றி விபூதிகளைப்பற்றி மீண்டும் எனக்கு உணர்த்தியருளுவீராக ! கிரிஸ்ணா ! உம்மைப்பற்றி எவ்வளவுதான் அறிந்தாலும் போதுமென்று தோன்றவில்லை ! அமுதம் போன்ற தெவிட்டாத விசயங்களால் இன்னுமின்னும் என உந்தப்படுகிறேன் !!

கீதை 10 : 19 கடவுளின் உன்னதமான வெளிப்பாடாகிய கிரிஸ்ணர் கூறிணார் : குரு குலத்தில் சிறந்தவனே ! நூதனமான எனது வெளிபாடுகள் உனக்கு அறியத்தக்கனவே ! இருப்பினும் எனது அமானுஸ்ய மஹிமைகள் கணக்கிலடங்காதவை ஆதலால் முக்கியமான சிலவற்றை விவரிக்கிறேன் !!

கீதை 10 : 20 அர்ச்சுணா ! தனித்த பரமாத்துமாவாக நான் இருப்பினும் ஒவ்வொரு மனிதனிலும் ஜீவாத்துமாவாகவும் நானே

குடிகொண்டிருக்கிறேன் ! படைப்பினங்கள் அனைத்திற்கும் துவக்கமும் நடுவும் முடிவுமாக நானே இருக்கிறேன் !

கீதை 10 : 21 ஆதித்தியர்களில் நானே விஸ்ணு ! சுடர்களில் நானே ஒளிவீசும் சூரியன் ! வாயுபுத்ரர்களில் மாருதி ! கிரகங்களில் நான் சந்திரன் !!

கீதை 10 : 22 வேதங்களில் நான் சாமவேதம் ! இந்திரலோக வாசிகளில் நான் இந்திரன் ! புலன்களில் நான் மனம் ! எல்லா உயிரினங்களிலும் நான் உணர்வுகளாக - இயல்பூக்கமாக இருக்கிறேன் !!

கீதை 10 : 23 ருத்திரர்களில் நான் சங்கரனாக இருக்கிறேன் ! யக்ஸரர்களிலும் ரக்ஸரர்களிலும் நான் குபேரன் ! வசுக்களில் அக்னி ! மலைகளில் நான் மேருமலை !!

கீதை 10 : 24 ஆசாரியர்களில் நான் பிரஹஷ்பதி ! போர்த்தளபதிகளில் நான்

**கார்த்திகேயன் ! நீர் நிலைகளில் நான் சமுத்திரம் !!**

**கீதை 10 : 25 மாகரிஷிகளில் நான் பிருஹு ! மந்திரங்களில் ஜீவனுள்ள ஓம் ! ( ஓரிறைவனையே துதிக்கிறோம் ) யாகங்களில் நான் மகாமந்திர ஜபம் ! ( சொடுக்கவும்** மகாமந்திரம் **) அசையாப்பொருட்களில் நான் இமயமலை !!**

**கீதை 10 : 26 மரங்களில் நான் ஆலமரம் ! தேவதுதர்களில் ரிஷி அந்தஸ்து உள்ளவர்களில் நான் நாரதர் ! கந்தர்வர்களுள் நான் சித்ராரதா ! சுயஒழுங்கில் நான் கபிலமுணிவர் !**

**கீதை 10 : 27 குதிரைகளில் அமுதத்துடன் தோன்றிய உச்சைஸ்ரவா ! யானைகளில் நான் ஐராவதம் ! மனிதர்களில் நான் பேரரசன் !**

**கீதை 10 : 28 ஆயுதங்களில் நான்**

வஜ்ஜிராயுதம் ! பசுக்களில் சுரபி !
இனப்பெருக்கத்தில் நான் மன்மதன் !
சர்ப்பங்களில் நான் வாசுகி !

கீதை 10 : 29 நாகங்களில் நான் ஆதிசேஷன் !
கடல்வாழ்வனவுக்கு நான் வருணன் !
பித்ருக்களில் நான் அர்யமா !சட்டஒழுங்கை
நிலை நாட்டுபவர்களில் நான் யமன் !

கீதை 10 : 30 தைத்திரியர்களூல் நான்
பிரகலாதன் ! அடக்கத்தில் நான் காலம் !
விலங்குகளில் நான் சிங்கம் ! பறவைகளில்
நான் கருடன் !

கீதை 10 : 31 தூய்மையாக்குபவைகளில் நான்
பரிசுத்தஆவி ! ஆயுதம் தரித்தவர்களில் நான்
ராமன் ! மீன்களில் நான் சுரா ! நதிகளில்
நான் கங்கை !

கீதை 10 : 32 ஓ அர்ச்சுனா ! சகல
படைப்புகளுக்கும் துவக்கமும் முடிவும் ஏன்
திருப்புமுனையும் நானே என்பதை

உணரக்கடவாய் ! விஞ்ஞானங்களில் நான்
தன்னை உணரும் ஆத்ம ஞானம் !
தர்க்கவியலில் நான் உண்மையை
கண்டடைதல் !

கீதை 10 : 33 எழுத்துகளில் நான் அகரம் !
அடுக்குத்தொடரில் நான் இரட்டைகிளவி !
அத்தோடு நில்லாது ஓடும் காலமும் நானே !
படைப்பாளிகளில் உயிரிணங்களை
உருவாக்கும் பிரம்மனும் நானே !

கீதை 10 : 34 எல்லாவற்றையும் அழிக்கும்
மரணமும் நானே !
உண்டாகப்போகிறவைகளுக்கு
காரணகர்த்தாவும் நானே ! பெண்களுள்
அழகு , ஐசுவரியம் , இனிய பேச்சு , நினைவு
கூறல் , புத்தி , புத்திசாதுரியம் , அடக்கம்
மற்றும் பொறுமையாகவும் நானே
மிளிர்கிறேன் !

கீதை 10 : 35 கானம் இசைத்தலில் நான்
ப்ரஹத்சாமம் என்னும் சாமவேதம் !

கவிதைகளில் நான் காயத்ரி ! மாதங்களில் நான் மார்கழி ! பருவத்தில் நான் மலர்கள் பூத்து குலுங்கும் வசந்த காலம் !

கீதை 10 : 36 வஞ்சகர்களுள் பித்தலாட்டமாகவும் ; திறமைகளில் நான் சாதனையாகவும் ; வெற்றியாளர்களின் வெற்றிவாகையாகவும் ; திருப்புமுனை செய்வோரின் தீர்மானிக்கும் மதினுட்பமாகவும் ; சாதுக்களின் சத்துவ குணமாகவும் நானே வெளிப்படுகிறேன் !

கீதை 10 : 37 விர்ஷினி குலத்தோன்றல்களில் நான் வாசுதேவன் ! பாண்டவர்களுள் நானே அர்ச்சுணன் ! மாமுணிவர்களில் நான் வியாசர் ! தத்துவவியலில் நான் சுக்ராச்சாரியார் !

கீதை 10 : 38 அடக்குமுறைகளில் நான் தண்டனை ! நியாயங்களில் நான் வெற்றி ! ரகசியங்களில் நான் மௌனம் !அறிஞர்களின் ஞானமாகவும் நானே விளங்குகிறேன் !

**கீதை 10 : 39 மேலும் அர்ச்சுணா ! இருப்பவைகள் எவைகளோ அவைகளின் இனப்பெருக்க வித்தாகவும் நானே இருக்கிறேன் 1 என்னாலேயன்றி அசைவனவும் அசையாதவனவும் நிலைப்பதில்லை !**

**கீதை 10 : 40 எதிரிகளை வெல்வோனே ! எனது தெய்வீக வெளிப்பாடுகளுக்கு - விபூதிகளுக்கு எல்லையே இல்லை ! எனது முடிவற்ற மஹிமைகளில் கொஞ்சம் வெளிப்பாடுகளையே கூறியுள்ளேன் !**

**கீதை 10 : 41 எவைகள் சிறப்புள்ளவையோ ; அழகுள்ளவையோ ; மிளிர்பவையோ சக்திபடைத்தவையோ அவைகளெல்லாம் எனது தேஜசின் ஒரு மின்னலே என்பதை அறிவாய் !**

**கீதை 10 : 42 அனைத்துலகையும் எனது மஹிமையின் எந்த ஒரு அம்சம்**

தாங்கிக்கொண்டுள்ளதோ அதை நீ உணர்ந்துவிட்டாயானால் இவ்வளவு விரிவான விளக்கங்களும் உனக்கு அவசியமேயில்லை அர்ச்சுணா !

**கீதை 11 விஸ்வ ரூப தரிசன யோகம் !**



**கீதை 11 : 1 அர்ச்சுணன் கூறுகிறார் : மிக உயர்ந்ததும் ரகசியமானதும் ஆன்மாவைதேற்றுவதுமான உபதேசங்களை என் மீது தயவுகூர்ந்து அருளினீர்கள் ! அதைக்கேட்டதனால் எனது அஞ்ஞானம் அகன்றது !**

**கீதை 11 : 2 தாமரைக்கண்ணா ! எல்லா படைப்பினங்களின் உற்பத்தி மற்றும் அழிவு தொடர்பான ஆழமான விவரங்களை அறிந்துகொண்டேன் ! அத்தோடு எல்லையற்ற உமது மஹிமையையும் உணர்ந்துகொண்டேன் !**

**கீதை 11 : 3 சகலவற்றின் அதிபதியே ! ( பரமேஸ்வரா ) கடவுளின் உன்னதமான வெளிப்பாடே ! ( நாராயணனே ) சகல உருவங்களின் மொத்த சொருபமான புருஸோத்தமரே ! இப்போது உங்களது மனித சொரூபத்தை காண்பதுபோல தங்களது பரமாத்ம சொரூபத்தையும் காண ஆசைப்படுகிறேன் !**

**கீதை 11 : 4 யோகங்களால் விளையும் அமானுஸ்ய சக்திகளின் அதிபதியே ! ( யோகேஸ்வரா ) என்னால் தாங்கிக்கொள்ளுமளவு எனது சக்திக்குட்பட்ட அளவு உமது பரமாத்ம சொரூபத்தை காட்டும் படி இறைஞ்சுகிறேன் !**

**கீதை 11 : 5 கடவுளின் உன்னதமான வெளிப்பாடாகிய கிரிஸ்ணர் கூறினார் ! பார்த்தா ! நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் பற்பலவிதமாகவும் பலரூபமாகவும் பலவர்ணமாகவும் உள்ள பரமாத்ம தெய்வீக சொரூபத்தை உன்னால்**

முடிந்தளவு பார் !!

கீதை 11 : 6 பரத குலத்தோன்றலே ! பற்பல வெளிப்பாடுகளான ஆதித்யர்கள் , வசுக்கள் , ருத்ரர்கள் , அஸ்விணிகள் ,மருத்துகள் மற்றும் பல தேவதூதர்கள் இன்னும் யாரும் பார்த்திராத அதிசயமான விவரங்களை இப்போது பார் !

( ஆதித்யர்கள் பண்ணிருவர் ; வசுக்கள் எண்மர் ; ருத்ரர்கள் சிவன் அனுமன் முதலான பதினொருவர் ; ஹயக்கிரீவர்கள் இருவர் அஸ்விணிகள் மற்றும் மருத்துகள் நாற்பத்தொன்பது பேர் என வேதங்களில் குறிப்புகள் காணக்கிடைக்கின்றன ! இதில் சிவன் , பிரம்மா கூட தேவதூதர்களாகத்தான் இருப்பதாக காணக்கிடைக்கிறது மனிதனாக இருந்து மரணமில்லா பெருவாழ்வு பெற்றவர்கள் அனைவரும் தேவதூதர்கள் என்ற நிலையையே அடைகிறார்கள் ! இவர்கள் அனைவரும் மனிதர்களைவிட தெய்வீக சக்தி உள்ளவர்களாக இருந்தாலும்

இவர்களையும் வழிபடுவது கூடாது ! அது கடவுளை அவமதிப்பதாக ஆகிவிடும் ! ஆனால் இவர்கள் மூலமாக கடவுளை வழிபடுவது ஏற்புடையது ! இவர்களின் குருத்துவம் நம் ஆன்மீக சாதனங்களை வளர்த்து முன்னேற உதவி செய்யும் ! )

கீதை 11 : 7 அர்ச்சுணா ! இப்போது இந்த உடலில் அண்டசராசரங்கள் அனைத்தையும் நீ பார்க்கலாம் ! இயங்குவன இயங்காதவன இதுவரை நீ பார்க்க விரும்பியவைகள் இனிமேலும் நீ பார்க்க விரும்புபவைகள் அனைத்தையும் அந்த பரமாத்ம சொரூபத்தில் உன்னால் காணமுடியும் !

கீதை 11 : 8 ஆனால் அதை உனது ஊணகண்ணால் காணமுடியாது ! ஆகவே தெய்வீக பார்வையை உனக்கு அருளுகிறேன் ! இப்போது எனது மஹிமையை தரிசிப்பாயாக !

கீதை 11 : 9 சஞ்சயன் திருதிராட்டிணனிடம்

கூறினான் : இவ்வாறு கூறிவிட்டு சகல யோக சக்திகளின் அதிபதியும் ; சகல பாவத்தையும் தீர்க்கவல்லவரும் கடவுளின் உன்னதமான வெளிப்பாடுமாகிய கிரிஸ்ணர் தனது பரமாத்ம சொரூபத்தை வெளிப்படுத்தினார் !

கீதை 11 : 10 அனேக முகங்களையும் அனேக கண்களையும் அனேக தெய்வீகத்தோற்றங்களையும் கொண்ட பரமாத்ம சொரூபத்தை அர்ச்சுணன் கண்டான் ! அது திவ்யமான ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது ! தெய்வீக ஆயுதங்கள் பலவற்றை ஏந்தியிருந்தது !

கீதை 11 : 11 தெய்வீகமான மாலைகளையும் ; ஆடைகளையும் அணிந்து தெய்வீக வாசணைத்திரவியங்களால் கமழ்ந்து கொண்டிருந்தது ! சர்வ வியாகபத்தோடு எல்லையற்றவராகவும் அளவில்லாத மஹிமையுடனும் எப்புறத்திலும் முகங்களுடன் பரந்து விரிபவராகவும்

விஸ்வரூபத்தை அர்ச்சுணன் கண்டான் !

கீதை 11 : 12 ஆயிரக்கணக்கான சூரியர்கள் ஒரே நேரத்தில் உதித்தால் எவ்வளவு பிராகாசம் இருக்குமோ அவ்வளவு அனந்தகோடி பிரகாசம் மின்னியது !

கீதை 11 : 13 தனித்தனியாய் பிரிந்துள்ள ஆயிரகணக்கான பல விதமான தோற்றங்களை அடக்கியதும் பரந்து விரிவதுமான பிரபஞ்சம் முழுவதையும் தேவர்களின் அதிபதியான கிரிஸ்ணரின் சரீரத்தில் ஒரே இடத்தில் அர்ச்சுணன் தரிசித்தான் !

( விஸ்வ ரூபத்தை தரிசிப்பது ஒரு பெரும் பாக்கியமே ! மகாபாரதத்தில் இந்த பாக்கியம் மூன்று நபர்களுக்கு கிடைத்துள்ளது ! அர்ச்சுணன் ,கர்ணன் , பீஸ்மர் ஆகியோருக்கு இந்த பாக்கியம் அருளப்பட்டுள்ளது ! இதற்கு அந்த ஆத்துமாக்களுக்கு அதற்குரிய பக்குவம் , தகுதி இருந்திருக்கிறது என்பதை

சாதகர்கள் உணரவேண்டும் !

பக்தியும் மற்றும் ஞானமும் சேர்ந்து முகிழ்க்கும்போது ராஜயோகம் அல்லது ராஜ வித்யை சித்திக்கிறது !

ஆரம்ப கால துவைத பக்திக்கும் அத்வைத ஞானம் முற்றும்போது உண்டாகிற தெளிவால் -- தன்னிலை உணர்ந்து தன்னைஆத்ம சொரூபமாக உணர்ந்த ஒரு ஆத்மாவிற்கு கடவுளின் மீதும் அவரது வெளிப்பாடாகிய நாராயணன் மீதும் நாராயணன் பூமியில் மனிதனாக அவதரித்த அவதாரங்களின் மீதும் உண்டாகிற பக்திக்கும் நிறைய வேறுபாடுகள் உள்ளன ! அதுவே விசிஸ்ட்டாத்வைதம் !

இந்த விசிஸ்ட்டாத்வைத சாதகர்கள் சகலத்தையும் நாராயணனிலிருந்து தோன்றி நாராயணனில் மறையும் நாரயண அம்சங்களாகவே புரிந்துகொள்ளவேண்டும் என்பதையே கீதையின் 9 & 10

அத்தியாயங்களின் ரகசியம் !

ஆழ்ந்த ஞானத்தில் உண்டாகிற பக்தி அறிதல் , தொடர்பு கொள்ளுதல் ஆகியவற்றை கடந்து உணர்ந்து கலந்திருத்தல் என்பதாகவே ஆகிவிடும் ! அந்த உணர்வை எட்டிய சாதகன் நான் நீ என்ற பேதத்தையும் உணர்வளவில் கடந்துவிடுவான் ! மற்ற மனிதர்கள் யாரையும் நாராயணின் ஒரு வெளிப்பாடாக தானும் பிறருமே ஒரு தற்காலிக வெளிப்படாகவே உணருவான் ! இருக்கிறோம் என்ற இருப்பைத்தவிற வேறெதுவும் இல்லாத ஒரு நிலை அடையும் ! அங்கு சுயமோ பிறரைப்பற்றிய பயமோ அற்றுப்போய் விடும் !

உண்மையில் அந்த நிலையை ஒரு சாதகன் அடைவதே `` விஸ்வரூப தரிசனம் `` காண்பது ! கண்ணால் காண்பது அல்ல உள்ளதால் உணர்ந்து தெளிந்து உள்ளே விழைந்த ஞானத்தால் மட்டுமே அடையக்கூடிய

தரிசனம் ! அந்தத்தரிசனமே ஒரு யோகம் ! )

கீதை 11 : 14 விதிர்விதிர்த்து நிலைதடுமாறி மயிர்க்கால்கள் கூச்செரிந்தும் வியப்புமேலிட்டவனாய் அர்ச்சுணன் இரு கைகளையும் கூப்பியவனாக தலைசாய்த்து வணங்கி கடவுளின் உன்னதமான வெளிப்பாடாகிய கிரிஸ்ணரை துதிக்கதொடங்கினான் !

கீதை 11 : 15 எனதருமை கிரிஸ்ணா ! சற்குருவே ! அனைத்து தேவதூதர்களையும் அனைத்து படைப்பினங்களையும் ஒன்று சேர உம் சரீரத்தில் காண்கிறேன் ! படைப்பு தொழிலுக்கு நியமிக்கபட்ட பிரம்மாவை தாமரையில் அமர்ந்திருப்பவராகவும் ; அதுபோல ருத்திரர் சிவனையும் ; இன்னும் மகா முணிவர்களையும் சாதுக்களையும் அசுரர்களையும் தெய்வீக சர்ப்பங்களையும் காண்கிறேன் !

கீதை 11 : 16 அண்டபகிரண்டங்களின்

தலைவனே ! உமது பரமாத்ம சொரூபத்தில் பலபல கைகளையும் தோள்களையும் வாய்களையும் கண்களையும் எல்லையே இல்லாமல் பரந்து பரந்து எங்கெங்கும் விரிந்துகொண்டே இருப்பதாக காண்கிறேன் ! உம்மிடத்தில் முடிவையோ நடுவையோ துவக்கத்தையோ என்னால் காண முடியவில்லை !

கீதை 11 : 17 இந்த பரமாத்ம சொரூபம் அதன் ஒளிவெள்ள பிரகாசத்தால் காண்பதற்கு கடிணமானதாக இருக்கிறது !வெடித்து சிதறுகிற தீப்பிழம்புகளால் எண்திசையிலும் பரவி நிறைவதாகவும் அளவிடமுடியாத சூரியக்கதிர்வீச்சு போலவும் நான் காண்கிறேன் அத்தோடு பலவகையான மகுடங்களையும் ஆரங்களையும் பதக்கங்களையும் அணிந்துள்ளதாகம் மகிமையைக்காண்கிறேன் !

கீதை 11 : 18 நீரே உன்னதமும் மூலப்பொருளுமாகிய பிரதான பௌதீகம் !

இந்தப்பேரண்டம் முழுமையும் முடிவாக மறையும் இடம் நீரே ! நீரே ஆதியானவர் ! நீரே அழிவில்லாதவர் ! நீரே தெய்வீக சம்பத்துகள் பௌதீக சம்பத்துகள் யாவற்றையும் நிர்வகிக்கிறவர் ! நீரே கடவுளின் அதி உயர்ந்த வெளிப்பாடாகவும் இருக்கிறவர் !

கீதை 11 : 19 ஆதியும் அந்தமும் நடுவும் இல்லாதவர் நீரே ! உமது மகிமை எல்லையற்றதாக விரிந்துகொண்டே இருப்பது ! எண்ணிறந்த கைகளையும் சந்திர சூரிய நட்சத்திரங்களை ஒத்த கண்களையும் உடையவர் நீரே ! உமது வாயிலிருந்து ஜுவாலிக்கிற அக்கினி புறப்படுவதையும் உமது கதிர்வீச்சுக்களால் பேரண்டம் முழுவதும் தகித்து எரிவதாகவும் காண்கிறேன் !

கீதை 11 : 20 நீர் ஒருவரே வானங்கள் நட்சத்திர மண்டலங்கள் அனைத்திலும் அவற்றுக்கு ஊடாகவும் விரவியிருப்பவராக

காண்கிறேன் ! உன்னதமானவரே !
ஆச்சரயமான படுபயங்கரமுமான இந்த பரமாத்ம சொரூபத்தை காணும்போது எல்லா நட்சத்திர மண்டலங்களும் தூசியைப்போல ஆகிவிட்டன !

கீதை 11 : 21 வானமண்டல சேனைகளான தேவதூதூதர்களின் திரள்கூட்டமும் உம்மிடம் சரணடைகின்றன ! அவைகளில் சிலவோ ( அசுரர்கள் ) சுயமகிமை தேடியதற்காக அச்சமடைந்தனவாக கைகளை கூப்பி தொழுது உம்மிடம் மன்றாடி தொழுகின்றன ! உம்மைத்துதித்து உம்மிலே ஐக்கியமடைகின்றன !

கீதை 11 : 22 சிவன் முதலான ருத்ரர்கள் பதினொருவர் ,பண்ணிரெண்டு ஆதித்யர்கள் ,எட்டு வசுக்கள் , சாத்யர்கள் , விஸ்வகர்மாக்கள் , அசுவினிகள் இருவர் , நாற்பத்தொன்பது மருத்துகள் , மரணமில்லா பெருவாழ்வு பெற்ற மனிதர்களின் கூட்டங்களும் ,கந்தர்வகள் யஷர்கள் மற்றும்

அசுரர்கள் ஆகிய அனைத்து தேவதூதர்களின் கூட்டங்களும் பிரமிப்படைந்து உம்மையே கண்டு துதிக்கிறார்கள் !

கீதை 11 : 23 நீண்ட புஜங்களை உடையவரே ! பலமுகங்களும் கண்களும் பல கைகள் தொடைகள் திருவடிகளும் பல வயிறுகளும் பல வாய்களும் அதில் பயங்கரமான கோரைப்பற்களும் உடையதான உமது பரமாத்ம சொரூபத்தை கண்டு எல்லா மண்டலங்களும் நடுநடுங்குகின்றன ! நானும் அவ்வாறே நடுங்குகிறேன் !

கீதை 11 : 24 பரந்து விரியும் விஸ்ணுவே ! பல வண்ண கதிர்களை உமிழும் வானளாவிய உம்மையும் சகலத்தையும் விழுங்கும் உமது வாயையும் ஒளிமிகுந்த கண்களையும் கண்டு பயத்தினால் நடுங்கி என் மனம் தைரியத்தையும் சமநிலையையும் இழந்துவிட்டது !

கீதை 11 : 25 ஜகத் குருவே ! அகில

உலகங்களின் ரட்சகரே !
கோரைப்பற்களையும் ஊழிகாலத்து நெருப்பு போல ஜுவாலிக்கும் திருமுகங்களையும் கண்டு தடுமாற்றம் அடைகிறேன் ! நிம்மதி இழந்துவிட்டேன் ; ரட்சித்து அருள்புரிய வேண்டும் !!

கீதை 11 : 26 திருதுராஸ்ட்ரர்கள் அனைவரும் அவர்களின் துனைவர்களான அரசர்கள் அனைவருடனும் ஏன் பீஸ்மருடனும் துரோனருடனும் கர்ணனுடனும் மற்றும் நமது தரப்பு சேனைகளின் தலைவர்களும் கூட உமது படுபயங்கரமான வாய்க்குள் வேகமாக உள்ளிழுக்கப்படுகிறார்கள் !

கீதை 11 : 27 அவர்களில் சிலர் பல்லிடிக்கில் சிக்கி தலைநொருங்கியும் சின்னாபின்னமாக்கப்பட்டு கிடக்கின்றனர் !

கீதை 11 : 28 பற்பல வேகமான நீரோட்டங்களும் ஆறுகளும் எவ்வாறு விரைந்தோடி கடலில் புகுந்து

மறைகின்றனவோ அவ்வறே இம்மண்ணுலக வீரர்கள் அனைவரும் விரைந்தோடி உமது வாயில் புகுகின்றனர் ! உமது வாயினின்று ஜுவாலிக்கும் திக்கொழுந்துகளில் கலந்து மறைகிறார்கள் !

கீதை 11 : 29 விட்டில்பூச்சிகள் விளக்கில் தாமாகவே விழுந்து அழிவதைப்போல சகல மனுக்குலமும் நாலாபுறமுமிருந்து வெகுவேகமாக உமது வாயில் விழுந்து அழிகிறார்கள் !

கீதை 11 : 30 அனைத்து உலகங்களையும் ஜுவாலிக்கிற உமது வாயால் விழுங்கிக்கொண்டும் நாலாபுறமும் நாக்குகளால் துழாவுகிறீர்கள் ! விஸ்ணுவே ! படுபயங்கரமான உமது காந்தியால் அனைத்தையும் தகிக்கிறீர்கள் !

கீதை 11 : 31 தேவதூதர்களிலும் உன்னதமானவரே ! உம்மைத்துதிக்கிறேன் ! பயங்கர வடிவுள்ள நீங்கள் யார் ?

ஆதிபுருஷனே உம்மை புரிந்து கொள்ள விளைகிறேன் எனக்கு வெளிப்படுத்துவீராக ! இன்னும் உம்மை - உமது வெளிப்பாடுகளை முற்றுணராதவனாகவே இருக்கிறேன் ! அருள்புரிவீராக !!

கீதை 11 : 32 யுகபுருஷரான கிரிஸ்ணர் கூறினார் : யுகங்கள் தோறும் சிருஸ்ட்டிகளை அழிப்பவனாகிய நியாயதிபதி நானே ! இப்போதும் அனைவரையும் அழிப்பதில் ஈடுபட்டுள்ளேன் ; உங்களைத்தவிற இருதரப்பிலும் எல்லாவீர்ரகளும் அழிக்கபடுவார்கள் !

கீதை 11 : 33 எனவே எழுந்து போரிடுவாயாக ! எதிரிகளை வென்று வளமான அரசினை அனுபவிப்பாயாக ! ஏனெனில் இவர்கள் அனைவரும் கொல்லப்பட ஏற்கனவே நிச்சயக்கபட்டுவிட்டனர் ; திறமையான போராளியே அதன் கருவியாக மட்டுமே ஆவாயாக !!

கீதை 11 : 34 துரோணர் , பீஸ்மர் , ஜயத்ரன் . கர்ணன் மற்றும் இதர மாவீரர்கள் அனைவரும் ஏற்கனவே என்னால் அழிவுக்கு நியமிக்கப்பட்டுவிட்டனர் ; அழிப்பது நீயல்ல ; நீ வெறுமனே கருவி மட்டுமே ! குழப்பமடையாமல் போரிடுவாயாக ! வெற்றி பெறுவாய் !

கீதை 11 : 35 இதைக்கேட்டுணர்ந்த அர்ச்சுணன் கூப்பிய கரங்களுடன் நடுங்கியபடி மீண்டும்மீண்டும் கிரிஸ்ணரை வணங்கினான் ! பயத்துடனும் தழுதழுத்த குரலில் கூறலானான் :

கீதை 11 : 36 சகல புலண்களையும் சரியாக அடக்கியாள்பவரே ! உம்மை அறிந்துணர்ந்த சித்த புருஷர்கள் ( புலண்களை அடக்கியாளத்தெரிந்தால் மட்டும் போதாது யார் நாராயணனை தமது சித்தத்தால் அறிந்து உணர்ந்தவர்களோ அவர்களே சித்தர்கள் ) உமது பெருமைகளால் மகிழ்கின்றனர் ! முழு உலகமும் உம் மீது

பற்றுதல் கொண்டு உம்மை வந்தனை செய்கின்றனர் ; ஆனால் அசுரர்களோ பயத்தினால் உம்மிடமிருந்து சிதறி ஓடுகின்றனர் !

கீதை 11 : 37 மஹாத்மாவே ! பிரம்மாவாலும் வணக்கத்திற்குரிய தகுதியுள்ளவர் நீரே ! ஏனெனில் தாங்களே ஆதி படைப்பாளர் ! எல்லையற்றவரே ! தேவர்களின் தேவனே ! அகிலத்தின் அடைகலம் நீரே ; ஏனெனில் அழிவற்றவர் நீரே ! ஜடத்தோற்றங்கள் அனைத்திற்கும் அப்பாற்பட்ட பரமானவர் நீரே ! காரணங்கள் அனைத்திற்கும் காரணமும் நீரே !

கீதை 11 : 38 நீரே ஆதிதேவர் ! ஆதிபுருஷர் ! பழமையானவரும் கடவுளால் படைக்கப்பட்ட அனைத்தின் இறுதி அடைக்கலமுமானவரும் நீரே ! அனைத்தையும் அறிந்தவரும் அனைவராலும் அறியப்படவேண்டிய இலக்கும் நீரே ! பரமான புகலிடமும் நீரே ! எல்லையற்ற ரூபமானவரும் பிரபஞ்ச

தோற்றம் முழுவதிலும் பரவியுள்ளவரும் நீரே !

கீதை 11 : 39 நீரே வாயு ! நீரே எமன் ! நீரே அக்னி ! நீரே வருணன் ! நீரே சந்திரன் ! நீரே மனுக்குலத்தின் உடையவர் ! ஆதிமூலத்தின் குமாரனும் நீரே ! எனது மரியாதை கலந்த வணக்கங்களை ஆயிரமாயிரம் முறைகள் சமர்பிக்கிறேன் !!

கீதை 11 : 40 முன்னிருந்தும் பின்னிருந்தும் எல்லாத்திக்குகளிலிருந்தும் உம்மை வணங்குகிறேன் ! எல்லையற்ற சக்தியும் எல்லையற்ற ஆற்றலும் நீரே ! நீரே எங்கும் பரவி நிறைகின்றீர் !!

கீதை 11 : 41 உம்மை நண்பன் என எண்ணிக்கொண்டு கிரிஸ்ணா யாதவா நண்பனே என்றெல்லாம் அகந்தையுடன் அழைத்துள்ளேன் ! உம்மை ஆழமாக உணராமல் பித்தத்தினாலும் பிரேமையினாலும் புத்திக்குறைவாலும் நான்

செய்தவை அனைத்தையும் பொருத்தருள்வீராக !

கீதை 11 : 42 பொழுதுபோக்கின்போதும் ; உணவருந்தும்போதும் ; ஒரே படுக்கையில் படுத்திருந்தபோதும் நண்பர்களுக்கு மத்தியிலும் தனியாகவும் கூட கிண்டலும் கேலியும் செய்துள்ளேன் ! இழிவுகளை கடந்தவரே ! இத்த்கைய குற்றங்களையும் மன்னிப்பீராக !!

கீதை 11 : 43 அகிலத்தில் அசைகின்ற அசையாத அனைத்திற்கும் தந்தை நீரே ! வழிபாட்டிற்குரிய சற்குருவும் நீரே ! உமக்கு சமமாகவே ஒன்றாகவோ புகழத்தக்கவர் யாரும் இல்லை ! அளவற்ற வல்லமை உள்ளவரே ! மூவுலகங்களிலும் உம்மை விட உயர்ந்தவர் யார் உளர் ?

கீதை 11 : 44 எனவே நான் மரியாதைக்குரிய வணக்கங்களை கீழே விழுந்து சமர்பிக்கிறேன் ! எவ்வாறு தந்தை தனது

மகனது குற்றங்களையும் ; நண்பன் நண்பனது குற்றங்களையும் ; கணவன் மனைவியின் குற்றனகளையும் பொறுத்துக்கொள்கிறார்களோ அவ்வாறே எனது தவறுகள் யாவையும் பொறுத்தருள்வீராக ! உமது கருணையை வேண்டுகிறேன் !!

கீதை 11 : 45 இதுவரை நான் என்றுமே கண்டிராத உமது விஸ்வருபத்தரிசணத்தை கண்டதால் மிகவும் மகிழ்கிறேன் ! ஆனாலும் பயத்தால் குழம்புகிறேன் ! தேவர்களின் தலைவனே ! அகிலத்தின் அடைகலமே ! கருணைகாட்டி தங்களது தெய்வீக ரூபத்தையும் காட்டியருள்வீராக !!

கீதை 11 : 46 விஸ்வரூபமே ! ஆயிரம் கரங்களையுடையவரே ! மகுடத்துடனும் சங்கு சக்கரம் கதை மற்றும் தாமரை மலருடனும் நான்கு கரத்துடன் விளங்கும் அழகிய ரூபத்தையும் காண விரும்புகிறேன் !!

**கீதை 11 : 47 யுகபுருஷன் கிரிஸ்ணர் கூறினார் : எனதன்பு அர்ச்சுணா ! எனது ஆத்ம சக்தியால் இந்த தெய்வீக விஸ்வரூபத்தை உனக்கும் மகிழ்வுடன் காண்பித்தேன் ! எல்லையற்றதும் பிரகாசம் மிக்கதுமான முழு ரூபத்தை உலகத்தில் உன்னைத்தவிர யாரும் கண்டதில்லை !!**

**கீதை 11 : 48 குரு வம்சத்தில் சிறந்தவனே ! யாகங்களை செய்வதாலோ ; வேதங்களை கற்பதாலோ ; தானங்களாலோ ; புண்ணிய செயல்களாலோ அல்லது கடும் தவங்களாலுமோ இந்த ரூபத்தை ஜடவுலகில் காண்பதற்கு இயலாது ! உன்னைப்போல தெய்வீகப்பார்வை அருளப்பெறாத மற்றவர்களால் காண்பதற்கு இயலாது !!**

**கீதை 11 : 49 எனது பயங்கரமான உருவத்தை கண்டு மிகவும் பாதிக்கப்பட்டு குழம்பியுள்ளாய் ! இனி இது முடிவு பெறட்டும் ! எல்லாக்குழப்பங்களிலிருந்தும் விடுபடுவாயாக ! நீ விரும்பும் அழகிய**

ரூபத்தையும் மீண்டும் அமைதியான ரூபத்தையும் காண்பாயாக !!

கீதை 11 : 50 சஞ்சயன் கூறினான் : இவ்விதமாக அர்ச்சுணனிடம் பேசியபடி கிரிஸ்ணர் நான்கு கரங்களையுடைய அழகிய நாராயண ரூபத்தையும் காட்டி ( சௌமிய நாராயணன் ) மீண்டும் மனித ரூபத்தையும் காட்டி அச்சம் நீக்கி உற்சாகப்படுத்தினார் !!

கீதை 11 : 52 யுகபுருஷன் கூறினார் : காண்பதற்கு அரியதான இந்த விஸ்வருபத்தை நீ கண்டதுபோல தேவதூதர்களும் தரிசித்ததில்லை ! அந்த ரூபத்தை தரிசிக்க நித்தமும் அவர்கள் நாடுகின்றனர் !

கீதை 11 : 53 வேதங்களை கற்பதாலோ ; தானங்களாலோ ; கடும் தவங்களாலுமோ இந்த ரூபத்தை காண்பதற்கு இயலாது ! நேர் வழியில் என்னை பின்பற்றுவதால்

ஞானதிருஸ்ட்டியடைந்து உன்னைப்போல காணமுடியும் !!

கீதை 11 : 54 பக்தி கலக்காத நவீன நாத்திக ஞானத்தினால் என்னைப்பற்றிய உண்மைகளின் ரகசியங்களில் நுழையமுடியாது ! எதிரிகளை வெல்லும் அர்ச்சுணா ! ஞானபக்தியால் மட்டுமே இது சாத்தியமாகும் !!

கீதை 11 : 55 பாண்டுவின் மைந்தனே ! என்னை பரமாத்மாவாக உணர்ந்து என் மூலம் கடவுள் மீது பக்திபிரேமையுற்று ; பலன் விளைவில் பற்றிலாமல் எங்களுக்கு அர்ப்பனமாக சகல கர்மங்களையும் செய்து மன களங்களிலிருந்து விடுபடவும் எங்களை அடையவும் இலக்கை வைத்து சகல உயிர்களிடத்தும் பகையற்ற நேயத்தை அடைபவனே எங்களை வந்தடைவான் !!

யோகம் 12 பக்தி யோகம் !!



கீதை 12 : 1 அர்ச்சுணன் கேட்டான் :
புலன்களுக்கு அப்பாற்பட்ட கண்ணால்
காண இயலாத கடவுளை வழிபடுபவர்கள் ;
இதோடு கூட உம்மை சற்குருவாக பின்பற்றி

முறையாக கடவுளை வழிபடுபவர்கள் இவர்களில் யார் விரைவில் பக்குவமடைவார்கள் ?

கீதை 12 : 2 அவதூதர் கிரிஸ்ணர் கூறினார் : என் மீது பற்று கொண்டு மனதை எப்போதும் என்னிடம் ஈடுபடுத்தி என் மூலமாக கடவுளை நம்பிக்கையுடன் யார் வழிபடுகிறார்களோ ; அவர்களுக்கு பரலோக வாழ்வுக்கான திவ்யமான விஷயங்கள் என்னால் அளிக்கப்பட்டு பக்குவமடைகிறார்கள்

கீதை 12 : 3 & 4 : ஆனால் தோற்றமில்லாததும் , புலன்களுக்கு அப்பாற்பட்டதும் எங்கும் விரவி நிற்பதும் புரிந்துகொள்வதற்கு அப்பாற்பட்டதும் மேலும் மாற்றமில்லாததும் அசைவுகள் அற்றதும் பூரணமானதும் ஆன கடவுளின் அருவத்தன்மையில் புலன்களை கட்டுப்படுத்தி நிலைப்படுத்துகிற யோகிகள் மன சமநிலை அடைய தனக்குள் போராடி எங்கும் எதிலும் சமநோக்கு உண்டாகவும்

சகல உயிர்களுக்கும் நன்மை பயக்கும் கர்மங்களை செய்யவும் பெரும் பிரயத்தனம் செய்தும் இயலாமல் பலகீனத்தை உணர்ந்து தாழ்மையடைந்து இறுதியில் என் குருத்துவத்தை சரணடைவார்கள் !

கீதை 12 : 5 ஏனெனில் உடலை அடக்கும் அப்பியாசத்தால் கடவுளின் அரூபத்தில் மனதை நிலைபடுத்துவது , பக்குவம் எய்துவது – முன்னேற்றம் காண்பது மிகமிக கடினம் ! உடலை உடையோருக்கு அவ்வழி சிரமம் !

கீதை 12 : 6 & 7 ஆனால் எவர் என்னை ஏற்றுக்கொண்டு ( குருபக்தி ) எல்லா செயல்களையும் கடவுளுக்காக அர்ப்பணித்து எனது குருத்துவத்தில் பிறழாது பக்தி தொண்டாற்றுகிறார்களோ ; என்னை பின்பற்றுகிறார்களோ அவர்களை பிறப்பு இறப்பு என்னும் சாகரத்திலும் ஜடஉலகின் பந்தத்தால் நீளும் பிறவிகளிலும் உழலாமல் விரைவில் விடுவிகிறவன் ஆகிறேன் !!

கீதை 12 : 8 என் மீது மனதை பற்றவைத்து என் உபதேசங்களுக்கு உன் புத்தியை கீழ்ப்படுத்துவாயானால் என்னில் நிச்சயமாக நீ வாழ்வாய் என்பதில் சந்தேகமில்லை !!

கீதை 12 : 9 செல்வத்தை சம்பாதிக்கும் ஆற்றலுள்ளோனே ! உன் மனதை என்னிலே சமப்படுத்து ! முடியாவிட்டாலும் பக்தி யோகத்தின் நெறிகளை விடாது பின்பற்றுவாயாக ! அது என்னிலே நீ நிலைபெறுவதற்கான பயிற்சியை உண்டாக்கி என்னைப்போலாகும் ஆசையை பூர்த்தி செய்யும் !!

கீதை 12 : 10 பக்தி யோகத்தின் நெறிகளை பயிற்சி செய்ய இயலாவிடின் எனது குருத்துவத்தின் ஏவுதல்களை செயலாக்க முயல்வாயாக ! அவ்வாறு உனது கர்மங்கள் கடவுளுக்கு அர்ப்பணமாக நீ செய்வதால் விரைவில் பக்குவ நிலையை வந்தடைவாய் !

கீதை 12 : 11 இருப்பினும் இதைக்கூட செய்ய உன்னால் முடியாவிட்டாலும் ; குருவாகிய என்னிடம் அடைக்கலம் பூண்டு பக்தித்தொண்டாக எல்லா செயல்களின் பலன்களையும் தியாகம் செய்து விடுவாயாக ! இருக்கிறோம் என்ற இருப்பைத்தவிர உனது எல்லா செயல்களின் விளைவுகளையும் கடவுளுக்கே அர்ப்பணித்து விடுவதால் ஆத்மாவிலே நிலை பெற முடியும் !

கீதை 12 : 12 நிச்சயமாக ஞானமே சிறந்தது ! ஞானத்துடன் தியானத்தையும் அப்பியாசிப்பாயாக ! முக்கியமாக உனது கர்மங்களின் விளைவுகளை கடவுளுக்கே அர்ப்பணித்து விடுவாயாக ! அர்ப்பணிப்பே மன சாந்தியை அருளும் !

கீதை 12 : 13 எல்லா உயிர்களிடத்தும் அன்புடனும் ; போட்டி பொறாமையற்ற நட்புடனும் ; நான் என்ற அலட்டல் அற்றும் ; முதிர்ந்த மனதால் சகலரின்

தீயகுணங்களையும் சகித்தும் ;
இன்பத்தையும் துன்பத்தையும் சமமாக
பாவித்தும் :

கீதை 12 : 14 எப்போதும் திருப்தியுடன்
தன்னில் தானே லயித்திருப்பவனே ஆத்மா
ஞானியாவான் ! மனதாலும் புத்தியாலும்
குருவாகிய என்னையே பற்றியவனாய்
கடவுளுக்கு பக்தி தொண்டில் யாரொருவன்
உறுதியாய் நிலைத்துள்ளானோ அவனே
எனக்கு பிரியமானவன் !!

கீதை 12 : 15 உலக மக்கள் யாருக்கும்
நெருக்கடி உண்டாக்காமலும் ; உலக மக்கள்
யாராலும் யாரிடமிருந்தும் சஞ்சலம்
அடையாமலும் ; இன்பம் துன்பம் பயம்
மற்றும் ஏக்கம் கடந்தும் சம நிலையோடு
யாரொருவன் உள்ளானோ அவனே எனக்கு
பிரியமானவன் !!

கீதை 12 : 16 எல்லா செயல்பாடுகளிலும்
கவலையிலிருந்து விடுபட்டும் ; துன்பங்கள்

அனைத்தையும் உதாசீனப்படுத்தியும் ; உளத்துய்மையோடும் ; முரண்பாடுகள் அனைத்திலும் நடுநிலைமை – சமரசத்தில் நிபுணத்துவமும் உள்ளவன் எவனோ அத்தகு பக்தனே எனக்கு மிகவும் பிரியமானவன் !!

கீதை 12 : 17 அவன் மகிழ்ச்சியில் துள்ளிக்குதிப்பதில்லை ; துக்கத்தில் ஆழ்ந்து முடங்கிப்போவதில்லை ! கடந்ததை நினைத்து புலம்புவதுமில்லை ; வரவேண்டியதை எதிர்பார்த்து தவிப்பதுமில்லை ! மங்களம் அமங்களம் இரண்டையும் கடந்தவன் எவனோ அத்தகு பக்தனே எனக்கு மிகவும் பிரியமானவன் !!

கீதை 12 : 18 & 19 நண்பர்களையும் எதிரிகளையும் சமமாக பாவிப்பவனும் ; புகழ்ச்சி இகழ்ச்சி ; மான அவமானம் ; இன்பம் துன்பம் ; தீ மற்றும் பணி ஆகிய இருமைகளை கடந்து சமமாக பாவிப்பவனும் ; களங்கங்களை கொண்டுவரும் சகல அசுரமாயைகளிளிருந்தும் விடுபடத்தெரிந்தும்

; இருப்பதில் திருப்தியுற்றும் ;
இருப்பிடத்திற்கும் கூட கவலையற்றும் ;
மெய்ஞானத்தில் நிலைத்து பக்தி தொண்டில்
யாரொருவன் உறுதியாய்
நிலைத்துள்ளானோ அவனே எனக்கு
பிரியமானவன் !!

கீதை 12 : 20 பக்தி யோகம் என்ற இந்த
அமிர்தத்தை நம்பிக்கையோடு ஏற்று
உபதேசிக்கப்பட்டபடி பரமாத்மாவான
என்னை சற்குருவாக ஏற்று முழுமையாக
பின்பற்றுபவர்கள் எவர்களோ அவர்களே
எனக்கு மிக மிக பிரியமானவர்கள் !!

## கீதை 13 : ஷேத்திர ஷேத்ரக்ஞ விபாக யோகம்



கீதை 13 : 1 அர்ச்சுணன் கேட்கிறான் : கேசவா ! பிரகிருதி மற்றும் புருஷன் ; களம் மற்றும் துய்த்தறிகிறவன் மேலும் ஞானம் மற்றும் தெய்வீக அன்பில் திளைக்கிறவன் என்பவைகளைப்பற்றி ஆழமாக அறிந்து கொள்ள விரும்புகிறேன்

கீதை 13 : 2 கிரிஸ்னர் கூறினார் : களம் என்பது சரீரம் அதில் இயங்குகிற ஆத்மாவே துய்த்து அறிகிறவன் . ஞானம் என்பது

முழுமையான தெளிவு . அதோடு ஒத்திசைந்து நாளுக்கு நாள் உள்விளையும் தெய்வீக அன்பை பெருக்குகிறவனே ஞேயன் – யோகி

கீதை 13 : 3 பாரத குலத்தோன்றலே ! சரீரத்தையும் அதிலிருந்து அறிந்துணர்கிறவனையும் ( ஜீவாத்மாவையும் ) உணர்ந்து கொள்வதே ஞானமடைதலாகும் . மேலும் எல்லா மனிதர்களின் சரீரங்களிலும் அறிந்துணர்கிறவனாக என்னை ( பரமாத்மாவாக ) உணர்ந்துகொள்வதே மெய்ஞான விருத்தியாகும் .

,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,

ஞானம் பயிலும் சாதகனுக்கு முதலில் தேவை விணா ! அதாவது கேள்வி ! புரிந்தாலும் புரியாவிட்டாலும் எங்காவது கேள்விப்பட்டிருந்தால் மட்டுமே போதுமானது ! பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும் கேட்கிற காது – காதில் விழுகிற எதையும் கிரகிக்கிற காது முதலாவது வேண்டும்

அது ஏற்ற சமயத்தில் ஏற்ற குருவிடம்
தன்னை தெளிவுபடுத்திக்கொள்ள முனையும்
அந்த ஆர்வம் இருப்பவருக்கு மட்டுமே
குருவாலும் உபதேசிக்க முடியும்

பிரம்மத்தைப்பற்றிய ரகசியங்களை
மேற்கண்ட மூன்று ஜோடி கேள்விகளின்
தெளிவால் உணர்ந்து
விடலாம் தபஸ்விகளுக்கு எட்டாத
இவ்விசயங்களை எங்கோ கேட்டு
வைத்திருந்ததால் மட்டுமே அர்சுணனால்
இந்த கேள்வியை கேட்க முடிந்தது

ஞானம் பயில்வோருக்கு இந்த குணம் ஒரு
தகுதி எதையும் முதலாவது கேட்டு
வைத்துக்கொள்ளவேண்டும்

பெரும்பாலான மனிதர்கள் தங்களுக்கு
பிடித்தமானவைகளை மட்டுமே
கேட்க விரும்புகிறார்கள்
பிடித்தமற்றவைகளை கேள்விப்படும்போதே
உணர்ச்சி வயப்பட்டு எதிர்க்கத்தொடங்கி

விடுகிறார்கள் உள்ளே நுழையவே விடுவதில்லை

சற்குரு இயேசுவும் கேட்கக்காதுள்ளவன் கேட்கக்கடவன் கேட்கக்காதுள்ளவன் கேட்கக்கடவன் என்ற வாசகத்தை அடிக்கடி உச்சரித்துள்ளார்

கண்ணிருந்தும் குருடர்களாய் காதிருந்தும் செவிடர்களாய் இவ்வுலகத்தின் பிள்ளைகள் இருக்கிறார்கள் என்பது அவரது ஆதங்கம் !
தனக்கு புரியாத விசயத்தை கேள்விப்பட்டிருந்ததால் அர்ச்சுணனும் கேட்டார் யுகபுருஷனிடம் தெளிவையும் பெற்றுக்கொண்டார்
இம்மூன்றுமே ஒரே மாதிரியானவையே
**1) பிரக்ருதி மற்றும் புருஷன் :**
பிரம்மம் பிரபஞ்சமாக ஜட இயற்கையாக ஈரேழு பதினாலு லோகமாக கண்ணால் காணக்கூடியதாக கண்ணால் காணாததை நம்ப முடியாததாக - ஞானத்தால் நம்பக்கூடியதாக பலவாறு

நம்மைச்சுற்றிலும் உள்ளதே அது பிரக்ருதி இவ்வளவும் அது அது பாட்டுக்கு இருந்தாலும் அதை இன்னது இன்னது என கொஞ்சம் கொஞ்சமாக உணர்கிற ஒரு வேலையை மனிதன் ஒருவன் மட்டுமே செய்கிறான் எந்த மனிதனும் அவனவன் தரத்துக்கு எதையாவது உணர்ந்து கொண்டேதான் இருப்பான்
அதுதான் புருஷன்
இந்த முழு இயற்கையும் ஏன் கடவுள் படைத்தார் என்றால் அதை இந்த புருஷன் உணரட்டும் என்பதற்காகவே
மனிதப்படைப்பு அவ்வளவு முக்கியமானது அவனுக்காகவே கடவுள் சகலவற்றையும் படைத்தார்
கடவுள் மனிதனை தன சாயலிலேயே படைத்தார் சகலவற்றையும் அவனுக்கு கீழ்ப்படுத்தினார்

உலகம் பிறந்தது எனக்காக ஓடும் நதிகளும் எனக்காக என்றொரு திரைப்பட பாடலை கேட்டிருப்பீர்கள் அது உண்மை

இயேசுவுக்கு 1000 ஆண்டுகளுக்கு முந்தய தாத்தன் – யூதர்களுக்கு முதல்முதலில் தனி ராஜ்ஜியத்தை ஸ்தாபித்த அரசன் டேவிட் என்பவர் நல்ல பக்தன் ஆட்டிடையனாக – ஆடு மாடு மேய்த்துக்கொண்டு (ஆயர் குலத்தான் ) எப்போதும் கடவுளைப்பற்றியே சிந்தித்துக்கொண்டு பாடிக்கொண்டிருந்ததால் அவனை ராஜாவாக கடவுள் உயர்த்தினார் அவரின் பாடல் ஒன்றை பாருங்கள் :

**சங்கீதம் : 8**

3. உமது விரல்களின் கிரியையாகிய உம்முடைய வானங்களையும், நீர் ஸ்தாபித்த சந்திரனையும், நட்சத்திரங்களையும் நான் பார்க்கும்போது,

4. மனுஷனை நீர் நினைக்கிறதற்கும், மனுஷகுமாரனை நீர் விசாரிக்கிறதற்கும் அவன் எம்மாத்திரம் என்கிறேன்.

5. நீர் அவனை தேவதூதரிலும் சற்று சிறியவனாக்கினீர்; மகிமையினாலும்

கனத்தினாலும் அவனை முடிசூட்டினீர்.
6. உம்முடைய கரத்தின் கிரியைகளின்மேல் நீர் அவனுக்கு ஆளுகை தந்து, சகலத்தையும் அவனுடைய பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தினீர்.
7. ஆடுமாடுகளெல்லாவற்றையும், காட்டுமிருகங்களையும்,
8. ஆகாயத்துப் பறவைகளையும், சமுத்திரத்து மச்சங்களையும், கடல்களில் சஞ்சரிக்கிறவைகளையும் அவனுடைய
பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தினீர்.

இந்த முழுப்படைப்பும் அதை ஜீவாத்மாக்களாக இருக்கும் மனிதன் உணரட்டும் என்பதற்காக மட்டுமே

அவன் ஆற்றலால் தேவதூதரிலும் சற்றே சிறியவன் ஆனால் கடவுளின் சகல மகிமையாலும் முடி சூட்டப்பட்டவன்

இப்படிப்பட்ட மனிதர்கள் பல பிறவிகளாக பல படித்தரங்களில் இந்த பிரபஞ்சத்தை உணர்கிறவர்களாக

ஜீவாத்மாக்களாக இருக்கிறார்கள் .பல்லாயிரம் ஜீவாத்மாக்கள் சகலத்தையும் தன்னுள் அடக்கிய பரமாத்மா ஒன்று உள்ளது அந்த பரமாத்மாவே முழுமையானது – பரமபுருஷன் ! நாம் அதன் பின்னமான ஜீவாத்மா

இதுவே ஞானத்திற்கு அடிப்படையான ஆத்மபோதம் !!

சகலமும் பிரக்ருதி என்றால் அதை உணர்கிற ஒன்று – உணர்வுகளின் தொகுதி ஆத்மா – ஜீவாத்மா . அந்த ஜீவாத்மாக்களின் தொகுதி பரமாத்மா !!

பிரக்ருதி என்பதில் ஜட இயற்கையும் இந்த முழு ஜட இயற்கையையும் மையமாக இருந்து உணர்ந்துகொண்டிருக்கும் அல்லது நிர்வகிக்கும் இதயம் போன்றது பரமாத்மா – அதாவது பரமபுருஷன்

இந்த புருஷனையே ஆதி இந்து தர்மம்

நாராயணன் என்கிறது
அவர் ஜட இயற்கை அதனால்தான் பள்ளிகொண்டிருப்பவராக – தூங்கிகொண்டிருப்பவராக – ஆனாலும் உணர்ந்து நிர்வகித்துக்கொண்டிருப்பவராக – அறிதுயில் கொள்கிறான் நாராயணன் என்றார்கள் – புரிய வைக்க ஒரு வடிவத்தையும் போட்டார்கள்

அவரே பரம்பொருள் – பரமாத்மா – பரமபுருஷ பகவான் .

பகவான் என்றதும் அதை கடவுளாக கற்பித்துக்கொண்டோம் .
பகவான் ; கர்த்தர் ; ஆண்டவர் என்பதெல்லாம் இறைவனுக்கு இணையான உயர்ந்த அந்தஸ்த்தை குறிக்கும் மரியாதையான விளிப்பு சொற்களே !

இதில் குழப்பமடைவதற்கு ஒன்றுமில்லை ! பிரக்ருதி – இயற்கை என்பது படைக்கப்பட்ட பௌதீகம் என்றால் அதன்

இயக்கு மையமான புருஷனும் படைக்கப்பட்டவரே !

முழு பிரபஞ்சமும் நாளுக்கு நாள் விரிவடைந்து கொண்டே போகிறது என விஞ்ஞானம் சொல்லுகிறது . அந்த பிரபஞ்சம் எவ்வளவுதான் விரிவடைந்தாலும் அதற்கும் வெளியே பல மடங்கு வெட்டவெளியே உள்ளது . அந்த வெட்டவெளியிலே ஈதர் என்ற ஆவி – உயிர் நிறைந்திருக்கிறது

அந்த வெட்டவெளி நாளும் பௌதீகமாக – பொருளாக மாறிக்கொண்டுள்ளது அதாவது அருவம் எல்லையில்லாது இருக்கிறது . அந்த அருவம் ரூபமாக மாறிக்கொண்டுள்ளது . சரியாக சொன்னால் அருவமும் உருவமும் கலந்த பிரபஞ்சமாக மாறிக்கொண்டுள்ளது – அருபஉருவம் என்றொரு நிலை .

நாராயணன் என்ற புருஷன் அருபரூபியே

! நாரயணனிலிருந்து தோன்றிய தேவர்கள்
மற்றும் அசுரர்கள் என்ற
விண்ணுலகு சக்திகள் அனைத்தும்
அருபரூபிகளே ! ஏன் மனிதனுக்குள்ளிருக்கும்
ஜீவாத்மாவும் அருபரூபியே !!

அத்வைதத்தில் எல்லோருக்குள்ளும் எதிலும்
ஒரே ஆத்மா மட்டுமே உள்ளது என்பார்கள்
அந்த பரமாத்மாவே புருஷன் !!

தத்வமஸி – அது நீயாக இருக்கிறாய் !!

மகாகுரு ஐயப்பன் சந்நிதானத்தில் இந்த
வாசகத்தை வைத்திருக்கிறார்கள்
யோக நிலையில் லயித்து பிரம்மத்துடன்
இரண்டற கலந்து இருக்கும்போது அது –
பரமாத்மா –நீயாக வெளிப்படும் !!

ஆனால் நானே அதுவல்ல என்பது
மறக்ககூடாத உண்மை பரமாத்மாதான்
ஜீவாத்மாவாக இருக்கிறது ஆனாலும்
பரமாத்மா முழுமையான

ஞானமுள்ளது ; ஜீவாத்மாவோ ஞானத்தில் முழுமையில்லாமல் வளர்ந்து கொண்டிருப்பது . அறியாமையால் நிறைந்தது

அத்வைதவாதிகளுக்கு பெரும் ஆபத்து என்னவென்றால் நானும் அதுவும் வேறல்ல ; ஒன்று என்பதை நானே அது ; நானே கடவுள் என்பதாக ஒரு அகம்பாவத்தில் போய் முடிகிறார்கள்

அது நானாக இருக்கிறேனே தவிர நான் அதுவல்ல .

அதுபோல அருபமான – ஆவியான கடவுள் பரமாத்வாவாக வெளிப்பட்டிருக்கிறார் . கடவுளிடமிருந்து வெளிப்பட்ட அனைத்தும் நாராயணன் .( நரல் + ஆயணன் = சத்தமாக வெளிப்பட்டவன்) அருவமான கடவுள் பேசியவுடன் சகலமும் உண்டாயிற்று . அவரது சத்தமே நாராயணனாக – பரமாத்மாவாக – பிரபஞ்சமாக வெளிப்பட்டது

கடவுளே நாராயணனாக வெளிப்பட்டிருக்கிறார் ஆனால் நாராயணனே கடவுளல்ல ; அவருக்கும் வெளியே வெளிப்படாதவைகளாகவும் கடவுள் இருக்கிறார்

ஆபிரகாமிய வேதங்களில் கடவுள் வெளிப்படுத்திய உண்மை இதுவே ! சகல மதங்களின் வேதங்களும் கடவுளிடமிருந்து பகுதி பகுதியாக வெளியாக்கப்பட்டவை ஆதலால் வேற்றுமை போல தோன்றினாலும் சமரச வேதம் வெளியரங்கமாகும் காலம் கனிந்து வருகிறபடியால் இவ்வுண்மை உணர்த்தப்படுகிறது .

பிரக்ருதியும் அதன் இயக்கமான புருஷனும் – பரமபுருஷ பகவானும் படைக்கப்பட்டவர்களே . ஆனால் கடவுளின் மொத்த வெளிப்பாடு என்பதால் கடவுளுக்கு இணையானவர் நாராயண் – சற்குரு !!

அப்படியானால் கீதையில் ஆங்காங்கு

சகலமும் நானே என்று கிரிஸ்ணர் சொல்கிறாரே அது சகல படைப்புகளும் நானே என்ற அர்த்தத்திலேயே என்பதை தெளிந்துகொள்ளவேண்டும்

நாராயணனின் அவதாரமான இயேசு சொல்வதை கவனியுங்கள் :

மத்தேயு 11:27 சகலமும் என் பிதாவினால் (கடவுளால்) எனக்கு (நாராயணனுக்கு) ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கிறது . நானும் எவனுக்கு அவரை வெளிப்படுத்தச் சித்தமாயிருக்கிறேனோ அவனைத்தவிர, வேறொருவனும் பிதாவை அறியான்.

யோவான் 14:6 நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன்; என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்தில் வரான்.

ஓம் நமோ நாராயணாய !!
நாராயணனாய் வெளிப்பட்ட அந்த

ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம் !!

## 2) களம் மற்றும் துய்த்து அறிகிறவன் :

யுகபுருஷன் ஸ்ரீகிரிஸ்ணர் கூறினார் : களம் என்பது மனித சரீரம் . அதன் துய்ப்பாளன் அதில் உறைந்து வாழ்ந்து கொண்டிருக்கும் ஜீவாத்மா .
மனிதனின் மனம் இருக்கிறதே அது ஓயாது அலை பாய்ந்து கொண்டே இருப்பது .
அதிலிருந்து எண்ண அலைகள் அதிர்வுகளாக புறப்பட்டுக்கொண்டே இருக்கும் . அதை மனிதன் சிந்திப்பதில்லை .
அணிச்சை செயலாக அது சிந்தனையை நடத்திக்கொண்டே இருக்கும்
மனமது செம்மையானால் மந்திரம் ஜெபிக்கவேண்டா – என்பது சித்தர் வரிகள் .
ஓயாது தன்னிச்சையாக எண்ணிக்கொண்டே இருப்பதால் மனிதன் உணவு உண்பதால் உருவாகும் சக்தியில் பெரும் பகுதி இந்த சிந்தனைக்கே செலவாகிவிடுகின்றது

மருத்துவர்கள் எந்த வியாதிக்கும் முதலில் சொல்லும் மருந்து நன்றாக தூங்கு என்பதாக இருக்கும் . அல்லது லேசான தூக்க மாத்திரையும் கொடுப்பார்கள் . அது எண்ண ஓட்டத்தை நிறுத்தினாலே உடலில் நிறைய சக்தி – நோய் எதிர்ப்பு சக்தியாக மாறி வியாதி போய் விடும் .
பெரிய அறிவாளிகள் முதல் ரெம்ப சாதாரணமானவர்களும் எண்ணிக்கொண்டே தான் உள்ளனர் . சிந்தனை என்பதை தமிழ் எவ்வளவு அழகாக எண்ணம் என்று சொல்கிறது பாருங்கள் . ஒருவகையில் அது கணிப்பு .

மனமானது தான் இருக்கும் இடத்தில் தன்னைசுற்றிலும் என்ன உள்ளதோ அதனோடு இடைபட்டு அது தொடர்பாக கணிப்புகளை வெளிப்படுத்த தொடங்கி விடுகிறது

தேர்தல் எண்ணிக்கை நாளை நடக்கிறது என்றால் அதுவரை பொறுத்திருந்து

பார்த்து விடுவதுதானே . அதற்குள் இப்படி
அப்படி கணிப்பு – அதைப்பற்றி
ஆதரிப்பது எதிர்ப்பது –அலட்டுவது –
வீராவேசம் – கோபம் – கொந்தளிப்பு –
சவடால் – அடிதடி இதெல்லாம் எதற்கு ?

அதுதான் மனித மனம் . அது
கருத்து கந்தசாமி . வண்டியில் சென்று
கொண்டிருப்போம் . இப்ப பார்த்த
ஒன்றைப்பற்றி கருத்து
சொல்லிக்கொண்டிருக்கும்போதே அடுத்த
ஒன்றை பார்த்தவுடன் அதைப்பற்றி சொல்ல
ஆரம்பித்துவிடும் . நமக்கு ரெம்ப
பரிச்சியமாணவர்களின் கண்ணோ
காதோ மூக்கோ உள்ள நபர்கள் யாராவது
தட்டுப்பட்டால் இன்னது என புரியாமல்
அங்கு போய் சிக்கிக்கொண்டு தடுமாறும் ..
இதை ஏன் சொல்கிறேனென்றால் நமக்கு
ஏற்கனவே பரிச்சயமான ஒன்று – பழகிய
ஒன்று – அறிந்த ஒன்று – உணர்ந்த ஒன்று
வெளியே இருந்தால் உடனடியாக அதில் நம்

மனம் போய் லயித்து அதைப்பற்றி தடுமாற தொடங்கி விடும் ' அதை மேலும் புரிந்து கொள்ள பகீரத பிரயத்தனம் செய்யும் .
இதுவே ஆர்வம் .
உள்ளே இல்லாத எதுவும் நமது ஆர்வத்தை தூண்டாது . ஆனால் நாம் பார்க்கிற – கேட்கிற எதைப்பற்றியும் கொஞ்சமாவது நமது உள்ளே போய் பதிவாகி விடும் .வாசனை என்பார்கள் . அவ்வாறு பதிய பதிய உள்ளே அது வளர்ந்து பிறகு உள்ளிருந்தும் வெளியே வரத்தொடங்கி விடும் .
எங்கே போய் பதிகிறது ? எங்கே ஏற்கனவே இருந்ததை வைத்து இந்த மனம் சிந்திக்கிறது என்றால் அதுதான் ஆத்மா . சுருக்கமாக சொன்னால் நமது பல பிறவி எண்ணங்கள் அணுபவங்கள் ஞானம் அனைத்தும் ஒரு தொகுதியாக இருக்கிறதே அதுதான் ஆத்மா . அது உணர்வுகளின் தொகுதி .
ஒவ்வொரு உணர்வும் ஒரு அறிவாக மலரும் . உணர்தல் அறிந்ததால் அறிவகிகிறது . அது பழுத்த அணுபவத்துடன் நல்லது கெட்டது

நெளிவு சுழிவு என பக்குவப்பட்டு தெளியும் போது ஞானம் .

ஒவ்வொரு உணர்வும்
ஒரு ஜடப்பொருளாகவும் கடவுள் படைத்துள்ளார் . ஒரு உயிரிணமாகவும் கடவுள் படைத்துள்ளார் . ஓரறிவு ஜீவனான தாவரங்கள் , மரங்களில் ஒரு குறிப்பிட்ட உணர்ச்சி – குணம் அல்லது தனிமத்தின் ரசாயணத்தன்மை இருக்கும் . ஒரு மூலிகையில் ஒரு குறிப்பிட்ட ரசாயணம் – குணம் இருப்பதைக்கொண்டு வியாதிகளை குணப்படுத்துவதாலே சித்த வைத்தியம் என்றார்கள் . சித்தம் என்றாலும் எண்ணம் – குணம் என்றே அர்த்தம் . வியாதிகளும் ஒரு குறிப்பிட்ட குணம் – எண்ணத்தின் அடிப்படையானவை . அலோபதியில் அந்த குணம் உள்ள ரசாயனங்களை மருந்தாக கொடுக்கிறார்கள் . ஆக இந்த முழு உலகமும் ஏன் பிரபஞ்சமும் உணர்வுகளின் தொகுதி

என்பதை புரிந்து கொள்ளவேண்டும் .
மனதை அறிந்து கொள்வது என்பது சகல ரகசியங்களையும் அறிந்து கொள்வது .

சகல உணர்வுகளும் ஐந்து அறிவுகளின் கலப்பால் விளைகிறவை . சகலமும் பஞ்ச பூதங்கலாக ஜடமாக இருக்கும் அதேவேளை ஐந்து அறிவு – உணர்வுகளுள்ள ஜீவன்களாகவும் இருக்கிறது .

அந்தந்த குணங்களை கொண்டு தாவரங்களும் விலங்கினங்களும் இயங்கிக்கொண்டே இருக்கின்றன . ஆனால் அவைகளை உணர்ந்து எண்ணத்தை கொண்டு எண்ணத்தை விருத்தியாக்கி மகிழ்ச்சியாகவும் கொண்டாட்டமாகவும் ; துன்பமாகவும் கொடுமையாகவும் ; வாழ்த்தவும் சபிக்கவும் திட்டமிடவும் அழிக்கவும் சரிப்படுத்தவும் அடக்கவும் எதிர்க்கவும் ஆன செயல்லாக்கத்தை ஆறாவது அறிவு – ஞானம் என்ற ஒன்றால் மனிதன் மாத்திரம்

செய்கிறான் .

விலங்குகள் இயல்பூக்கத்தில் வாழ்ந்து மடிந்து விடுகின்றன . நடந்தவைகளைப்பற்றி சிந்தித்து ஞானமடைவதில்லை. மகிழ்ச்சியடைவதில்லை ; வேதனைப்படுவதில்லை . ஆனால் மனிதன் துய்த்து அறிகிறான் . ஞானமடைகிறான் .

ஐந்து அறிவுடன் ஆறாவது அறிவு சேரும்போது அந்த உணர்வுகளின் தொகுதி ஒரு தனித்த ; ஆழுமையுள்ள சுயத்தை அடைகிறது . அதுவே ஆத்மா – தனித்ததும் – விழிப்புள்ளதும் – ஆழுமையுள்ளதுமான ஒரு சூக்கும சரீரம் ஒவ்வொரு ஆத்மாவிற்கும் உண்டு . அதனால்தான் மனித ஆத்மா ஜீவாத்மா எனப்படுகிறது .

எங்கும் நிறைந்த பரமாத்மாவே எனக்குள்ளாக ஜீவாத்மாகவும் இருக்கிறது என அத்வைதம் சொல்கிறதே அதுவும் சரி .

அது பாதி உண்மை . ஆனால் என் ஜீவாத்மா தனித்த ஆழுமையுள்ளதாகவும் – தனித்த புருஷனாகவும் என்னைப்போல பல கோடி தனித்த ஜீவாத்மாக்கள் உள்ளன என்பதும் உண்மை . பல கோடி ஜீவாத்மாக்க்களை தனக்குள் அடக்கியதாக பரமாத்மா இருந்தாலும் அது இயற்கையாக – பிரக்ருதியாக மட்டும் இல்லாமல் அதுவும் தனித்த இயல்புள்ள பரமபுருஷனாகவும் உள்ளது என்பதும் உண்மை . இதுதான் அத்வைதமும் துவைதமும் கலந்த விசிஸ்டாத்வைதம் என்பது

அத்வைதமும் சரிதான் துவைதமும் சரிதான் என்ற ஞானத்தை அடையும் வரை ஒரு சாதகன் ஞான நதியில் பயணிக்க தொடங்கவில்லை என்பதே எதார்த்தம் ‘

அத்வைதம் ஒரு கரை என்றால் ஞானநதிக்கு துவைதம் ஒரு கரை .
கரையிலேயே நின்றுகொண்டு பேசிக்கொண்டு இருக்கிறார்களேதவிர அந்த

## ஆற்றில் அவர்கள் குதிக்கவில்லை .

பரமாத்மாவைப்போலவே ஜீவாத்மாவும் தனித்தது – ஆழுமையுள்ளது – ஆக்கவும் அழிக்கவும் கூடியது . நல்லது கெட்டது செய்து புண்ணியத்தையும் பாவத்தையும் சம்பாதிப்பது .ஆனால் பரமாத்மாவோ எந்த பாவ புண்ணியத்தாலும் கறைபடியாமல் – கடந்த நிலையில் இருப்பது .

பராமாத்மா முழுமையான ஞானத்தால் நிரம்பியது என்றால் ஜீவாத்மா அரைகுறை ஞானத்தால் தத்தளிப்பது .

பாவபுண்ணியங்கள் செய்து பல பிறவிகளாக அடிஉதை பட்டு பக்குவப்பட்டு – ஞானத்தில் முழுமையை நோக்கி முன்னேறுவது . அந்த முழுமையே மரணமில்லா பெருவாழ்வு பெறுவது . அதுவரை பிறந்து இறந்து பிறந்து வாழ்கிறது . நாளும் நாளும் பிறவிகள் தோறும் துய்த்து அறிந்து ஒரு நாள் முழுமையடையும் . அந்த தகுதி மனிதனுக்கு மட்டுமே உள்ளது .

அதனால்தான் இங்கு ஸ்ரீகிருஷ்ணர் ஷேத்திரம் – களம் என்பது மனித சரீரம் . அதிலிருந்து துய்த்து அறிந்து முன்னேறுகிரவன் ஷேத்ரக்ஞன் – ஜீவாத்மா என்கிறார் .

சரி ! முதலாம் ஷேத்ரக்ஞன் யார் ? அவரின் படைப்பின் ரகசியம் என்ன ?

இந்து தர்மம் ஒவ்வொரு யுகம் தொடங்கும்போதும் ஒரு மனு மூலமாக மனித இனம் விருத்தியாகிறது என்கிறது . யுக முடிவில் மனித இனம் முழுவதும் அழிக்கப்பட்டு விடுகிறது .பின்பு மீண்டும் ஒரு மனு மூலமாக சிருஸ்டிக்கப்படுகிறது .

இப்போது நாம் நான்காவது யுகத்தில் இருக்கிறோம் .

முதலாவது யுகம் – கிருத யுகம் – சிவன் – யுகபுருஷன்

**இரண்டாவது யுகம் – திரேதா யுகம் – ராமர் - யுகபுருஷன்**

**மூன்றாவது யுகம் – துவாபர யுகம் – கிரிஸ்ணர் – யுகபுருஷன்**

**நான்காவது யுகம் – கலியுகம் – இயேசு – யுகபுருஷன்**

இதில் முதல் மூன்று யுகபுருஷர்களும் வந்தது திராவிட இனத்தில் – அதாவது இந்தியாவில் .எனவே இந்தியர்களுக்கு அவர்களை தெரிகிறது . ஆனால் ஆப்ராகாம் சந்ததியினருக்கு அவர்களை தெரியவில்லை.

இன்றைக்கு உலகில் மற்றெல்லா நாடுகளிலும் பரவியுள்ள ஆப்ராகாமிய வேதங்களான யூதம் ; கிறிஸ்த்தவம் ; இசுலாம் அனைத்தும் ஆப்ரகாம் என்ற இறை அடியவரின் வாரீசுகளிடத்திளிருந்து வந்த வேதம் .

அதிலும் ஒரு தொடர்ச்சி இருக்கிறது . இவர்களுக்கு இயேசுவை தெரியும் ஆனால் சிவனையும் ராமரையும் கிரிஸ்ணரையும் தெரியாது .

இந்தியாவில் எப்படி நான்கு வேதங்கள் இருக்கின்றனவோ அதுபோல ஆப்ராகமியரிடத்தும் ஒரு வேதம் உள்ளது .

உலகில் வந்துள்ள இந்து ; யூத ; கிறிஸ்தவ ; இசுலாமிய வேதங்கள் எதுவுமே பொய்யல்ல . இட்டுக்கட்ட முடியாத அளவு ரகசியங்கள் ; இறைவனின் வெளிப்பாடுகள் உள்ளன . ஆனால் அவை வெளிவந்த மனித இனத்தின் கலாச்சாரம் ; சூழ்நிலைகளை கணக்கில் கொண்டு அவற்றிற்கு ஏற்ப இறைவனால் கொடுக்கப்பட்டவை .அது போல அப்போதைக்கு எது தேவையோ அது மட்டுமே வெளிப்படுத்தப்பட்டதால் எவையுமே முழுமையும் முடிவுமானவையுமல்ல .

ஒன்றுக்கொன்று முரண்பாடுள்ளதாக ; ஒரு

இனத்தின் கலாச்சாரத்தை
மற்றொரு இனத்தின் மீது திணித்து அதை
அழிப்பதுபோல இப்போது இவைகள்
இருந்தாலும் ஒன்றுக்கொன்று
சண்டையிட்டுக்கொண்டிருந்தாலும்
சமரச வேதம் வெளியரங்கமாகும்போது
இவை அனைத்துமே நேர்த்தியாக
அதில் ஒற்றுமையாக்கப்படும் . அதை
இறைவன் நிச்சயமாக செய்வார் .

அப்படியானால் ஞானம்
பயில்வோர் ; வரப்போகிற சமரச வேதத்தின்
வித்துகளான மனிதர்கள் எப்படி இவைகளை
அணுகவேண்டும் என்றால் :

1)எவையுமே பொய்யல்ல 2)எவையுமே
முழுமையுமல்ல 3) எவைகளிலும் மனித
கலப்படங்கள் உள்ளன .

இறைவன் வெளிப்படுத்தியவைகளோடு
மனிதர்கள் தங்கள் கற்பனைகளை
கலந்து விட்டிருக்கிறார்கள் என்ற

கண்ணோட்டத்தோடு மூன்று மதங்களிலும் உள்ள உண்மைகளை அவைகளிலுள்ள மனித கலப்படங்களை ஒதுக்கி இறைவனின் அருளினால் கிரகிக்க முனையவேண்டும் .

இன்னும் எத்தனை ஜென்மம் எடுத்தாலும் என் மதம் மட்டுமே இறைவன் கொடுத்தது மற்றயவைகளை அழித்து விடுவோம் என மனிதர்கள் முயற்சித்தாலும் அது நடக்கப்போவதில்லை . என் மதத்தை காப்பதற்காக நான் மற்றயவைகளை வரிந்து கட்டிக்கொண்டு வெறுக்கிறேன் என்பது ஞானமல்ல . அதற்கு பதிலாக அவைகளை நம் மதத்திற்குள் இழுத்து
விட்டால் மதச்சண்டைகள் ஓய்ந்து விடும் .

பிற மதங்களின் உண்மைகளை தனக்குள்ளாக ஈர்த்துக்கொள்ள்ளும் தன்மை இந்து தர்மத்திற்கு மட்டுமே உள்ளது . ஏனென்றால் அதுவே தாய் மதம் . முதலாம் மனிதனின் தர்மம் . ஆப்ராகாமிய வேதங்களின் அடிப்படையான உருவமற்ற

இறைவழிபாடு ஏற்கனவே இந்து தர்மத்தில் இருப்பதுதான்
. அத்வைதமாகவும் ; சித்தர்களின் நெறியாகவும் ; ஆதி புத்த கொள்கையாகவும் (ஹீனயானம் – புத்தர் கடவுளாக்கப்பட்டதற்கு முந்தய நெறி ) ; சமண மதமாகவும் சீக்கிய மதமாகவும் இந்துதர்மத்தில் அருப வழிபாடு இருந்துகொண்டுதான் உள்ளது .

சமரச வேதம் வெளியரங்கமாகும் காலம் நெருங்கி விட்டதாலேயே இறைவன் இவைகளை வெளிப்படுத்திக்கொண்டுள்ளார்
.

மனித சிருஸ்டி பற்றி ஆப்ராகாமிய வேதங்களில்
வெளிபடுத்தியுள்ளதை பார்ப்போம் :

## ஆதியாகமம்

1 : 26. பின்பு தேவன்: நமது சாயலாகவும் நமது ரூபத்தின்படியேயும்

மனுஷனை உண்டாக்குவோமாக; அவர்கள் சமுத்திரத்தின்
மச்சங்களையும், ஆகாயத்துப் பறவைகளையு ம், மிருகஜீவன்களையும், பூமியனைத்தையும், பூமியின்மேல் ஊரும் சகலப்
பிராணிகளையும் ஆளக்கடவர்கள் என்றார்.
2 : 7. தேவனாகிய கர்த்தர் மனுஷனைப் பூமியின் மண்ணினாலே
உருவாக்கி, ஜீவசுவாசத்தை அவன் நாசியிலே ஊதினார், மனுஷன் ஜீவாத்துமாவானான்.

நான் முன்பே சொன்னேன் ; பஞ்ச பூதங்கள் – ஐந்து அறிவுடன் – துய்த்தறிகிற ஆறாவது அறிவுமுள்ளவனாக மனிதன் படைக்கப்பட்டான் . அவன் மண்ணிலிருந்து உருவாக்கப்பட்டதால் அவன் பெயர் மண்ணு – அதாவது மனு என்றாயிற்று – இந்துதர்மத்தில் மனு என்பதும் யூத பாஷையில் ஆதம் என்பதும் ஒன்று .

இன்னும் இந்நிகழ்வுகள் கடைசியாக வந்த குரானில் விரிவாக உள்ளது:

2:29. அ(வ்விறை)வன் எத்தகையவன் என்றால் அவனே உலகத்திலுள்ள
அனைத்தையும் உங்களுக்காகப்
படைத்தான்; பின் அவன் வானத்தின் பக்கம் முற்பட்டான்; அவற்றை ஏழு வானங்களாக ஒழுங்காக்கினான். அன்றியும் அவனே ஒவ்வொரு பொருளையும் நன்கறிபவனாக இருக்கிறான்.

2:30. (நபியே) இன்னும், உம் இறைவன் வானவர்களை நோக்கி "நிச்சயமாக நான் பூமியில் ஒரு பிரதிநிதியை அமைக்கப் போகிறேன்" என்று
கூறியபோது, அவர்கள் "(இறைவா!) நீ அதில் குழப்பத்தை உண்டாக்கி, இரத்தம்
சிந்துவோரையா
அமைக்கப்போகிறாய்? இன்னும் நாங்களோ உன் புகழ் ஓதியவர்களாக உன்னைத்
துதித்து, உன் பரிசுத்தத்தைப்
போற்றியவர்களாக இருக்கின்றோம் என்று கூறினார்கள்; அ(தற்கு
இறை)வன் "நீங்கள் அறியாதவற்றையெல்லா

ம் நிச்சயமாக நான் அறிவேன்" எனக்
கூறினான்.
2:31. இன்னும், (இறைவன்) எல்லாப்
(பொருட்களின்) பெயர்களையும் ஆதமுக்கு
கற்றுக் கொடுத்தான்; பின் அவற்றை
வானவர்கள் முன் எடுத்துக்காட்டி, "நீங்கள்
(உங்கள் கூற்றில்)
உண்மையாளர்களாயிருப்பின் இவற்றின்
பெயர்களை எனக்கு விவரியுங்கள்" என்றான்.
2:32. அவர்கள் "(இறைவா!) நீயே தூயவன்.
நீ எங்களுக்குக் கற்றுக்கொடுத்தவை தவிர
எதைப்பற்றியும் எங்களுக்கு அறிவு இல்லை.
நிச்சயமாக நீயே
பேரறிவாளன்; விவேகமிக்கோன்" எனக்
கூறினார்கள்.
2:33. "ஆதமே! அப் பொருட்களின் பெயர்களை
அவர்களுக்கு
விவரிப்பீராக!" என்று (இறைவன்)
சொன்னான்; அவர் அப்பெயர்களை
அவர்களுக்கு
விவரித்தபோது "நிச்சயமாக நான்

வானங்களிலும், பூமியிலும்
மறைந்திருப்பவற்றை அறிவேன்
என்றும், நீங்கள் வெளிப்படுத்துவதையும், நீங்
கள் மறைத்துக் கொண்டிருப்பதையும் நான்
அறிவேன் என்றும் உங்களிடம் நான்
சொல்லவில்லையா?” என்று (இறைவன்)
கூறினான்.
2:34. பின்னர் நாம் தேவர்களை நோக்கி,
“ஆதமுக்குப் பணி(ந்து
ஸுஜூது செய்)யுங்கள்” என்று சொன்னபோது
இப்லீஸைத்தவிர மற்ற அனைவரும்
சிரம் பணிந்தனர்; அவன்(இப்லீஸு)
மறுத்தான்; ஆணவமும்
கொண்டான்; இன்னும் அவன் அசுரர்களின்
பிதாவாகி விட்டான்.

பூமியும் பூமிக்கு மேல்
உள்ள ஆறு வானங்கள் ( ஒவ்வொரு
வானத்திற்கும் இரண்டு லோகம் உ.ம்
பூமி ; பூமிக்கு ஒரு பாதாளம் போல ஈரேழு
பதினாலு லோகங்கள் உள்ளதாக இந்து

கணக்கு ) அனைத்தும் மனிதனுக்காக படைக்கப்பட்டது .

ஆனால் மனித படைப்பு தொடங்கும் முன்பே வானவர்கள் – அதாவது தேவர்கள் – அல்லது தேவதூதர்கள் படைக்கப்பட்டு விட்டனர் .

நான் இன்னுமொரு விசயத்தை சொல்வேன் :

எப்படி ஒவ்வொரு குணத்திற்கும் ஒரு தாவரமோ அதே போல தேவர்கள் என்பவர்களும் ஒரு குறிப்பிட்ட குணம் – தன்மை உள்ளவர்களே . .
முழுமையானவர்கள்
அல்ல .முழுமையானவர் பரமபுருஷனான நாராயணன் மட்டுமே .

குரான் 15:26. ஓசை தரக்கூடிய கருப்பான களி மண்ணால் மனிதனை நிச்சயமாக நாமே படைத்தோம்.
15:27. (அதற்கு) முன்னர் ஜான்னை (ஜின்களின் மூல பிதாவை) கடிய சூடுள்ள

நெருப்பிலிருந்து நாம் படைத்தோம்.

பிரபஞ்சத்தை படைக்கும் முன்பாக ஜின்களின் மூல பிதாவாகிய ஜானை நெருப்பிலிருந்து படைத்தோம் என்று குரான் சாட்சி சொல்கிறதே அவரே நாராயணன் . ஜான் என்றாலும் ராம் என்றாலும் ரோம் என்றாலும் குமாரன் – அதாவது பிரதிநிதி . கடவுளின் வெளிப்பாடானவர் – நாராயணன் – பரமாத்மா . கடவுள் சகலவற்றையும் இவர் மூலமாக படைத்தார் என்பதால் மூலபிதா என்ற வார்த்தையை குரான் பயன்படுத்தியிருக்கிறது .

கீதை 8:4 உடலுள்ளவைகளில் சிறந்தவனே ! பவ்தீகப்பொருட்கள் ஒன்று மற்றொன்றாய் வளர்சிதை மாற்றம் அடைந்துகொண்டே உள்ளன ! இது ஆற்றல் சுளர்ச்சி அல்லது ``ஆதிபுத்தா`` எனப்படும் ! இந்த வளர்சிதை மாற்றமே பொருட்களின் உருவாக்கமாக வெளிப்படுகின்றன ! கடவுளின் சர்வவியாபகமோ சகலத்தையும்

உள்ளடக்கியது ! வானவர்களான தேவர்கள்
அசுரர்கள் அதிதேவதைகள் அல்லது
தேவதூதர்கள் என அறியப்படுகின்றனர்
!சூரியசந்திர நட்சத்திரங்கள் உள்ளிட்ட
வானமண்டலசேனைகள் மற்றும்
பூமியிலுறையும் படைப்பினங்கள்
அனைத்தும் எதிலிருந்து உருவாக்கபட்டதோ
அந்த பரமாத்வான
நானே ``ஆதியஜ்னா `` அல்லது
வேள்விகளின் புருஷனாவேன் !

குரான் 2 : 30 ல் பூமியில் கடவுளின்
பிரதிநிதியாக
மனிதனை படைக்கப்போகிறேன் என்று
கடவுள் சொல்லியபோது ஏற்கனவே
படைக்கப்பட்ட வானவர்கள் நாங்களோ சதா
உம்மை சார்ந்து வாழ்பவர்கள் . ஆனால்
மனிதன் சுயமடைந்து கலகம் செய்வான்
என்றார்கள் . ஏனென்றால் மனிதன்
தேவர்களைப்போல அல்லாமல்
முழுமையானவனாக படைக்கப்படுகிறான்
என்றார்கள் ..

அதுமட்டுமல்ல வானவர்களுக்கு தெரியாத தாவரங்கள் பொருட்கள் விலங்குகளின் பேரையெல்லாம் கடவுள் மனிதனுக்கு கற்றுக்கொடுத்தார்

அந்த முதாலம் மனிதன் – மனு ஞானத்தில் தேவர்களை விட முன்னேறியவனாக இருந்தான் .

அதுமட்டுமல்ல தேவர்கள் அனைவரும் அந்த மனுவுக்கு பணிந்து வணக்கம் செய்து வேலை செய்யவேண்டும் என்றும் கடவுள் உத்தரவிட்டார் .

இப்போது பாருங்கள் . யார் ஆணாகவும் அவரில் பாதியான பெண்ணாகவும் இருந்தது ? யாருக்கு தேவகணங்கள் எப்போதும் பணிவிடை செய்தார்கள் ? இவை அனைத்தும் சிவனுக்கு பொருந்தவில்லையா ?

அந்த முதல் மனிதன் கடவுளுக்கு இணையானவன் . கடவுளால்

படைக்கப்பட்ட சகலத்தையும் ஆண்டுகொள்ளவும் ; தேவர்களும் பணிவிடை செய்யும் படியாக கடவுள் சித்தம் செய்தவர் .

5. நீர் அவனை தேவதூதரிலும் சற்று சிறியவனாக்கினீர்; மகிமையினாலும் கனத்தினாலும் அவனை முடிசூட்டினீர்.
6. உம்முடைய கரத்தின் கிரியைகளின்மேல் நீர் அவனுக்கு ஆளுகை தந்து, சகலத்தையும் அவனுடைய பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தினீர்.
கடவுளால் படைக்கப்பட்ட சகலவற்றையும் – தேவர்கள் உட்பட சிவனுக்கு கடவுள் கீழ்படுத்தினார் .

ஆனால் படைக்கப்பட்டவைகளைத்தான் கீழ்ப்படுத்தினாரே ஒழிய படைத்தவர் அவருக்கு கீழாகவில்லை . இந்த உண்மையைத்தான் நாம் மறந்துபோகிறோம் .

கடவுளும் கீழாகவில்லை .சகலத்தையும் யார் மூலமாக படைத்தாரோ அந்த பரம புருஷனும் கீழாகவில்லை .

அந்த பரமபுருஷன் அருப உருபி என்றால் சிவன் ரூபி . சரீரம் .
நாராயணன் ஆத்மா என்றால் சிவன் சரீரம் .

இந்து தர்மத்தில் நரநாராயனர்களாக அவதாரம் செய்ததாக புராணம் உண்டு .
கிருத யுகம் சிவனால் ஆளுமை செய்யப்பட்டது . சத்தியம் நிலைத்திருந்தது . பூமியில் மனுக்குலம் அவர் ஆளுமையில் செழித்து வளர்ந்தது .

அவர் சதா நாராயணனை குருவாக வைத்து கடவுளை தியானித்தவராக இருந்தார் .

குரு கீதை (2) !!
யுகபுருஷன் சிவன் பார்வதிக்கு உபதேசித்ததாவது :

1 . மகாதேவி ! சகல ஆனந்தத்தை அளிப்பதும் ; சகல சுகங்களை அருளுவதும் ; தூய அறிவையும் முக்தியையும் அளிப்பதுமான

தியானத்தைப்பற்றி கூறுகிறேன் கேள் !

2 . பரப்பிரம்மமே குருவாக வெளிப்படும் அவதார புருஷனை உணர்ந்து கொள்வாயாக ! பரப்பிரம்மமே குருவாக வெளிப்படும் அவதார புருஷனைப்பற்றியே பேசுவாயாக ! பரப்பிரம்மமே குருவாக வெளிப்படும் அவதார புருஷனையே சேவிப்பாயாக ! பரப்பிரம்மமே குருவாக வெளிப்படும் அவதார புருஷனையே நமஸ்கரிப்பாயாக !!

3 . பிரம்மானந்தத்தையும் பரம சுகத்தையும் அடைய
வழிகாட்டியும் ; ஞானமே வடிவானவரும் ; மயக்கும் இருமைகளின்
ஆளுமைக்குள்ளாகாதவரும் ; ஆகாயம் போன்ற பரிசுத்தரும் ; ````தத்- த்வ – மஸி என்ற இலக்கை
காட்டிக்கொடுக்கிரவரும் ; தனித்தவரும் ; அழிவற்றவரும் ; நிர்க்குணமானவரும் ; கலங்கமற்றவரும் ; எல்லோருடைய ஆத்மாவுக்கும் சாட்சியானவரும் ; கற்பனைகளுக்கெட்டாதவ

ரும் ; ஜட இயல்பாகிய முக்குணங்களை கடந்தவரும் குருவிற்கெல்லாம் குருவாகியவரும் ஆன சற்குருவையே நமஸ்கரிக்கிறேன் ‼

4 . சந்திரகலை போலப்பிரகாசிப்பவரும் ; சச்சிதானந்த அபீஸ்ட்டா வரத்தை அளிக்க வல்லவருமான குருவின் திவ்ய மூர்த்தியை இருதயத்தாமரை கர்னிகத்தின் மத்தியிலே சிம்மாசனத்தில் வீற்றுக்கச்செய்து தியானித்து வரவேண்டும் ‼

5 . தூய (வெண்மையான) ஆடையுடுத்தவரும் ; தூய வடிவுடையவரும் புஷ்பமும் முத்துமாலையும் அணிந்தவரும் ; மகிழ்சி ததும்பும் இரு விழிகளுடன் இடது மடியில் லக்ஷ்மியை ஏந்தியவரும் ; பரிபூர்ண கிருபைக்கு உறைவிடமும் ஆன (நாராயணனை) குருவை தியானித்து வரவேண்டும் ‼

அவர் இந்த குருகீதையை மனித குலம் உய்ய உன் பிள்ளைகள் செய்யவேண்டியது என்ன என பார்வதிக்கு உபதேசித்தார் . பின்பு சனகாதி முனிவர்களுக்கு பட்டமங்கலத்தில் வைத்து உபதேசித்தார்
(சிவனாரே ஆதி சித்தர் – தமிழரும் கூட . ஆதி உபதேசங்கள் –வேதங்கள் அனைத்தும் தமிழிலேயே இருந்தன .பின்னாளில் சகலரும் புரிந்து கொள்ளட்டும் என சமப்படுத்திய பாஷையான சமஸ்கிரதத்தில் மொழி பெயர்த்தார்கள்)

சிவன் அடிப்படையில் ஜீவாத்மா . ஆனால் சரீரத்தில் இருந்தார் . அதை சிறப்பாக வழி நடத்தினார் . அதனால்தான் அவரை நந்தி வாகணன் என்றார்கள் . அந்த நந்தி மனித சரீரமே . ஆத்மா அதன் மீதேறி பயணம் செய்கிறது . அதில் நல்ல விசயங்களை – வாசனைகளை மட்டும் சேர்க்கவேண்டும் என்பதை அடையாளப்படுத்தவே பிரதோஷம் அன்று அந்த நந்திக்கு பல உயர்ந்த

பொருட்களால் அபிசேகம் செய்கிறார்கள் . அதுபோல நமது சரீரத்தை கோவிலுக்கும் சத்சங்கங்களுக்கும் கொண்டு சென்று நல்ல விசயங்களை அதில் உற்ற வேண்டும் .

அந்த முதலாவது ஷேத்ரக்ஞன் – நந்தி வாகணன் – சிவன் தன் வாழ்வில் முழுமையடைந்து ஒளி சரீரம் பெற்று தேவனாக – ருத்திரனாக – பைரவராக வைகுண்டம் சென்றார் .

இங்கு ஒன்றை கவனிக்கவேண்டும் . பரமாத்மா முழுமையானவர் . தேவர்கள் முழுமையானவர்களல்ல . ஆனால் அங்கு சென்ற சிவன் முழுமையானவர் . எப்படி நாராயணன் முழுமையானவரோ அவரில் படைக்கப்பட்டவைகளில் சிவன் – ருத்திரனாக முழுமையானவராக அங்கு இருக்கும் தகுதி பெற்றார் . மரணமில்லா பெருவாழ்வு – ஒளி சரீரம் பெற்று அங்கு செலும் தகுதி பெரும் மனிதர்கள் அனைவரும் அங்கு

நாராயனனைப்போலவே
முழுமையானவர்களாக –
 தேவர்களைக்காட்டிலும் தகுதி
உள்ளவர்களாக இருப்பார்கள் .

அதுதான் மனிதப்பிறவியின் மாண்பு
. ஷேத்ரக்ஞனாக சகலத்தையும் அறிந்து
உணரும் வாழ்வில் முழுமையடைந்தால் –
 மெய் ஞானத்தில் முழுமையடைந்தால்
வள்ளலாரைப்போல பலரும் ஒளி சரீரம்
பெற்று பரலோகம் செல்லமுடியும் .

இந்த பரலோக வாழ்வையே ஆப்ராகமிய
வேதங்களில் மறுமை என்றார்கள் . ஆனால்
அடையாளமாக சொல்லப்பட்டதை ஒரே ஒரு
பிறவியிலேயே சடங்கு போல வழிபட்டால்
பரலோகம் போய் விடலாம் என
குழந்தைத்தனமாக
நம்பிக்கொண்டிருக்கிறார்கள் . அது
மட்டுமல்ல ஒரே ஒரு பிறவி முடிந்ததும்
நியாயத்தீர்ப்பு நாள் வரை – அதாவது யுக
முடிவு நாள் வரை மனித ஆத்மா

மண்ணுக்குள் நித்திரையில் இருக்கும் என்று நம்பிக்கொண்டிருக்கிறார்கள் .

உதாரணமாக மாபெரும் இறை தூதராக அவர்கள் சொல்லும் முகமது நபி இறந்து இன்னும் பூமியில் கல்லறையிலேயே நியாயத்தீர்ப்புக்காக காத்துக்கொண்டிருக்கிறார் . 70 ஆண்டுகள் மட்டுமே வாழ்ந்த முகமது நபி 1600 ஆண்டுகளுக்கு மேலாக மண்ணுக்குள் காத்திருக்கிறார் என்பது தண்டனை இல்லையா இன்னும் எத்தனை ஆண்டுகள் ஆகுமோ ? அளவற்ற அருளாளன் இப்படியா கொடுமைப்படுத்துவார் என்று சிந்தித்தால் ஆப்ராகாமிய வேதங்கள் ஒரு அடையாளமே தவிர முழுமையானது அல்ல என்பதை உணர்ந்து கொள்ளமுடியும் . பல பிறவிகளாக பிறந்து ஞானத்தில் படிப்படியே முன்னேறி ஒரு நாள் சிவனைப்போல ; சப்தரிஷிகளைப்போல இந்தியாவின் பல ஞானிகளைப்போல ; மோசேயைப்போல ;

எலிஜாவைப்போல ; இயேசுவைப்போல ; வள்ளலாரைப்போல ஒளி சரீரம் பெற்று மரணமில்லா பெரு வாழ்வுக்குள் – பரலோகத்தில் பிரவேசிக்க வேண்டும் என்பதே அளவற்ற அருளாளன் ஒவ்வொரு மனிதனுக்கும் கொடுத்திருக்கும் வாக்கு என்பதை புரிந்துகொள்ள முடியும் .

கடவுளுக்கு இணை வைக்காதீர்கள் என்பது சிவனின் வாரிசுகளாக
வந்த மனிதர்களுக்குத்தானே தவிர சிவனை –
 ஆதமை கடவுள் தனக்கு
இணையனவராகாவே – தேவதூதர்களும் பணியும் படியாக கடவுளே கட்டளையிட்டார் என்று குர்ஆனில் உள்ளது .

மனிதர்களுக்கு சிவன் குரு வழிபாட்டுக்கு உரியவர் – மனித சரீரங்கள் அனைத்திற்கும் சிவனே சற்குரு . சிவனின் மூலமாக கடவுளை வழிபடுவதே
ஏற்புடையது . கடவுளுக்கும் பிரியமானதும் கூட.

**ஓரிறைவனையே துதிக்கிறோம்**
**சிவனின் நாமத்தினாலே**
**ஓம் நமோ சிவாய !!**
**அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி**
**தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி**

,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,

**கீதை 13 : 4 சரீரத்தின் தன்மை என்ன ? அதிலிருந்து விகாரங்கள் எவ்வாறு உண்டாகிறது ? அதை உணர்ந்தறிகிறவன் யார் ? அவனுக்கு அதன் மீதுள்ள ஆளுமை என்ன ? என்பதைப்பற்றி உரைக்கிறேன் கேட்பாயாக !**

**கீதை 13 : 5 செயல்களின் களமான சரீரம் ; மற்றும் செயல்களை அறிந்துணர்கிறவனாகிய ஆத்மாவைப்பற்றிய அறிவு ; அறிவிற்சிறந்த முனிவர்களால் பற்பல வழிகளில் பல்வேறு மந்திரங்களில் உபதேசிக்கப்பட்டுள்ளது .**

குறிப்பாக வெளிப்படுத்தப்பட்ட இறை
வேதங்களில் (ரிக் , யஜுர் , சாம , அதர்வண , த
வ்ராத் , இன்ஜீல் மற்றும் குரான்)
இவை நுணுக்கமாக காரணம் மற்றும்
காரியங்களுடன் விளக்கப்பட்டுள்ளன .

கீதை 13 : 6 & 7 மகா (பஞ்ச)
பூதங்கள் ; அவற்றின் சுயம் மற்றும்
புலப்படாத குணங்களும் ;அவற்றால்
உண்டான பஞ்சேந்திரியங்களும்
(கண் ,காது , மூக்கு , நாக்கு & தோல்)அவற்றின்
ஐந்து
கோசாரங்களும் (குரல் , கால்கள் , கைகள் , ஆ
சனவாய் மற்றும் பாலுறுப்பு) அவற்றுடன்
புலப்படாத மனமும் ஆக
பதினொன்று இவைகளுடன் கூடியவை
சரீரமாகும் ; இவற்றால் உண்டாகும்
விருப்பு , வெறுப்பு , இன்பம் , துன்பம் ஆகிய
பாதிப்புகள் மற்றும் அவை தொடர்பால்
எழும்பும் சுயமுயற்சியும் சரீரத்தின்
விகாரங்கள் எனப்படுகின்றன .

## 3 .ஞானம் மற்றும் நேயம்

**கீதை 13 :**
**8 அடக்கம் , அத்துமீறாதிருத்தல் , சாத்வீகம் , ச மாதானம் , எளிமை , குருவை அடுத்திருந்து கற்றுக்கொண்டே**
**இருத்தல் , தூய்மை , தளராமை , ஆத்ம விழிப்பு**

**கீதை 13 : 9 ஐம்புலன்களையும் அடக்குதலில் தளராமை , சுயத்தை கடரும்**
**மனநிலை இவைகளுடன்**
**பிறப்பு , இறப்பு , முதுமை , நோய் , துன்பம் , கள ங்கம் ஆகியவைகளில் சாட்சியாக மட்டும் இருந்து கொண்டு**

**கீதை 13 : 10 பற்றுதலின்றி பட்டும்படாமல் குழந்தைகள் , மனைவி மற்றும் இதர பந்தங்களில் விடுபட்டு இருத்தல் ; விருப்பு வெறுப்புகளில் சமநிலை அடைதல் ;**

**கீதை 13 : 11 சதா ஆழ்ந்த யோகத்தில்**

நிலைக்க என்னை சரணடைந்த குருபக்தியும் ; தனித்தும் விழித்தும் ஜனத்திரளின் புகழில் பற்றின்றியும்

கீதை 13 : 12 ஆத்மாவில் விளையும் நித்தியானத்த போதத்தில் திளைத்தும் ; தத்துவ விசாரத்தில் தெளியும் தரிசனத்தை அடையும் இலக்கில் செயல்பாடும் ஆகிய இவையே ஞானமடைதல் என்கிறேன் ; இதிலிருந்து வேறுபட்டவை எல்லாம் மாயையே ஆகும் .

கீதை 13 : 13 மேலும் எதை அறிவதால் அமிர்தத்தை சுவைப்பாயோ அந்த தெய்வீக அன்பை (நேயம்) இப்போது விளக்குகிறேன் . அது பரப்பிரம்மம் – ஆதிமூலம் - கடவுள் . ஆரம்பம் இல்லாததும் எனக்கு கீழ்படாததும் இந்த ஜட இயற்கையின் (பிரக்ருதியின்) காரணம் (அடிப்படை- சத்) ; மற்றும் விளைவுகளுக்கும் (வெளிப்பாடுகள் – அசத்)

அப்பாற்பட்டும் – பாதிப்பிலாமலும் இருக்கின்றது .

கீதை 13 : 14 எங்கும் அவரது கரங்களும் ; கால்களும் ; கண்களும் ; காதுகளும் ; முகங்களும் இருந்தாலும் இவ்வுலகத்தில் இல்லாதவரைப்போல திரையிட்டு எங்கும் விளங்குகின்றார் .

கீதை 13 : 15 சகல இந்திரியங்களின் குணாதிசயங்களுக்கும் மூலமாக அவரே இருந்தாலும் இந்திரியங்களிளிருந்து உருவாகும் விகாரங்களுக்கு அப்பாற்பட்டவர் . அனைத்தையும் அவரே பராமரிப்பவர் ஆனாலும் அவைகளால் பந்தப்படாதவர் . ஜட இயற்கையின் குணங்களுக்கும் அவரே எஜமானர் ஆனாலும் அவைகளால் பாதிப்படையாதவர் .

கீதை 13 : 16 படைப்பினங்கள் அனைத்திலும் உள்ளும் புறமும் உள்ளவர் . மேலும்

அசைவன மற்றும் அசையாதனவற்றிலும் உள்ளவர் . புலன்களால் காணவோ அறியவோ முடியாத அருபமானவர் ஆனாலும் உணரக்கூடிய தெய்வீக அன்பால் நிறைந்தவர் . வெகுதூரத்தில் இருப்பவர் போல இருந்தாலும் நெருக்கமாகவே – உங்களுக்குள்ளேயே இருப்பவர் .

I யோவான் 4 :
தேவன் அன்பாகவே இருக்கிறார்; அன்பில் நிலைத்திருக்கிறவன் தேவனில் நிலைத்திருக்கிறான், தேவனும் அவனில் நிலைத்திருக்கிறார். அன்பில்லாதவன் தேவனை அறியான், தேவன் அன்பாகவே இருக்கிறார்.

ஜீவகாருண்யமே மோட்ச வீட்டின் திறவுகோல் – வள்ளலார் . ஆன்மநேய ஒருமைப்பாடு நித்திய ஜீவர்களின் அடையாளமாகும் .ஒருவன் தன்னிலே வாசமாயிருந்து தன்னை அழிய விடாமல்

காக்கும் உயிரின் அன்பை உணர்ந்து கொள்வானானால் ; அதே உயிர் வாசமாயிருக்கும் சகல உயிரினங்களின் மீதும் அபிமானம் பெருகுவதை தடுக்கவே முடியாது .

கீதை 13 : 17 படைப்பினங்கள் அனைத்திலும் பிரிந்து அவைகளுக்குள் நிலைபெற்று இருப்பதுபோல் இருந்தாலும் அவர் பிரிவின்றி எங்கும் நிலைத்திருப்பவர் . படைப்பினங்கள் அனைத்திலும் உயிராக இருந்து காப்பவர் என்றாலும் அவற்றை அழிப்பவரும் விருத்தி செய்பவரும் அவரே என்பதை புரிந்து கொள்ளவேண்டும் .

கீதை 13 : 18 பிராகாசிக்கும் பொருள்கள் எல்லாவற்றின் ஒளியாக இருந்தாலும் மாயையின் இருளால் உணரமுடியாதவராகவும் இருக்கிறார் . ஞானத்தாலும் ஞானத்தின் விருத்தியாலும் உணரப்படவேண்டிய தெய்வீக அன்பாக சகலரின் இதயத்திலும் அவர் வீற்றிருக்கிறார்

.

**கீதை 13 : 19 இவ்வாறாக பிரபஞ்சம் ; பரமாத்மா ; சேத்ரம் (சரீரம் – செயல்களின் களம்) சேத்ரக்ஞன் ; ஞானம் ; தெய்வீக அன்பு ஆகியவை சுருக்கமாக விவரிக்கப்பட்டுள்ளது . இவற்றை புரிந்து கொண்ட எனது சீடன் என்னைப்போலவே பாவனை அடைகிறான்**

**கீதை 13 : 20 பிரக்ருதியும் அதன் மையமான பரமபுருஷனும் நித்தியமானவை என்பதை அறிந்துகொள் . ஜட இயற்கையின் முக்குணங்களும் அவற்றிலிருந்து எழும்பும் விகாரங்களும் பிரக்ருதியால் உற்பத்தி செய்யப்படுபவை – அநித்தியமானவை என்பதையும் அறிந்துகொள் .**

**கீதை 13 : 21 படைப்புகளின் விசயத்தில் எல்லா செயல்களுக்கும் அதன் விளைவுகளுக்கும் பிரக்ருதியே காரணமாகும் . அதுபோல அதனால் விளையும் இன்ப துன்பங்களை அனுபவித்து**

உணர்வது புருஷனே – ஆத்மாவே ஆகும் .

கீதை 13 : 22 ஆத்மா சரீரத்தின் ஜட இயற்கையில் நிலைபெற்று ஜட இயற்கையின் முக்குணங்களையும் அவற்றின் சங்கமத்தால் எழும்பும் பல்வேறு விகாரங்களையும் அனுபவித்து நன்மை தீமைகளை செய்கிறது . அதற்கேற்ற கர்ப்பத்தில் மீண்டும் மீண்டும் ஜனித்து வாழ்வை தொடர்கிறது .
கீதை 13 : 23 இருப்பினும் அந்த சரீரத்தில் பரமாத்மாவோடு தெய்வீகமான மற்றொருவரும் இருக்கிறார் . அவரே பரம உரிமையாளர் ; தலைவர் ; மேற்பார்வை செய்பவர் ; அனுமதிக்கிறவர் ; முற்றுயிராய் பரத்தில் நிறைந்த இறைவன் அவரே .

கீதை 13 : 24 (பிண்டத்தில்)
உயிர் ; ஆத்மா ; சரீரம் (அதுபோல அண்டத்தில் கடவுள் ; பரமாத்மா ; பிரக்ருதி ) இவற்றோடு ஜட இயற்கையின் முக்குணங்களின் வர்த்தமானங்களால்

உருவாகும் செயல்பாடுகள் மற்றும்
இவைகளுக்கிடையான
உறவுகளை செம்மையாக புரிந்துகொள்பவன்
யாரோ அவன் நித்திய ஜீவனை –
மரணமில்லா பெரு வாழ்வை நிச்சயம்
அடைவான் .

கீதை 13 : 25 தியானத்தினால் தன்னை
ஆத்மாவாக (ஜீவாத்மாவாவாக)
உணர்ந்து அந்த ஆத்மாவின் மூலமாக
பரமாத்மாவை கண்டுணரலாம் . மேலும்
தத்வ விசாரத்தாலும் யோக
அப்பியாசத்தாலும் கர்ம யோகத்தாலும்
பரமாத்மாவை உணரலாம் .

கீதை 13 : 26 வேறு சிலர் ஆன்மீக ஞானத்தில்
ஆழ்ந்த பயிற்சி இல்லாத
போதிலும் ; அத்தகையோரின் (உபகுருக்கள்)
உபதேசங்களை
கேட்டதில் ஆர்வமுற்று பின்பற்றுவதால்
மரணத்தின் வழியை கடக்கும் -
நித்தியஜீவனுக்கான பாதையில் பயணிக்க

தொடங்குகின்றனர் .

கீதை 13 : 27 பரதவர்களின் தலைவனே
! ஏதேனும் அசைவற்று இருக்கின்றதோ
அல்லது எதுவெல்லாம் அசைவுற்று
மாறிக்கொண்டே இருக்கின்றதோ
அவையெல்லாம் க்ஷேத்ரம் (சரீரம்) மற்றும்
க்ஷேத்ரக்ஞன்
(ஆத்மா) இவைகளுக்கிடையிலான
இயக்கங்களால் வெளிப்படுபவை என்பதை
அறிந்து கொள்வாயாக .

கீதை 13 : 28 எல்லா உயிரினங்களிலும் ஆதி
மூலமான கடவுள் (உயிராக)
வசிப்பதை எவனொருவன்
காண்கிறானோ அழிவுறும் சரீரத்தில்
அழிவற்ற உயிரும் பரமாத்மாவும் வசிப்பதை
யாரொருவன் காண்கிறானோ அவனே
உண்மையை உணர்கிறவன் .

கீதை 13 : 29 எல்லா உயிரினங்களிலும்
சமமாக வசிக்கும் (உயிராகிய)

கடவுளையும் ; பரமாத்மாவே சமமாக எங்கும் ஜீவாத்மாவாக வசிப்பதையும் உணர்கிறவன் எதையும் இழிவுபடுத்துவதில்லை .இதனால் அவன் தெய்வீகத்தன்மையை அடைகிறான் .

I யோவான் 4 :
தேவனிடத்தில் அன்புகூருகிறேனென்று ஒருவன் சொல்லியும், தன் சகோதரனிடத்து அன்பு கூராதவன் ஒரு பொய்யன்; தான் கண்ணில் கண்ட மனிதனிடத்தில் அன்புகூராதவன், தான் கண்ணில் காணாத தேவனிடத்தில் எப்படி அன்புகூருவான்?

கீதை 13 : 30 எவனொருவன் ஜட இயற்கையே (சரீரமே) சகல செயல்களையும் ஊக்கப்படுத்தி செய்விக்கிறது ; ஆத்மா அத்தேவைகளுக்கு அப்பாற்பட்டது என்ற பக்குவத்தை அடைகிறானோ அவனே எல்லா விதங்களிலும் உண்மையை உணர்கிறவன் .

கீதை 13 : 31 (அழிவுறும்)சரீரங்களின் தனிப்பட்ட அடையாளங்களை

காண்பதை நிறுத்தி எல்லாவற்றிலும் பரந்துவிரிந்துள்ள (அழிவற்ற)பிரம்மத்தை – (உயிராகிய கடவுளையும் ; பரமாத்வாவாகிய நாராயணனையும்) உணர்கிறவனே அநுபூதி அடைகிறவன் .

கீதை 13 : 32 அழிவற்ற ஆத்மாவின் நித்தியத்தன்மையை உணர்ந்தவன் ஜட இயற்கையின் முக்குணங்களுக்கு அப்பாற்பட்ட தெய்வீகமான பரமாத்மாவை தன்னில் காண்கிறான் . அவன் சரீரத்தில் வீற்றிருந்தாலும் அதன் செயல்களால் பந்தப்படாத பக்குவத்தை அடைகிறான் .

கீதை 13 : 33 நுண்ணிய இயற்கையினால் உயிர் எங்கும் பரவி எதிலும் வீற்றிருந்தாலும் அவைகளால் களங்கப்படாமல் இருக்கிறதோ அப்படியே உயிரில் நிலைபெற்ற ஆத்மாவினால் உடலால் களங்கப்படாத தன்மையை அடையமுடியும் .

கீதை 13 : 34 அப்படிப்பட்ட ஆத்மா (உயிராகிய

கடவுளில் நிலைபெற்ற ஆத்மா) ஒரே ஒரு சூரியன் இந்த உலகம் முழுவதையும் பிரகாசமாக்குவது போல முழு உடலையும் பிரகாசமாக்கும் .

கீதை 13 : 35 இவ்வாறு உடலுக்கும் (ஷேத்ரம்) உடலின் உரிமையாளனுக்கும் (ஷேத்ரக்ஞன்-ஜீவாத்மா) உள்ள வேறுபாட்டை ஞானத்தால் உணர்ந்து யாரெல்லாம் கடவுளில் நிலைக்கின்றார்களோ அவர்கள் ஜட இயற்கையின் பந்தத்திலிருந்து ஒவ்வொன்றாக விடுபடுவார்கள் – அதாவது முக்திகளை அடைவார்கள் .

,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,

## எது முக்தி ?

ஆன்மீக வட்டாரங்களில் முக்தி என்ற பதத்தை இறைவனோடு கலந்து இல்லாமல் போதல் – அதாவது சூன்யவாதம் போல பிரயோகப்படுத்துகிறார்கள் . ஆனால் பரமாத்மா இங்கே தெளிவுரை வழங்கி

இருக்கிறார் . முக்தி என்பது இல்லாமல் போவதல்ல ; அழிவற்ற ஜீவாத்மா ; தான் உலகியலில் வாழ்ந்ததால் தொடர்பு கொண்டிருந்த ஜட இயற்கையின் முக்குனங்களிளிருந்தும் அவற்றால் உண்டான ஆறுதீய குணங்களிலிருந்தும் பலவகையான மாயைகளிளிருந்தும் ஒவ்வொன்றாக தன்னை விடுவித்துக்கொள்வது ஒரு ஒரு முக்தி . இவ்வாறு பல முக்திகள் அடைந்து சகலவற்றாலும் பந்தப்படாத தன்மையை அடைதலே சிக்தி . அதாவது சகலமும் பரமாத்மாவின் விரிவாக இருந்தாலும் அவைகளால் பாதிப்பில்லாத இயல்பில் பரமாத்மா எவ்வாறு உள்ளாரோ அவரைப்போலவே ஜீவாத்மாவும் எவைகளாலும் பாதிப்பிலாத சுதந்திர நிலையை அடையும் நிலை சித்தி என்றால் அதற்கு முந்திய படிகள் முக்திகள் .

முக்திஎன்பது நிலை முன் உறு சாதனம்

**அத்தகவு என்றஎன் அருட்பெருஞ்ஜோதி**
**சித்திஎன் பதுநிலை சேர்ந்த அநுபவம்**
**அத்திறல் என்றஎன் அருட்பெருஞ்ஜோதி -**
**வள்ளலார் அகவல்**

முக்தி – விடுதலை அடைதல் – இவையெல்லாம் ஆத்மா அடைகிற பரிபக்குவத்தை குறிப்பதாகும் . இதற்கு ஜீவாத்மா உடலுடன் உறவுள்ள ஆத்மா என்ற நிலையிலிருந்து உயிருடன் உறவுள்ள ஆத்மாவாக பயிற்சித்தல் என்பதே வழி . ஏனென்றால் ஆத்மா என்பது பந்தப்படும் இயல்புள்ளது . ஆனால் உயிரோ எதனாலும் பந்தப்படாமல் எப்போதும் தூய்மையாகவே இருப்பது .
சகலவற்றிற்கும் சாட்சியாக தனது அன்பால் உயிரினத்தை வாழவைத்துக்கொண்டிருப்பது . தெய்வீக அன்பால் அது ஒரு உடலில் தங்கிக்கொண்டிருக்கும் வரை அந்த உடல் மரிக்காமல் இயங்கிக்கொண்டு விணை ஆற்றிக்கொண்டிருக்கும் . அது அன்பு மற்றும்

சாட்சி நிலை மட்டுமே . அந்த உயிரினம் செய்யும் நன்மை தீமை எதனாலும் அது பந்தப்படுவதில்லை . இதுதான் விடுதலையின் ரகசியம் , இவ்வாறுதான் பரமாத்மாவும் எதனாலும் பந்தப்படாதவராக உள்ளார் . அதற்கு அவரும் கடவுளில் நிலைத்துள்ளார் . அதுவே ஜீவாத்மா கற்றுக்கொள்ளவேண்டியது ,அல்லது அநுபூதி .

வேதங்களின் சாரம் என்ன யுகபுருஷன் இயேசுவிடம் கேட்கப்பட்டது :

மத்தேயு 22:37. இயேசு அவனை நோக்கி: கடவுளிடத்தில் உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்துமாவோடும் உன் முழு மனதோடும் அன்புகூருவாயாக;

38. இது முதலாம் பிரதான கட்டளை .

39. இதற்கு ஒப்பாயிருக்கிற இரண்டாம்

கட்டளை என்னவென்றால், உன்னிடத்தில் நீ அன்புகூருவதுபோலப் பிறனிடத்திலும் அன்புகூருவாயாக என்பதே.

40. இவ்விரண்டு கட்டளைளிலும் வேதங்கள் முழுமையும் தீர்க்கதரிசனங்களும் அடங்கியிருக்கிறது என்றார்.

**ஓரிறைவனையே துதிக்கிறோம்**
**நாராயணன் நாமத்தினாலே**
**ஓம் நமோ நாராயணா !!**
**அருட்பெருஞ்சோதி**
**அருட்பெருஞ்சோதி**
**தனிப்பெருங்கருணை**
**அருட்பெருஞ்சோதி**

**ஓரிறைவனையே துதிக்கிறோம்**
**சிவனின் நாமத்தினாலே**
**ஓம் நமோ சிவாய !!**

அருட்பெருஞ்சோதி
அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை
அருட்பெருஞ்சோதி

நாராயணனாய் வெளிப்பட்ட அந்த
ஓரிறைவனையே துதிக்கிறோம்
ஓம் நமோ நாராயணாய !
அருட்பெருஞ்சோதி
அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை
அருட்பெருஞ்சோதி

கீதை 14 : குணத்ரய விபாக யோகம்



கீதை 14 : 1 யுகபுருஷன் கிரிஸ்னர் கூறினார் : எதை அறிந்ததால் முனிவர்கள் இவ்வுலகிலிருந்து விடுபட்டு பரலோகத்தை அடையும் பரிபூரணத்தை (சித்தியை) அடைந்தார்களோ அந்த ஞானத்தை – ஞானங்களில் எல்லாம் உயர்ந்ததான அந்த மெய் ஞானத்தை இப்போது மீண்டும் உனக்கு அறிவிக்கிறேன் .

..........................................................................

எது சித்தி ?

பரிபூரணம் என்ற அர்த்தத்தில் ஸ்ரீகிரிஷ்ணர் சித்தி என்ற பதத்தை - வார்த்தையை இங்கு பயன்படுத்தியுள்ளார் . ஆன்மீக

வட்டாரங்களில் முக்தி அடைந்தார் என்ற வார்த்தையை ஒரு உண்ணதமான இலக்காக – அல்லது முடிவு போல பிரயோகப்படுத்தி வருகிறோம் . ஆனால் முக்தி என்பது ஒரு பக்குவம் மட்டுமே . அதுவே முடிவல்ல . பிறவிகள் தோறும் ஒவ்வொரு ஆத்மாவும் ஏதேனும் ஒரு பக்குவத்தை – முக்தியை அடைந்து கொண்டுதான் உள்ளது . சிறப்புள்ள ஒவ்வொரு பக்குவம் அடைந்தவர்களும் சாதாரண மனிதர்களுக்கு பெரியவர்களாக – சித்தி அடைந்தவர்களாகத்தான் – சித்தர்களாகத்தான் தெரிவார்கள் . ஆனால் அதுவே முடிவல்ல – ஸர்வே பராம் ஸித்திம் – என்ற வார்த்தையை கிரிஷ்ணர் பயன்படுத்துகிறார் பரத்தை அடைவதற்கான சகலவிதமான முக்திகளையும் ஒருவர் பெற்று பரிபூரணம் அடைவதே சித்தி என்கிறார் . முக்திகளில் திருப்தியடையாத தாகம் இருந்தால் மட்டுமே இவ்வுலகிலிருந்து விடுபட்டு பரலோகத்தை

அடைய முடியும் . சித்தி அடையமுடியும்

கீதை 14 : 2 இந்த ஞானம் ஊட்டுவிக்கப்பட்டு அதில் நிலைபெற்றவர்கள் என்னைப்போலவே இயல்படைகின்றனர் . அவர்கள் பிரளயங்களில் சிக்குண்டு தொல்லையுருவதுமில்லை ; யுகங்கள் தோறும் பிறப்புகளிலும் அல்லலுருவதில்லை . (பிறப்பு இறப்புகளை கடந்து விடுகின்றனர்)

பிறப்பு இறப்பை கடந்தவர்கள் – நித்திய ஜீவனுள்ளவர்கள் –மரணமில்லா பெருவாழ்வு பெற்றவர்கள் என்ற வரையறையே ஒவ்வொரு ஆத்மாவும் அடையவேண்டிய இலக்காகும் . அந்த தகுதி அடைந்தால் மட்டுமே ஜீவாத்மா பரமாத்மாவைப்போலவே இயல்புள்ளதாக மாறுகிறது . அதுவரை ஆத்மாக்கள் பூமியில் நடக்கும் யுகங்களில் பிறந்துகொண்டும் இறந்துகொண்டும் இறுதியில் பிரளயத்திலும் அல்லலுற்றே ஆகவேண்டும் .

இறப்பு அதற்கான நோய்நொடி போன்ற

துன்பங்களே மனிதனை வாட்டுகிறது என்றால் பிரளயங்களில் உண்டாகும் துன்பங்கள் வர்ணிக்க கூடியதல்ல . ஒரு சுனாமிக்கே நாம் இன்னும் ஒப்பாறி வைத்துக்கொண்டிருக்கிறோம் ஆனால் வரப்போகிற பிரளயம் வர்ணிக்க முடியாதது . பூமியில் இதுவரை மூன்று யுகங்கள் கடந்து விட்டன. ஒவொரு யுக முடிவிலும் பிரளயம் நடந்திருக்கிறது . அந்த பிரளயங்கள் பற்றி இந்திய வேதங்களில் பல குறிப்புகள் உள்ளன . அந்த பிரளயத்தில் யார் மூலமாக உயிர்கள் காக்கப்பட்டதோ அந்த மணுவை முன்னிலைப்படுத்தி கும்பமேளாக்களும் நடக்கின்றன .

இப்போது நடக்கும் கலியுகத்தின் முடிவில் கல்கி வருமுன்னர் உண்டாகும் பிரளயம் பற்றியும் குறிப்புகள் உள்ளன . யுக புருஷன் இயேசுவும் இதைப்பற்றி விரிவாக கூறியுள்ளார் :

**மத்தேயு 24**

6. யுத்தங்களையும் யுத்தங்களின்
செய்திகளையும்
கேள்விப்படுவீர்கள்; கலங்காதபடி
எச்சரிக்கையாயிருங்கள்; இவைகளெல்லாம்
சம்பவிக்கவேண்டியதே; ஆனாலும் முடிவு
உடனே வராது.

7. ஜனத்துக்கு விரோதமாய்
ஜனமும், ராஜ்யத்துக்கு விரோதமாய்
ராஜ்யமும் எழும்பும்; பஞ்சங்களும், கொள்ளை
நோய்களும், பூமியதிர்ச்சிகளும் பல
இடங்களில் உண்டாகும்.

8. இவைகளெல்லாம் வேதனைகளுக்கு
ஆரம்பம்.
11. அநேகங் கள்ளத்தீர்க்கதரிசிகளும்
எழும்பி, அநேகரை வஞ்சிப்பார்கள்.

12. அக்கிரமம் மிகுதியாவதினால்
அநேகருடைய அன்பு தணிந்துபோம்.
21. ஏனெனில், உலகமுண்டானதுமுதல்
இதுவரைக்கும்

சம்பவித்திராததும், இனிமேலும் சம்பவியாததுமான மிகுந்த உபத்திரவம் அப்பொழுது உண்டாயிருக்கும்.

22. அந்நாட்கள் குறைக்கப்படாதிருந்தால், ஒருவனாகிலும் தப்பிப்போவதில்லை; தெரிந்துகொள்ளப்பட்ட வர்களினிமித்தமோ அந்த நாட்கள் குறைக்கப்படும்.

29. அந்நாட்களின் உபத்திரவம் முடிந்தவுடனே, சூரியன் அந்தகாரப்படும், சந்திரன் ஒளியைக்கொடாதிருக்கும், நட்சத்திரங்கள் வானத்திலிருந்து விழும், வானத்தின் சத்துவங்கள் அசைக்கப்படும்.

30. அப்பொழுது, மனுஷகுமாரனுடைய (கல்கி – மனுஷகுமாரன் என்பதும் சிவக்குமார் என்பதும் ஒரே அர்த்தமே – நாராயணன் ஆத்மா என்றாலும் பூமியில் அவதாரமாக சரீரத்தில் வரும் பொழுது அவர் மனுஷகுமாரன் – அதாவது ராமர் ; கிரிஷ்ணர்

; இயேசு வாக அவர் வந்தபோது அவர் சிவக்குமார் – (முருகன் ) அடையாளம் வானத்தில் காணப்படும். அப்பொழுது, மனுஷகுமாரன் வல்லமையோடும் மிகுந்த மகிமையோடும் வானத்தின் மேகங்கள்மேல் வருகிறதை பூமியிலுள்ள சகல கோத்திரத்தாரும் கண்டு புலம்புவார்கள்.

31. வலுவாய்த் தொனிக்கும் எக்காள சத்தத்தோடே அவர் தமது தூதர்களை அனுப்புவார்; அவர்கள் அவரால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களை வானத்தின் ஒரு முனை முதற்கொண்டு மறுமுனைமட்டும் நாலு திசைகளிலுமிருந்து கூட்டிச்சேர்ப்பார்கள்.

மரணமில்லா பெருவாழ்வு பெற பக்குவமடைந்த ஆத்மாக்கள் பூமியிலிருந்து விடுபட்டு பரலோகத்தை அடைந்து விடுவார்கள் ; ஆனால் மற்றவர்கள் ஊழியை சந்தித்தே ஆகவேண்டும் . ஆனால்

ஆறுதல் என்னவென்றால் சாதாரண மனிதர்களும் சற்குருநாதர்கள் – நாராயணன் நாமத்தினாலும் சிவனின் நாமத்தினாலும் கடவுளை பக்தி செய்து ; வேண்டுதல் செய்துகொண்டே அன்றாட வாழ்வை வாழ்ந்தால் அவர்களும் பிரளயத்தில் அதிக துன்பம் இல்லாமல் காக்கப்படுவார்கள்

மனிதர்களுக்கு தகுதி இல்லாமல் போனாலும் நாராயணன் நாமத்தினாலும் சிவனின் நாமத்தினாலும் கடவுளை நாடுவது – கடவுளுக்கு பயந்து வாழ்வது – பக்தி செய்வது என்பது அவர்களின் குருகுலம் என்ற பாதுகாப்பை நமக்கு கொடுத்துவிடுகிறது . தொடர்ந்து பக்குவத்தை நம்மில் வளர்த்தெடுத்து நம்மை நித்திய ஜீவனுக்கும் தகுதியுள்ளவர்களாக மாற்றுகிறது .

பரமாத்மா எப்படி நித்திய ஜீவன் உள்ளவரோ அதைப்போல முதன்முதலில் ஜீவாத்மாக இருந்து பரமாத்மாவைப்போலவே

இயல்படைந்து முழுமையடைந்து பரலோகத்தில் பிரவேசித்த சிவனும் நித்திய ஜீவன் உள்ளவர் .

இந்த இருவரையே நர நாராயணர்கள் என்று குறிக்கப்பட்டுள்ளது . கடவுளுக்கு அடுத்த நிலையிலுள்ள அதி தூதர்கள் காப்ரியல் மற்றும் மைகேல் என்று நாராயணனும் சிவனுமே ஆப்ரகாமிய வேதங்களில் குறிக்கப்பட்டுள்ளனர் .

இந்த இருவர் நாமத்தினால் மட்டுமே கடவுளை நம்மால் நெருங்கமுடியும் . இந்த நாமங்களே நம்மை நமது பாவங்களின் தண்டனைகள் மற்றும் பிறப்பு இறப்பு அல்லல்களிளிருந்து காத்து இறைவனின் கிருபையை நமக்கு பெற்றுத்தரும் .

இதம் க்ஞானம் உபாஷ்ரித்ய என்ற பதம் இந்த ஞானம் ஊட்டுவிக்கப்படுவதால் பாதுக்காக்கபடுபவர்கள் என்ற அர்த்தத்தில் யுகபுருஷனால் உச்சரிக்கப்படுகிறது .

..................................................................

கீதை 14 : 3 பரதனின் மகனே ! மொத்த ஜட இயற்கையின் இருப்பிடம் நானே . எனது கருவறையிலிருந்தே பிரம்மன் சகல உயிரிணங்களையும் எடுத்து படைக்கிறான் .அவை கர்ப்பமடைவது என்னாலே சாத்தியமாகின்றது .

கீதை 14 : 4 குந்தியின் மகனே ! பிரம்மம் மற்றும் ஜட இயற்கையின் (பிரக்ருதி) கருவறையிலிருந்து சகல உயிரினங்களின் கர்ப்பத்திலும் உருவங்கள் (சரீரம்) தோன்ற விதை அளிக்கும் தந்தை நானே .

கீதை 14 : 5 பிரக்ருதி – ஜட இயற்கை ; சத்வம் ; ரஜஸ் மற்றும் தமோ குணங்களால் உண்டாக்கப்பட்டது . நித்தியமான ஆத்மா இந்த உடலில் சஞ்சரிக்கும் போது இக்குணங்களினால் மயக்கப்பட்டு பந்தப்படுகின்றது.

## சத்வ குணமும் பந்தத்தை உண்டாக்குவதே !

கீதை 14 : 6 அவற்றில் சத்வ குணம் ஜட இயற்கைகளில் முடிந்தளவு பாவமில்லாத இன்பத்தையும் ; ஞானத்தையும் அளித்து ஒருவனை பிரகாசப்படுத்துகிறது . பாவமேயற்றவனானாலும் அவனும் ஞானத்தாலும் இன்பத்தாலும் பந்தப்பட்டே நிற்கிறான் .

..........................................................................................
..

யுகபுருஷன் இங்கு ஒரு முக்கியமான விசயத்தில் அழுத்தம் கொடுக்கிறார் . அது மேன்மையான சத்வகுணமும் கடரப்படவேண்டிய ஒன்று என்பதே . மனிதனுக்குள் மாறிமாறி எழும்பும் முக்குணங்களில் தாழ்மையான மற்ற குணங்களை ஒழிக்க சத்வத்தில் வளரவேண்டியது அவசியம் - மிகமிக அவசியம் . ஆனால் வளர்ந்தபிறகோ அதுவும் துறக்கப்படவேண்டிய ஒன்றே . நிர்க்குணம் – குணங்களை கடந்த ஒருநிலை – அல்லது

கடவுளிடம் ஒரு கருவி என்பதற்கு மேலாக எந்த ஒரு சிறு விசயமும் நித்திய ஜீவன் அடைந்தவர்களிடம் இருக்காது . பரமாத்மா எவ்வாறு எவைகளாலும் பாதிக்கப்படாதவரோ – நிர்க்குணம் உள்ளவரோ அவ்வாறே நித்திய ஜீவனடைந்த ஜீவாத்மாவும் இருக்கும் . இவ்வாறு அடங்கிய – தனக்குள்ளாகவே ஒடுங்கிய நிலையே லிங்கமாக சித்தரிக்கப்படுகிறது . சிவன் ஆத்மாவில் ஒடுங்கிய நிலையே சிவலிங்கம் . அதாவது ஆத்மசொரூபி .

ஆகையால்தான் தாழ்மையான மற்ற குணங்களின் இழிவுகளைப்பற்றி பேசுவதைவிட இங்கு சத்வகுணமும் ஒரு பந்தம் என்கிறார் .ஏனென்றால் கீதையின் உபதேசங்களை ஆராயும் தன்மை கொஞ்சமேனும் பக்குவம் – சத்வத்தில் நிலைக்காத ஆத்மாக்களுக்கு வராது . ஒளிசரீரம் - மரணமில்லாபெருவாழ்வு நெருங்கும் போது சத்வம் ; அந்த குணங்களினால் பூமியில் உண்டாகும் கீர்த்தி

– புகழ் – சீடர்கள் கூட்டம் இவைகளை கடந்தாகவேண்டும் .

இந்தப்பிறவியின் மிக துவக்கத்திலிருந்தே கடவுள் புண்ணியம் ; புகழ் நாட்டம் ஆகியவைகளில் நான் அடிமேல் அடிவாங்கி கற்றுக்கொள்ளும்படியாகவே நடத்திக்கொண்டிருந்தார் . தர்மம் ;சமூகநீதி ; பொதுசேவை ; தியாகம் என்ற வார்த்தைகளும் புகழ்நாட்டம் என்ற தவறான இயல்பின் மீது புனுகு போட்டுக்கொண்டிருப்பதை உணர்ந்து கடவுளுக்கு கீழ்படிய – சரணாகதியை கற்றுக்கொள்ள துவங்கியபோதுதான் ` எல்லா புகழும் இறைவனுக்கே ` என்ற வாசகம் எனக்கு புரிய ஆரம்பித்தது .

அது சென்ற பிறவியின் தொடர்பில் – இந்தியாவில் ஒரு புகழ்பெற்ற நபர் என எனக்கு உணர்த்தப்பட்டாலும் அதனால் எனக்கு எந்த மேண்மையும் இல்லை என்பதோடு நான் கற்றுக்கொள்ள

வேண்டியதே இன்னும் இருக்கிறது . சமீபத்தில் அப்பிறவியிலும் கீதையின் பத்து அதிகாரங்கள் மட்டுமே ஒரு கர்மயோகிக்கு உரிய பாணியில் விளக்க உரை எழுதப்பட்டிருக்கிறது என்பதை அறிந்தேன் . அப்போதுதான் எந்த முன் திட்டமும் இல்லாமல் இப்பிறவியிலும் அதன் தொடர்பாகவே கீதை மொழிபெயர்ப்பு பணிக்குள் வந்திருக்கிறேன் . என்றாலும் இவையெல்லாம் நான் தெளிவு பெற்றுக்கொள்ள மாத்திரமேயன்றி இதனை யார் பயன்படுத்திக்கொள்வார்கள் – யார் யாருக்கெல்லாம் பயனளிக்கும் என்பதைப்பற்றி நான் கவலைப்படவேண்டிய அவசியமே இல்லாமல் கடவுளிடம் ஒப்படைத்து விடுகிறேன் .

.....................................................................................................

கீதை 14 : 7 குந்தியின் மகனே ! எல்லையற்ற ஆசை ; மற்றும் சாதுர்யம் தொடர்பால் ரஜோகுணம் உண்டாகிறது . அது உடலில்

உறையும் ஆத்மாவுக்கு பலன் விளைவில் பற்றை கொடுப்பதால் பந்தப்படுகிறான் .

கீதை 14 : 8 பரதனின் மகனே ! அறியாமையால் பிறக்கும் தமோ குணமோ உடலில் உறையும் ஆத்மாவை சகலத்திலும் மயக்குகிறது . தாபம் ; சோம்பல் ; உறக்கம் ஆகியவற்றால் பந்தப்படுத்துகிறது .

கீதை 14 : 9 தமோ குணமோ தாபத்தால் பந்தப்படுத்துகிறது .ரஜோ குணமோ செயல்களின் பலன் விளைவுகளால் பந்தப்படுத்துகிறது . அதுபோல சத்வ குணமும் ஞானத்தை விருத்தியாக்குவதிலும் பேரின்பத்திலும் பந்தப்படுத்துகிறது .

கீதை 14 : 10 சிலசமயங்களில் சத்வகுணம் மேலோங்கி ரஜோகுணத்தையும் தமோகுணத்தையும் அடக்குகிறது . சிலசமயங்களில் ரஜோகுணம் மேலோங்குகிறது . சிலசமயங்களில் தமோகுணம் மேலோங்குகிறது .இவ்வாறு ஆத்மாவில் குணங்கள் மாறிமாறி

**மேலோங்கி மற்ற குணங்களை அடக்குகிறது .**

**கீதை 14 : 11 எப்போது ஞானம் விருத்தியாகின்றதோ அப்போது இந்த உடலின் எல்லா கதவுகளும் பிரகாசம் அதிகரிப்பதை அறியமுடியும் சத்வகுணம் இவ்வாறுதான் ஆளுமையடையும் .**

.......................................................................................................

**மனித சரீரத்திற்கு ஒன்பது கதவுகள் உள்ளன .(இரு கண்கள் ; இரு காதுகள் ; இரு நாசித்துவாரங்கள் ; வாய் ; பாலுறுப்பு மற்றும் ஆசனவாய்) இந்த புலன்கள் நுகர்வுக்கு ஆனவைகள் ஆக இருந்தாலும் ஞானத்தின் பிரகாசத்தால் அவை மெல்ல மெல்ல நுகர்ச்சி நாட்டத்தை இழந்து மட்டுப்பட்டு விடும் .அப்போது மட்டுமே உடல் ஆத்மாவிற்கு அடங்கியதாக ஆகமுடியும் . சிவன் தட்சிணாமூர்த்தியாக – முயலகனை காலில் மிதித்துக்கொண்டிருப்பது அவர் நுகர்ச்சிக்கு முயல்கிற சரீரத்தை அடக்கிய**

நிலைக்கு அறிகுறியாகும் .

..........................................................................................
...

கீதை 14 : 12 ரஜோகுணம் அதிகரிக்கும்போது பேராசை ; அளவுக்கதிகமான கடும்பற்றுதல் ; பலன் விளைவு கருதிய தீவிர முயற்சி ; சாதுர்யம் வளர்கிறது .

கீதை 14 : 13 தமோகுணம் அதிகரிக்கும்போது இருள் ; சோம்பல் ; பைத்தியக்காரத்தனம் ; தாபம் ; மோஹமயக்கமும் வளர்கிறது .

கீதை 14 : 14 சத்வகுணத்தில் வளர்ந்துகொண்டே ஒருவன் மரணமடைந்தால் ; உத்தமர்களின் பரம்பரையில் பிறந்து ; பிறந்து தூய்மையானவர்கள் வசிக்கும் லோகங்களையும் அடைகிறான் .

கீதை 14 : 15 ரஜோகுணம் மேலோங்கி ஒருவன் மரணமடைந்தால் பலன் விளைவில் சாதனையாளர்களின்

பரம்பரையில் பிறப்பான் . தமோகுணம் மேலோங்கி மரணமடைந்தால் ஒருவன் அறியாமையில் உழல்வோரின் பரம்பரையில் பிறப்பான் .

கீதை 14 : 16 சத்வகுணத்தில் செய்யப்படும் செயல்கள் தூய்மையான புண்ணியங்களை விருத்தியாக்கும் . ரஜோகுணத்தின் செயல்பாடுகள் மனநோவில் முடியும் . தமோகுணத்தின் செயல்பாடுகளோ அறியாமை இருளில் முடியும் .

.........................................................................................................

ரஜோகுணம் சுறுசுறுப்பாக திட்டமிடல் ; முயற்சி ; பணம் சேர்த்தல் ; அதிகாரத்தை பெருக்குதல் என நீளும் போது ; சுயநலத்தால் பிறருக்கு உண்டாக்கும் தீங்குகள் ; மனநோவுகளைப்பற்றி அக்கறைப்படாது தனது திறமைகளை மெச்சிக்கொள்கிறது . ஆனால் பிறருக்கு உண்டாக்கிய நோவுகள் அவர்களின்

பாவங்களையும் சேர்த்தே வாங்கிக்கொள்கிறது .

ரஜோகுணம் உள்ள நபரிடத்து துன்பம் அனுபவிப்பவராக – தப்ப முடியாமல் அல்லோகலப்படுபவராக தமோகுணம் உள்ள நபர் இருப்பார் .

பணம் சம்பாதித்தல் ; சொத்தை பெருக்குதல் ஆளுமை உள்ளவராதல் என இருப்பது ரஜோகுணம் ; உடல் சம்மந்தமான இன்ப நுகர்ச்சியில் மட்டுமே காலத்தை கழித்துக்கொண்டிருப்பது தமோகுணம் .

இந்த செயல்பாடுகளில் ஒருவரிடம் எது மேலோங்குகிறதோ அவர் ; அடுத்த இயல்புள்ளவரிடம் துன்பம் அனுபவிப்பார் . அதனால் இவரின் பாவம் – இயல்பு அடுத்தவருக்கு மாறி செல்லும் . பாவங்கள் மாறி செல்கின்றன . பிறகு இவரிடம் அவர் அல்லோகலப்படுவார் . இப்படி மாறி மாறி அல்லோகலப்பட்டே ஒரு ஆத்மா போதும் என்ற பக்குவத்திலும் ஆன்மீகத்திலும்

நாட்டம் உடையவராக மாறும் .

......................................................................................................

கீதை 14 : 17 சத்வகுணம் ஞானத்தை விருத்தியாக்கும் . ரஜோகுணமோ பேராசையையும் கடும்பற்றையும் விருத்தியாக்கும் . தமோகுணமோ அறியாமையையும் மோஹமயக்கத்தையும் விருத்தியாக்கும் .

கீதை 14 : 18 சத்வகுணத்தில் வளர்கிறவர்கள் படிப்படியே மேல்உலகங்களை நோக்கி உயர்கிறார்கள் . ரஜோகுணத்தில் நிலைக்கிறவர்களோ பூமிக்குரிய வாழ்வில் மத்தியிலேயே இருக்கிறார்கள் . ஆனால் தமோகுணத்தில் நிலைக்கிறவர்களோ பூமிக்குரிய வாழ்வில் தாழ்வடைகிறார்கள் .

கீதை 14 : 19 இந்த ஜட இயற்கையின் முக்குணங்களைத்தவிர வேறெதுவும் உலகியல் செயல்பாடுகளுக்கு காரணம் இல்லை என்பதையும் ; அவைகளில்

பந்தப்படாமல் பரமாத்மா அப்பாற்பட்டு நிற்பதையும் முறையாக உணர்ந்து அறிகிறவன் என்னைப்போன்ற நிலைக்கு உயர்வடைவான் . (என்னைப்போலவே நித்திய ஜீவனடைவான்)

...............................................................................................................................................

உண்மயில் ஆத்மா புசிப்பதுமில்லை ; குடிப்பதுமில்லை ; களியாட்டங்களால் அது எதனையும் நுகர்வதுமில்லை . ஆனால் சரீரத்தால் பந்தப்பட்டு சரீரத்தின் தேவைகளை – தான் அனுபவிப்பதாக மயங்கிக்கிடக்கிறது . சரீரம் ஜட இயற்கையின் முக்குணங்களால் பந்தப்பட்டு நுகர விரும்புகிறது . அது நுகர விரும்பினாலும் தனக்கு அதனால் ஒன்றும் இல்லை ; தான் அப்பாற்ப்பட்டவன் என்பதை ஆத்மா விளிப்படைந்து விடுவித்துக்கொள்ளுமானால் ; பராமாத்மா அப்படிப்பட்ட நிலையில்தான் உள்ளார்

என்பதையும் தெளியுமானால் அவரைப்போலவே ஆகும் வழி திறக்கும் .

.......................................................................................................
....

கீதை 14 : 20 உடலில் உறையும் ஆத்மா ; இந்த முக்குணங்களை கடந்து உடலை அடக்கி வசப்படுத்துமனால் பிறப்பு ; இறப்பு ; முதுமை மற்றும் துன்பங்களிலிருந்து விடுபட்டு அமிர்த்தத்தை சுவைபான் .

# விடுதலை பெற்றவன் எவன் ?

கீதை 14 : 21 அர்ச்சுணன் கேட்கிறான் : இம்மூன்று குணங்களிலிருந்து அவன் எவ்வாறு தன்னை விடுவித்து உய்வடைகிறான் ? அவனது நடத்தைகள் எவ்வாறு இருக்கும் ? அவனின் அறிகுறிகள் எப்படி இருக்கும் ?

கீதை 14 : 22 யுகபுருஷன் கிரிஷ்ணர் கூறினார் : பிரகாசம் (புகழ்) ; அல்லது வெற்றி (அதிர்ஷ்டம்) ; அல்லது மயக்கம்

(துரதிர்ஸ்டம்) வளரும்போது அதை வளர்க்காதவனும் ; அல்லது வெறுத்து தடுக்காதவனும்

கீதை 14 : 23 விருப்பு வெறுப்புகளில் உணர்ச்சி வசப்படாமல் நிதானமுள்ளவனும் ; ஜட இயற்கையின் முக்குணங்களே இவ்வாறு செயல்படுகின்றன என்ற தெளிவால் நடுநிலையோடு அவற்றை உதாசீனப்படுத்தியும் ;

கீதை 14 : 24 மாறிமாறி வரும் இன்பத்தையும் துன்பத்தையும் சமமாக பாவித்து தன்னில்தானே நிறைவுபெற்றும் (ஆத்மசொரூபியாக) மண்ணையும் நவமேதககற்களையும் பொன்னையும் சமமாக பாவிப்பவனும் ; பிரியமானவற்றிலும் பிரியமற்றவைகளிலும் சமநிலை உடையவனும் ; புகழையும் இகழ்ச்சியையும் சமமாக பாவித்தும் ; ஆத்மாவில் ஏற்படும் சுய புகழ்ச்சியை கடந்தும் (தற்பொழிவற்றும் - ஆத்மாவில் தன்னை அறியாமல் ஏற்படும்

திருப்தி அல்லது பெருமையையும் கவனமாக களையவேண்டுமென்பது இங்கு அழுத்தம் கொடுக்கப்படுகிறது)

கீதை 14 : 25 மான அவமானங்களை சமமாக பாவித்தும் நண்பனையும் எதிரியையும் சமமாகவே பாவித்தும் குழுஅபிமான பேதங்கள் - பிரிவினைகளை துறந்தும் இருப்பவனே ஜட இயற்கையின் முக்குணங்களை கடந்தவனாக அறியப்படுவான் .

.................................................................................................................................

## ஆதியாகமம் 11

1. பூமியெங்கும் ஒரே பாஷையும், ஒரேவிதமான பேச்சும் இருந்தது.

6. அப்பொழுது கடவுள் : இதோ, ஜனங்கள் ஒரே கூட்டமாய் இருக்கிறார்கள்; அவர்கள் அனைவருக்கும் ஒரே பாஷையும் இருக்கிறது; அவர்கள் இதைச் செய்யத்தொடங்கினார்கள்; இப்பொழுதும் தாங்கள் செய்ய நினைத்தது

ஒன்றும் தடைபடமாட்டாது என்று இருக்கிறார்கள்.

7. ஒருவர் பேசுவதை மற்றொருவர் அறியாதபடிக்கு, அங்கே அவர்கள் பாஷையைத் தாறுமாறாக்குவோம் என்றார்.

ஜனத்திரள் பெருத்தபோது ஐக்கியம் என்னும் மனித பலத்தால் எதையும் பூமியில் சாதிப்போம் என மனிதர்கள் சுயத்தில் பெருத்தபோதே குழு பேதங்கள் ஒரு சாபமாக கடவுளிடமிருந்து ஆதியில் வந்திருக்கிறது . இதன் விளைவாகவே சாதி ; இன ; மொழி ; மத பேதங்கள் வளர்ந்து பெருகி சண்டை சச்சரவுகளில் முடிகிறார்கள் . கலியுகம் முடிவை நெருங்குவதாலேயே சமரச வேதத்தை கடவுள் வெளியாக்க சித்தம் கொண்டுள்ளார் . இருப்பினும் பரத்திற்குரிய நித்திய ஜீவனை அடைய தகுதி பெற்றோரிடம் இந்த குழு பேதம் மறைந்து விடுகிறது . சாதாரண அல்லது போதிய அளவு ஆன்மவியலில் முன்னேற்றம்

இல்லாத பக்திமான்களிடம் மத பேதம் இருக்கவே செய்யும் . அதை கடவுளால் மட்டுமே சீர்திருத்தவும் முடியும் .

..............................................................................................
.............

கீதை 14 : 26 & 27 மேலும் எவனொருவன் மரணமற்றதும் ; அழிவற்றதும் ; நித்தியமானதும் பேரின்பமும் தர்மமும் கிருபையுமான அருவ கடவுளின் பௌதீக வெளிப்பாடு நானே (நாராயணனே) என்பதை அறிந்து என்னிடம் பூரண சரணாகதி அடைந்து குருகுலத்தில் சேவை செய்கிறானோ அவன் ஜட இயற்கையின் முக்குணங்களை கடந்து நித்திய ஜீவனுக்கு உயர்த்தப்படுவான் .

ஓரிறைவனையே துதிக்கிறோம்
நாராயணன் நாமத்தினாலே
ஓம் நமோ நாராயணா !!
அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி

தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி

ஓரிறைவனையே துதிக்கிறோம்
சிவனின் நாமத்தினாலே
ஓம் நமோ சிவாய !!
அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி

நாராயணனாய் வெளிப்பட்ட அந்த
ஓரிறைவனையே துதிக்கிறோம்
ஓம் நமோ நாராயணாய !
அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி

# கீதை 15 : புருஷோத்தம யோகம்



வேத மரம் !

கீதை **15 : 1** யுகபுருஷன் கிரிஷ்ணர் கூறினார் : உன்னதத்தில் வேர்களையும் ; பூமியை நோக்கி வளரும் கிளைகளையும் ; வேதபதங்களை இலைகளாகவும் கொண்டதாக நித்தியங்களை அருளும் ஒரு ஆலமரம் சித்தரிக்கப்படுகிறது . அதனை உணர்ந்தவன் எவனோ அவனே வேதங்களை உணர்ந்தவன் .

யுகபுருஷன் இம்மரம் பௌதீகமாக இருப்பதாக கூறவில்லை . இவ்வாறு சித்தரிக்கப்ப்டுகிறதே அதனை உணர்ந்தவனே வேதங்களை உணர்ந்தவன் என்கிறார் .

எவ்வாறு சித்தரிக்கப்படுகிறது ? முதலாவது இம்மரம் ஒரு ஆலமரம் .

ஆலமரத்தை ஒரு மரம் என கூறமுடியாது . அது பண்மைகளின் தொகுதி – ஐக்கியம் அல்லது குழுமம் – ஆனாலும் பிரிந்திராமல் ஒரே மரமாகவே இருக்கவும் கூடியது .

ஏறக்குறைய அழிவில்லாதது .

அது பக்கவாட்டில் அடர்ந்து பரவக்கூடியது . அவ்வாறு பரவும் அதன் கிளைகள் ஒவ்வொன்றும் தனது விழுதை பூமியில் இறக்கி அதனை

வேராக மாற்றி உணவை எடுத்துக்கொள்ளகூடியது . அதனால் ஒவ்வொரு கிளையும் தனித்த மரம் போலவே விருத்தியாகும் .

இம்மரம்போலவே வேதங்களும் இருக்கின்றன என்கிறார் ஸ்ரீகிருஷ்ணர் .

வேதமாகிய ஆலமரம் — உன்னதமாகிய பரத்திலே வேரை உடையது . பூமியில் இன்று நிலைத்துள்ள வேதங்கள் பல உள்ளன . அவைகள் இல்லாத இன்னும் சில வழிபாடுகளும் - கொள்கைகளும் சில காலம் பூமியில் பிரபலமாகவும் இருந்தன . அவைகளில் பல அழிந்தும் விட்டன . எவைகள் அழிவடையாமல் நிலைத்துள்ளனவோ அவை பரத்திலிருந்து வந்தவை . எவைகள் பரத்திலிருந்து வராமல் பூமியில் மனிதர்களின் சீரிய சிந்தனைகளால் — அல்லது உலகியல் மரபுகளிலிருந்து தோன்றியவையோ — அவைகள் நல்ல நோக்கத்துடனேயே துவக்கப்பட்டிருந்தும் அழிவை சந்தித்து விட்டன .

ஏறக்குறைய இந்துமதம் ; கிறிஸ்தவம் ; இசுலாம் தவிர ஏனைய பல மார்க்கங்கள் அழிந்தே விட்டன . அல்லது மேற்கண்ட மதங்களில் அமிழ்ந்து விட்டன . பௌத்தம் ; யூதம் ; சீக்கியம் ; பகாய் போன்ற உபமார்க்கங்கள் உள்ளன .

இவைகள் ஒன்றை ஒன்று அழிக்க எவ்வளவோ பகீரத பிரயத்தனங்கள் செய்யப்பட்டும் அழிவற்றவைகளாக நிலைக்கின்றன .

எப்படி வேத மரத்தின் மூல வேர் பரத்திலிருந்து பூமிக்குள் மரமாக வளர்ந்திருக்கிறதோ அதைப்போல அந்த மரத்தின் கிளைகளிலிருந்து தோன்றிய விழுத்களில் எவைகள் பரத்தை நோக்கி வளர்ந்து பரத்தில் வேர் விட்டதோ அந்த விழுதுகள் பரத்திலிருந்து ஜீவன் பெற்று தனி வேத மரம் போலவே ஆகிவிட்டன .

வேதமரத்தின் கிளைகள் பூமியில்தான் உள்ளன . ஏனெனில் வேதம் என்பதே பூமியில் உழலும் மனிதர்கள் நல்வழி பெற வேண்டும் என்கிற இறைவனின் சித்தத்தித்தின் வெளிப்பாடு .

பூமியில் மனித குலம் ; வாழ்விடம் சூழ்நிலை பொருத்து பழக்கவழக்கங்கள் ; பண்பாடுகளில் வித்தியாசம் இருப்பது இயல்பு . அந்த வித்தியாசங்களுக்கு ஒத்து இறைவனிடமிருந்து வரும் வழிகாட்டுதல் ஆகிய வேதங்களிலும் வித்தியாசம் இருக்கவே செய்யும் . அந்தந்த கிளைகளுக்கு விழுதுகள் பரத்திலிருந்து உணவை கிளைகளுக்கு ஏற்ப கொடுப்பதுபோல .

கலியுகத்தில் பூமி முழுதும் ஏறக்குறைய மூன்று இனங்கள் இருப்பதாக கொள்ளலாம் .

1)திராவிடம் 2) ஆரியம் 3) ஐரோப்பியம்

முந்தய ஜலப்பிரலயத்தின் மனுவாகிய நோவாவுக்கு மூன்று பிள்ளைகள் இருந்தார்கள் . இம்மூவருமே உலகின் இன்றைய மூன்று இனங்களாக பெருத்தார்கள் .

மூத்த மகனாகிய அப்பா சிந்து சமவெளியை தேடி வந்து திராவிட இனம் உண்டாயிற்று . இரண்டாவது மகன் சாமா யுப்ரட்டீஷ் சமவெளியில் நிலைத்து ஆரிய இனம் உண்டாயிற்று . மூன்றாவது மகன் காமா ஐரோப்பாவில் பெருத்தார்

திராவிடத்திற்கு இந்து மதமும் ; ஆரியத்திற்கு இசுலாமும் ; ஐரோப்பியத்திற்கு கிறிஸ்தவமும் இறைவன் புறத்திலிருந்து அருளப்பட்டவையாக இன்றும் நிலைத்துள்ளன .

ஆனால் இளம்பிள்ளை கோளாறு — முந்திரிக்கொட்டைத்தனம் என்னவென்றால் அந்த வேதங்களைக்கொண்டு அவரவர் இனத்தை சீர்படுத்தவே இன்னும் முடியாமல் இருக்கும்போது அடுத்த இனத்தின் மீது அடுத்த இனத்தை திணித்து இனவழிப்பு செய்யும் குழப்பங்களை மத மாற்றம் என்ற பெயரால் செய்வது மனிதர்களின் வேலையாகிவிட்டது .

வேதங்களின் உண்மைகளை மட்டும் இனவழிப்பு செய்யாமல் ஒருவரிடமிருந்து ஒருவர் சுவீகரித்தால் அது வளர்ச்சி . ஆனால் இயேசுவை குருவாக ஏற்றுக்கொள்ள நீ வெள்ளைக்காரனாக

மாறவேண்டும் . இசுலாத்தின் அரூப வழிபாட்டை ஏற்றுக்கொள்ள நீ அரபியனாக மாறவேண்டும் என்று இனவழிப்பு செய்வதால் பிரச்சினை வருகிறது . தவறிலும் குழப்பத்திலும் போய் முடிகிறது .

இயேசுவை ஏற்றுகொள்ள எதற்காக ஐரோப்பியனாக மாறவேண்டும் .அவர் ராமராகவும் கிரிஷ்ணராகவும் இந்தியாவில்தானே அவதரித்தார் ? அவரின் உபதேசங்களை கிறிஸ்தவர்கள் கடைபிடித்ததை விட காந்திதானே அஹிம்சையாக வளர்த்தெடுத்தார் .

அரூப வழிபாட்டிற்கு ஏன் அரபியனாக மாறவேண்டும் ? இந்தியாவில் ஆதியிலிருந்தே அரூப வழிபாட்டுக்காரர்கள் – சித்தர்கள் ; ஞானிகள் இருந்துகொண்டுதானே இருக்கிறார்கள் .

அந்தந்த இனத்திற்கு மேற்கண்ட மூன்று மதங்களும் இறைவனின் புறத்திலிருந்து வந்தவை என்பது உண்மை . அது எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மை அவைகளில் மனித சரக்குகள் கலந்து விட்டன என்பதும் உண்மை .

ஆக அவரவர் மதத்திலேயே மனித சரக்குகள் – கலப்படங்கள் மலிந்துவிட்டது .அதை சீர்படுத்துவதுதான் அவரவர் பிரதான பணி . அடுத்தவரை சீர்திருத்துவதல்ல . இந்த பொதுநோக்கு வந்து விட்டால் எல்லா மதங்களும் பரத்திலே வேரை வைத்துக்கொண்டுள்ளன என்ற உண்மை புரியும் எல்லா மதங்களுக்கும் - வேதங்களுக்கும் மூல மரம் பரத்திலிருந்து முளைத்தது . அந்த மூல மரமே வேதங்களுக்கெல்லாம் வேதமானது . அவரே புருஷோத்தமன் – நாராயணன் – பரமாத்மா . அவரே காப்ரியேல் . மோசேக்கும் முகமதுவுக்கும் தரிசனமாகி ஆப்ரகாமின் வாரீசுகளுக்கு வேதத்தை கொடுத்தவரும் அவரே !

ஆனாலும் அந்த மூல மரத்திலிருந்து உலகம் முழுவதிலும் உலகம் உய்ய எண்ணற்ற கிளைகள் உள்ளன . அவைகளில் பலவும் சொந்த விழுதை நேரடியாகவே பரத்திலே வைத்துக்கொண்டும் உள்ளன . அவைகளே பலதரப்பட்ட குரு பாரம்பரியங்கள் . அவைகள் மூலமாக அந்தந்த சிஷ்ய கோடிகளுக்கு அவரவருக்கு உரிய உபதேசங்கள் . இத்தகு உபதேசங்களே

கிளைகளில் பல ; பல இலைகளாக உள்ளன . இந்த இலைகளே எண்ணற்ற வேத பதங்கள் — சந்தாம்ஸி என்கிறார் ஸ்ரீகிருஷ்ணர் .

சந்தம் என்ற வார்த்தையே இருக்கிற இடத்திற்கு ஒத்தது என்கிற அர்த்தத்தை தருவது . வேத பதங்கள் என்பதை சந்தாம்ஸி என்றே ஸ்ரீகிருஷ்ணர் உச்சரித்துள்ளார் . ஒத்து இசைந்து அதிலிருந்து விரிந்த பார்வையை தருபவையே வேதங்கள் என்பது இதன் அர்த்தம் . வேதங்கள் மாறாதவையல்ல . காலத்துக்கு காலம் அவைகள் செழுமைப்பட்டே ஆகும் . பல மாற்றங்கள் அமுல்படுத்தப்படும் . அதை புருஷோத்தமனோ அல்லது அவரின் நண்பர்களான ஆத்மாக்களோ (இறைதூதர்களோ) உலகத்திற்கு கொண்டுவந்திருக்கிறார்கள் என்பதே வரலாற்று உண்மை .

ஸ்ரீகிருஷ்ணர் இந்த சுலோகத்தில் இன்னும் ஒரு முத்தாய்ப்பை சொல்கிறார் . இந்த உண்மையை — எல்லா மதங்களும் பரத்திலிருந்தே வந்தவை என்கிற உண்மையை எவனொருவனால் புரிந்து கொள்ள முடியுமோ அவனே வேதங்களை உணர்ந்தவன் . மற்றவன் மனப்பாடம் செய்து ஒப்பிப்பவன் மட்டுமே . வறட்டு சூத்திரதாரி .

வானத்து உணவு ?

கீதை **15 : 2** கீழ்நோக்கியும் மேல்நோக்கியும் மற்றும் பலவாறாக விரிந்து பரந்த அதன் கிளைகள் ஜட இயற்கையின் முக்குணங்களாகும் . அதிலிருந்து கீழ்நோக்கிய சிம்புகளும் விழுதுகளும் உலகியல் ஆதாய செயல்களால் பந்தப்பட்டு நிற்பவையாகும் .

வேதமரத்தின் ஒரு தன்மை — அதாவது பரத்தை நோக்கிய தன்மை — சத்வ குணம் - முந்தய சுலோகத்தில் விளக்கப்பட்டது . ஆனால் அதே மரத்தின் எஞ்சிய குணங்களும் இந்த சுலோகத்தில் விளக்கப்படுகின்றன . ரஜோ மற்றும் தமோ குணங்களால் உலகியல் ஆதாய செயல்பாடுகளில் ஆர்வமும் பந்தமும் உள்ளவைகளாக கீழ்நோக்கிய சிம்புகளும் விழுதுகளும் சித்தரிக்கப்படுகின்றன .

மூலமரம் பரத்திலிருந்து வளர்வதாக இருந்தாலும் ; ஆங்காங்கு பல விழுதுகள் பரத்திலே முளை விட்டிருந்தாலும் ; பெரும்பான்மையான

சிம்புகளும் விழுதுகளும் உலகியல் ஆதாய செயல்பாடுகளில் உணவைப்பெருகின்றன .

மூலமரம் பரத்திலே இருந்தாலும் – பரமாத்மா பரத்திலே இருந்தாலும் அதிலிருந்து உலகியல் மாயைகளால் பந்தப்பட்டு ; ஜீவாத்மாக்களாக அனேக தனித்துவமுள்ள மரங்கள் அதில் உள்ளன . அவைகளில் பரத்தை நோக்கி விழுதை விடும் சில ஆத்மாக்கள் தவிர ஏனையவைகள் பூமியில் விழுதையும் சிம்புகளையும் உள்ளவைகளாக உள்ளன .

கீதை 15 : 3 உண்மையிலேயே இம்மரம் இவ்வுலகில் காணப்படக்கூடியதல்ல ; அதன் முடிவோ ; அதன் முளைகளோ அதன் அஸ்திபாரமோ காணப்படக்கூடியதுமல்ல . ஆனால் பூமியில் பலமாக நிலைத்துள்ள அதன் விழுதுகளை பற்றின்மை என்ற ஆயுதத்தால் உறுதியுடன் வெட்டி சாய்க்கவேண்டும் .

கீதை 15 : 4 அதன் பின்பு எங்கே சென்றவர்கள் திரும்ப பூமிக்கு வருவதில்லையோ அந்த பரத்தை அடைய ; அங்கேயிருந்து யாரால் எல்லாம் தொடங்குகிறதோ ; யாரிடமிருந்து எல்லாம் விரிவடைகிறதோ அந்த பரம புருஷனாகிய சற்குருவிடம் சரணடையவேண்டும் .

அடையார் ஆலமரம் என்பது அதன் விரிவுக்கும் ஆயுளுக்கும் பேர்போனதாக இருந்தது , நூற்றுக்கணக்கான ஆண்டுகள் பழமையான அந்த மரத்தை காட்சிப்பொருளாக கண்டுகளிக்க கூட்டம் வந்தது . பல விழுதுகளால் அது பெரிய இடத்தை ஆக்கிரமித்து இருந்தது . அந்தோ ஒரு நாள் மூலமரம் செத்துவிட்டது . அதனால் பல விழுதுகள் அந்த மரத்தை தாங்கி வந்தும் நிற்க முடியாமல் சாய்ந்து விட்டது . அதன் பிறகு செயற்கையாக இப்போது அதை முட்டுகொடுத்து காத்து வருகிறார்கள் .

ஏன் சொல்கிறேன் என்றால் விழுதுகளைப்போல பல்லாயிரம் மனிதர்கள் இருக்கிறோம் . பார்க்க ஜீவன் உள்ளவர்கள் போல இருந்தாலும் ; மூலமரம் நம்மை நம்மை இழுத்து பிடிக்காவிட்டால் நாம் அழிந்து விடுவோம் .

கலியுகத்தில் நாராயண அவதாரமான சற்குரு இயேசு சொல்வதை கேளுங்கள் ;

யோவான் 15 :

4. என்னில் நிலைத்திருங்கள், நானும் உங்களில் நிலைத்திருப்பேன்; கொடியானது திராட்சச்செடியில் நிலைத்திராவிட்டால் அது தானாய்க் கனிகொடுக்கமாட்டாததுபோல, நீங்களும் என்னில் நிலைத்திராவிட்டால், கனிகொடுக்கமாட்டீர்கள்.

5. நானே திராட்சச்செடி, நீங்கள் கொடிகள். ஒருவன் என்னிலும் நான் அவனிலும் நிலைத்திருந்தால், அவன் மிகுந்த கனிகளைக் கொடுப்பான்; என்னையல்லாமல் உங்களால் ஒன்றும் செய்யமுடியாது.

6. ஒருவன் என்னில் நிலைத்திராவிட்டால், வெளியே எறியுண்ட கொடியைப்போல அவன் எறியுண்டு உலர்ந்து போவான்; அப்படிப்பட்டவைகளைச் சேர்த்து, அக்கினியிலே போடுகிறார்கள்; அவைகள் எரிந்துபோம்.

யோவான் 6 :

27. அழிந்துபோகிற போஜனத்திற்காக அல்ல, நித்தியஜீவன்வரைக்கும் நிலைநிற்கிற போஜனத்திற்காகவே கிரியை நடப்பியுங்கள்; அதை மனுஷகுமாரன் உங்களுக்குக் கொடுப்பார்

51. நானே வானத்திலிருந்திறங்கின ஜீவ போஜனம் ; இந்த போஜனத்தைப் புசிக்கிறவன் என்றென்றைக்கும் பிழைப்பான்

இயேசு என்றதும் குய்யோமுறையோ கிறிஸ்தவனாக வேண்டுமோ என கூகுரல் கொடுக்கலாகாது . அது ஐரோப்பியர்களுக்கு மட்டுமே ; நமக்கோ அவரின் முந்தய பிறவிகளான ராமர் ; கிரிஷ்ணரை சார்ந்துகொண்டாலே போதுமானது .

நாம் பூமியிலே விழுதுள்ள மனிதர்கள் என்ற நிலையிலிருந்து பரத்திலே விழுதுள்ள மனிதர்களாக மாறி ; வானத்திலிருந்து வரும் உணவை எடுப்பவர்களாக மாறினால் மட்டுமே நித்திய ஜீவனுள்ளவர்களாக பரத்திற்கு செல்லமுடியும் . அதற்கு சற்குருவான நாராயணனை சார்ந்து வாழ கற்றுக்கொள்ளவேண்டும்

மார்க்க பேதங்கள்

கீதை 15 : 8 காற்றானது அது உரசும் பொருட்களின் நறுமணத்தை சுமந்து செல்வதைப்போலவே ஆத்மாவும் அது வாழும் உடலால் உண்டாகும் அனுபவங்களை சுமந்து செல்கிறது . ஒரு உடலை துறந்தால் மொத்த அனுபவங்களுக்கு ஒத்த உடலை அடைகிறது .

கீதை 15 : 9 மனதை மையமாகக்கொண்டு காது ; கண் ; நாக்கு ; மூக்கு ; தொடுபுலன் உள்ள புதிய சரீரத்தில் நிலைபெற்று அந்த சூழ்நிலையின் புதிய அனுபவங்களை பெறுகிறது .

இங்கு ஆத்மாவின் மிக முக்கியமான இயல்பு விளக்கப்பட்டுள்ளது . காற்று துய்மையானதாக இருந்தாலும் அது எதை உரசியதோ அதைப்போலவே மணம் காற்றைப்பற்றிக்கொள்கிறது . அந்த மணத்தை அது கொஞ்ச தூரம் சுமந்தே ஆகவேண்டும் .

ஆத்மாவும் அதைப்போன்றதே . ஆத்மாவை மாநகர குப்பைக்கிடங்கு என்றே சொல்லலாம் . அதில் விழுகிற — கொட்டப்படுகிற எதையும் அது வாங்கிக்கொள்ளும் . அது முடியாது என வெளியே தள்ளுவதே இல்லை .

ஒரு பயங்கரமான உண்மை ; அது கேள்விப்பட்ட எந்த விசயமும் ஆத்மாவுக்குள் ஒளிந்திருந்து சந்தர்ப்பமும் சூழ்நிலையும் வாய்க்கும்போது தீடீரென வெளியே வந்து விடும் . நானா இப்படி செய்தேன் ; நான் எப்படி இதை செய்தேன் என எனக்கே விளங்கவில்லை என்று நாமே பல முறை சிண்டை பிய்த்துக்கொள்வதில்லையா அது என்றைக்கோ பொழுதுபோக்காக நண்பர்களோடு அரட்டை அடித்த விசயமாக இருக்கும் .

நம் ஆத்மாவில் நாம் பார்த்த ; கேள்விப்பட்ட ; பேசிய விஷயங்கள் —

அனுபவங்கள் – சம்ஸ்காரங்கள் – உள்ளே போய் பொதிந்து ஒளிந்து கொள்ளும் . நமக்குள் என்ன இருக்கிறது என்பது நமக்கே தெரியாது . கடவுளுக்கும் ; தேவர்கள் அசுரர்களான ஆவி மண்டல சக்திகளுக்கும் மட்டும் தெரியும் . சந்தர்ப்பத்தையும் சூழ்நிலையையும் உருவாக்கினால் நம்மிடமிருந்து அதனை வெளியே கொண்டு வர வைக்கமுடியும் . அதனால்தான் தவறு செய்தவர்களை பார்க்கும்போது அவர்களைப்பற்றி காரிகாரி துப்பக்கூடாது என்கிறார் யுகபுருஷன் இயேசு .

இப்படி இருக்கக்கூடாது என எண்ணலாம் ; அவர்களால் தீங்கு வராமல் காத்துக்கொள்ள என்ன செய்யவேண்டுமோ செய்யலாம் ; ஆனால் அவர்களை நியாயம் தீர்க்க – காரித்துப்ப மனிதனுக்கு அதிகாரம் கிடையவே கிடையாது .

அப்படி நாம் யாரை குற்றவாளி என நியாயம் தீர்த்தோமோ அதே மாதிரி தவறை சந்தர்ப்ப சூழ்நிலையில் நாமும் செய்து கேவலப்பட்டு நிற்க வைத்து கடவுள் நமக்கு பாடம் கொடுப்பார் .

மிகச்சமீபத்தில் கடவுள் எனக்கு உணர்த்திய விஷயம் ; இந்து தீவிர மதவாதிகளாக இருந்து இசுலாத்தை காரிகாரி துப்புகிற பலர் முந்தய பிறவியில் முஸ்லீம் தீவிரவாதிகளாக இருந்து மற்ற மதங்களை காரிகாரி துப்பிக்கொண்டிருந்தவர்களே . இன்றைக்கு முஸ்லீம் தீவிரவாதிகள் பலரும் முந்தய பிறவியில் இந்து தீவிரவாதிகளாக இருந்தவர்களே .

இவர்கள் ஒரு விசயத்தில் தெளிவில்லாமல் இருக்கின்றனர் . எவ்வப்பொழுதெல்லாம் தர்மம் அழிந்து அதர்மம் தலைவிரித்தாடுகிறதோ அப்போதெல்லாம் நான் தர்மத்தை நிலைநாட்ட பூமியில் அவதரிக்கிறேன் என்று பரமாத்மா சொன்னாரே அதை வாசிக்கிறார்கள் . அதில் அதர்மத்தை அழிப்பதும் தர்மத்தை நிலைநாட்டுவதும் பரமாத்வாவின் வேலை என்றுதானே சொன்னார் ; அது நம்மைபோன்ற ஜீவாத்மாக்களின் வேலை அல்ல என்பதை உணர மறுக்கிறார்கள் .

அல்லா நேரடியாக தரிசனம் ஆகி ஜிஹாத் செய்யச்சொன்னதால் முகமது குறிப்பிட்ட சூழ்நிலையில் குறிப்பிட்ட மக்கள் மீது போர் செய்தார் . அது

குற்றமாகாது . ஏனென்றால் அல்லா அவரிடம் நேரடியாக தெரிவித்தார் .

ஆனால் அல்லா முகமதுவிடம் நேரடியாக சொன்னதை இன்றைக்கு குரானில் வாசித்துவிட்டு பிறர் மீது ஜிஹாத் செய்ய யாருக்கும் அதிகாரம் இல்லை . ஏனென்றால் அல்லா உங்களிடம் நேரடியாக சொல்லவில்லை .

எழுதப்பட்ட ஒன்றை ஒவ்வொருவரும் தங்களுக்கு தகுந்த மாதிரி குறைவான அர்த்தத்திலேயே புரிந்து கொள்ளமுடியும் . யாரும் முழுமையாக புரிந்து கொள்ளமுடியாது .

தங்களுக்கு தகுந்த மாதிரி குறைவாக புரிந்துகொண்டதை அல்லா தங்களுக்கு சொன்னதாக எடுத்துக்கொண்டு சன்னி முஸ்லீம்கள் ஷியா முஸ்லீம்களை கொல்கிறார்கள் ; ஷியா முஸ்லீம்களும் அல்லாவின் பேரை சொல்லிக்கொண்டே சன்னி முஸ்லீம்களை கொல்கிறார்கள் . இதில் கோளாறு எங்கிருக்கிறது ?

தாங்கள் பக்தி செய்வது தங்கள் ஆத்மாவை ஒளியூட்டுவதற்கு என்பதை மறந்து தாங்கள் பக்தி செய்தவருக்கு தாங்கள்தான் ஏஜண்டுகள் – குத்தகைதாரர்கள் என்ற மனப்பாண்மைக்கு மனிதர்கள் வருவதே கோளாறு .

நம் ஆத்மாவை விட்டு சம்ஸ்காரங்களை நீக்கி தூய்மையடைவதும் ; அப்படி நாம் அடைந்த வெளிச்சம் ஒருவேளை அடுத்தவரையும் வெளிச்சமடைய வைக்குமானால் அதுவே நம்மிடம் இறைவன் எதிர்பார்க்கும் வேலை . ஒரு மார்க்கத்தைக்கொண்டு ஒரு மார்க்கத்தை அழிப்பது அல்ல .

ஒருமார்க்கத்தில் தீவிரவாதம் செய்துகொண்டே தன் ஆத்மாவின் உள்ளொளியை பெருக்குதல் என்பதில் முன்னேறாத ஆத்மாக்கள் பல அடுத்த பிறவியில் அடுத்த மார்க்கத்தில் பிறந்து முந்தய மார்க்கத்தை காரித்துப்புகிறார்கள் . இப்படியே செக்கு மாடுபோல இங்கும் அங்கும் சுற்றிக்கொண்டிருக்கிரார்களே தவிர இறைவனை நோக்கி ஒரு தம்பிடியாவது முன்னேறுவதே இல்லை .

ராமரை கிரிஷ்ணரை பக்தி செய்கிறாயா அவரை சார்ந்து கொண்டு உள்ளொளியை பெருக்குவது மட்டுமே நமது வேலை ; சிவனை பக்தி செய்கிறாயா அவரை சார்ந்து கொண்டு உள்ளொளியை பெருக்குவது மட்டுமே நமது வேலை ; இயேசுவை பக்தி செய்கிறாயா அவரை சார்ந்து கொண்டு உள்ளொளியை பெருக்குவது மட்டுமே நமது வேலை ; அல்லாவை பக்தி செய்கிறாயா அவரை சார்ந்து கொண்டு உள்ளொளியை பெருக்குவது மட்டுமே நமது வேலை .

நம் ஆத்மாவை எப்படி சுத்தம் செய்வது ; அதற்குத்தான் நாம் ஒருவர் மீது பக்தி செய்கிறோம் என்ற தெளிவை மறந்து நாம் பக்தி செய்கிறவருக்கு நாமே குத்தகைதாரர் என்ற மன நிலைக்கு மனிதர்கள் வந்து விடுகிறோமே அதில்தான் கோளாறு வந்துவிடுகிறது .

கீதை **15 : 10** ஒரு உடலை நீத்து இன்னொரு உடலில் குடிகொண்டு அந்த சூழ்நிலைக்கு ஏற்பவும் இயற்கை குணங்களின் மயக்கத்தினால் ஆட்பட்டும் ஆத்மா தற்போது எதைச்செய்து கொண்டுள்ளது என்பதை முட்டாள்கள் உணர்வதில்லை ; ஞானத்தை உணர்ந்தோரே தெளிவடைவர் .

கீதை **15 : 11** ஆத்ம உணர்வில் நிலைபெற்று ; மேலும் யோகத்தில் முயற்சி செய்வோர் மட்டுமே இதை உணரமுடியும் ஆத்ம உணர்வு பெறாதவர்களும் ; மன முதிர்ச்சி இல்லாதவர்களும் இதை உணர்வதில்லை .

கீதை **15 : 12** உலகம் முழுவதிலும் இருளை விளக்குகிற சூரியனின் பிரகாசமும் ; சந்திரனின் பிரகாசமும் ; நெருப்பின் பிரகாசமும் என்னிடமிருந்தே வருகின்றன என்பதை புரிந்து கொள்வாயாக .

உலகம் முழுவதிலும் ; அனைத்து இனமும் இறைவனாலேயே தோற்றுவிக்கப்பட்டன . அனைவருமே இறைவனின் பிள்ளைகளே . அந்த அன்புத்தகப்பனே அனைவரும் உய்யும்படியாக அவர்களுக்கு அவ்வப்போது வழிகாட்டுதலும் வேதமும் அருளுகிறான் .

வேதம் என்பதே நாராயணனிடமிருந்து வருவது மட்டுமே . அப்படியானால் அனைத்து மதமும் அவரிடமிருந்தே அந்தந்த இனத்திற்கு வந்தது . அதை அவரவர்கள் கடைபிடிப்பதை விட்டுவிட்டு அடுத்த இனத்தின் வேதத்தை காரித்துப்புவதும் அழிக்க முயற்சிப்பதும் அறிவீனம் . அதை விட அறிவீனம் இறைவனுக்கு தொண்டு செய்வதாக நினைத்துக்கொண்டு அடுத்த இனத்தின் வேதத்தை அழிக்க முயற்சிப்பதுவே .

பல மார்க்கங்களை இறைவன் ஆங்காங்கே கொடுத்தார் என்றால் அதை பின்பற்றுகிற மனிதர்கள் மார்க்கபேதங்களை உண்டாக்குவது இயல்புதானே . அப்படியானால் அதை சீர்படுத்துவதும் இறைவனிடமிருந்து வந்துதானே ஆகவேண்டும் .

ஆம் . அதுதான் சமரச வேதம் .

இறைவன் புறத்திலிருந்து மார்க்கபேதங்களை சமரசப்படுத்த சமரச வேதம் வந்துதான் ஆகவேண்டும் .

பல தீர்க்கதரிசனங்கள் அதை முன்னறிவித்துள்ளன

நாராயணன் பூமியில் அவதரித்த போதெல்லாம் அவரோடு பூமியிலிருந்த மனித ஆத்மாக்களில் ; அவரின் அன்புக்கும் பிரியத்துக்கும் ஆளான ஆத்மாக்கள் மூலமும் வேதம் வந்திருக்கிறது

ராமாவதாரத்தில் குகனாக - ஏன் சகோதரன் என கட்டியணைக்கப்பட்டவரே கிரிஷ்ணாவாதரத்தில் குசேலனாக இருந்தார் . அவரே இயேசு அவதாரத்தில் அவரின் பிரியமான சீடன் ஜானாகவும் இருந்தார் . அவரே காந்தியாகவும் வந்து இயேசுவின் சமாதான உபதேசத்தை அஹிம்சையாக வளர்த்தெடுத்தார் .

அவரே வரப்போகிற சமரச வேதத்தின் இறைதூதராக வெளிப்படவும் உள்ளார் . அதுவும் ஆதி பாஷையான தமிழராகவே அவர் பிறந்து உலகம் முழுதும் சமரசத்தை - சமாதானத்தை உண்டாக்குவார்

பரத்திற்கு வாக்களிக்கப்பட்டோர் யார் ?

கீதை **15 : 13** எனது சக்தியால் பூமியையும் அதில் உயிர் வாழ்பவைகளையும் நானே தாங்கிக்கொண்டுள்ளேன் . மேலும் சந்திரனின் ஒளியால் பூமியில் மன நலம் தரும் மருந்தாகிய ரசத்தை வழங்குகிறேன் . மேலும் ஆத்மாக்களின் மனதினுள் நுழைந்து நானே செம்மையும் படுத்துகிறேன் .

கீதை **15 : 14** பூமியில் வாழ்கிறவைகளின் உடலுக்குள் ஜீரணிக்கும் நெருப்பாக நானே நிலைபெற்று உட்சுவாசம் மற்றும் வெளிசுவாச காற்றை சமப்படுத்தி நான்கு விதமான உணவுகளையும் செரிக்கச்செய்கிறேன் .

கீதை **15 : 15** எல்லோருடைய இதயத்திலும் மனமாக நானே வீற்றுள்ளேன் . அவர்களுக்கு வாழ்வு நெறிகளும் ; ஞானமும் ; கேடுகளும் என்னாலேயே அருளப்படுகின்றன . ஒருவனை வேதத்தை அறியச்செய்து அவற்றை தொகுத்துணர வைக்கிறவனும் நானே என்பதை தெளிந்து கொள்க .

ஒரு பிரகாசம் உலகம் முழுவதையும் பிரகாசிக்கசெய்யும் ; கொஞ்சம் சுட்டெரிக்கவும் செய்யும் ; கண்டித்து உணர்த்தும் — தகப்பனைப்போல — அதுவும் வேதமே .

இன்னொரு பிரகாசம் குளிர்ச்சியானது . நொந்து போன மனதை ஆற்றித்தேற்றி தாலாட்டு பாடி புத்துணர்ச்சி அளிக்கும் — தாயைப்போல — அதுவும் வேதமே .

இன்னொரு பிரகாசமா தற்காலிகமானது — அந்த இடத்திற்கு மட்டுமே ஒளி தரக்கூடிய நெருப்பு — அல்லது கதகதப்பை தருவது — அல்லது சமைக்க உதவும் — அது நம்மால் செயற்கையாக உண்டாக்கபடவேண்டும் — பூமிக்குரிய வாழ்வை நிர்வகிக்க தேவையான அறிவு — சமுதாய சட்டங்கள் - அதுவும் வேதமே .

இந்த மூன்று வேதங்களாகவும் நாராயணனே உள்ளார் . அதுமட்டுமல்ல பூமிக்குரிய வாழ்வில் எழும் முரண்பாடுகள் ; கவலைகள் ; தேவைகள் ; ஏக்கங்கள் ; தோல்விகள் ; சோகங்கள் இவற்றில் மன நலத்தை தரும் ரசம் சந்திரனின் இயக்கத்தாலேயே மனிதர்களுக்கு கிடைக்கிறது . மனதை ஆற்றித்தேற்றி அதற்கு கொஞ்சம் கொஞ்சமாக பரிபக்குவம் கொடுப்பதும் பரமாத்மாவே .

உடலுக்கு தேவையான ஜீரண சக்தியை மட்டுமல்ல மனமாக - ஜீவாத்மாவாக செயல்படுவதும் ; வாழ்வை ஊக்கப்படுத்துவதோ ; கேடுகளை தருவதோ ; அதிலிருந்து பட்டறிவின் மூலமாக ஞானத்தை விளையவைப்பதும் பரமாத்மாவே .

கீதை **15 : 16** உலகில் வாழும் ஆத்மாக்களில் பரத்திற்கு வாக்களிக்கப்பட்டவர்கள் (நல்வழிப்பட்டோர் - நன்மைகளின் பக்கம் உள்ளோர்) ; பரத்திற்கு வாக்களிக்கப்படாதவர்கள் (நல்வழிப்படாதவர்கள் - தீமைகளின் பக்கம் உள்ளோர்) என்ற இரண்டு பிரிவினர் உள்ளனர் . ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் இந்த இரண்டு அம்சங்களும் கூடியும் குறைந்தும் உள்ளன .

நன்மைகள் தீமைகள் என்ற இரண்டு இயல்புகளும் கலந்தே எந்தவொரு மனிதனும் உள்ளான் . இதில் ஆத்மாவில் நன்மைகளின் இயல்பு பெருக்கியுள்ளோர் எவரோ அவரே நல்வழிப்பட்டோர் .பரத்திற்கான உறுதியை – அட்சாரத்தை பெற்றுக்கொண்டவர்கள் . அரபு பாஷையில் இசுலாத்தில் உள்ளோர் . ஆதி மனிதர்கள் தூய இசுலாத்தில் நடந்தார்கள் என்றொரு வசனம் குர்ஆனில் உள்ளது . அந்த ஆதி மனிதர்கள் சிவன் (ஆதாம்) உள்ளிட்ட கிருத யுகத்து மாந்தர்களான லெமூரியா கண்டத்து தமிழர்களே .

ஆதி தமிழர்களின் சனாதன தர்மமே ஆதி இசுலாம் என குரான் சுட்டுகிறது . தாடியும் மீசையும் வைத்துக்கொண்டு அரபியனைப்போல ஆகி ஐந்து முறை குனிந்து வளைந்து உடற்பயிற்சி செய்து கொண்டே ஓதி விட்டால் மட்டுமே அது இசுலாம் அல்ல . இறைவனுக்கு உகந்து வாழும் நெறியை – தன்னை உணர்ந்து தனது குறைகளை களைந்து மனதிலே

மாசற்றவனாக நன்மைகளின் பக்கம் வாழ கற்றுக்கொண்டவனே பரத்திற்கு வாக்களிக்கப்பட்டவன் . தான் சரீரமல்ல ; ஆத்மா என்ற தெளிவிலே பூமியில் தண்ணீரில் தாமரை இலைபோல வாழ கற்றுக்கொள்பவனே இசுலாத்தில் உள்ளவன் .

கீதை 15 : 17 இந்த இரண்டு வகையினருக்கும் உள்ளும் புறம்பும் அப்பாற்பட்டும் பரமாத்மா எங்கும் நிறைந்துள்ளார் . இம்மூவருக்குள்ளும் அழிவற்ற உயிராக இறைவன் இருந்து லோகத்தை காக்கின்றார் .

கடவுள் சகலருக்குள்ளும் உயிராக இருப்பவர் . அரூபமானவர் . அவரின் வெளிப்பாடு பரமாத்மா – நாராயணன் – ஆப்ராகமிய வேதங்களில் காப்ரியேல் – ஜிப்ரீல் . இவர் அருப உரூபி . இவரே ராமராகவும் கிரிஷ்ணராகவும் இயேசுவாகவும் பூமியில் வந்து வேதங்களை வழங்கியவர் . முஹமதுவுக்கு ஆவி ரூபமாக தரிசனமாகி முகமது மூலமாக குரானையும் ஓதியவர் . ஆத்மாவுக்கும் வேதங்களுக்கும் சற்குரு இவரே . பரமாத்மாவுக்குள்ளும் அவரால் பூமியில் உண்டான நல்லோர் மற்றும் தீயோர் என்ற ஜீவாத்மாக்களுக்குள்ளும் உயிராக இருப்பவர் அருபமான கடவுள் .

இயேசு கடவுளைப்பற்றி சொன்னார் :

மத்தேயு 5:45 உங்கள் பரம பிதா தீயோர் மேலும் நல்லோர் மேலும் தமது சூரியனை உதிக்கப்பண்ணி, நீதியுள்ளவர்கள் மேலும் அநீதியுள்ளவர்கள் மேலும் மழையைப் பெய்யப்பண்ணுகிறார். உங்கள் பிதா பூரண சற்குணராயிருக்கிறதுபோல, நீங்களும் பூரண சற்குணராயிருக்கக்கடவீர்கள்.

கடவுள் எப்படி சற்குணரோ அப்படியே அவரின் வெளிப்பாடாகிய பரமாத்மாவும் சற்குணரரே . ஆனால் இந்த பரமாத்மாவே ஜீவாத்மாக்களாக பின்னப்பட்டு நல்லவர்களாகவும் தீயவர்களாகவும் இருக்கிறது . ஆனாலும் அவைகளால் களங்கப்படாமல் திவ்யமாகவும் இருக்கிறது . இவரே உத்தம புருஷன் . அதாவது புருஷோத்தமன் . கடவுள் உத்தமர் என்றால் பரமாத்மா உத்தம புருஷன் .

**கீதை 15 : 18** நல்வழிப்பட்டோர் ; நல்வழிப்படாதோர் ஆகிய இருவருக்கும் அப்பாற்பட்டு நானே உத்தமமானவனாகவும் — எதனாலும் களங்கப்படாதவனாகவும் ; திவ்யமானவனாகவும் இருப்பதால் உலகில் வந்துள்ள வேதங்கள் அனைத்திலும் புருஷோத்தமனாக கொண்டாடப்படுகிறேன் ..

**கீதை 15 : 19** எவனொருவன் என்னை சற்குருவாகிய பரமபுருஷன் என்பதை உணர்ந்து எனது குருகுலத்தில் பக்தி தொண்டாற்றுகிறானோ அவனே எல்லாவற்றையும் உணர்ந்தவனாவான் — நிறை ஞானம் பெறுவான் .

**ராமர் என்ற கிரிஷ்ணர் என்ற இயேசு சொன்னார் ;**

**யோவான் 10:7** இயேசு அவர்களை நோக்கி: நானே ஆடுகளுக்கு வாசல் என்று மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

**யோவான் 10:9** நானே வாசல், என் வழியாய் ஒருவன் உட்பிரவேசித்தால், அவன் இரட்சிக்கப்படுவான், அவன் உள்ளும் புறம்பும்சென்று, மேய்ச்சலைக் கண்டடைவான்.

**யோவான் 10:11** நானே நல்ல மேய்ப்பன்: நல்லமேய்ப்பன் ஆடுகளுக்குக்காகத் தன் ஜீவனைக் கொடுக்கிறான்.

**யோவான் 10:14** நானே நல்ல மேய்ப்பன்; பிதா (கடவுள்) என்னை அறிந்திருக்கிறதுபோலவும், நான் பிதாவை அறிந்திருக்கிறதுபோலவும்,

**யோவான் 7:29** நான் அவரால் வந்திருக்கிறபடியினாலும், அவர் என்னை அனுப்பியிருக்கிறபடியினாலும், நானே அவரை அறிந்திருக்கிறேன் என்றார்.

யோவான் 14:6 நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன்; என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்தில் வரான்.

கீதை 15 : 20 இவ்வாறு மிகமிக ரகசியமான சத்தியம் என்னால் உனக்கு வெளிப்படுத்தப்பட்டுள்ளது . இதனை புரிந்துகொள்பவன் மட்டுமே ஞானவான் ஆவான் . அவன் சகலத்தையும் உணர்ந்து பாவங்களை களைந்து பரிபக்குவத்தை அடைவான் .

**ஓரிறைவனையே துதிக்கிறோம்**
**நாராயணன் நாமத்தினாலே**
**ஓம் நமோ நாராயணா !!**
**அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி**
**தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி**

**ஓரிறைவனையே துதிக்கிறோம்**
**சிவனின் நாமத்தினாலே**
**ஓம் நமோ சிவாய !!**
**அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி**
**தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி**

**நாராயணனாய் வெளிப்பட்ட அந்த**
**ஓரிறைவனையே துதிக்கிறோம்**
**ஓம் நமோ நாராயணாய !**
**அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி**
**தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி**

**கீதை 16 : தெய்வீக மற்றும் அசுர இயல்புகளின் மீதான சமநிலை யோகம்**



கீதை 16 :1 யுகபுருஷன் கிரிஷ்ணர் கூறினார் : பரதனின் மைந்தனே , அச்சமின்மை ; சத்வத்தில் நிலைத்து ஞானத்தை விருத்தியாக்க மென்மேலும் தன்னை தூய்மை செய்தல் ; மனக்கட்டுப்பாட்டோடு தாமச குணங்களை(இச்சைகளை)துறந்து எதையும் இறைவனுக்கு அர்ப்பணித்தல் ; தன்னை உணர்வதால் வேத இரகசியங்களை தெளிந்து எளிமையடைதல்;

கீதை 16 :2 சகல உயிர்களிடத்தும் (ஒருமைப்பாடு) தயவு

ஊற்றெடுப்பதால்எவருடத்திலும் எதிலும் குற்றம் உள்ளதை சகிப்பவனாகவும்; அமைதியும் அஹிம்சையும் , வாய்மையும் ,ததும்பி கோபத்தை வென்ற தவவாழ்வும் ; பேராசையிலிருந்து விடுப்பட்ட நிறைவும் ;வேட்கேடான செயல்களை தவிர்க்க மனஉறுதியும் ;

கீதை 16 :3 விட்டுகொடுக்கும் மனோபலமும் ; பொறாமையை கடந்த தூய்மையும்; சுயமதிப்பை தேடாத சாந்தம் வழியும் தேஜஸூம்– இவையே தெய்வீக இயல்பில் நிலைக்கிறவனின் குணாதீசயங்களாகும்

ஸத்வ ஸம்ஸூத்திர் - சத்வ குணத்தையும் சுத்தம் செய்து நிர்க்குணமாகுதல் பூர்த்தியடைந்தாலே முழுமை கிடைக்கும் என்கிறார் ஶ்ரீகிரிஷ்ணர் . ஒளிதேகம் உண்டாக்குதல் – மரணமில்லா பெருவாழ்வு பெறுதல் என்பது வள்ளலாரால் சகலருக்கும் பிரபலப்படுத்தப்பட்டுவிட்டது . இதுவே சன்மார்க்க காலம் என்று இந்த பிரபலத்தை

பற்றியே வள்ளல் பெருமானும் சொல்லியிருக்கவேண்டும் .ஏனென்றால் இதற்கு முன்பே பலர் ஒளி சரீரம் அடைந்தார்கள் என்றாலும் அது சாமானிய மனிதனுக்கு அறிய கிடைக்கவில்லை . ஆனால் இன்றோ பலருக்கும் தெரிந்திருக்கிறது
தெய்வீக இயல்புகள் எவை எவை என்று யுகபுருஷன் இந்த மூன்று சுலோகங்களில் சொன்னாலும் கடைசியாக இவை அனைத்தாலும் சரீரத்தில் தேஜஸ் உண்டாகும் என்றே குறிப்பிட்டுள்ளார்

சுய மதிப்பை தேடாத சாந்தம் வழியும் சுபாவத்தால் அந்த சாதகனுக்கு ஒரு தெய்வீகக்கலை ஜொலிக்குமாம் . ஞானிகளிடத்து ஒரு தேஜஸ் ஜொலிக்கிறது என்று பேசிக்கொள்கிறார்களே அது உள்ளே ஆத்மா ஒளியாக விளைந்து கொண்டுள்ளது என்பதற்கு ஒரு அடையாளம்

அந்த ஒளி சரீரத்தை அடைய சில யோக அப்பியாசங்களை – வாசி யோகம் சித்த யோகம் குண்டலினி யோகம் போன்ற அப்பியாசங்களை ஒரு குருவிடம் பெற்று நன்கு பயிற்சித்து விட்டால்போதும் ; அல்லது ஒரு மாகாமந்திரத்தை நாமசங்கீர்த்தனம் செய்துவிட்டால் போதும் ; அல்லது பாராயணம் செய்து ஜீவகாருண்யத்தை கடைபிடித்தால் போதும் அல்லது ஒரு மார்க்கத்தை கடைப்பிடித்து பேரை மாற்றிக்கொண்டால் போதும் என்பதுபோல ஒரு அப்பிராயம் உள்ளது . இந்த பயிற்சிகள் அனைத்தும் ஒரு உளவு – கருவி – சாதனம் மட்டுமே . இவைகளை ரெம்ப தீவிரமாக பல மணி நேரம் பல வருடங்கள் அப்பியாசித்து விடுவது அவசியம்தான் ; ஆனால் அதனால் மட்டுமே நிச்சயமாக ஒளி சரீரம் பெற்று விடமுடியாது

எந்த ஞானிகளும் ; மகான்களும் ; குருமார்களும் ஒரு வழிமுறையை உளவாக சொல்லியிருக்கிறார்களே தவிர – அது

பரிபாக்குவத்திற்கு பாதை அமைத்து கொடுக்குமே தவிர அதுவே முழுமையை கொடுக்காது

அந்த முழுமை உள்விளைகிற தெய்வீக இயல்புகளால் உண்டாகும் . தெய்வீக இயல்புகளை உண்டாக்க ஒவ்வொரு பாதையும் பயன்படுமே தவிர பாதையே தெய்வீக இயல்பு அல்ல .

பாதைகள் ஒரு இடத்திற்கு நாம் செல்ல பயன்படுமே ஒழிய பாதையே நாம் சென்று சேர்கிற இடம் அல்ல . ஏனென்றால் இன்றைக்கு ஆன்மீக வட்டாரத்தில் இந்த மாயை ; பாதைகளையே சென்று சேர்கிற இடமாக கருதிக்கொண்டு ஆகா ஓகோ இதுதான் உயர்ந்த பாதை என கூத்தாடிக்கொண்டு அந்த இடத்திலேயே நின்றுகொண்டு இருக்கும் போக்கு பலரிடம் காணப்படுகிறது

நல்ல ஒலிபெருக்கிகளாகவும் ; சொம்புகலாவும் பாதை துவங்கும் இடத்தில்

நுழைந்து விட்டதற்கே பெருமை பாராட்டிக்கொண்டு அங்கேயே நின்றுகொண்டு இருக்கிறார்கள் . அதை விட்டு ஒரு தம்பிடி கூட நகர்வதில்லை

அதனால்தான் கடவுளின் நாலாவது அதிதூதரும் ; சற்குருவுமான நாராயணி – மகிசாசுரனை அழிக்க அவதரிக்க வேண்டி வந்தது . சுய மகிமையால் உண்டாகும் பெருமை என்ற அசுரன் பல சாதகர்களை – ஆன்மீக பயணத்தில் எவ்வளவோ கரை கடந்து வந்தாலும் அப்படியே மயக்கி அமுக்கி விடுகிறான் . இவனை யாராலும் அழிக்க முடியவில்லை . முந்தய மூன்று அதிதூதர்களாலும்; நாராயணனாலும் சிவனாலும் ஷேசனாலும்வெல்லமுடியவில்லை . என் மார்க்கம்தான் பெருமை உசத்தி என்ற மகிசாசுரனை யாராலும் வெல்ல முடியவில்லை . சீடர்களின் சொம்புகளை யாராலும் மட்டுப்படுத்த முடியவில்லை .

ஆகவேதான் வேள்வித்தீயிலிருந்து சமரசவேதத்தை உடையவளாக நாராயணி வெளிப்பட்டாள் . அவள் ஏற்கனவே பரத்தில் இருந்தவள்தான் . ஆனாலும் பூமியில் அவள் செயல்பாடு இவ்வெளிபாட்டால் வந்தது . இதுவே சமரச சன்மார்க்க காலம் . அது எல்லாவற்றிலும் உண்மைகள் இருப்பதையும் ஏற்றுக்கொள்ளும் ; எல்லாவற்றிலும் கலப்படங்கள் கலந்து விட்டதையும் அங்கீகரிக்கும் . எதையும் தலையில் தூக்கி வைத்தும் ஆடாது எதையும் காரிகாரி துப்பவும் செய்யாது

எது நல்ல குணம் . சத்வ குணம் மட்டுமே . கீழானவைகள் தமஸ் மற்றும் ரஜோகுணம் . சத்வ குணத்தை வளர்ப்பதால் மட்டுமே முந்தய கீழான குணங்களை அழிக்க முடியும் . அவ்வாறு சத்வ குணத்தை அடையவேண்டும் அடைந்த பிறகோ அந்த குணத்தையும் களைந்து நிர்க்குணமாகவேண்டும் . அப்போது என்னென்ன சுபாவங்கள் நம்முள் விளையும்

என்பதே மேலே உள்ள பட்டியல் . அந்த தெய்வீக சுபாவங்கள் நம்முள் பெருகி பெருகி முத்தாய்ப்பாக சுயம் – நான் என்பதையே கடந்து கடவுளிடம் ஒரு கருவியாக ஆகி விடுவதால் – அந்த ஆறாம் அறிவு முற்றிய ஞானத்தோடு இருந்தாலும் அதையும் கடந்து ஒரு கருவியாக மட்டுமே உள்ள பூஜ்ய நிலை அடையமுடியும் அப்போது ஸ்தூல சரீரம் அவசியம் இல்லாத – ஒளிசரீரம் விளைந்து விட்ட ஒரு நிலையில் ஆத்மா – தேவராக மாறி பரலோகத்தில் நுழையும் .

தேவர்கள் எவ்வளவு ஆற்றல் இருந்தாலும் சுயமாக எதையும் சிந்திக்கவும் மாட்டார்கள் ; செயல்படவும் மாட்டார்கள் . இறைவன் ஏவாத எதையும் செய்யமாட்டார்கள் . கருவியாக மட்டுமே இருப்பார்கள் .

மனிதனுக்கும் தேவருக்கும் உள்ள வித்தியாசம் இதுதான் . மனிதன் சுயத்தை சார்ந்து அந்த ஆறாம் அறிவை கொண்டு நல்லதையும் கெட்டதையும் செய்துகொண்டே

இருக்கிறான் . பூமியிலேயே பல பிறவிகள் பல நாடுகளில் பல மதங்களில் பிறந்து சுற்றித்திரிகிறான் . அதில் யார் கடவுளை சரணடைந்து ஆறாம் அறிவை கடந்து கருவியாக மட்டும் மாறுகிறானோ அவன் தேவராக பூமியை கடக்கிறான்

அது எந்த யோக அப்பியாசத்தாலும் வராது ; எந்த மார்க்கத்தாலும் வராது ; தன்னை உணர்ந்து தெய்வீக இயல்புகளை பெருக்கி ; அப்புறம் அதையும் விட்டுவிடுவதால் ; சகலவற்றையும் விட்டு விடுவதால் வரக்கூடியது.

இருக்கிறேன் என்ற இருப்பைத்தவிர ஏதும் இல்லாது இருக்க முயலுங்கள் .சகலத்தையும் இறைவனுக்கே அர்ப்பணியுங்கள் . முழு சரணாகதி என்றால் என்னவென்று கற்றுக்கொள்ள முயலுங்கள் .

கீதை 16 :4 பாண்டுவின் மகனே :தெய்வீக இயல்புகள் பரிபக்குவத்தையும் ; அசுர இயல்புகள் தேக்கத்தையும் அளிக்கின்றன .

ஆனாலும் கவலைப்பட ஒன்றுமில்லை ; ஏனென்றால் தெய்வீக இயல்புகளுடனும் படைக்கப்பட்டுள்ளாய்

கீதை 16 :5 இவ்வுலகில் உள்ளோர்களில் தெய்வீக மற்றும் அசுர இயல்புகள் இரண்டும் கலந்தே உள்ளன .தெய்வீக குணங்களைப்பற்றி விபரமாக கூறினேன் ; இனி அசுர குணங்களைப்பற்றி கேட்பாயாக :

கீதை 16 : 6 தன்முனைப்பு , ஆணவம் , கடும் பற்று , கோபம் ,கொடூரம் ,அறியாமை ஆகியவைகள் அசுர இயல்புகளாகும்

கீதை 16 : 7 அசுர இயல்பு மேலோங்கியோரிடம் வளர்ச்சிக்கு ஏதுவான செயல் எது ; வளர்ச்சிக்கு தடையான செயல் எது என்ற பிரித்தறிதல் இருப்பதில்லை. தூய்மையும் , வாய்மையும் , இணக்கமான நடத்தையும் அவர்களிடம் இருப்பதில்லை

அசுர இயல்புகள் மற்றும் அதன் ஆதிக்கத்தில் உள்ளோர் பற்றி யுகபுருஷன் கிரிஷ்ணர் விளக்கத்தொடங்கும் போதே

அனைவருக்கும் ஒரு நற்செய்தியையும் ; நம்பிக்கையையும் தருகிறார் ; அது மனிதர்களாக உள்ள சகலரும் தெய்வீக இயல்புகளுடனேயே படைக்கப்பட்டுளோம் என்பதே . அசுர இயல்புகளும் ஒவ்வொருவரிடத்திலும் இருந்தாலும் அவைகளைப்பற்றி அச்சப்படத்தேவையுமில்லை என்ற வாக்குறுதி இங்குள்ளது . உலகின் எந்த வேதங்களும் ; மதங்களும் இந்த வாக்குறுதியை கொடுக்காமல் இருப்பதில்லை

அது ஏதென்றால் மனிதன் இறைவனின் சாயலில் படைக்கப்பட்டுள்ளான் என்பதே . நான் மட்டுமல்ல எனக்கு வெளியே உள்ள ஒவ்வொரு மனிதரும் இறைவனின் சொருபங்களே . மனிதனை அவமானப்படுத்துவது என்பது இறைவனை அவமானப்படுத்துவதற்கு சமம் . ஒவ்வொரு மனிதனுக்கும் உள்ள மரியாதை – சுய மரியாதை என்பது இறைவனே அவருக்கு

கொடுத்துக்கொள்ளும் மரியாதை .

பிற மனிதர்களுக்கு முடிந்தளவு இடரல் (தொந்திரவு) இல்லாமல் வாழ முயற்சிப்பதே அஹிம்சை . மனிதர்களுக்கு நம்மால் உண்டாகும் நோவுகளுக்காக நாம் பயந்து நடக்கவேண்டும் . அதுவே இறைஅச்சம் . மனித நேயம் கடவுளின் மீது நமக்கு இருக்கும் பக்தியின் அளவுகோல் .

யுகபுருஷன் இயேசுவும் கூட யுகமுடிவில் நியாயத்தீர்ப்பு நடக்கும் போது அதில் தேரும் ஆத்மாக்களிடம் இறைவன் சொல்லும் வார்த்தை இதுவே என்றார்

மத்தேயு 25
35. பசியாயிருந்தேன், எனக்குப்
போஜனங்கொடுத்தீர்கள்; தாகமாயிருந்தேன்
என் தாகத்தைத்
தீர்த்தீர்கள்; அந்நியனாயிருந்தேன்
என்னைச் சேர்த்துக்கொண்டீர்கள்;

36. வஸ்திரமில்லாதிருந்தேன், எனக்கு

வஸ்திரங்கொடுத்தீர்கள்; வியாதியாயிருந்தேன், என்னை விசாரிக்க
வந்தீர்கள்; காவலிலிருந்தேன், என்னைப் பார்க்கவந்தீர்கள் என்பார்.

37. அப்பொழுது, நீதிமான்கள் அவருக்குப் பிரதியுத்தரமாக :ஆண்டவரே, நாங்கள் எப்பொழுது உம்மைப் பசியுள்ளவர்களாகக் கண்டு உமக்குப்
போஜனங்கொடுத்தோம்? எப்பொழுது உம்மைத் தாகமுள்ளவர்களாகக் கண்டு உம்முடைய தாகத்தைத் தீர்த்தோம்?

38. எப்பொழுது உம்மை அந்நியராகக்கண்டு உம்மைச் சேர்த்துக்கொண்டோம்? எப்பொழுது உம்மை வஸ்திரமில்லாதவராகக்கண்டு உமக்கு வஸ்திரங்கொடுத்தோம்?

39. எப்பொழுது உம்மை
வியாதியுள்ளவராகவும், காவலிலிருக்கிறவராகவும் கண்டு, உம்மிடத்தில் வந்தோம் என்பார்கள்.

40. அதற்கு ராஜா பிரதியுத்தரமாக :மிகவும் சிறியவராகிய மனிதர்களில் ஒருவனுக்கு நீங்கள் எதைச் செய்தீர்களோ, அதை எனக்கே செய்தீர்கள் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்பார்.

ஒரு மனிதன் மதிக்கப்பட்டால் இறைவன் அங்கு மதிக்கப்படுகிறார் . ஒரு மனிதன் அவமதிக்கப்பட்டால் இறைவனும் அங்கு அவமதிக்கப்படுகிறார் .

ஒரு மனிதன் முழுமையடைந்து பரலோக பாக்கியம் – மரணமில்லா பெரு வாழ்வு பெற்றால் அது இறைவனுக்கும் ஒரு வெற்றி . பரமாத்மாவின் ஒரு பின்னமான ஜீவாத்மா ஒன்று மாபெரும் மாயையிலிருந்து தேரியதால் – பல்லாயிரம் பிறவியெடுத்து உழன்று கொண்டிருப்பதிலிருந்து தேரியதால் அதுதான் இறைவனுக்கும் ஒரு சாதனை .

வளர்ச்சிக்கு ஏதுவான செயல் – பரிபக்குவம் ; வளர்சிக்கு ஏதுவற்ற செயல் தேக்கம் –

இவைகள் தான் ஒவ்வொரு பிறவியிலும் ஆத்மாவில் விளைபவை . உலக காரியங்களை உண்ணவும் உடுக்கவும் பிள்ளைகளை வளர்க்கவும் எல்லோருமே செய்துகொண்டே தான் இருப்பார்கள் . ஆனால் அவையெல்லாம் ஆத்மாவிற்கு எதையும் கொடுப்பதில்லை . உலக வாழ்வின் ஊடாக ஆத்மா வளர்ச்சியுற்று பரிபக்குவம் அடைந்ததா அல்லது தேங்கிப்போனதா என்பதே ஒவ்வொரு பிறவி முடியும்போதும் மிஞ்சுவது .

ஆத்மாவில் தெய்வீக இயல்புகள் வளர்ந்துள்ளதா அல்லது அசுர இயல்புகள் வளர்ந்துள்ளதா என்பதே அடுத்து எங்கு எந்த குடும்பத்தில் எந்த மதத்தில் எந்த நாட்டில் பிறப்போம் என்பதை தீர்மானிக்கிறது .

ஒவ்வொரு பிறவியிலும் ஒரு ஆத்மா வளர்சியை நோக்கி ஒவ்வொரு அடி எடுத்து வைக்கும்போதும் பரலோகத்தில் மிகுந்த சந்தோசம் உண்டாகுமாம்

**லூக்கா 15**
**7. மனந்திரும்ப அவசியமில்லாத தொண்ணூற்றொன்பது நீதிமான்களைக்குறித்துச் சந்தோஷம் உண்டாகிறதைப் பார்க்கிலும் மனந்திரும்புகிற ஒரே பாவியினிமித்தம் பரலோகத்தில் மிகுந்த சந்தோஷம் உண்டாயிருக்கும் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.**

இயேசு உச்சரித்துள்ள நீதிமான்கள் பாவிகள் என்ற வார்த்தைகளை தெய்வீக இயல்புகள் அசுர இயல்புகள் என்று புரிந்துகொள்ளவேண்டும் . நம்மிடம் உள்ள பல தெய்வீக இயல்புகளுக்காக இறைவன் பாராட்டுகிற வேலையை செய்வதில்லை . ஆனால் நம்மிடம் உள்ள ஒரு அசுர இயல்பை நாம் உணர்ந்து அதை விடுவதற்கான முயற்சியில் அதனுடன் போராடி விழுந்து விழுந்து சிராய்த்தாலும் கடவுளுக்கு அது மிகுந்த சந்தோசத்தை கொடுக்கும் .

நாம் வெற்றி பெற வேண்டும் என்ற அவசியமில்லை ; விடவேண்டும் என்று போராடினாலேபோதும் அதுதான் மனந்திருந்துகிற பாவி என்பது .

ஆனால் எதையும் சடங்காக மாற்றி அதன் ஜீவனை புதைக்கிற மனித இயல்பு ; மதவாதிகளான கிறிஸ்தவர்களை பிடித்துக்கொண்டு விட்டது . அவர்கள் இயேசுவை ஏற்றுக்கொள்வது ; தண்ணீரிலே முழுகி பெயரை வெள்ளைக்கார பெயராக மாற்றிவைத்துக்கொள்வதுவே மனந்திருந்துவது என்பதாக கொச்சைப்படுத்திக்கொண்டு இந்தியர்களை ஐரோப்பியர்களாக மாற்றி குழப்பத்தை உண்டுபண்ணுகிறார்கள் .

காணாததை கண்டு விட்டது போல மதம் மாறிவிட்டாலே பாவம் தீர்ந்துவிடும் என்பதான அஞ்ஞானத்தினால் அவர்கள் செக்கு மாடு போல மதம் என்ற  கடும் பற்று

அல்லது வீண் அபிமானம் என்ற அசுர குணத்திற்கு பலியாகிறார்கள் .

மரத்திற்கு மரம் தாவுவதால் எந்த வளர்ச்சியும் வருவதில்லை . ஆனால் நம்மை உணர்ந்து நமது அசுர இயல்புகளை கண்டறிந்து மனந்திரும்பினால் ; தெய்வீக இயல்பை வளர்த்துக்கொள முயற்சித்தால் அது வளர்ச்சி . அந்த வளர்ச்சியையும் – நாம் இருக்கும் சமுதாயத்தில் இணக்கமாக இருந்து வளர்த்துக்கொள்ளவேண்டும் . இணக்கமின்மை என்பதும் ஒரு அசுர இயல்பே .
ஏற்கனவே உள்ள எதையும் திடீரென தூக்கி எறிவது எப்போதும் சரியல்ல . அவற்றிலிருந்து ஒரு படி முன்னேறினாலே இந்த பிறவிக்கு போதுமானது

இறைவன் எப்போதும் புரட்சி செய்கிரவறல்ல ; வளர்சிதை மாற்றத்தை படிப்படியாக செய்கிறவர் . இறைவனது இயல்பை

புரிந்துகொள்வதே நாம் அவருக்கு பிரியமான காரியம் செய்ய வழிவகுக்கும் .

இன்றைய சுழலில் எல்லோரையும் ஒரு படி கைதூக்கி விட இணக்கமாக எதை செய்வதோ அதுதான் வளர்சிக்கு ஏதுவானது

கீதை 16 :8 இப்பிரபஞ்சம் மாயை என்றும் ; உண்டாக்கியவர் இல்லாமல் இயற்கையாக தோன்றியது என்றும் ; தன் எழுசசியாலும் காமத்தாலும் அன்றி வேறொன்றும் அடிப்படை இல்லை என்றும் அவர்கள் கூறுகிறார்கள் .

கீதை 16 :9 இத்தகைய நம்பிக்கையால் சிற்றறிவுடையோர் தமது ஆத்மாவை அழித்துக்கொள்ளும் பலனற்ற காரியங்களையும் ;கொடூரமான காரியங்களிலும் ஈடுபட்டு உலகை துன்பத்திற்குள்ளாக்குகின்றனர் .

கீதை 16 :10 திருப்தியடையாத இச்சைகளிடம் சிக்கிக்கொண்டு ; வீண் பெருமைக்கும் ;

உயர்வு தாழ்வு மனப்பாண்மைக்கும் பேதங்களுக்கும் அடிமையாகின்றனர் . நிரந்தரமற்றவைகளில் லயித்து வேண்டாத காரியங்களில் வளர்கின்றனர் .

கீதை 16 :11 உலகவாழ்வுக்கான கவலைகளும் ; பயங்களும் அளவற்றவை . அவைகளுக்கு இடம் கொடுத்து பிரளய காலம் வரையிலும் புலனின்பங்களை நிறைவு செய்வதே ஒரே ஒரு லட்சியமாக ஆகி விடுகிறது

கீதை 16 :12 இவ்வழியில் ஆசைகள் என்னும் கயிறுகளால் நூற்றுக்கணக்காககட்டப்பட்டு இச்சைகளிலும் வெறுப்புகளிலும் தவித்து புலனின்பங்களுக்காக எப்படியேனும் செல்வத்தை சேர்க்கவே முயற்சிக்கின்றனர் .

மனிதனுக்கு ஒரு பெரிய எதிரி மாயாவாதம் . இது மிக உயர்ந்த பாவணையில் ஆன்மீகவாதிகளிடமும் ; தாழ்ந்த பாவணையில் துன்மார்க்கர்களிடமும் காணப்படும் .

உயிரோடு இருக்கும் வரைதான் எல்லாம் ; அப்புறம் ஒன்றுமே கிடையாது ; இருக்கும் வரை அனுபவிப்போம் ; அதில் கொஞ்சம் மனிதாபிமானத்துடனும் அனுபவிப்போம் ; சமூக சீர்திருத்தம் ; சுயமரியாதை இப்படியே போய் கடைசியில் முழுக்க நனைந்த பிறகு முக்காடு எதுக்கு ; எப்படியும் திறமையாக கெட்ட பேர் வராமல் எதையும் செய்யலாம் என்றெல்லாம் போய் கடைசியில் பாவ சுரணை அற்றுப்போய் முழு அயோக்கியத்தனமாகவே சிலரின் வாழ்வு ஆகி விடுகிறது

ஆரம்பத்தில் எந்த மனிதனும் தைரியமாக பாவங்கள் செய்வதில்லை . எல்லோரும் நல்ல சிந்தனையோடும் ; மனிதாபிமானத்துடனும்தான் இருப்பார்கள் . ஆனால் வாழ்க்கையில் குற்ற உணர்வு கூடகூட பாவ சுரணை கொஞ்ச கொஞ்சமாக குறையும் ; அப்போதுதான் கொடூரங்கள் தைரியமாக திறமையாக அரங்கேற்றப்படும் . விளைவு நிச்சயமாக நமக்கு ஒருநாள்

திரும்ப வரும் ; கடவுள் ஒருவர் இருக்கிறார் ; சாட்சியாக பார்த்துக்கொண்டிருக்கிறார் என்பதான இறைஅச்சம் அடிப்படையில் ஒரு நல்ல காரணி . இறைஅச்சம் இல்லாத மனிதாபிமானங்கள் நீண்ட நாள் நீடிப்பதில்லை . தான் தாழ்ந்து இருக்கும்வரை புரட்சி பேசும் பலர் கொஞ்சம் உயர்ந்ததும் ரெம்ப மோசமாக வாழத்தொடங்கி விடுகிறார்கள் என்பதற்கு சாட்சிகள் பல உள்ளன .

ஆண்டியாய் இருக்கும் வரை அம்பலங்களை குறை பேசுவார்கள் ; ஆனால் அம்பலம் ஆகி விட்டாலோ பரம்பரை பணக்காரர்களை காட்டிலும் புதுப்பணக்காரர்களின் ஆட்டம் பலமானதாகவே இருக்கும் .கோவணத்தில் நாலு காசு இருந்தால் கோழி கூப்பிட பாட்டும் வரும் ; ஆட்டமும் வருவது மனித இயல்பு .

இறைஅச்சம் என்ற நல்ல அடிப்படையை யாரெல்லாம் எதன் காரணமாகவும் விட்டு

விடுகிறார்களோ அது தீமையில் தான் முடியும் பகுத்தறிவு என்ற பெயரால் உண்டான கடவுள் மறுப்போ அல்லது எல்லாம் இயற்கைதான் ; கடவுள் என்று ஒருவர் தனியாக இல்லை என்பதுபோன்ற யோகமார்க்கங்களாலும் ; எல்லாம் எனக்குள்ளாகத்தான் இருக்கிறது ; கடவுள் எனக்குள்ளாக இருக்கிறார் என்பதை தெரிந்துகொண்டதால் நீ ஞானமார்க்கியாக ஆகி விட்டாய் ; உயர்ந்த நிலைக்கு வந்துவிட்டாய் என கடபாடமாக சொல்லிக்கொடுக்கப்படுவதாலும் முடிவு என்னவோ தீமையில்தான் முடிகிறது

நிச்சயமாக துன்மார்க்கியும் ; நவீன நாத்திகவாதம் என்னும் மாயாவாதத்தில் நிலைத்துள்ள ஆன்மீகவாதியும் ஒருவரல்ல . ஆனால் முந்தியவரால் சமுதாயத்திற்கும் தனக்கும் ஒரு வகையில் தீமை என்றால் மாயாவாதியாலும் வேறு வகையில் சமுதாயத்திற்கும் தனக்கும் தீமை . வளர வேண்டிய ஒரு ஆத்மாவை எப்படியேனும்

கட்டிப்போட்டு தடுத்து வைக்க ஆவிமண்டல அசுரர்கள் ஆன்மீகவாதிகளுக்கு மாயாவாதத்தையும் உலக பற்றுள்ளவர்களுக்கு துன்மார்க்கத்தையும் தூண்டி விடுகிறார்கள்

இந்த இரண்டு பிரிவினருக்கும் ஒரே ஆவியே பின்னணியில் செயல்படுகிறது

எப்படி பூமியில் ஒவ்வொரு உணர்வுக்கும் குணத்திற்கும் தனித்தனியே மூலிகைகள் ; தனிமங்கள் இருக்கின்றனவோ அதுபோல பரலோகத்தில் ஒவ்வொரு குணத்திற்கும் ஆவிகள் இருக்கின்றன . தேவர்கள் என்று சொல்லப்படுவோர் இத்தகைய பணிவிடை ஆவிகளே . குறிப்பிட்ட குணத்துடன் குறிப்பிட்ட வேலையை மட்டும் செய்வதற்காக படைக்கப்பட்ட ஆவிகள் . இவர்கள் யாருமே மனிதனைப்போல – கடவுளின் சாயலில் முழுமையானவர்களாக படைக்கப்படவில்லை

இந்த தேவலோக ஆவிகளில் சில கடவுளை

பிரிந்து சுயேச்சையாக அசுரர்களாக ஆகி விட்டார்கள் .

இவர்களே மனிதன் யாரும் தேறி பரலோகம் வந்து விடக்கூடாது என்பதற்காக பலவகையான மாயைகளை – அசுர குணங்களை மனிதர்களுக்கு துண்டி விடுகிறவர்கள்

அண்டத்தில் உள்ளதெல்லாம் பினடத்திலும் உள்ளது என்ற ஒரு அடிப்படை சூத்திரத்தை நாம் மறந்து விடலாகாது

பிண்டத்தில் எந்த ஒரு பிரச்சினைக்கும் அண்டத்திலும் காரணம் இருக்கும்

கீதை 16 : 13 இன்று இவ்வளவு என்னால் அடையப்பட்டுள்ளது .இவ்வாறு இன்னும் பல பவிசுகளையும் பதவிகளையும் என் மனம் விரும்பியபடி அடைந்து விடுவேன் .இன்ன இன்ன ஆஸ்திகள் உள்ளன .அது இன்னும் பலமடங்கு அதிகரித்து விடும்

கீதை 16 : 14 எதிரிகளை நான் அடக்கி விட்டேன் . இன்னும் எவ்வளவு எதிர்ப்புகளையும் நான் அடக்கி விடுவேன் . நானே சர்வ வல்லமை உள்ளவன் . சகலவற்றையும் அனுபவிப்பவன் ; எதையும் சாதிக்கும் திறமையும் பலமும் உள்ளவன் .

கீதை 16 : 15 குற்றேவல் செய்யும் ஆள் பலமும் துதிபாடிக்கூட்டமும் என்னைப்போல வேறு யாருக்கு இருக்கின்றனர் ? அவர்களுக்கு வாரியும் வீசுகிறேன் ; கோவில் புண்ணிய காரியங்களும் செய்கிறேன் என்று அவர்கள் அறியாமையால் பிதற்றுகிறார்கள் .

சுயமதிப்பீடு ; தற்பொழிவு ; தற்பெருமை ; கர்வம் என்று சொல்லப்படும் அஹம்பாவம் என்னும் அசுர குணத்தை இங்கு ஸ்ரீகிரிஷ்ணர் விவரித்து காட்டுகிறார்

உலக மனிதர்கள் பலர் இப்படித்தான் பேரோடும் புகழோடும் இருந்தார்கள் . நிறைய சாதித்தார்கள் . கொஞ்ச நேரம் பிரகாசித்து விளக்கு அணைந்து

விடுவதைப்போல அவர்களை கொஞ்ச காலத்தில் உலகம் மறந்தும் விட்டது . நம் கண்ணெதிரே எத்தனை பேரை பார்த்துவிட்டோம் ? அவர்களின் சந்ததியாவது நிலைக்கிறதா ? அதுவும் தள்ளி முள்ளி கொஞ்ச காலம்தான் .

புதுசு புதுசாக யாரோ எப்படியோ மேலே வருகிறார்கள் . அப்புறம் காணாமலும் போய் விடுகிறார்கள்

எதுவும் நிலைப்பதில்லை .கொஞ்ச காலம்தான் .

ஏழு தலைமுறைக்கு மேல் எந்த சொத்தும் நிலைப்பது கடினம் என்றொரு உலக வார்த்தை இருக்கிறது . பல அரண்மனைகள் குப்பை மேடுகளாக கிடக்கின்றதை பார்க்கிறோம் .

ஆனாலும் அந்த கொஞ்ச காலத்தில் பலவான்கள் ஆடும் ஆட்டம்தான் என்ன ? முந்தய காலத்தையும் அவர்கள் நினைப்பதில்லை ; இனி வரும்காலத்தில்

என்ன நேருமோ என்பதைப்பற்றியும் கவலைப்படுவதில்லை . இன்று என்னவேண்டுமானாலும் கூசாமல் செய்து விடுகிறார்கள் .

அவர்கள் தங்களின் சாதனைகளை அதிகம் சுயமதிப்பீடு செய்து தங்களுக்கு தாங்களே பாராட்டிக்கொண்டு தடுக்கி விழுகிறார்கள்

சுயமதிப்பீடு செய்து கொள்ளாமல் இருக்க முடியுமா ?

அதுதான் ஞானம் பெறுவோர்கள் அடைய முயற்சிக்க வேண்டிய ஒன்று .

என்னால் எதுவுமேயில்லை . நான் திட்டமிட்டதால் மட்டுமே இவைகள் நடந்து விடவில்லை . என்னைக்காட்டிலும் எத்தனையோபேர் திறம்பட திட்டமிட்டு சிறப்பாகவும் முயற்சித்தார்கள் ; ஆனால் அனுகூலம் வரவில்லை எனக்கு சில வழி வாசல் திறந்தது . அதனால் நான் அவ்வழியில் முன்னேறினேன் என்று யார்

தாழ்மையோடு இருப்பார்களோ அது ஆன்ம உயர்வுக்காக குணம் .

ராஜரிஷி – ராஜயோகி என்று சிலரை புராணங்களில் சொல்கிறார்கள் . இவர்கள் ராஜ்யபரிபாலனத்தில் இருந்தபோதும் இப்படி சாட்சியாக மட்டுமே இருந்தார்கள்

கடவுள் தன்னைக்கொண்டு செய்விப்பதில் கருவியாக மட்டுமே இருக்கிறேன் என்ற ஒரு மனநிலை . தன்னை அந்நிய ஆள் போல பாவித்துக்கொள்ளும் மனநிலை . கர்ம யோகத்தின் சூட்சுமங்கள் புரியுமிடத்து மட்டுமே அதில் ராஜயோகம் முகிழ்த்து மலரும் .

ஆன்மீக வாழ்வுக்கு முயற்சிக்கும் சாதகர்களும் இப்படி பல தரத்தில் பல இடங்களில் சறுக்கி விழுந்து முன்னேறாமல் போய் விடுகிறோம்

எந்த ஒரு ஆன்மீகவாதிக்கும் ஒரு நாள் ஒரு பிறவியில் முழுமையை அடைவதுதான் லட்சியம் . நடக்கும் என கடவுளால்

வாக்களிக்கப்பட்டதும் ; கடவுளது சொந்த பராமரிப்பில் ஒவ்வொரு ஆத்மாக்களும் வளர்க்கப்படுவதும் மெய்யே .

அந்த முழுமையை நெருங்கும்போது கொஞ்சம் ராஜயோகமும் குருத்துவமும் சித்திக்கவும் செய்து ; உலக மனிதர்களைப்போலவே அஹம்பாவமும் வந்து கீழே விழுவதற்கும் ஏதுவாகிறது

யோகமார்க்கத்தின் உடன் பிறந்த கேடுகளில் இந்த அஹம்பாவமும் இருக்கிறது . இப்படி இப்படி யோகம் செய்து ; அந்த நிலை அடைந்து இந்த நிலை அடைந்து இப்படி ஆகி விடலாம் என்று சொல்லிக்கொடுக்கப்படுகிறதே அதில் மனித முயற்சி மட்டுமே இருக்கிறது . நோக்கம் உயர்வானதுதான் ஆனாலும் அதிலும் சுயம் இருக்கிறது .

குருமார்கள் பலர் இப்படி அடைந்த அனுபவத்தை பாடி வைத்திருக்கிறார்கள் .இதில் மறைபொருளாக

பல விசயங்கள் இருக்கிறது; அவர்கள் எதை சொல்ல எப்படி எழுதியிருக்கிறார்கள்; இதை புரிந்து கொள்வது ஒரு சாதனை போல தெரிவதால் அதை அடைந்து விட்டாலே போதும் என்றெல்லாம் சுய முயற்சியின் மீதே நம்பிக்கை இருக்கிறது; ஆனால் அதில் எவ்வளவு முயற்சித்தாலும் தெய்வ அனுக்கிரகம் இல்லையாயின் ஒன்றும் நடக்கவில்லை என்பதை அறிதலே ஞானத்தின் தொடக்கம்

கடவுளுக்கு கீழ்படுதலே ஞானத்தின் தொடக்கம்
கடவுளை சரணடைவதே ஞானத்தின் ஊற்றுக்கண்
கடவுளைத்தான் நம்பிக்கொண்டிருக்கிறேன் என அவ்வப்போவது வாயிலாவது சொல்லிக்கொண்டிருப்பதே உத்தமம்

அவ்வாறு சொல்லத்தொடங்கி வாயில்தான் சொல்லிக்கொண்டிருக்கிறேன் ; செயலில் அவ் வாறு இல்லையே என தன்னிலையை

உணரத்தொடங்கி மெய்யாகவே அவரை சார்ந்து கொண்டு வாழ்வது எப்படி என்று கற்றுக்கொள்ளத்தொடங்குவோமே அதுவே ஞானத்தின் வளர்ச்சி

கீதை 16 : 16அனேக சிந்தனைகளால் (சித்திகளால்) குழப்பமுற்று ; மோக மாயைகளால் சூழப்பட்டு ; இச்சைகளிலும் அனுபோகத்திலும் லயித்து தூய்மையற்ற நரக வாழ்வை நோக்கி இழிகின்றனர்

கீதை 16 : 17 செல்வம் அந்தஸ்து போன்றவைகளின் மயக்கத்தால் தன்னில்தானே திருப்தியும் அஹம்பாவமும் வளர்ந்து பிரபலமான வழிபாடுகளும் கூட செய்கின்றனர் .(திருவிழாக்கள்) வழிபாடுகளின் அடிப்படைகள் எவை என்பதின் புரிதலில்லாமலேயே தற்பொழிவோடு வழிபாடு செய்கிறார்கள் .

கீதை 16 : 18 அஹம்பாவம் ; அந்தஸ்து ; காமம் ; குரோதாதிகளால் தனது சரீரத்தில்தற்பொழிவு கொண்டு பிறரது

சரீரங்களில் துலங்குகின்ற பரமாத்மாவுடனும் உயிருடனும் முரண்பட்டு அதனால் என்னையும் கடவுளையும் நிந்திக்கின்றனர்

கீதை 16 : 19 சுயபொழிவால் பிறரிடம் முரண்பட்டும் கருனையற்றும் நடப்பவர்கள் இவ்வுலக வாழ்வில் படிப்படியே அசுர இயல்புள்ள கர்ப்பங்களில் பிறவியெடுத்து தாழ்ந்த நிலையை அடைகின்றனர்

கீதை 16 : 20 அசுர இயல்புள்ள கர்ப்பங்களில் மீண்டும் மீண்டும் பிறவி எடுப்போர்என்றுமே என்னையும் கடவுளையும் உணரமுடியாத அளவு இழிவான கதியை நோக்கி செல்கின்றனர் .

சுயம் ; தற்பொழிவு மிகமிக முக்கியமான எதிரி . மரணமில்லா பெரு வாழ்வு பெற கடரப்படவேண்டிய ஒன்று .

எப்படி உலகியல் மனிதர்கள் செல்வம் ; சுயஅந்தஸ்து ;காமகுரோதாதிகளால் தற்பொழிவடைந்து தன்னிலும் பிறரிலும்

துலங்குகின்ற பரமாத்மாவையும்
கடவுளையும் எதிரியாகவும் போட்டியாகவும்
கருதி முரண்பட்டு கருணையற்று
வாழத்தொடங்குகிரார்களோ
அதைப்போலவேதான் சித்திகள் ;
யோகங்களில் மட்டும் நம்பிக்கை கொண்டு
வளர்கிற சாதகனின் நிலையும்
ஆகிவிடுகிறது எனக்குள்ளேயே கடவுள்
இருக்கிறார் நான் தான் கடவுள் என்றே
சிந்தித்து அவர்களையறியாமலேயே
அடுத்தவருக்குள்ளும் கடவுள் இருக்கிறார்
என்ற சொரனையை மறந்து செயல்களை
செய்வதற்கு ஆளாகி விடுகிறார்கள்
அடுத்தவருக்குள்ளும் இருக்கும்
கடவுளோடும் பரமாத்மாவோடும்
போட்டிபொறாமை உண்டாகி விடுகிறது

பக்தி மார்க்கத்திலும் நாராயணா நாராயணா
அல்லது சிவசிவ என எங்கோ இருப்பவரை
அனுதினமும் அழைத்து அன்பு காட்டி விட்டு
தனக்கு அடுத்த மனிதனுக்குள்ளிருக்கும்

நாராயணனை ; சிவனை அவமதித்து விடுகிறார்கள்

ஒருவன் கடவுளை நேசிக்கிறேன் என்று சொல்லியும் ; தான் கண்ணில் கண்ட மனிதனை நேசிக்காதவன் ஒரு பொய்யன் . தான் கண்ணில் கண்ட மனிதனை நேசிக்காதவன் கண்ணில் காணாத கடவுளை எப்படி நேசிப்பான் ? என்பது யுகபுருஷன் இயேசுவின் கேள்வி .

சகலருக்குள்ளும் சிவன் சரீரமாக இருப்பதையும் ; நாராயணன் ஆத்மாவாக இருப்பதையும் ; கடவுள் உயிராக இருப்பதையும் உணராதவன் எங்கோ இருப்பவராக பக்தி கொள்வதும் வீணானது ; அல்லது எல்லாமே எனக்குள்ளாகத்தான் இருக்கிறது என ஞான அலப்பல் செய்தாலும் அதுவும் வீணானது .

மனிதநேயம் அற்ற ஆன்மீகம் மாய்மாலமானது

அன்பே கடவுள் என்ற பிரபலமான வாசகத்தின் உள்ளார்ந்த அர்த்தம் கடவுளை உணராமால் அன்பை உணரமுடியாது என்பதே . கடவுளை உணர்ந்தவர்களிடத்து மட்டுமே அப்பழுக்கற்ற – சுயநலமற்ற அன்பு வெளிப்படமுடியும் .

கருணை ; கிருபை சில குருமார்களிடத்து பொங்கி வழிந்தது என்று உலகம் சாட்சி சொல்கிறதே அது அவர்கள் கடவுளை உள்ளார்ந்து உணர்ந்த அளவின் வெளிப்பாடு .

அவர்கள் கடவுளை எவ்வளவு ஆழமாக உணர்ந்திருந்தார்களோ ; அவ்வளவு கடவுளின் கருணையும் கிருபையும் அவர்களின் மூலமாக உலகில் வெளிப்பட்டிருக்கும் .

I கொரிந்தியர்13
1. நான் மனுஷர் பாஷைகளையும் தூதர்பாஷைகளையும் பேசினாலும், அன்பு எனக்கிராவிட்டால், சத்தமிடுகிற வெண்கலம்போலவும், ஓசையிடுகிற

கைத்தாளம்போலவும் இருப்பேன்.

2. நான் தீர்க்கதரிசன வரத்தை உடையவனாயிருந்து, சகல இரகசியங்களையும், சகல அறிவையும் அறிந்தாலும், மலைகளைப் பேர்க்கத்தக்கதாக சகல விசுவாசமுள்ளவனாயிருந்தாலும், அன்பு எனக்கிராவிட்டால் நான் ஒன்றுமில்லை.

3. எனக்கு உண்டான யாவற்றையும் நான் அன்னதானம்பண்ணினாலும், என் சரீரத்தைச் சுட்டெரிக்கப்படுவதற்குக் கொடுத்தாலும், அன்பு எனக்கிராவிட்டால் எனக்குப் பிரயோஜனம் ஒன்றுமில்லை.

4. அன்பு நீடிய சாந்தமும் தயவுமுள்ளது; அன்புக்குப் பொறாமையில்லை; அன்பு தன்னைப் புகழாது, இறுமாப்பாயிராது,

5. அயோக்கியமானதைச்

செய்யாது, தற்பொழிவை
நாடாது, சினமடையாது, தீங்கு நினையாது,

6. அநியாயத்தில்
சந்தோஷப்படாமல், சத்தியத்தில்
சந்தோஷப்படும்.

7. சகலத்தையும் தாங்கும், சகலத்தையும்
விசுவாசிக்கும், சகலத்தையும்
நம்பும், சகலத்தையும் சகிக்கும்.

8. அன்பு ஒருக்காலும் ஒழியாது.

கீதை 16 : 21 நரகத்திற்கு அழைத்து செல்லும்
மூன்று கதவுகள் உள்ளன . அவை காமம் ;
வெறுப்பு ; பேராசை என்பனவாம் .ஆத்மாவை
அழிவுக்குள் நடத்தும் இவை மூன்றையும்
களைந்தால் ஞானமடையலாம் .

கீதை 16 : 22 இச்சைகளின் இம்மூன்று
விதமான வெளிப்பாடுகளுடன் போராடி
அவற்றை களையும் பாதையில் தன்னை
உணரும் ஆத்மா ஞானத்தை அடைகிறது

.இந்த இலக்கில் பயணிப்பவனே பரலோகத்தை அடைவான் .

கீதை 16 : 23 சாஸ்த்திரங்களின் உண்ணதமான விதிகளை புறக்கணிப்பவன் ; இச்சைகளை பூர்த்தியாக்க மனம் போன போக்கில் போபவன் ஒரு போதும் நிம்மதி அடைவதில்லை . எந்த சித்திகளையும் அடைவதுமில்லை ; முடிவான இலக்கான பரலோகத்தையும் அடைவதுமில்லை .

கீதை 16 : 24 எனவே சாஸ்த்திரங்கள் ; சமுதாய சட்டங்களின் உள்ளார்ந்த உண்மைகளை உணர்ந்து எது செய்யத்தக்கது எது செய்யத்தகாதது என்பவைகளை தெளிந்து ஞானமடைக . சாஸ்த்திரங்களில் வழிகாட்டப்பட்டுள்ள வாழ்க்கையின் ஊடாக மட்டுமே இப்பூமியில் உண்ணதம் எய்த முடியும் .

யுகபுருஷன் ஶ்ரீகிரிஸ்ணர் ஆத்மாவை ஏகத்துக்கு அழிவுப்பாதையில் நடத்தும் மூன்று நரகத்தின் கதவுகளைப்பற்றி

எச்சரிக்கிறார் . அவை காமம் ; வெறுப்பு ; பேராசை என்பனவாம் . புலனிச்சைகள் என்பவைகளிலிருந்தே இம்மூன்று கேடுகளும் வெளிப்படுகின்றன .

விருப்பு வெறுப்புகள் நமது தேவைகளின் அடிப்படியிலேயே எழுகின்றன . புலன்கள் தங்களின் தேவைகளை வெளிப்படுத்தாமல் இருக்காது . அவைகள் தங்களின் இச்சைகளை பூர்த்தியாக்க வேண்டும் என்று ஆத்மாவை கேட்டுக்கொண்டே இருக்கும் .

புலன்களில் இன்பம் இல்லாமல் இல்லை . ஆனால் அவைகளில் திருப்தி ஒரு போதும் இல்லை ; அவை நிரந்தரமானதும் இல்லை ; தற்காலிகமான அந்த இன்பங்களை நிறைவேற்ற ஆசை கொள்ளும்போது ; முயற்சிக்கும்போது அது பிறருக்கும் ; சமுதாயத்திற்கும் தீங்கு விளைவித்து பாவங்களையும் துன்பங்களையும் விளைவித்து விடுகிறது . அது நமக்கே கேடுகளாக பல பிறவிகளுக்கு திரும்ப வந்து

நம்மையும் நமது குடும்பத்தையும் பிடித்து ஆட்டுகிறது . அதனால் துக்க சாகரத்தில் உலழவேண்டியுள்ளது . அப்படி துக்கசாகரத்தில் பல பிறவிகள் எடுத்து உலன்ற ஆத்மாக்களுக்கு உள்ளறிவாக – ஞானமாக நிதானம் – பக்குவம் விளைகிறது .

பக்குவப்பட்ட ஆத்மாக்கள் புலனிச்சைகளை நிறைவேற்ற துடிப்பதில்லை . அளவுமுறையோடு அனுபவித்தால் போதும் . முறைகளுக்கு உட்படாத எவைகளையும் சந்தர்ப்பம் கிடைத்து அனுபவித்தாலும் அது கேடாகவே திரும்ப வருகிறது .

அளவு முறையோடு அனுபவிக்க மட்டுமே ஆசைகள் தகுதியானவை என்ற பக்குவம் புலன்களை அடக்குவதாக – யோகமாக பரிணமிக்கிறது . வாழ்வே சகஜ யோகம் என்பதை உணரவேண்டும் .

ஆசைகளில் அளவுமுறை அறிந்து தெளிவதே ஞானம் . அதுவே பேராசை அற்ற தன்மை . ஆனால் சரீரத்தின் புலன்கள் இந்த

அளவுமுறையப்பற்றி அக்கறை கொள்வதில்லை . அது ஆத்மாவில் இச்சைகளை துண்டிவிட்டுக்கொண்டுதான் இருக்கும் . பட்டறிவால் விளைந்த இறையச்சம் ; சமூக பயம் இருந்தால் மட்டுமே ஆத்மா அதனோடு உள்நாட்டு யுத்தம் செய்து கடவுளின் கிருபையால் அதைக்கடந்த நிலையை அடையமுடியும் . தேவை தேவையின்மையை கடந்த ஒரு சமநிலை ; அதுவே யோகம் . தன்னில் தானே திருப்தியுற்று கடவுளோடு கலந்த நிலை ; விருப்புவெறுப்புகள் வெல்லப்பட்ட நிலை – இந்த மனச்சமநிலையே யோகம் .

அன்றாட வாழ்வின் ஊடாக தனது பலகீனங்களை உணர்ந்து அதனுடன் போராடி அதை கடந்த நிலையே யோகநிலை . ஒவ்வொரு பலகீனமாக கடறும்போதும் ஒரு சித்தி .

அடிப்படையில் பேராசையே அசுரகுணம் . பேராசையை அடக்கிய மனம் சத்வ

குணத்தில் நிலைக்கும் . ஞானமார்க்கத்தில் பயணிக்கும் .

பேராசையை களைந்து விடும்போது மட்டுமே காமகுரோதாதிகளால் பாதிப்புகள் உண்டாகாதவாறு மனிதன் தப்பமுடியும் .

விருப்புவெறுப்புகள் ஆசைகளில் இருந்து உண்டானாலும் ; பேராசையே அவைகளை கொழுந்துவிட்டு எரியச்செய்கிறது .

ஆசைகளை நிறைவேற்ற துடிக்கும்போது கூடவே அவற்றை நிறைவேற்ற இடைஞ்சலாக இருப்பவைகள் மீது போட்டிபொறாமையுடன் கூடிய வெறுப்பும் வளர்ந்து விடுகிறது .

அவரவர் வாழ்நிலைமைகளில் மனிதர்கள் நமது காரியத்தில் குறுக்கே வருகிறார்கள் . இது திட்டமிட்டு நம்மை அவர்கள் எதிர்ப்பவர்களாக நமக்கு காட்சிப்படுத்தப்படுகிறது . அப்போது சிறுக சிறுக நம்மை சுற்றியுள்ளோர் மீது வெறுப்பு வளர்கிறது . அதனால் மனிதநேயம் மறைந்து

அன்பு அற்றவர்களாக உள்ளார்ந்த அர்த்தத்தில் பரமாத்மாவுடனும் கடவுளுடனும் போட்டி பொறாமை கொள்பவர்களாக மாறிவிடுகிறோம் .

கீதை 16:18 ல் பிற மனிதர்களில் வீற்றுள்ள பரமாத்மாவான என்னையும் உயிரான கடவுளையும் அவமதிக்கின்றனர் என்ற குற்றச்சாட்டு மனிதர்களைப்பற்றி கூறப்பட்டுள்ளது .

பிற மனிதர்களிடம்உள்ள குறைகள் குற்றங்களைப்பற்றி பேசிக்கொள்வது கூட ரெம்ப ஆழமான அர்த்தத்தில் தவறாகவே முடிகிறது .

அப்படி ஒருவரைப்பற்றி பேசிக்கொண்ட விசயம் ; ரெம்ப நாள் கழித்து அதே தவறை நாமும் செய்ய ஆளாகி ; இந்த தவறை செய்வதற்கும் என்னென்ன நிர்பந்தங்கள் ; சூழ்நிலைகள் மனிதனை அழுத்துகின்றன ; சாக்குபோக்குகளை மனம் கற்பிக்கிறது என உணரும்படியாக கடவுள் செய்துவிடுகிறார் .

ஏனென்றால் யாரைப்பற்றியும் பேசிக்கொண்ட விசயங்கள் ஒருவகையில் அந்த நபரில் உள்ள ஆத்மாவையும் உயிரையும் பற்றி பேசிக்கொண்ட விசயங்களே . அந்த ஜீவாத்மா பரமாத்மாவின் ஒரு பின்னம் . அந்த உயிர் கடவுளின் ஒரு அங்கம் .

நாமும் முந்தய பிறவிகளில் அதே குறைகளை செய்பவர்களாக இருந்து கடவுளின் கிருபையால் அதை கடந்து விட்டிருக்கலாம் . மனித முயற்சியால் மட்டுமே எந்த குறைகளையும் கடந்து விடமுடியாது . செய்த பிழைகளுக்கு கடவுளின் மன்னிப்பால் அன்றி பிராயச்சித்தம் செய்து கணக்கை நேர் செய்யவும் முடியாது .

நாளையே சந்தர்ப்பமும் சூழ்நிலையும் வாய்த்தால் இந்த தவறை நாம் செய்யமாட்டோம் என்பதற்கு நம்மாலேயே உத்தரவாதம் கொடுக்கவும் முடியாது .

சந்தர்ப்பமும் சூழ்நிலையும் வாய்க்காமல் ; அதை நம்மால் செய்யமுடியவில்லையே என்ற ஆதங்கமே ; அப்படி செய்பவர்களை பற்றி புறம் பேசவும் வைக்கிறது . அப்படி பேசும்போது அதன் தொழில்நுட்பங்களைப்பற்றி அலசிஅறிந்து கொள்வதால் சந்தர்ப்பம் வாய்த்ததும் பலமடங்கு திறமையாக செய்துவிடுவோம் .

ஊழலை அம்பலப்படுத்தும் அரசியல்வாதிகள் பதவிக்கு வந்ததும் விஞ்ஞான ஊழல் – பல மடங்கு திறமையோடும் பிடிபடாமலும் செய்வதைப்போல .

சகலரது குறைகளும் மனித இயல்புதான் என்று அங்கீகரிக்கும் பக்குவம் வராமல் ஆன்மீக வாழ்வில் முன்னேற்றம் வராது .சாத்வீகம் விளையாது . நாம் காணும் எல்லா குறைகளும் நம்முள் இருந்தவைகளே . அல்லது நாமும் முந்தய பிறவியில் செய்தவையே .

சகலரது குறைகளையும் அங்கீகரிப்பது அவர்களின் பின்னணியில் உள்ள பரமாத்மாவையும் கடவுளையும் மதிப்பது .

சகலரது குறைகளை அங்கீகரித்தால் மட்டுமே அவர்களின் நிறைகளையும் மதிக்க நம்மால் முடியும் . விருப்புவெறுப்புகள் இன்றி உள்ளதை உள்ளது என்று நிதானிக்க முடியும் .

உள்ளதை உள்ளது என்று உணர்வது கடவுளை அறிவதற்கு சமம் .

பிறரது குறைகளால் வெறுப்பு அடையாமல் ; அவர்களால் நமக்கு துன்பம் வராமல் காத்துக்கொள்ள முயற்சிப்பதும் ; கடவுளிடம் பிரார்த்தித்து நிவாரணம் கிடைக்கும்வரை சகித்துக்கொள்வதும் ; அவர்களுக்கு ஒத்துழையாமல் இருப்பதும் ; அல்லது அவர்களை விட்டு ஒதுங்கி சென்றுவிடுவதும் எக்காரணம் கொண்டும் அவர்களை குற்றப்படுத்தாது இருப்பதும் மட்டுமே உயர்வுக்கு உரிய வழி .

இப்படிப்பட்ட வாழ்க்கையே சாத்வீகம் ; அஹிம்சை .

சகலரையும் தெய்வத்தின் சாயலாக உணரும் தெய்வீக அன்பு நம் இதயத்தில் ஊற்றப்படாமல் சாத்வீகம் சாத்தியமில்லை . மகாத்மா காந்தியின் அஹிம்சை கொள்கையும் ; சற்குரு இயேசுவின் சமாதான கொள்கையும் இந்த அடிப்படையை சார்ந்தவையே .

தனது குறைகளையும் நிறைகளையும் உணர்ந்து அவற்றில் சமநிலை அடையாதவன் ; அன்றாட வாழ்வின் ஊடாக சமநிலையை காத்துக்கொள்ளாதவன் ; பிறரின் நிறைகுறைகளில் சமநோக்கு அடைவது சாத்தியமே இல்லை .

அவன் பிறர்குறை பேசி கடவுளையும் பரமாத்மாவையும் நிந்திக்கிரவனாகவே - அவர்கள் மீது போட்டிபொறாமை கொள்கிரவனாகவே இருப்பான் .

இது ஒரு பயங்கரமான உண்மை . நாம் பக்தி செய்கிறோம் ; வழிபாடு பூஜை புனஸ்காரங்கள் செய்கிறோம் ; யாத்திரை செல்கிறோம் ; தியானம் செய்கிறோம் யோகாப்பியாசங்கள் செய்கிறோம் ; சத்சங்கம் கலந்து உபதேசம் கேட்கிறோம் ; அடியவர்களுடன் சம்பாசனை செய்து புளகாங்கிதம் அடைகிறோம் ; நற்காரியங்கள் தானதர்மங்கள் செய்கிறோம் ; இவ்வளவு செய்துவிட்டும் பிற மனிதர்களின் குணங்களால் விருப்புவெறுப்பு அடைந்து எரிச்சலுற்று அந்த இறைவன் மீதே போட்டிபொறாமை கொள்கிறோம்

பெரியபெரிய காரியங்களை செய்துவிட்டு சின்னதாக கடவுளுடன் சண்டைக்காரனாகவே இருந்து விடுகிறோம் .

**அதனால்தான் கீதை 16 ஐ தெய்வீக மற்றும் அசுர இயல்புகளின் மீதான சமநிலை யோகம் என்று சற்குரு கிரிஷ்ணர் பெயர் வைத்திருக்கிறார் .**

இந்த சரீரத்தை ஒளி உடம்பாக மாற்றும் வரை ; பூமியில் உள்ளகாலம் வரை நம்மிடமும் பிறரிடமும் தெய்வீக மற்றும் அசுர இயல்புகள் இருக்கத்தான் செய்யும் . இவைகள் ஆவி மண்டல சக்திகளாலும் துண்டி விடப்படும் . சந்தர்ப்ப சூழ்நிலைகளும் உண்டாக்கப்படும் . ஆனால் அவைகளில் சமநிலை நிர்வகிப்பதுவே சகஜ யோகம் .

இந்த சகஜ யோகம் பக்தியில்லாமல் ; தன்னை உணராமல் ; பிறரையும் விருப்புவெறுப்பு இன்றி உணராமால் சாத்தியப்படாது .

ஊரோடு ஒத்து வாழாமல் சாத்தியப்படாது . சகஜ யோகி யாரையும் எதையும் குற்றப்படுத்த மாட்டான் . சமாதான சமரச வாழ்வு . அவன் பார்வைக்கு எல்லோரையும் போலவே இருப்பான் . பாவிகளின் தோழன் என சற்குரு இயேசுவை குற்றம் சாட்டினார்களே அதுபோலவே இருப்பான் .

சமாதானம் என்பது முரண்பாடுகளை அழித்து விடுவதால் வருவது அல்ல . மாற்று கருத்து அல்லது மாற்று கொள்கை – மதங்களை அழித்து விடுவதால் வருவதல்ல . சகலவற்றையும் சகித்து இணக்கப்படுத்தி அவைகளை நல்லதை நோக்கி இழுத்து விடுவதே சமாதான சாத்வீக வாழ்வு .

யுகமுடிவு காலத்தில் ஈசா நபி வானத்திலிருந்து இறங்கி வரும்போது ஏற்கனவே பூமியில் சமாதானத்தை உண்டாக்கிய அல்மகதி ஒருவர் இருந்ததாக முகமதுநபி சாகும் முன்பு ஒரு கணவு கண்டார் .

அதை இசுலாமியர்கள் தங்கள் மார்க்கத்தில் ஒரு பெரிய வழிகாட்டி வந்து உலகில் மற்ற மதங்கள் அனைத்தையும் அழித்து உலகம் முழுவதையும் இசுலாமாக்கி விடுவார் என்பதாக சொல்லிக்கொண்டுள்ளனர் .

மாற்று மதங்களை ஒருகாலும் அழித்துவிடமுடியாது . அப்படி அழித்து

விட்டால் அதன் பேர் சமாதானம் அல்ல . சமாதானம் என்றால் வேற்றுமைகளில் ஒற்றுமை காண்பது . சகலவற்றிலும் உள்ள உண்மைகளை அங்கீகரித்து ; அந்ததந்த சமுதாயத்திற்கு ; நாட்டிற்கு ; இனத்திற்கென்று ஏற்பட்ட பிரத்யேகமான வேறுபாடுகளை பெரிசு பண்ணாமல் சகித்துகொள்வது

சாஸ்த்திரங்கள் என்பது வேறு அந்த சாஸ்த்திரங்களின் அடிப்படையில் அந்தந்த நாட்டிற்கு என்று உண்டான சமுதாய சட்டங்கள் என்பது வேறு . ஆப்ராகாமிய வேதங்களில் திராவிட இனமல்லாத மற்ற இன மக்களுக்கு மட்டும் உண்டான சமுதாய சட்டங்கள் கிரிமினல் ஒழுங்குமுறைகள் சேர்த்தே சொல்லப்பட்டுள்ளன . ஆனால் அவையும் வேதம் என்பதாக புரிந்துகொண்டு இந்தியர்களை ஐரோப்பியர்களாகவும் அரபியர்களாகவும் மாற்றுகிற இன அழிப்பு வேலையை புனிதப்பணி என்பதாக அவர்கள்

செய்துகொண்டு குழப்பத்தை உண்டாக்குகிறார்கள் .

ஆப்ராகாமிய வேதங்கள் மூலமாக கடவுள் ஒரே ஒரு உண்மையை மட்டுமே உலகிற்கு சொல்லியுள்ளார் . அது வெளிப்பட்ட அனைத்திற்கும் அதிபதிகளாக உள்ள அதிதேவர்கள் – சற்குருநாதர்கள் நாராயணன் ; சிவன் ; ஆதிசேஷன் ; நாராயணி (ஆர்க்ஏஞ்சல்ஸ் காப்ரியேல் ; மைக்கேல் ; யூரேல் ; ராபேல் ) என்பவர்களுக்கும் அப்பால் வெளிப்படாதவராகவும் அறியப்படாதவராகவும் கடவுள் உள்ளார் என்பதே .

ஆனால் கடவுள் இந்த நால்வரின் மூலமாக மட்டுமே செயல்படுகிறார் என்பதை அவர்கள் புரிந்துகொள்ள வேண்டிய தருணம் வந்து விட்டது .

முந்தய வேதமும் ஆதி வேதமுமான இந்துமதம் இந்த நால்வரையும் தனித்தனியே முக்கியமாக கொண்டு உலகிற்கு

அருளப்பட்டது . ஏனென்றால் அறியப்படாத கடவுள் இவர்கள் மூலமாக மட்டுமே வெளிப்பட்டார் .

அந்தந்த சற்குருநாதர்கள் கடவுளின் சார்பாக அந்தந்த மார்க்கங்களை அருளி அடியவர்களை சீர்படுத்தினார்கள் . ஆனால் மார்க்கங்கள் அவரவர் குருவை கடவுளுக்கு இணை வைத்து உயர்த்தி அடுத்த குருவை மட்டம் தட்டுவதாக மார்க்கபேதங்களை உருவாக்கத்தொடங்கி விட்டன . கலியுகத்தின் மாயைகளில் இவையும் ஒன்று .

இப்போதோ இந்த நால்வர் மூலமாக – இவர்களை சற்குருனாதர்களாக கொண்டு அறியப்படாத கடவுளை வழிபடுவது மட்டுமே முழுமையடைவதற்கான வழி என்ற சமரச வேதம் வெளிப்படையாகும் காலம் கனிந்துவிட்டது .

கடவுளின் பாதை எப்போதுமே புரட்சிப்பாதை அல்ல ; வளர்ச்சி பாதை . வளர்சிதை மாற்றம் உண்டாக்குவது .

ஏற்கனவே உள்ள சாஸ்த்திர சம்பிரதாயங்களை முற்றிலும் அழித்துவிட்டு புதிதாக ஒன்றை செய்வது என்பது குழந்தைத்தனமானது . அழிவை உண்டாக்குவது .

அந்த சாஸ்த்திர சம்பிரதாயங்களில் வளர்சிதை மாற்றம் உண்டாக்குவதே கடவுளின் பாதை .

மனிதனது சொந்த வாழ்வில் நன்மை தீமைகளின் மத்தியில் சமநிலை அடைந்தால் மட்டுமே சித்தி அடைவது சாத்தியம் என்பது எப்படி உண்மையோ அதுபோல சமுதாயத்திலும் ; சமயங்களிலும் ; மார்க்கங்களிலும் வளர்சிதை மாற்றத்தின் மூலமாக சமநிலை உண்டாவதே முழுமை அடைவதற்கான உத்தரவாதம் .

வரப்போகிற சமரச வேதம் இதையே செய்யப்போகிறது .

**நாராயணன் நாமத்தினாலும்**

**சிவனின் நாமத்தினாலும் சேஷனின்**

**நாமத்தினாலும் காமாக்ஷியின்**

**நாமத்தினாலும்**

**கடவுள் உங்களை ஆசிர்வதிக்க**

**வேண்டுகிறேன்**

**அருட்பெருஞ்சோதி**

**அருட்பெருஞ்சோதி**

## கீதை 17 : இயல்பூக்க வளர்ச்சி யோகம்



**கீதை 17 :1 அர்ச்சுணன் கேட்டார் : கிரிஸ்ணரே ! சாஸ்திர விதிகளின் படியாக உய்வடைய முயலாமல் தன்னியல்பான ஊக்கத்தின் படியாகவே பலர் ஆன்மீகவாழ்வில் உய்வடைய முயற்சிக்கிறார்களே அவர்கள் எக்குணத்தில் இருக்கிறார்கள் ? சத்வத்திலா ; ரஜஸ் அல்லது தமோகுணத்திலா ?**

இங்கு ஒரு முக்கியமான விசயம் வெளியாக்கப்படுகிறது . அது குருபாரம்பரியத்தின் வழிகாட்டுதல்களின்

படியான ஆன்மீக வாழ்வு ; அல்லது நிறுவனங்கள் மதங்கள் வழி வாழ்வு அதாவது ஏதாவது ஒரு சாஸ்த்திர சம்பிரதாயங்களின் படியாக ஆன்மீகவாழ்வை ஒழுங்குகாக கடைபிடித்து முன்னேற முயற்சிக்க வேண்டும் என்பது பொதுவான நெறி . .

அப்படி ஏதுமில்லாமல் பெருந்திரளான மக்கள் தங்களின் இயல்பூக்கத்தின் படியாகவே ஆன்மீக வாழ்வில் தொடர்பு கொண்டுதான் உள்ளனர் . ஆன்மீக வாழ்வில் தொடர்பில்லாத மனிதன் இருக்கவே முடியாது

ஒருவனது அன்றாட செயல்பாடுகள் ; இயல்புகளை நிதானித்தால் அவனை ஏதாவது ஒரு மார்க்கத்தில் தொடர்பு படுத்தி விடலாம் .

நாத்தீகர்கள் அல்லது நவீன நாத்திகவாதிகள் ; ஆதிகால கம்யுனிஸ்ட்டுகள் கூட சமூக சீர்திருத்தம் ; மனிதநேயம் என்ற உள்ளார்ந்த

ஒரு பக்தியை ; நன்மையை வேள்வியாக செய்துகொண்டிருப்பவர்களே .

சுயநலம் என்பதை கொஞ்சம் ஓரங்கட்டி பொதுநன்மைகளைவிரும்பி உள்ளார்ந்த முயற்சியும் ; தொண்டும் ; தியாகமும் எவரால் செய்யப்படுகிறதோ அது அந்த ஆத்மாவின் வேள்வியாவே கடவுளால் எடுத்துக்கொள்ளப்பட்டு அடுத்த பிறவியில் அந்த ஆத்மா பக்குவமுள்ளதாக ; நல்ல சூழ்நிலையில் பிறப்பெடுக்க வைக்கப்படுகிறது . நிஷ்ட்டை என்ற வார்த்தை
தவம் ; தொண்டு ; வேள்வி ; நற்கருமங்கள் அனைத்தையும் குறிப்பவையே . ஏனென்றால் இவை அனைத்தும் ஆத்மாவிற்கு பலனளிப்பவை .

பெரியார் கூட தான் நம்பிய கொள்கைக்கு உண்மையானவனாக இருப்பவனே சுயமரியாதையாளன் என்றார் . சென்னை ஐஸ் ஹவுசில் விவேகானந்தர் தொடர்பாக ஒழுங்குபடுத்தப்பட்ட கூட்டத்தில் அவர் பங்கு

கொண்டு ; ராமகிரிஷ்ணரின் சீடர்களை உற்சாகப்படுத்தி பேசியுள்ளார் . அதில் அவர் தான் கொண்ட கொள்கைக்கு உள்ளார்ந்த அர்த்தத்தில் உண்மையானவனாக இருப்பது சரி என்றார் .

கடவுள் இருக்கிறாரா இல்லையா என்பதற்கு அப்பாற்பட்டு ; கடவுளின் பேரால் கடவுளுக்கு பயமில்லாமல் கடவுளின் பேரை சொல்லிக்கொண்டு பல சமூக அநீதிகளை சடங்குகளின் ; சம்பிரதாயங்களின் பேரால் சிலர் நடைமுறைப்படுத்திக்கொண்டிருக்கும் போது ; கடவுளின் அடியவர்கள் பலரும் காலாவதியான பல சம்பிரதாயங்களை சீர்திருத்தியிருக்கிரார்கள் . அப்படிப்பட்ட சீர்திருத்தத்தை கடவுளின் பேரை சொல்லாமலும் சிலர் செய்திருக்கிறார்கள் .வாயில் அவர்கள் நாத்தீகம் பேசினாலும் செயலால் சமுகத்தில் நன்மைகள் – சீர்திருத்தங்கள் நடந்திருந்தால் அச்செயல்பாடு கடவுளால் ஆசீர்வதிக்கப்பட்டதே .

நன்மைகள் ; வளர்ச்சிகள் ; மறுமலர்ச்சிகள் அனைத்தும் கடவுளாலும் அவரைச்சார்ந்த தேவ சக்திகளாலும் வருபவையே . தீமைகள் அனைத்தும் அசுர ஆவிகளால் வருபவையே .

கடவுளை நம்புவரிடத்தும் அசுர ஆவிகள் செயல்படமுடியும் ; கடவுளை நம்பாதவரிடத்தும் தேவ ஆவிகள் செயல்படமுடியும் .

சற்குருநாதர் இயேசுவின் வாழ்வில் அவர் யூத மத நிறுவனத்தையும் அதன் குருமார்கள் தங்களை கடவுளின் ஏஜண்டுகள் என கருதிக்கொண்டு செய்பவைகளையும் மிக கடுமையாக சாடியதை ; எதிர்த்ததை காணலாம்

இயேசு கடவுளை நம்பினார் ; பிரார்த்தித்தார் சுகமாக்கல் முதலான பல சித்துகள் செய்தார் என்பதை ஒதுக்கிவைத்து விட்டு அவரது வாழ்க்கை வரலாறை வாசித்தால் நுறு பெரியார் ஒன்று சேர்ந்து வந்ததாகத்தான் தெரியும் .

மத்தேயு23

13. மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேயரே! உங்களுக்கு ஐயோ, மனுஷர் பிரவேசியாதபடி பரலோகராஜ்யத்தைப் பூட்டிப்போடுகிறீர்கள்; நீங்கள் அதில் பிரவேசிக்கிறதுமில்லை பிரவேசிக்கப் போகிறவர்களைப் பிரவேசிக்கவிடுகிறதுமில்லை.

14. மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேயரே! உங்களுக்கு ஐயோ, பார்வைக்காக நீண்ட ஜெபம்பண்ணி, விதவைகளின் வீடுகளைப் பட்சித்துப்போடுகிறீர்கள்; இதினிமித்தம் அதிக ஆக்கினையை அடைவீர்கள்.

15. மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேயரே! உங்களுக்கு ஐயோ, ஒருவனை உங்கள் மார்க்கத்தானாக்கும்படி சமுத்திரத்தையும் பூமியையும் சுற்றித்திரிகிறீர்கள்; அவன் உங்கள் மார்க்கத்தானானபோது அவனை உங்களிலும் இரட்டிப்பாய் நரகத்தின் மகனாக்குகிறீர்கள்.

16. குருடரான வழிகாட்டிகளே! உங்களுக்கு ஐயோ, எவனாகிலும் தேவாலயத்தின்பேரில்

சத்தியம்பண்ணினால் அதினால் ஒன்றுமில்லையென்றும், எவனாகிலும் தேவாலயத்தின் பொன்னின்பேரில் சத்தியம்பண்ணினால் அவன் கடனாளியென்றும் சொல்லுகிறீர்கள்.

17. மதிகேடரே, குருடரே! எது முக்கியம்? பொன்னோ, பொன்னைப் பரிசுத்தமாக்குகிற தேவாலயமோ?

18. மேலும், எவனாகிலும் பலிபீடத்தின் பேரில் சத்தியம்பண்ணினால் அதினால் ஒன்றுமில்லையென்றும், எவனாகிலும் அதின்மேல் இருக்கிற காணிக்கையின்மேல் சத்தியம்பண்ணினால் அவன் கடனாளி என்றும் சொல்லுகிறீர்கள்.

19. மதிகேடரே, குருடரே! எது முக்கியம்? காணிக்கையோ, காணிக்கையைப் பரிசுத்தமாக்குகிற பலிபீடமோ?

20. ஆகையால், பலிபீடத்தின்பேரில் சத்தியம் பண்ணுகிறவன் அதின் பேரிலும் அதின்மேலுள்ள எல்லாவற்றின்பேரிலும் சத்தியம்பண்ணுகிறான்.

21. தேவாலயத்தின்பேரில் சத்தியம்பண்ணுகிறவன் அதின்பேரிலும் அதில் வாசமாயிருக்கிறவர்பேரிலும் சத்தியம்பண்ணுகிறான்.

22. வானத்தின் பேரில் சத்தியம் பண்ணுகிறவன் தேவனுடைய சிங்காசனத்தின் பேரிலும் அதில் வீற்றிருக்கிறவர் பேரிலும் சத்தியம் பண்ணுகிறான்.

23. மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேயரே! உங்களுக்கு ஐயோ, நீங்கள் கடுகிலும் வெந்தயத்திலும் சீரகத்திலும் காணிக்கை செலுத்தி, நியாயப்பிரமாணத்தில் கற்பித்திருக்கிற விசேஷித்தவைகளாகிய நீதியையும் இரக்கத்தையும் விசுவாசத்தையும் விட்டுவிட்டீர்கள்; இவைகளையும் செய்யவேண்டும், அவைகளையும் விடாதிருக்கவேண்டும்.

24. குருடரான வழிகாட்டிகளே, கொசுவில்லாதபடி

வடிகட்டி, ஒட்டகத்தை
விழுங்குகிறவர்களாயிருக்கிறீர்கள்.
25. மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேயரே! உங்களுக்கு
ஐயோ, போஜனபானபாத்திரங்களின் வெளிப்புறத்தைச்
சுத்தமாக்குகிறீர்கள்; உட்புறத்திலோ அவைகள்
கொள்ளையினாலும், அநீதத்தினாலும் நிறைந்திருக்கிறது.
26. குருடனான பரிசேயனே!
போஜனபானபாத்திரங்களின் வெளிப்புறம்
சுத்தமாகும்படி அவைகளின் உட்புறத்தை
முதலாவது சுத்தமாக்கு.
27. மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேயரே!
உங்களுக்கு ஐயோ, வெள்ளையடிக்கப்பட்ட கல்லறைகளுக்கு
ஒப்பாயிருக்கிறீர்கள்., அவைகள் புறம்பே
அலங்காரமாய்க் காணப்படும், உள்ளேயோ
மரித்தவர்களின் எலும்புகளினாலும் சகல
அசுத்தத்தினாலும் நிறைந்திருக்கும்.

28. அப்படியே நீங்களும் மனுஷருக்கு நீதிமான்கள் என்று புறம்பே காணப்படுகிறீர்கள்; உள்ளத்திலோ மாயத்தினாலும் அக்கிரமத்தினாலும் நிறைந்திருக்கிறீர்கள்.

சாஸ்திரங்கள் என்பது வேறு
சம்பிரதாய சடங்குகள் என்பது வேறு .

ஒரு சாஸ்திரம் என்ற உண்மையை ; அதை உணர்ந்த ஞானி ஒருவர் உலகிற்கு சொல்லும்போது ஒரு
சடங்காக ; சம்பிரதாயத்தின் வழியாக சொல்லியிருப்பார் . அதை பரப்ப ஒரு நிறுவனத்தையும் வழிபாட்டு முறையையும் உண்டாக்கியிருப்பார்

அந்த காலகட்டத்தில் அந்த நாட்டிற்கு அது சரியானதாக இருக்கும் ; சொல்லப்போனால் அதற்கு முந்தய சம்பிரதாயத்தை ஒதுக்கிய ஒரு புரட்சியாகத்தான் இருக்கும் .

இந்த சம்பிரதாயத்தை ; சடங்கை கடைபிடிக்கும் சீடர்கள் அந்த நிறுவனத்தில் பதவியை அடைந்து

வாழத்தொடங்குகிரார்கள் . காலப்போக்கில் அந்த சடங்கின் பின்னணியில் உள்ள சாஸ்திரத்தை ஓரங்கட்டிவிட்டு சடங்கை மட்டும் கடைபிடிப்பவர்களாக மாறிவிடுவார்கள் . வறட்டு சூத்திரமாக உண்மையை உணராத சடங்குகள் காலப்போக்கில் பல கலப்படங்களை அடைந்து ஒருநாளில் சாஸ்திரத்திற்கு நேர் விரோதமாக கூட மாறிவிடும் .

அப்போது அந்த நிறுவனத்தை நடத்துகிறவர்கள் ; உண்மையை உணராமல் பிழைப்பு நடத்துபவர்களாக மாறிவிடுவார்கள் . ஒரு காலகட்டத்தில் சமுதாய மறுமலர்ச்சியை உண்டாக்கிய இயக்கங்கள் அனைத்துமே பிற்காலத்தில் பிழைப்புவாதிகளால் நிறைந்து விடுவதை தவிர்க்கவே முடியாது . அப்போது புதிய இயக்கம் வந்தாகவேண்டும் .

மாற்றம் வரும் என்பதில் மாற்றமில்லை என்பது மாபெரும் சமூக

சீர்திருத்தவாதியாகிய காரல்மார்க்ஸ் ன் வார்த்தை

மாற்றம் அடையாத இரண்டே இரண்டு விசயங்கள் மட்டுமே உண்டு .

அவை 1) கடவுள் 2) அவரால் உண்டாக்கப்பட்ட அனைத்தும் மாற்றங்களை சந்தித்தே தீரும் என்பதும் மட்டுமே

இறைவனின் சகல வெளிப்பாடுகளை அடக்கிய பிரபஞ்சமும் கூட நாளுக்குநாள் வெட்டவெளியில் விரிவடைந்து கொண்டேதான் இருக்கிறது . ஆகவே கடவுள் ஒருவரைத்தவிர அனைத்தும் வளர்சிதை மாறுதலில்தான் உள்ளன .

இவை கடவுளால் வெளிப்படுத்தப்பட்ட அல்லது அவரது வாயாக பூமியில் இருந்த மனிதர்களால் வெளிப்பட்ட வேதங்களுக்கும் ; சாஸ்திரங்களுக்கும் ; சம்பிரதாயங்களுக்கும் ; சடங்குகளுக்கும் பொருந்தும் .

இம்மாறுதல்கள் ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் பிறவிகள் தோறும் இயல்பூக்க வளர்ச்சியாகவும் உள்ளது .ஒவ்வொரு பிறவியின் முடிவிலும் பட்டறிவுடன் பாவங்களை கடந்தவனாகவோ அல்லது கூட்டிக்கொண்டவனாகவே அவன் அடுத்த பிறவிக்குள் கடந்து போகிறான் . இந்த இயல்பூக்கத்தின் படியாக அவனுக்கு முக்குணங்களுள் ஒரு குணம் மேலோங்குகிறது .

ஆகவேதான் இந்த முக்கியமான கேள்வியும் பதிலும் கீதை 17 ம் அதிகாரத்தில் இயல்பூக்க வளர்ச்சி யோகம் என்பதாக விளக்கப்படுகிறது

கீதை 17 : 2 யுகபுருஷன் கூறினார் : மூன்று விதமான இயல்பூக்கங்களின் கலப்பால் மனித தேகம் உண்டாகிறது . அந்த சுபாவங்கள் சத்வகுணம் ; ரஜோகுணம் ; தமோகுணம் என்பனவாம் . இவைகளுள் நிலைத்து

மனிதன் எவ்வாறு விருத்தியாகிறான் என்பதைக்கேள் :

கீதை 17 : 3 ஒவ்வொரு மனிதனுக்குள்ளிருக்கும் இருப்புகளுக்கு ஏற்ப இயல்பூக்கங்கள் உண்டாகின்றன .இவைகளுள் எது மேலோங்கியிருக்கிறதோ அந்த குணத்தில் உள்ளவனாக அவன் கருதப்படுகிறான் .

கீதை 17 : 4 சத்வகுணம் உள்ளவர்கள் கடவுளுடனும் அவரைச்சார்ந்த தேவஆவிகளுடனும் ஒத்திசைந்து வழிபடுகின்றனர் . ரஜோகுணத்தில் உள்ளவர்களோ அசுர ஆவிகளுடன் ஒத்திசைந்து வழிபடுகின்றனர் .தமோகுணத்தில் உள்ளவர்களோ இறந்தவர்களையும் பூதகணங்களையும் ஒத்திசைந்து வழிபடுகின்றனர்.

ஒவ்வொரு மனிதனிடத்தும் இம்மூன்று குணங்களும் கலந்து கலந்தே இருக்கும் . சத்வகுணம் மேலோங்கியுள்ள சாத்வீகி ஒருவனிடத்தும் ஒரு குறிப்பிட்ட

விசயத்தில் – இச்சையில் தமோகுணம் நின்று அதைக்கடற முடியாமல் அவன் வழுக்கி விழுந்துகொண்டிருப்பான் . சில விசயங்களில் ரஜோகுணம் வெளிப்பட்டு விடும் .

அந்தந்த குணம் நம்மிடம் செயலாக வெளிப்படும் தருணம் ; அந்த குனத்திற்குரிய ஆவி மண்டல சக்திகள் நம்மிடம் ஒத்ததிர்ந்து நம்மை ஆளுமை செய்ய முயற்சிக்கும் . நம்மை துண்டி விடும் .

அண்டத்தில் உள்ளதெல்லாம் பிண்டத்திலும் உள்ளது . அண்டத்தின் பின்னணியில்லாமல் பூமியில் எக்காரியமும் நடப்பதில்லை .

ஒரு செயல் செய்யும் படி ஒரு மனிதன் துண்டி விடப்படவேண்டுமானால் அவனிடம் அந்த பதிவு – குணம் உள்ளே ஏற்கனவே இருக்கவேண்டும் . இல்லாத ஒன்றை ஆவிமண்டல சக்திகளாலும் அல்லது கிரக இயக்கங்களாலும் துண்டி விட முடியாது .

பக்குவப்படாத மனிதன் உள்ளுணர்வு உண்டானதும் செயல்படத்தொடங்குகிறான் .

அதற்கு அவனது அறிவையும் ஆற்றலையும் பயன்படுத்த முயல்கிறான் . ஆனால் இறை அச்சம் ; கஸ்டட நஸ்ட்டங்களில்அடிபட்ட மனிதன் கொஞ்சம் யோசிக்கிறான் . அப்போது அவனது மற்ற சுபாவங்கள் ;நற்பதிவுகள் அவனுக்கு துனை செய்கின்றன . அந்த போராட்டத்தில் அரைகுறை அச்சத்தோடு அவன் அந்த செயலை செய்தாலும் சுட்டவுடன் திருந்திக்கொள்கிறான் . அது அவனுக்கு பட்டறிவை விளைவித்து ஞானமாக உள்விளைந்து பக்குவப்படுத்துகிறது .

இப்படி முக்குண செயல்பாடுகளின் போதும் அவனுக்குள் ஆவிமண்டல சக்திகளின் ஏவுதல் இருப்பதால் அவைகளுடன் ஒத்திசைவதே ஒரு வழிபாடு என்று இங்கே சொல்லப்படுகிறது

வழிபடுதல் என்றாலே ஏவுதலுக்கு கீழ்பட்டு அச்செயலை செய்தல் ; அல்லது அந்த வழியில் பயணித்தல் என்றொரு பொருள் உண்டு .

வழிபாடு என்றால் கும்பிடுதல் என்ற அர்த்தம் மட்டும் இல்லை . அந்த சக்திகளுக்கு நாம் இடம் கொடுப்பதால் அவைகளின் இயக்கங்களுக்கு ஒத்துழைத்து வாழ்வது – வழி படுதல் என்ற பொருளும் உண்டு .

கடவுளின் கருவியாக ஒரு நபர் அத்தாட்சியோடு பிரகடனப்படுத்தப்படலாம் ; அல்லது முன்பு அவதாரங்கள் வந்தார்கள் . அவர்களை அடையாளம் கண்டுகொண்டு முழுக்க அவர்களின் இயக்கத்தோடு நம்மை இனைத்துக்கொள்வது ஒரு வழிபாடே . இதனால் பல ஆத்மாக்கள் பல படிகள் ஜெட் வேகத்தில் உயர்ந்த நிலையை அடைந்தார்கள்

அத்தகைய நபர்கள் பூமியில் இல்லாதபோது அவர்கள் சொல்லியவைகளுக்கு மனித அறிவில் விளக்கம் சொல்லிக்கொண்டு சீடர்கள் பலர் பல தவறுகளை செய்வார்கள்

ஆனால் அவர்கள் பூமியில் இருந்தபோதோ இறைசித்தம் ஒன்றே செய்யப்பட்டிருக்கும் . அப்போது உடன் இருந்தவர்கள் பாக்கியசாலிகளே . அப்போது பூமியில் இருந்தும் அவர் இறைவனின் ஆள் என்பதை புரிந்துகொள்ளாமல் அவரை எதிர்த்தவர்களும் இருக்கத்தானே செய்தார்கள்

ஆகவே நாம் முன்னேறுவது ; எத்தகைய ஆவிமண்டல சக்திகளுக்கு வழிபடுகிறோம் என்பது முக்கியம்

அது நாம் எக்குணத்தில் அதிகநேரம் நிற்க முயற்சிக்கறோம் ; நமது தீய இயல்புகளுடன் எவ்வளவு தூரம் போராடுகிறோம் என்பதைப்பொறுத்தது . அன்றாட வாழ்வில் வேள்வியாக செய்யப்படவேண்டும் . ஆகவே இதுவும் யோகம் – நிஸ்டையே .

இந்த சுலோகத்தில் முக்கியமாக மூன்று வகைப்பட்ட ஆவிமண்டல சக்திகள் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது

அவை ;

1) கடவுளும் அவரைச்சார்ந்த தேவர்கள் அல்லது தேவ தூதர்கள்

2) அசுர ஆவிகள்

3) இறந்துபோனவர்களின் பேரால் செயல்படும் பேய்களும் பூதகணங்களும்.

ஒவ்வொரு சாதாரன மனிதனிடத்தும் அவனது நற்செயல்களில் தேவ ஆவிகளும் தீய செயல்களில் அசுர ஆவிகளும் செயல்படும்

அப்படியில்லாமல் ஒரு ஆவி ஒரு மனிதனை அபிஷேகித்து அவன் மூலமாக விசேஷமாக செயல்படுவதும் உண்டு . அப்படிப்பட்டவர்களே பிரபலமாக இருப்பவர்கள்

எந்த ஒரு தலைவருக்கும் பின்னணியில் ஒரு ஆவி இல்லாமல் இருக்காது பெரிய பெரிய காரியங்களை இப்படிப்பட்டவர்களாலேயே செய்யமுடியும்

அசுர ஆவிகள் நேரடியாக மனிதர்களை தேர்ந்து கொண்டு செயல்படாமல் சில

வேலைகளில் இறந்துபோன மனிதனின் ஆத்மாவை சுமந்துகொண்டு ; அவரின் ரூபத்தில் காட்சி கொடுக்கும் ; அருள்வந்து பேசும் . இப்படி நமது முன்னோர் வந்திருப்பதாக கூறி எளிதில் நம்மை அடியவராக்கிவிடும் .

அவைகள் துன்பம் தந்தால் பேய் என்று கூறி உடுக்கடித்து துரத்தி விடுவோம் . நன்மை செய்தால் குலதெய்வமாக – சிறுதெய்வமாக கும்பிடத்தொடங்கி விடுவோம் .

தேவர்கள் எப்போதும் இறந்துபோனவர்களின் ரூபத்தில் வரமாட்டார்கள் . ஆனால் அசுர ஆவிகள் மனிதனை ஏமாற்ற இப்படி இறந்தவர்களின் ரூபத்தை பயன்படுத்திக்கொள்கின்றன

நன்மைகள் பல செய்தாலும் உள்குத்தாக நம்மை கடவுளை நோக்கி முன்னேற விடாமல் கட்டி வைத்து விடும்

அதனால்தான் வள்ளல்பெருமானும் சிறுதெய்வ வழிபாடு செய்யாதீர்கள் என்றார்

ஆனால் சமரச வேதம் என்ன சொல்கிறதென்றால் ஆவிமண்டல சக்திகள் பல தரங்களில் பல படிகளில் உள்ளன . இவைகளை பகுத்தறிவது அவ்வளவு எளிதன்று .

யார் கடவுள் என்று ஆராய முயற்சித்து எட்டாத காரியத்தில் தலையிடாதீர்கள் . பெயரை தெரிந்துகொள்வதால் எந்தப்பலனும் இல்லை . யார் என்று தெரிந்துகொள்வதை விட அவரது அருளை பெறுவதுதான் முக்கியம் ; அவரோடு ஒத்திசைந்து வாழ்வதுதான் முக்கியம்

அதற்கு அறியப்பட்ட யார் மூலமாகவும் அறியப்படாத கடவுளை வழிபடுவது என்று மாற்றிக்கொள்ளுங்கள் என்பதே சமரச வேதம் . எந்த ஒரு இறைநெறியும் இறைவன் புறத்திலிருந்து வந்ததே . காலப்போக்கில் அதில் மனித கலப்படங்களும் இருக்கும் . ஆகையால் எந்த மார்க்கத்தின் மூலமாகவும் ; சகல மார்க்கங்களின்

மூலமாகவும் கடவுளை வழிபடுவது தவறே அல்ல .

எங்கும் செல்லுங்கள் ; அங்கிருக்கும் சக்தியின் மூலமாக கடவுளே என வழிபடத்தொடங்குங்கள் .

ஒருவேளை அந்த சக்திதான் கடவுள் என்றாலும் அதற்கு அவமானமில்லை

யார் மூலமாகவும் கடவுளை வழிபடும்போது ; அவைகள் தேவ ஆவிகளாக இருந்தால் நமக்கு நன்மை செய்யும் . அவைகள் அசுர ஆவிகளாக இருந்தால் அவைகளும் கடவுளிடமிருந்து வந்தவை ஆதலால் நமக்கு தீங்கு செய்யாது ஒதுங்கி சென்றுவிடும் . அல்லது நம்மோடு நல்லினக்கமாகவே இருக்கும் .

இது அனுபவப்பூர்வமான உண்மை . ஆவிமண்டல சக்திகளில் சகலரையும் நல்லினக்கப்படுத்திக்கொண்டு கடவுளை நோக்கி முன்னேறும் சமரச சன்மார்க்க வழி இதுவே .

"எத்தேவரையும் நின் சாயையாய்ப்
பார்த்ததேயன்றித் தலைவ!
வேறெண்ணியதுண்டோ* - வள்ளலாரின்
வாசகப் பெரு விண்ணப்பம்

எத்தேவரும் நின் சாயை – வள்ளலார் வேறு தேவர்கள் யாரும் பொய் ; அருட்பெருஞ்சோதி ஆண்டவர் என்றொரு புதிய கடவுள் இருக்கிறார் என்றா சொல்லியுள்ளார் ; அனைத்து தேவர்களும் கடவுளின் வெளிப்பாடு அவர்களின் மூலமாக கடவுளை வணங்கவேண்டும் என்றுதான் சொல்லியுள்ளார் .

யார் மூலமாக என்பது அந்தந்த குருபாரம்பரியத்தின் ஆசீர்வாதங்களை கொண்டுவரும் .

ஒவ்வொரு தேவரும் ஒவ்வொரு குணத்திற்கு அதிபதிகளாக இருப்பதால் சகல தேவர்களின் மூலமாகவும் கடவுளை வழிபடுவது ஏறக்குறைய முழுமையான கடவுளின் இயல்பை – அருளை உணர்ந்துகொள்ள சந்தர்ப்பம் ஏற்படுத்தும்

கடவுளை கொஞ்சம் உணர்வது மட்டுமே போதுமானதல்ல அவரின் முழுமையை எட்ட வேண்டுமானால் அனைவரின் மூலமாக முயற்சித்தாலே முடியும் .

நாம் கோவில்களுக்கு செல்கிறோம் . அங்கு உள்ள மூர்த்தம் – மூலவருக்கு முன்பாக காட்டப்படும் தீபத்தை காண்கிறோம் ; வேண்டுதல் செய்கிறோம் ; நம்மிடம் கொண்டுவரப்படும் தீபத்தை தொட்டு தொட்டு கும்பிட்டுக்கொள்கிறோம் .

பலவகைப்பட்ட சக்திகளின் கோவில்களுக்கும் செல்கிறோம் ; எங்கு சென்றாலும் நம் முன் கொண்டுவரப்படும் தீபத்தை மட்டுமே வழிபடுகிறோம்

சம்பிரதாயமாக சரியான வழிபாட்டையே இந்து தர்மத்தில் செய்கிறோம் ; ஆனால் தவாறாக அர்த்தம் சொல்லிக்கொண்டிருக்கிறோம்

கர்ப்பகிரகங்கள் அனைத்திலும் விளக்கு வெளிச்சம் உள்ளது . அங்கு இருட்டாக

இருப்பதால் தீபம் ஏற்றி சிலையை வழிபடுவதாக தவறாக புரிந்துகொண்டோம் .

உண்மை யாதெனில் ; சிலைகள் ஆவாகனப்படுத்தும் பல வகையான சக்திகளை குருவாக வைத்து அவர்களின் மூலமாக ஒரே ஒரு இறைவனை – ஒளிமயமானவரை வழிபடுகிறோம்

நாம் கண்ணில் காணும் சக்தியை பார்த்து அதன் மூலமாக கடவுளே உம்மை வழிபடுகிறேன் என ஜோதியைப்பார்த்து பிரார்த்தித்து அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி என தொட்டு கும்பிடுவதாக கொஞ்சம் வழக்கத்தை மாற்றிக்கொண்டால் போதுமானது .

கீதை 17 : 5 வேதங்களின் வெளிச்சத்தை புறக்கணித்து அகோராமான தவங்களை மேற்கொள்வோர் ; தன்னுணர்விலும் (சுயத்திலும்) அஹம்பாவத்திலும்

விருத்தியடைந்து இச்சைகளின் பலவிதமான வியாபகங்களில் உந்தப்படுகின்றனர்

கீதை 17 : 6 சரீரத்திற்குள் அமைந்துள்ள ஜடமூலக்கூறுகளின் கட்டுமானங்களை ஒடுக்கும் முயற்சியால் அதில் வீற்றிருக்கும் பரமாத்மாவான என்னையும் கடவுளான உயிரையும் துன்புறுத்துகின்றனர் என்பதை அறியாமல் அசுரர்களுக்கு இடம்கொடுக்கின்றனர்

இந்த எச்சரிக்கை ஆன்மீகத்தில் சாதனையை நாடும் நல்லவர்களுக்கே யுகபுருஷனால் சொல்லப்படுகிறது

ஏனென்றால் இந்த மாயை இருக்கிறதே அது அவ்வளவு எளிதாக மனிதர்களை மரணமில்லா பெருவாழ்வை நோக்கி முன்னேற விடாது . அது ஏதாவது வேறு திசையில் மனிதர்களை திருப்பி விட்டு அவர்களின் கடும் முயற்சிகளையும் யோக அப்பியாசங்களையும் ; சாதனைகளையும் ; த வங்களையும் விரயமாக்கி விடும் .

கடும் தவங்களைப்பற்றிய பெருமைகளை வாரிவழங்கி அவர்களை கொடூரமாகவும் கூட தவம் செய்ய வைத்திருக்கிறது

அத்தகையவர்கள் சித்திகள் ; வரங்களை பெற்றவுடன் அற்ப சுயநலத்திற்கு ஏவப்பட்டு அதைப்பயன்படுத்தி அதல பாதாளத்தில் விழுந்த கதைகள் ஒன்றா இரண்டா ?

காலப்போக்கில் இவர்கள் மனித குலத்திற்கும் கொடூரம் செய்யத்தொடங்கி அழிவைத்தேடிக்கொண்டார்கள் – அரக்கர்கள் என பெயர் சுட்டப்பட்டு அழிக்கப்பட்டார்கள்

இந்த அரக்கர்கள் அனைவரும் ஆதியில் நல்லவர்களாக ஆன்மீக வாழ்வில் ஈடுபட்டவவர்களே . ஓரிரு சித்திகளை பெற்றபிறகு அதனை பயன்படுத்தும் போது வந்த பேரையும் புகழையும் பணத்தையும் பார்த்து அதில் ஈர்க்கப்பட்டு சுயத்திற்குள் விழுந்தவர்களே .

சுயம் என்பதுதான் எல்லாவற்றிற்கும் அடிப்படையான தீய குணம் . எல்லாப்புகழும் இறைவனுக்கே என்ற வாசகத்தை முகமது

நபி உணர்ந்து சொன்னாரே ; ஆழ்ந்து உணர்ந்துகொள்ள வேண்டிய ஒரு வாசகம் ; எல்லாப்புகழும் இறைவனுக்கே

அதன் ஆழத்தை உணர்ந்து சகலத்திலும் நம்மை தாழ்த்தி இறைவனுக்கு ஒப்புக்கொடுக்கும் ; அல்லது கீழ்படியும் ; அல்லது அவரது சித்தத்தை மட்டும் செய்யும் ஒரு கருவியாக மாறுவதே முழு சரணாகதி

எவ்வளவு அறிவு ஞானம் இருந்தாலும் ; அவ்வளவையும் ஓரங்கட்டி சுய சித்தம் எதையும் செய்துவிடாது முழுமுயற்சியோடு இறைவனுக்கு அடிமை ஆகிவிடுவது .

தேவர்கள் அல்லது தேவதூதர்கள் என்பவர்கள் இப்படித்தான் இருக்கிறார்கள் . அவர்களுக்கு எவ்வளவு ஆற்றல் இருந்தாலும் ; அவர்களை உதவி செய்யுங்கள் என வருந்தி வருந்தி கும்பிட்டாலும் அவர்கள் ஒன்றும் செய்யமாட்டார்கள் . சாட்சியாக மட்டுமே இருப்பார்கள் .

இறைவனிடம் கொண்டு சேர்த்து அவரின் உத்தரவிற்கு காத்திருப்பார்கள் . நமக்காக பரிந்து பேசுவார்களே தவிர இறைவனின் உத்தரவில்லாத எதையும் அவர்களாக செய்யமாட்டார்கள் .

ஆனால் அசுரர்கள் அழைத்தால் போதும் தவ்விக்கொண்டு வந்து எதையாவது செய்து மனிதர்களை தங்களுக்கு வழிபடுத்துவார்கள் . உலகாதாய விசயங்களில் சிலவற்றை செய்து கொடுத்து ; அவர்களை வழிபட வைத்து மெதுவே தீமைகளில் தள்ளிவிட்டு விடுவார்கள் .

அசுரர்கள் ; அசுரர்களாக மாறியதே இந்த சுயத்தை செய்யத்தொடங்கியதாலேயாகும் .

அதென்ன கடவுள் மட்டுமே எதையும் செய்வது ; நாங்களும் கொஞ்சம் செய்வோம் ; எங்களுக்கும் சக்தி இருக்கிறது என ஆரம்பித்தே தேவர்களில் சிலர் அசுரர்களாக வீழ்ந்து போனார்கள் .

இந்த வீழ்ந்துபோன அசுரர்கள் ; மனிதர்கள் யாரும் முன்னேறி தேவர்களாக மாறி

விடக்கூடாது என்பதற்காக இறை பேரரசுடன் மறைமுகமாக யுத்தம் செய்து கொண்டிருக்கிறார்கள் .

அந்த யுத்த களம் மனிதனே .

நம் மூலமாக தேவாசுர யுத்தம் நாளும் நடந்துகொண்டுதான் இருக்கிறது .

வெளியே தெரிந்த தீமைகள் அக்கிரமங்கள் கொடுமைகள் என்பதாக மட்டும் அசுரர்கள் மனிதர்களை இயக்குவதில்லை . அகோர தவம் செய்பவர்கள் பலர் இந்த அசுர ஆவிகளின் சித்துக்களை பெற்று அடுத்த பிறவியில் உலகை ஆட்டிப்படைக்கும் அரக்கர்களைப்போல பிறந்து அக்கிரமங்கள் செய்கிறார்கள் (கீதை 17 : 5)

அக்கிரமக்காரர்களுக்கு அக்கிரமத்தை போதிக்கும் அசுரர்கள் நல்லவர்களுக்கு நவீன நாத்திகவாதம் பரப்புரை செய்கிறார்கள் . (கீதை 17 : 6)

அந்த யோகம் செய் ; இந்த யோகம் செய் ; அதன் சூசுமம் அறிந்து கொள்வது

எவ்வளவு பெரிய விசயம் . என்னா ஞானம் ; அறிவு ; வித்யை . அப்பப்பா .

குண்டலினியை இப்படி எழுப்பு அதிலே நிறுத்து . பேரானந்தம் வளரும் . அவர் இப்படி பாடியிருக்கிறார் இவர் இப்படி பாடியிருக்கிறார் . இந்த மறைபொருளைபார் . இதில் எவ்வளவு விஷயம் உள்ளது ?

ஓடி ஓடி உட்கலந்த ஜோதியை நாடி நாடி தேடியே நாட்களும் போயின

உனக்குள்ளே தான் அந்த ஜோதி இருக்கிறது அதைத்தேடு என்று தேடி தேடினால் நாட்கள்தான் போகும் . அந்த ஜோதி வெளியேயும் இருப்பது எங்கும் இருப்பது நமக்குள்ளும் வந்து கலந்திருக்கிறது என்ற பரந்த உணர்வு உண்டானால் ஒழிய எனக்குள்ளே எனக்குள்ளே என்ற சுயம் போகாது .

நீதான் கடவுள் என்பதை தெரிந்துகொள்வதன் பேர் தான் ஞானமார்க்கம் . ரெண்டு மூச்சுபயிற்சி நாலு உடற்பயிற்சி செய்யக்கற்றுக்கொள் ; பத்து

சித்தர் பாடல்களை மனப்பாடம் செய்துகொள் ; பிடி சர்ட்டிபிகேட் நீ ஞானியாகி விட்டாய் . யோகா வியாபாரிகளின் கல்லா நன்றாக களைகட்டுகிறது .

அந்தோ பரிதாபம் ; இவர்கள் பின்னால் நாட்களை கடத்துபவர்கள் எல்லாரும் நல்லவர்கள் . உண்மையின் மீது தாகம் கொண்டவர்கள் . உள்ளார்ந்த உணர்வில் இறைநாட்டம் உள்ளவர்கள் .

ஆனால் ஏதாவது ஒரு யோக அப்பியாசத்தின் தொழிநுட்ப கவர்ச்சியில் ஆழ்ந்து ஆழ்ந்து கொஞ்சம் கொஞ்சமாக கடவுள் என்று ஒருவர் இருக்கிறாரா என்று நம்பிக்கை இல்லாதவர்களாக ஆகி விடுகிறார்கள் .

கடவுள் நம்பிக்கையில்லாத சித்தர்கள் ; கடவுள் நம்பிக்கை உள்ள சித்தர்கள் என்று இரண்டு பெரும் பிரிவினரும் ஒன்றோடு ஒன்று கலந்து சித்தர்களாக இன்று அறியப்பட்டு ஆராயப்பட்டு வருகிறார்கள் .

கடவுள் நம்பிக்கை உள்ள சித்தர்கள் பக்தியையும் போதித்தார்கள் . மரணமில்லா பெருவாழ்வை அடையும் காலம் வரை பல ஆண்டுகள் பூமியில் இருந்தார்கள் .

ஓரிடத்தில் வாழ்ந்து தம்மையும் தம்மை அண்டி வரும் சீடர்களையும் கைதூக்கிவிட்டார்கள் . அப்போது உலகாதாய மனிதர்களால் தொந்திரவு அதிகரிக்கும் . அதிலிருந்து தப்பிக்க ஜீவசமாதி அடைந்ததாக காட்டிக்கொண்டு இன்னொரு ஊரில் போய் தோன்றி அங்கும் பல ஆண்டுகள் வாழ்ந்து பலருக்கும் வழிகாட்டி அங்கும் ஜீவசமாதி ஆகி இன்னொரு ஊரில் வெளிப்பட்டிருப்பார்கள்

இரண்டு மூன்று இடத்தில் ஜீவசமாதி ஆகியுள்ள சித்தர்கள் அனைவரையும் பாருங்கள் ; இவர்கள் பக்தி வழிபாட்டையும் போதித்திருப்பார்கள் .

ஆனால் கடவுள் நம்பிக்கை இல்லாத சிலர் ; நானே கடவுள் ; நான் ஜீவசமாதியாகி அந்த இடத்தில் சாகாமல் இருந்துகொண்டே

உலகிற்கு நல்லது செய்வேன் ; ஜீவசமாதிதான் உலகத்திலேயே அடையவேண்டிய உன்னத இலக்கு என்பதாக பொய்யையை பரப்பி விட்டார்கள் .

உண்மையை உணராத அழுக்கு சித்தர்கள் என்றொரு வார்த்தையை வள்ளலாரும் பயன்படுத்தியுள்ளார் . அவர் ஜீவசமாதிகளை ஆதரிக்கவில்லை . அது மாயாவாதம் . தவறான இலக்கு .

மரணமில்லா பெருவாழ்வு – ஒளி சரீரம் பெற்று தேவராகி பூமியை கடந்து பரலோகம் போகவேண்டும் .

பூமியிலேயே உயிரை வைத்துக்கொண்டு உடலை வருத்தி அடக்கி ஒடுக்கி ஜீவசமாதி இருப்பதால் அந்த ஆத்மாவிற்கு என்ன பயன் ?

இவரும் கடவுளைப்போல ஆகி விட்டார் . இந்த ஏரியாவை காத்துக்கொண்டிருக்கிறார் . இங்கு வருவோர் போவோருக்கு நல்லதை வாரி வாரி வழங்கிக்கொண்டிருக்கிறார் . இவரைப்போல நீங்களும் சித்தராகி

ஜீவசமாதி அடைந்து ஊர் உலகத்திற்கு நல்லது செய்து பெரும் புகழடையுங்கள் – சுயம்

உண்மை என்னவென்றால் ஜீவசமாதியில் இருந்த பலர் செத்துப்போய் அடுத்த பிறவிக்கு போய் விட்டார்கள் . அப்படி அடுத்த பிறவிக்கு போனால் மட்டுமே அந்த ஆத்மாக்கள் அடுத்து என்ன கற்றுக்கொள்ளவேண்டுமோ அதைக்கற்றுக்கொண்டு இறைவனை நோக்கி முன்னேறமுடியும் . அதை இறைவன் சரியாக செய்து அவர்களை வளர்க்கிறார் .

பிறகெப்படி இந்த சித்தர் சமாதியில் ஆற்றல் இருக்கிறது ? நல்ல அலைவரிசை கிடைக்கிறது . ஏறுது இறங்குது வேவ்லெந்து இழுக்குது என்றெல்லாம் சிலர் பேசிக்கொள்கிறார்கள் என்றால் அந்த சரீரத்தில் அசுர ஆவிகள் வந்து உட்கார்ந்துகொண்டு சித்தர்களின் பேரை சொல்லிக்கொண்டு செயல்படத்தொடங்கி விடுகின்றன .

எப்படியேனும் கடவுளிடம் மனிதர்கள் செல்வதை தடுத்து சுயத்தை ; சுய நம்பிக்கையை ; சுய மகிமையை தூண்டி விடவேண்டும் .

கடவுளின் தேவை அவசியமில்லாமலேயே பூமியை சீர்படுத்தி சொர்க்கலோகமாக மாற்ற மனிதனால் முடியும் . யோகம் செய் ; மூச்சை அடக்கி ஏற்றி இறக்கு குண்டலினியை எழுப்பு ; மூலிகையை அறிந்துகொள் சித்தர்களின் பரிபாசைகளை அவிழ்த்து மாபெரும் ஞானியாகி விடு .
பிறவாப்பெருநிலை – ஜீவசமாதி அடைந்து விடு

ஜீவசமாதி அடைந்தவர்கள் அங்கேயே இருப்பதில்லை கொஞ்ச நாளில் இறக்கிறார்கள் . அதுவரை உடலை வருத்தி அதன் மூலககூறுகளின் கலவைகளை துன்புறுத்தி தனது ஆத்மாவை வருத்திக்கொள்கிறார்கள் . தன்னுள் உறையும் பரமாத்மாவையும் கடவுளையும் துன்புறுத்துகிறார்கள் .

இதற்கு தண்டனையாகவே அவர்களின் அடுத்த பிறவி அமைகிறது . அதில் அவர்கள் சுயத்தை வெறுக்குமளவு பைத்தியங்களைப்போல பூமியை சுற்றிக்கொண்டு சில வருடம் கழிக்கிறார்கள் .

பைத்தியங்களைப்போல கிடைத்த அழுக்கான கந்தலை உடுத்திக்கொண்டு அங்கும் இங்கும் சுற்றிக்கொண்டு கிடைத்தால் உண்டு கொண்டு அல்லது வெறும் பீடியை மட்டும் பிடித்துக்கொண்டு தூங்கியும் தூங்காமல் நடந்துகொண்டு உற்றார் உறவினரைப்பிரிந்து சிலர் சுற்றிக்கொண்டே இருக்கிறார்களே . இவர்களில் சிலருக்கு ஏதாவது கொடுத்தால் நல்லது நடக்கிறது என உலகத்தாரால் கண்டுபிடிக்கப்பட்டு அவரை சித்தர் சாமி என்று சிலர் போஷித்து கும்பிடத்தொடங்கினாலும் அதைக்கூட அறியாமல் அவர்கள் பாட்டுக்கு இருக்கிறார்களே . இவர்கள் எதற்காக இப்படி

இருக்கிறார்கள் என்ன கற்றுக்கொள்ள இறைவன் இவர்களை இப்படி வைத்திருக்கிறார் ?

சுயம் என்ற பெருமையை விட இப்படி பைத்தியம் போன்ற வாழ்வை அவர்கள் கடந்து செல்லவேண்டியுள்ளது .

இவர்கள் ஜீவசமாதியில் இருந்தவர்களே . அல்லது அதற்கு முயற்சித்து தோற்றுப்போனவர்களே .

ஜீவசமாதி ஜீவசமாதி என உடலை ஒடுக்க பழகினார்களே அதன் விளைவு யாதெனில் பைத்தியங்களோடு பைத்தியங்களாய் உயிரோடு வாழும் நடை பிணங்கள் என்பதற்கு ஒப்ப ஒரு வாழ்வு சில பத்தாண்டுகள் இப்பூமியில் வாழும்படி ஆகி சுயபெருமை என்பதற்கு பட்டறிவை அடையவேண்டியுள்ளது

சுயம் என்ற ஒன்றை விட்டு இறைவனை சரணடைய பழக வேண்டும் . எவ்வளவு ஞானம் பெற்றாலும் அவ்வளவு பக்தி – சரணாகதியை கற்றுக்கொள்ளவேண்டும் .

அதற்கு உலகத்தில் அவதாரங்களாலும் இறைவனின் வாயாக வந்த இறை தூதர்களாலும் அந்தந்த காலகட்டத்தில் பல்வேறு நாடுகளில் பல்வேறு இனமக்களுக்கு வழங்கப்பட்ட வேதங்களை உரசிப்பார்க்கவேண்டும் . ஆண்டவர் வரும் தருணமிது அதுவரை விசாரம் செய்துகொண்டிருங்கள் என்று வள்ளலார் கூட கட்டளையிட்டாரே அந்த விசாரம் என்பது உலகத்தில் பல மதங்களிலும் மார்க்கங்களிலும் உள்ளார்ந்த அறிவு ஞானம் உண்மைகள் பகுதி பகுதியாக வெளியாக்கப்பட்டுள்ளனவே அவைகளை காதால் கேட்டோ படித்தோ அதில் உள்ள உண்மை என்ன என விசாரம் செய்து கடைபிடிக்க முயலவேண்டும்

சகல மதங்களும் இறைவனால் அவரின் அடியவர்கள் மூலமாக உலகிற்கு வழங்கப்பட்டதே என்பதை ஒத்துக்கொள்ளவேண்டும் . அவைகளில் பல மனித கலப்படங்கள் காலப்போக்கில் கலந்து

விட்டன . எனவே இதுதான் சரி அதுதான் சரி என பிடிவாதம் பிடித்துகொண்டு அலையாமல் அவைகளின் உள்ளார்ந்த உண்மைகள் என்ன என்பதை உரசிப்பார்த்துக்கொண்டே இருக்கவேண்டும் .

ஏசாயா 8 : 19. அவர்கள் உங்களை நோக்கி: அஞ்சனம் பார்க்கிறவர்களிடத்திலும், முணுமுணென்று ஓதுகிற குறிகாரரிடத்திலும் விசாரியுங்கள் என்று சொல்லும்போது, ஜனங்கள் தன் தேவனிடத்தில் விசாரிக்கவேண்டியதல்லவோ? உயிருள்ளவர்களுக்காகச் செத்தவர்களிடத்தில் விசாரிக்கலாமோ?

20. வேதத்தையும் சாட்சி ஆகமத்தையும் கவனிக்கவேண்டும்; இந்த வார்த்தையின்படியே செல்லாவிட்டால், அவர்களுக்கு விடியற்காலத்து வெளிச்சமில்லை.

## 21. இடுக்கண் அடைந்தவர்களாயும் பட்டினியாயும் தேசத்தைக் கடந்துபோவார்கள்

**ஜீவசமாதி ஜீவசமாதி என்று அலைவதை இப்போது சிலர் நாகரீகமாகவும் பெருமையாகவும் காட்டிக்கொள்கிறார்கள்**

**அவர்கள் தேசத்தில் சுற்றித்திரியும் பலரை காணும்போது ஏன் இவர்கள் இப்படி ஆனார்கள் ; இந்த வாழ்வால் இவர்களுக்கு என்ன பயன் என நிதானிக்கவேண்டும்**

**கீதை 17 : 7 ஒருவன் செய்யும் யாகங்கள் ; தானங்கள் மற்றும் தவங்கள் ஏன் உண்ணும் உணவில் கூட அவன் நிலைத்துள்ள குணங்கள் வெளிப்படுகிறது என்பதை அறிவாயாக .**

**கீதை 17 : 8 ஆயுளை நீடிக்கும் ; வாழ்வை பரிசுத்தமாக்கும் ; மேலும் பலம் ; ஆரோக்கியம் ; சுகம் மற்றும் திருப்தியையும் நல்கும் உணவுகள் சத்வ குணத்தில் நிலைத்தோருக்கு பிரியமானவை**

. இவ்வுணவுகள் ரசமும் கொழுப்பும் ஊட்டமும் உள்ளவைகளாக இதயத்தை இதப்படுத்தும் .

கீதை 17 : 9 மிகவும் கசப்பானவையும் ; புளிப்பானவையும் ; உப்பும் காரமுமாக வறுக்கப்பட்டவையும் ; சூட்டால் கொதிப்பவையுமான உணவுகள் ரஜோகுணம் நிரம்பியோருக்கு பிரியமளிப்பவை .இவைகள் கோபத்தையும் தாபத்தையும் உண்டாக்கி நோயை வளர்ப்பவை .

கீதை 17 : 10 மூன்று மணி நேரத்திற்கு முன்பே சமைக்கப்பட்டு ஊசிப்போன ; சப்பென்று சுவையற்ற உணவும் ; எச்சில் பட்டவையும் ; தீண்டத்தகாத அசுத்தங்கள் கலந்த உணவும் தமோகுணம் நிரம்பியவர்களுக்கு பிரியமளிப்பவை .

சற்குருநாதர் ஸ்ரீகிரிஷ்ணர் உண்ணும் உணவின் தன்மையில் கூட நமது இயல்புகள் வெளிப்படுகின்றன என்பதுடன் அப்படிப்பட்ட உணவுகள் நிச்சயமாக அப்படிப்பட்ட

குணத்தை நம்முள் அதிகப்படுத்தும் என்கிறார் .

வளர்ந்து வரும் அதிவேக காலத்தில் ; உணவுகள் புதிய பரிமாணத்தில் பரவலாக அமோகமாக குறைந்த விலையிலும் கிடைக்கின்றன . தள்ளுவண்டிகளில் சிக்கன் ரோஸ்ட்டுகள் காராசாரமாக மதுபானம் அருந்துவோர் முதல் குடும்பத்தினர் வரை பல கிலோக்கணக்கில் சிறிய கிராமத்தில் கூட அன்றாடம் தின்று தீர்க்கிறார்கள் . இதில் ஒரு பெருங்கூட்டமே பிழைக்கிறது . அத்தோடு பறவைக்காய்ச்சல் அவ்வப்போது வாட்டி வதக்கி விடுகிறது .

பறவைக்காய்ச்சல் ஒரு ஆவியின் வேலை

இந்த சிக்கனால் உடலில் வெள்ளை அணுக்கள் குறைந்து ; இந்த ஆவி ஏறிக்கொண்டால் உடல் நோவு பிச்சு உதறி காய்ச்சல் போனாலும் அந்த நோவு கனுகனுவுக்கு வலித்து கொஞ்சம் கொஞ்சமாக வெளியேறும் . கடைசியில்

சுண்டு விரலில் நோவாக ஒரு மாதம் கூட சிலருக்கு இருக்கும் .

இந்த சிக்கன் கலாச்சாரத்தைப்போல பாஸ்ட் புட் காலாச்சாரமும் இப்போது எங்கும் ஓடிக்கொண்டிருக்கிறது . இந்த கால சூழலில் நாமும் அகப்பட்டு நம்மை அறியாமல் எந்த குணத்தை நம்மிடம் துண்டி விட்டுக்கொண்டிருக்கிறோம் என்பதை சாதகர்கள் கொஞ்சம் நிதானித்து கடைபிடிக்கவேண்டும் .

வயிறு நமக்கு அடங்கி இருக்காமால் அதற்கு நாம் அடங்கி இருக்கும் வரை யோகம் சித்தியில் பெரிய முன்னேற்றமில்லை .உடலை அன்றாடம் நடத்த எவ்வளவு உணவு வேண்டுமோ அவ்வளவு உண்டால் போதும் .

அதிலும் யோகத்தில் நிலைப்பவனுக்கோ உடல் பரத்திலிருந்தும் உணவை எடுத்துக்கொள்ளும் .வெளியே இருந்து வரும் ஒவ்வொரு உணர்வு மட்டுமல்ல ; உணவும் நமது சத்வ இருப்பை களங்கப்படுத்தவே முனையும் . இவைகளால் பாதிக்கப்படுவது

என்பதை கடந்த நிலை அவ்வளவு லேசானது அல்ல ; ஆனால் அனுபவத்தால் அந்த பக்குவத்தை பெற வேண்டும் . அது மனித முயற்சியால் மட்டும் சாத்தியமல்ல ; இறைவனது கிருபையால் பரத்திலிருந்து வரும் ஒத்தாசையால் மட்டுமே முடியும் .

கோவில்கள் ; சத்சங்கங்களில் வழங்கப்படும் பிரசாதங்கள் இறைவனிடமிருந்து கிடைத்ததாக மதிப்புடனும் தாழ்மையுடனும் உண்ணப்படவேண்டும் .

அது உண்மையில் பிரசாதமல்ல ; பர சாதம் . பரத்தோடு தொடர்புடைய நம்மை விட உயர்ந்த சக்தி ஒன்றிற்கு படைக்கப்பட்டு அதன் இயல்பு அவ்வுணவோடு கலந்து நமக்கு கிடைப்பதால் அந்த உணவின் பெயர் பரசாதம் . சமஸ்கிரதத்தில் ப்ரசாதம் என்ற உச்சரிப்பை பிரசாதமாக மருவி உச்சரித்து கொண்டுள்ளோம் .

எச்சில் பட்ட உணவு ; அந்த உணவுடன் அந்த நபரின் இயல்பு கலந்து விடுவதாலேயே

ஒவ்வாததாகி விடுகிறது . அடிமைத்தனமான தமோகுணம் வளர காரணமாகும் . பல வகையான அடிமைத்தனங்கள் ; நடிகர்களின் மீதான அபிமானங்கள் முதலாக பல கவர்ச்சி மோகங்கள் தமோகுணத்தின் வெளிப்பாடே .

அதே எச்சில் உணவு பரத்திலுள்ள சக்தியின் எச்சிலாக இருந்தால் அது நன்மை அளிப்பவையாக இருக்கும் .

அடுத்து முடிந்த அளவு நம் வீட்டில் மட்டுமே உண்பது ; நமக்கு ஒவ்வாமையை ஏற்படுத்தாத உணவு .

ஆனால் எவ்வளவு சுத்தமாக இருந்தாலும் விடுதி உணவுகள் நமக்கு மறைமுகமாக நன்மை பயக்காது .

**யாகங்களின் வகைகள் மற்றும் விளைவுகள் :**

**கீதை 17 : 11 பலன் விளைவில் பற்றற்ற ஞானிகளால் ; யாகங்களின் விதிகளை நிறைவேற்ற என்று விதிகளைப்பின்பற்றி**

## முழு மனதோடு செய்யப்படும் யாகங்கள் சத்வ குணத்தை சார்ந்தவையாம்

சில யாகங்களின் விதிமுறைகள் கடவுளை உணர்ந்த
ஞானிகளால் ; முனிவர்களால் ; சித்தர்களால் ஒழுங்கு படுத்தப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன . இவற்றை உருவாக்கியவர்கள் பரலோக சக்திகளோடு நெருங்கிய தொடர்பை பெற்றவர்கள் . அந்த ஆவிமண்டல அனுபவ உணர்வால் ; தமக்கு வெளிப்படுத்தப்பட்ட மேன்மையை பலரும் அடைய வேண்டி அதை ஒரு சடங்காக மாற்றி ஒழுங்கு படுத்தி கொடுத்தனர்

இந்த சடங்குகுகளை – யாகமாக செய்வதால் அதை செய்கிறவர்கள் இப்போது என்ன நிலைமையில் இருக்கிறார்களோ அந்த நிலைமையிலிருந்து ஆத்ம முன்னேற்றம் லவ்கீக முன்னேற்றம் அடைய எது தேவையோ அதை இறைவனும் ; இறை சக்திகள் மட்டுமே தீர்மானித்து அந்த நபர்களுக்கு வழங்க முடியும்

என்ன வழங்கவேண்டும் என்பதை பரம் தான் தீர்மானிக்க முடியுமே தவிர அதற்கு செலவு செய்தவர்களால் அதை வற்புறுத்தி பெற முடியாது

அந்த யாகத்தை நடத்திகொடுக்கும் புரோகிதர்களாலும் அதை தீர்மானிக்க முடியாது . ஆனால் காலபோக்கில் அந்த யாகத்தின் உட்பொருள் என்ன என்பதையே உணராத புரோகிதர்கள் தாங்கள் ஏதோ எல்லாம் தெரிந்தவர்கள் போல தங்கள் சிற்றறிவால் விளக்கம் சொல்லவும் ; பலனை பெற்றுத்தந்ததாகவும் அலட்டத்தொடங்கி விட்டனர் . ஆவி மண்டல சக்திகள் அவர்களுக்கு கைவல்யம் ஆகி அவர்கள் சொல்வதை செய்வதாகவும் தங்களுக்கு தாங்களே ஏமாற்றிக்கொண்டு பிறரையும் ஏமாற்றத்தொடங்கி விட்டனர் .

இதில் செலவழித்தவர்கள் அடைந்த கேடு கொஞ்சம் என்றால் ; அதை ஆள்வதாக தங்களை தாங்களே ஏமாற்றிக்கொள்ளும் புரோகிதர்கள் அடையும் கேடு பல

மடங்கு ; அடுத்த பிறவியில் அவர்கள் அஞ்ஞானத்தால் பீடிக்கப்பட்டு பெரும் பாடு படுகிறார்கள் .

புரோகிதர்கள் புரோகிதர்களாக பிறப்பதேயில்லை ; மாகா பாவப்பட்ட குடும்பத்தில் பிறந்து ரஜோகுணம் உள்ளவர்களால் பெரும் துன்பத்திற்காளாகிறார்கள்

சத்வ குணம் என்பது அசந்தால் தமோ குணமாக மாறுமே தவிர ரஜோ குணமாக மாறாது . அதனால் சாத்வீகள் தங்களை அலட்டினால் அடுத்த நொடி தமோ குணத்திற்கு தரம் தாழ்ந்து ரஜோ குனமுள்ளவர்களிடம் மாட்டிக்கொண்டு அவர்களால் ஆட்டுவிக்கப்பட்டு தடுக்கவும் முடியாமல் தப்பிக்கவும் முடியாமல் கண்ணீர் விட்டு கதறும்படியாக முடியும் . அந்த பட்டறிவு அவர்களுக்கு அலட்டலை விடவைக்கும் . ஆத்மாவில் சுயம் ; அலட்டல் ; பெருமை என்பது

சாத்வீகளுக்கு கடவுளிடம் பெரும் பின்னடைவை ஏற்படுத்துவது

நான்காவது ஆதிதேவரான நாராயணி யாராலும் அழிக்க முடியாமல் ஆட்டம் போட்ட மகிஷாசுரனை அழித்தாள் என்று வேதங்கள் சொல்கின்றனவே அவை சுய மகிமையால் உண்டாகும் அசுர இயல்பை குறிப்பவையே .

கடவுளை நெருங்கும் ஆத்மாவுக்கு பெரும் எதிரியே இந்த சுய மகிமையே . எந்த வகையிலாவது உண்டாகும் பெருமை மிக தாழ்ந்த நிலையில் உள்ளவர்கள் முதல் கடவுளை நெருங்கிய ஆத்மாக்கள் வரை அழிக்கவே முடியாத எதிரியாக சுய மகிமை என்ற அசுர இயல்பு முழைத்து விடுகிறது

ஆகவேதான் சற்குருநாதர் ஸ்ரீகிரிஷ்ணர் இந்த சுலோகத்தில் யாகம் செய்வோர் யாகத்தின் பலன்கள் விளைவுகள் பற்றி அலட்டாமல் யாகவிதிகளை நிறைவேற்ற யாகம் செய்து விட்டு அதை கடவுளுக்கு அர்ப்பணித்து விடுங்கள் என்று வழிகாட்டுகிறார்

ஒரு யாகம் நடத்தப்படுகிறதென்றால் அங்கு இறைவனால் முன்குறிக்கப்பட்ட பல ஆத்மாக்கள் தற்செயலாக கூட அங்கு வந்திருப்பார்கள் ; அவர்களுக்கு ஆத்ம முன்னேற்றம் உண்டாக்கப்படும் . அவ்வாறு அழையா விருந்தாளியாக அங்கு வந்தவருக்கெல்லாம் பலன் கிடைக்கும் போது அதை பெரும் பொருட்செலவில் செய்தவர்களுக்கு ; நடத்தி கொடுத்தவர்களுக்கு பலன் இல்லாமலா போகும் ; ஆனால் அதை நாம் மனதில் கருதலாகாது என்பதுதான் இங்கு எச்சரிக்கை பலன் விளைவில் பற்றில்லாது உலக நன்மைக்காக ; அங்கு தற்செயலாக வந்திருக்கும் ஆத்மாக்களின் முன்னேற்றத்திற்காக என்று யாகங்கள் செய்யப்படவேண்டும் . ஆத்ம முன்னேற்றம் என்பது இறை பேரரசின் பணி . சகல ஆத்மாக்களையும் வளர்க்கும் பொறுப்பில் உள்ள இறைபேரரசு ; தனக்கு கருவியாக

இருந்த சத்வ யாகத்திற்கு பெரும் பலனளிக்கும்

ஆனால் அப்பபடியில்லாமல் ரஜோகுணத்தோடும் ; தாமச குணத்தோடும் யாகங்கள் செய்யப்படுகின்றன என கீதை இங்கே விவரிக்கிறது . இந்த யாகங்கள் இறைபேரரசுக்கு ஒத்திசைவான யாகங்கள் அல்ல ; மாறாக இறைவனுக்கு முரண்பாடான யாகங்கள் . அவைகளில் நம்பிக்கை உண்டாக்க அந்த யாகங்களுக்கு பலனை அசுர ஆவிகள் முன்னிருந்து கொடுத்து ஊக்குவிக்கும் ; ஆனால் முடிவு என்னவோ ஆத்மாவில் பின்னேற்றம் உண்டாகி அடுத்த பிறவி துன்பப்படவேண்டியதாகி விடும் . காரணமே அறியாமல் சில ஆத்மாக்கள் மன நோவிலேயே இருப்பார்கள் . எவ்வளவோ ஆன்மீக தேடல் செய்தும் மனம் சஞ்சலத்திலேயே கழிப்பார்கள் ; இறை பேரானந்தம் அடைய முடியாது அங்கும் இங்கும் அலைவார்கள் . முந்தய பிறவியில்

புரோகிதம் செய்த பலர் இப்பிறவியில் இப்படி இருப்பார்கள்

கீதை 17 : 12 பெரும் முயற்சியுடன் ஆனால் பலன் விளைவு கருதி ; தற்பெருமையுடனும் கூட சிலரால் யாகங்கள் செய்யப்படுகிறது . பரதவர்களின் தலைவனே ; அவைகள் ரஜோகுண யாகங்கள் என்றறிக .

கீதை 17 : 13 சாஸ்திர விதிகளை முழுமையாக பின்பற்றாமல் ; வேத மந்திரங்களின் உச்சாடனமும் முழுமையாக செய்யாமல் ; ப்ரசாத விநியோகமும் போதிய அளவு செய்யாமல் ; புரோகிதர்களுக்கும் கூட போதிய தட்சிணை கொடுக்காமல் உள்ளார்ந்த நம்பிக்கையும் இல்லாமல் பெயரளவில் யாகங்களும் செய்யப்படுகின்றன ; அவை தமோ குண யாகங்கள் என்றறிக .

யாகங்கள் செய்வதிலும் இவ்வளவு பிரச்சினையா என்று சிந்திக்கும் அளவு இந்த சுலோகங்கள் உள்ளன அல்லவா ? ஆனால் இவை தெளிவை தருபவையே .

யாகங்களை வடிவமைத்தோர் அவர்கள் தெளிவாகவே அதை வடிவமைத்தார்கள் . ஆனால் அவைகளின் மறை பொருள் என்ன என விளங்க முயற்சிப்பதோ அல்லது விளக்குவதோ மனிதர்கள் செய்கிற தவறாக முடிகிறது . எழுதுனவன் ஏட்டை கெடுத்தான் படித்தவன் பாட்டை கெடுத்தான் என்பதுதான் இன்றைய நிலையாக இருக்கிறது

இப்படி சிலரால் இன்னின்ன பலன் விளையும் என விளக்கம் சொல்லப்பட்டு அதை நம்பி சிலர் அந்த சாஸ்திரங்களை முழுமையாக நிறைவேற்ற சிரத்தையோடு பொருட்செலவும் செய்து நிறைவேற்றுகிறார்கள் . இது பாராட்டத்தக்கதுதான் ; ஆனால் பலன் என சொல்லப்பட்டதும் அறியாதவர்களின் அரைகுறை விளக்கமாக இருக்க அது நடக்கும் என எதிர்பார்த்து செய்ததே ஒரு தவறாக இந்த யாகங்கள் கேடுகளை உண்டாக்குகின்றன என்பதே ஸ்ரீகிரிஷ்ணரின் எச்சரிக்கையாக இருக்கிறது ; இந்த

ரஜோகுண யாகங்களை கூட கொஞ்சம் பரவாயில்லை என சொல்லலாம் ஆனால் தமோகுண யாகங்களோ பெரும் கேட்டில் முடிபவை

பலர் செய்கிற யாகத்தை பற்றி கேள்விப்பட்டு சிலர் புரோகிதர்களை அணுகுகிறார்கள் ; இவ்வளவு பணத்திற்குள் இதை செய்யுங்கள் என்று வற்புறுத்துகிறார்கள் ; சரி சரி அதற்குள் முடிப்போம் என பல அரைகுறை யாகங்களை புரோகிதர்களும் நடத்தி வைக்கின்றனர் . இவை பெரும் பின்னடைவை உண்டாக்குகின்றன ; நானும் யாகம் செய்தேன் என்ற பெயரில் பல கேடுகள் வந்தடைகின்றன

ஆக இவைகளில் நாம் பெற வேண்டிய படிப்பினை யாதெனில் யாகம் செய்வதாக இருந்தால் சிரத்தையோடு என்ன பலன் என்பதைப்பற்றி கவலைப்படாமல் யாகங்களுக்காக யாகத்தை செய்யவேண்டும்

. பலனை கடவுளுக்கு அர்ப்பணித்து விடவேண்டும்

அல்லது யாகங்களை யோகங்களாக கடவுள் ஏற்கனவே மாற்றம் செய்துகொண்டார் என்ற ஸ்ரீகிரிஷ்ணரின் அறிவுரைக்கு கீழ்படிய வேண்டும்

பொருட்களின் வழி யாகங்களா ? யோகங்களின் வழி யாகங்களா ?

கீதை 3:10 படைப்பின் துவக்கத்தில் கடவுள் தேவதூதர்களையும் மனிதர்களையும் படைத்து மனிதர்களுக்கு உண்ணத்தக்க கால்நடைகளையும் படைத்து ஆசிர்வதித்தார் ! அவற்றை கடவுளுக்கான யாகங்களாக -- பாவ நிவாரண ;குற்ற நிவாரண பலிகளாக செலுத்தி கடவுளோடு ஒப்புறவாகும் மார்க்கத்தையும் உயிர்ப்பலி இட்டு அவற்றை உண்டு மகிழ்ந்திருக்கவும் அருள் செய்தார் !!

கீதை 3:11 தேவதூதர்களில் அசுரர்கள் ஆனவர்கள் மனிதர்கள் தங்களுக்காக பலிசெலுத்தி வழிபடுவதில் மகிழ்ந்து

மனிதர்களின் பலவகை இச்சைகளை
நிறைவேற்றுவதும் ;அதனால்
அசுரர்களுக்கும் மனிதர்களுக்கும் இணக்கம்
உண்டாகி அசுரர் ஆளுமை செய்வதுமாய்
ஆயிற்று !!

கீதை 3:12 உலகியல் வாழ்வின்
மோஹறங்களுக்காக ; அசுரர்களை
யாகங்காளால் திருப்தி படுத்துவதும்
அசுரர்கள் மனிதர்களின் ஆடம்பர
அலங்கார, ஆட்சிகளை
நிறைவேற்றுவதுமாய் ஆனது ! அது
கடவுளுக்கு சேரவேண்டிய மஹிமையை
அசுரர்கள் திருடுவதாயிற்று !!

கீதை 3:13 அப்படியில்லாமல் முழுமுதல்
கடவுளுக்கே முதல்மரியாதையாக யாகங்கள்
--உயிர்ப்பலி செலுத்தி அதனை உண்ட
அவரது நல்லடியார்கள் எல்லா
பாவங்களிலிருந்தும் வீடுபேறு
அடைந்தார்கள் ! மற்றவர்களோ தங்கள் சுய
இச்சைகள் நிறைவேற யாகங்கள் செய்து
பாவத்தையே உண்டார்கள் !!

**கீதை 3:14 அதனாலேயே விதிக்கபட்ட கடமைகளில் யோகங்களாக யாகங்கள் நிலைமாற்றம் செய்யப்பட்டன !இத்தகைய யோகங்கள் வழியான யாகங்களே மழை பெய்ய காரணமாகிறது ;அந்த மழையினால் உணவுதாணியங்கள் உண்டாகி அனைத்து உயிரிணங்களுக்கும் ஆதாரமாகிறது !!**

**கீதை 3:15 ஒழுங்குபடுத்த பட்ட கடமைகள் வேதங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன !அந்த வேதமோ முழுமுதல் கடவுளால் வெளிப்படுத்தபட்டவை !அத்தோடு உண்ணதமான தெய்வீக இயல்புகள் யோக நெறிமுறைகளில் பொதிந்துள்ளன!!**

**கீதை 3:16 எனதருமை அர்ச்சுணா ! வேதங்கள் காட்டுகிற யோக நெறிமுறைகளை வாழ்வின் ஒவ்வொரு செயல்பாட்டிலும் கடைபிடிக்காதவர்கள் பாவம் நிறைந்த பாதையிலேயே நடந்து வெறும் புலனிச்சைகளுக்காகவே வாழ்ந்து துக்கசாகரத்தில் மூழ்குகிறார்கள் !!**

கீதை 3:17 யார் வாழ்வு நெடுகிலும் தன்னை தானே உணர்கிறவனாய் ; தன்னில்தானே நிலைத்து திருப்தியுற்று ; தெய்வீக சமாதானம் எய்தியவன் பரிபூரணத்தை எட்டுகிறான் !அவன் செயல் செயலின்மையை கடந்தவனாகிறான்!!

கீதை 3:18 பரிபூரணமடைந்த மனிதனுக்கு ; விதிக்கபட்ட கடமைகளை நிறைவேற்ற பாடுபடுதல் என்ற நிர்ப்பந்தம் ஏதுமில்லை ! அல்லது அக்கடமைகளை நிறைவேற்றாமலிருக்க காரணங்களும் இல்லை ! அல்லது எதற்காகவேனும் பிறரை எதிர்பார்த்திருக்க வேண்டிய அவசியமுமில்லை !!

கீதை 3:19 ஆகவே பலன் விளைவுகளில் பந்தப்படாமல் செயலுக்காக செயலை ஒருவன் செய்துவரவேண்டும் !அப்படி பற்றில்லாமல் செயல்படுவதால் ஒருவன் கடவுளை அடைகிறான் !!

கீதை 3:20 விதிக்கபட்ட செயல்களை செய்வதன் மூலமாக ஜனகர் போன்ற

அரசர்கள் பூரணத்தை எய்தினார்கள் ! நீயும் அதுபோல பொதுமக்களுக்கு கற்றுகொடுக்கும் பொறுப்போடு கடமையை செய்வாயாக !!

கீதை 3:21 தலைவர்கள் எவ்வழியோ பொதுமக்களும் அவ்வழியே செல்கிறார்கள் ! முன்னுதாரமான செயல்பாடுகளில் தலைவன் என்ன தரத்தை வெளிப்படுத்துகிறானோ அதனையே அனைவரும் பின்பற்றுவார்கள் !!

கீதை 3:22 பிரதாவின் மகனே !மூவுலகங்களிலும் எனக்கு விதிக்க பட்ட கடமைகளும் ஏதுமில்லை ! நான் விரும்புகிறவைகளும் ஏதுமில்லை ! எதையாவது பெற்றுகொள்ள வேண்டிய அவசியமுமில்லை ! இருப்பினும் செயல்களில் ஈடுபட்டவனாகவே இருக்கிறேன் !!

கீதை 3:23 பார்த்தா ! என் மேல்வந்த கடமைகளை அக்கறையுடன் செய்துகொண்டிருப்பதை ஒருவேலை நான்

நிறுத்தினால் முழு உலகமும் என்னை பின்பற்றி பொறுப்புகளை தட்டிகழிக்காதா ??

கீதை 3:24 நான் செயல்படுவதை நிறுத்தினால் முழு உலகமும் சீரழிவில் விழுந்து வேண்டாத குழப்பங்கள் உருவாக காரணமாகிவிடுவேன் ! அதனால் உயிரிணங்கள் அனைத்தினதும் நிம்மதியை கெடுத்தவனாவேன் !!

கீதை 3:25 ஞானமில்லாதோர் பலன் விளைவுகளில் பற்று கொண்டோராய் செயல்பட்டால் ; வெளிப்பார்வைக்கு அறிவுள்ளோரும் அதேமாதிரியாகவே செயல்பட வேண்டும் ---உள்ளார்ந்து பலன் விளைவுகளில் பந்தமில்லாதவராக ! ஏனெனில் பொதுமக்களை உய்விக்கும் கடமை ஞானமுள்ளோர் மீதே உள்ளது !!

கீதை 3:26 கிரிஸ்ண தெளிவை கற்றுணர்ந்த ஞானமுள்ளோர் ; பலன் கருதி பணியாற்றும் ஜனங்கள் மேலும் கெட்டுபோகாதபடி கடமையை தட்டிகழிக்க பழக்கலாகாது ! மாறாக கடவுளுக்கு

அர்ப்பணமாக ; செயலுக்காக செயல் புரிந்து ஜனங்களை எல்லா வகையான செயல்களையும் செய்கிறவர்களாய் பழக்கவேண்டும் !!

கீதை 3:27 மூவகை(சத்துவ, ரஜோ &தாமச) குணங்களால் மயக்கமுற்றிருக்கும் ஆத்துமாக்கள் ; உலகிலே நால்வகை தொழிலிருந்து இயற்கையாக எழும்பும் செயல்பாடுகளை தாமே திட்டமிட்டு ; நிர்வகித்து செயல்படுவதாக நம்பிக்கொண்டுள்ளனர் !

கீதை 3:28 போர்க்கலையில் வல்லவனே !மெய்யறிவில் நிலைத்த ஆத்துமாக்களோ கடவுளுக்கு அர்ப்பணமாக செயல்படுவதற்கும் பலன் விளைவில் பற்று கொண்டு செயல்படுவதற்கும் உள்ள வித்தியாசத்தை உணர்ந்தவர்கள் ! புலன்களுக்கும் புலன்இச்சைகளுக்கும் ஆட்பட்டு அதற்காக செயல்படுவதிலிருந்து தம்மை விடுவித்து கொள்கிறார்கள் !!

கீதை 3:29 நால்வகை தொழிலின் இயல்புகளால் குழம்பிய ஆத்துமாக்கள் ;அறியாமையால் உலகியல் செயல்பாடுகளை சாசுவதம் என நம்பி அதற்கு பந்தப்பட்டு கொள்கிறார்கள் ! ஞானமின்மையால் கீழ்னிலையடைந்த அவர்களின் செயல்பாடுகளை ஞானமுள்ளோர் ஒருபோதும் தடைசெய்யலாகாது !!

கீதை 3:30 ஆகவே அர்ச்சுணா ! கடவுளின் மீது மனம் நிலைத்தவனாய் ; அவரை முற்றிலும் சரணடைந்து தான்தனது என்ற அகம்பாவத்தை விட்டுவாயாக ! மனதாழ்மையுடனும் கவணத்துடனும் போரிடுவாயாக !!

கீதை 3:31 யார் எனது அறிவுறுத்தல்களை மனமுரண்பாடின்றி பக்திபூர்வமாக நம்பிக்கையுடன் கடைபிடிக்கிறார்களோ அவர்களே பலன்விளைவில் பற்று கொண்ட செயல்பாடுகளின் பந்தத்திலிருந்து நிச்சயம் விடுதலை பெறுவர் !!

கீதை 3:32 யார் மனமுரண்பாட்டால் இந்த அறிவுறுத்தல்களை அவமதித்து ; பின்பற்ற மறுக்கிறார்களோ அவர்கள் எல்லா அறிவையும் இழந்து மதியீணராய் இருளுக்குள் அமிழ்ந்து அழிவை அடைவது திண்ணம் !!

தவங்களின் வகைகள் மற்றும் விளைவுகள் :

1) <u>சத்வகுண தவம்</u>

கீதை 17 : 14 இறைவனை நோக்கி நம்மை உந்தித்தள்ளும் குருமார்களுக்கும் மற்றும் பெரியோர்களுக்கும் மதிப்பளித்தல் ; இறை வழிபாடு ; தூய்மை ; எளிமை ; இறை சட்டங்களான வேதங்களை கடைபிடித்தல் ; அஹிம்சை ; இவையே சரீரத்தின் தவங்களாம்

கீதை 17 : 15 உடனடியாக கொப்பளிக்கும் வார்த்தைகளை தவிர்க்கும் நிதானம் ; முடிந்தளவுக்கு நன்மையை விளைவிப்பதும் நல்லினக்கமானதுமான இறைசித்தமான

வாக்கை பேசுதல் ; எல்லா வேதங்களையும் முறையாக அப்பியாசித்து உணர்ந்து அவற்றின் மேன்மைகளை கலந்துரைடல் ; இவையே வாக்கின் தவங்களாம்

கீதை 17 : 16 எப்போதும் மனச்சமநிலை ; மன நிறைவு ; பிறர்மீது வஞ்சகம் தவிர்த்த சாந்தம் ; அமைதி ; சகல பாவ சிந்தனைகளையும் உள்ளத்திலும் சுத்தி செய்து ஆத்ம சுத்தி அடைய முயற்சித்தல் ; இவையே மனதின் தவங்களாம்

கீதை 17 : 17 பரத்தை அடையும் இலக்கில் ; பலன் விளைவில் பற்றை கலைந்த மனிதர்களால் மேற்கண்ட மூன்று தவங்களும் சிரத்தையோடு அப்பியாசிக்கப்படுவதே சத்வகுண தவங்களாகும்

இப்போது நாம் இருக்கும் நிலையில் யார் நம்மை இறைவனை நோக்கி உந்தித்தள்ளும் படி இறைவனால் பயன்படுத்தப்படுகிறார்களோ அந்த நபர்களை

கண்டறிந்து அவர்களுக்கு அணுக்கமாக முடிந்தளவு தொண்டு செய்தல் ; நமது தாய் தந்தை உள்ளிட்ட பெரியோர்களுக்கு மதிப்பளித்தல் ; சரீரத்தால் இறைவனுக்கு பூஜை செய்தல் ; தியானம் செய்தல் ; வேதங்களை வாசித்தல் ; உபதேசங்களை கேட்டல் ; பக்தி சுவை செறிந்த பாடல்களை கேட்டல் முதலிய வழிபாடுகளில் நேரத்தை செலவிடுதல் ; ஆடை ஆபரணங்களில் எளிமை மற்றும் தூய்மை ; பிறருக்கு முடிந்தளவு துன்பம் தராத வாழ்க்கை என்பவை உடலால் செய்யப்படும் தவங்கள் என்கிறார் ஸ்ரீகிரிஷ்ணர் . இவற்றை சரியை என்றும் சொல்வார்கள் . உடலைக்கொண்டு செய்யப்படும் இறைவழிபாடு சரியை .

சந்தர்ப்ப சூழ்நிலைகளில் உணர்வு வயப்பட்டு சட்டு சட்டென்று பேசும் படியான வார்த்தைகள் எல்லா மனிதருக்கும் கொப்பளிப்பது இயல்பு . உணர்வு வயப்பட்ட நிலையில் அவை அவசியமானதுபோல தோன்றும் . ஆனால் மனித சுய முயற்சியால்

நமது நலன்களை நாமே காத்துக்கொள்ள போராடுவது என்ற தாழ்ந்த படி நிலைமை இது . கடவுளோடு இயைந்து வாழ பழகும்போது ; உடனடியாக செயல்படாது இப்பிரச்சினைகளை இறைவன் சமூகத்தில் வைத்து விட்டு அவர் செயல்படட்டும் என்று இருக்கும் போது எல்லா பிரச்சினைகளையும் இறைவன் சுமூகமாகவும் எளிமையாகவும் அதிகம் பேசாமலும் மன உளைச்சல் இல்லாமலும் யாருக்கும் நட்டம் இன்றியும் தீர்த்து வைப்பதை அனுபவத்தில் காண முடியும்

ஆரம்பத்தில் இறைவன் செயல்பாடு நமக்கு பிடிபடாதது போல தோன்றினாலும் நாம் அவருக்காக காத்திருக்க காத்திருக்க அவர் விரைவாகவே செயல்படுவது நமக்கு பிடிபடும் . அப்போது மட்டுமே அவரை உண்மையாகவே சார்ந்து வாழ நம்மால் கற்றுக்கொள்ள முடியும்

சகலரையும் போஷித்து வளர்க்கும் பிதாவானவர் எல்லோருக்கும் நன்மையாக

ஒவ்வொரு காரியத்தையும் எப்படி நடத்துகிறார் என்பது பிடிபடும்போது மட்டுமே இறை சித்தத்திற்கு ஏதுவான வார்த்தைகளை மட்டும் பேசும் இயல்பும் நமக்குள்ளாக வளரும்

இவைகளில் தொடர்ந்து நிலைத்திருக்க இறைவனால் தனது வாயாக பயன்படுத்தப்பட்ட அனைத்து மத இறைமனிதர்களின் வார்த்தைகளையும் வேதங்களையும் நாம் இடைவிடாது வாசித்து வாசித்து நம்மை செழுமைப்படுத்திக்கொண்டே இருக்கவேண்டும்

எல்லா வேதங்களிலும் பகுதி பகுதியாக சூழ்நிலைக்கு ஏற்ப வெளியாகியுள்ள வேதங்களின் மேன்மைகளை நாம் உணர்ந்து அவற்றை பகிர்ந்து கொள்ளுகிற பாத்திரமாக நம்மை இறைவன் பயன்படுத்தும் நற்பேறு கிடைக்க வேண்டும் இவை மனத்தால்

செய்யப்படும் தவங்களாம் . இதுவே கிரியை எனப்படுகிறது .

அன்றாட வாழ்வில் நாம் இறைவனின் பாடத்தை கற்றுக்கொள்வதும் ; இறைவன் பிறருக்கு கொடுக்கும் பாடத்திற்கு பயன்படுவதும் ஆகிய ஆன்மீக வாழ்வு ; இறை அன்பு நமக்குள் விளையும்போது எப்போதும் மனச்சமநிலை நமக்கு சித்திக்கும் . எதற்கும் பிறர்மீது வஞ்சம் இல்லாத சாந்தம் ; பேரானந்தத்தால் நிறைந்த மனம் ; அமைதி இவற்றொரு உள்மனதில் உறைந்துள்ள பாவ சிந்தனைகளையும் இனம் கண்டு அவற்றை கடந்து ஆத்ம சுத்தி அடைதல் ; இதன் மூலமாக நாளும் நாளும் பரத்தை நோக்கி உயரும் வளர்ச்சி – இவையே மனதின் தவங்களாகும் . உண்மையில் மன சுத்தியே யோகம் . ஆத்மா சுத்தியடைய சுத்தியடைய யோகம் கைகூடும் .

சரியை ; கிரியை ; யோகம் என்ற மூன்று முறையாலும் ஒரு ஆத்மா பரத்தை அடையும் இலக்கு என்பதற்காக வாழும் போது ; பலன் விளைவுகள் அனைத்தையும் இறைவனுக்கே அர்ப்பணித்து விட்டு அவரால் வழங்கப்படும் மரணமில்லா பெருவாழ்வு , ஒளி சரீரம் . பரலோக அனுமதி இவற்றிற்காக உழைக்கும்போது வாழ்வே சத்வ குண வகைப்பட்ட தவமாக பரிணமிக்கிறது

ஆனால் இவ்வாறில்லாமல் ரஜோகுண வகைப்பட்ட ஆன்மீக வாழ்வும் தமோகுண வகைப்பட்ட ஆன்மீக வாழ்வும் உலகத்தில் உள்ளது

இவர்களும் இறைவனின் தொடர்பில் இருந்தாலும் பகுதி இறைவனுக்கும் பகுதி அசுரனுக்கும் இடம் கொடுத்து விட்டு வாயிலே மட்டும் இறைவன் என்று இறைவனுக்காக வாழ்வதாகவும் நம்பிக்கொள்கிறார்கள்

இவர்கள் பல பிறவிகள் எடுத்து அடி உதை பட்டு தாழ்மையடையாமல் கற்றுக்கொள்ளமாட்டார்கள் . ஆனாலும் ஆன்மீக முன்னேற்றம் என்பதை இவர்கள் ருசி பார்க்காமலேயே பல பிறவிகள் கழிந்து விட வாய்ப்பு உள்ளது

இவர்களைப்பற்றிய எச்சரிக்கையையும் ஸ்ரீகிரிஷ்ணர் அடுத்து வழங்கியுள்ளார்

2)ரஜோகுண தவம்

கீதை 17 : 18 தற்பொழிவு ; சுயதிருப்தி ; புகழ் உண்டாவதால் ஈர்க்கப்பட்டு தற்பெருமையோடு செய்யப்படும் தவங்கள் ரஜோகுணத்தில் வெளிப்படுபவையாகும் . இவற்றால் சஞ்சலங்கள் உண்டாகி தவங்கள் தடைபட்டுபோம்

யோகங்கள் செய்வதால் உடல் நிலை சீராகவும் அறிவுகூர்மையும் அடைந்து இன்னும் சிறப்பாக வாழ்வில் வெற்றிகளை ஈட்ட முடியும் என்பதை இன்று யோகா

வியாபாரிகள் பிரபலபடுத்தி வருகின்றனர் . இது ஓரளவு உண்மையும் பலனும் கொடுப்பவையே . தமோகுண வகைப்பட்டு உடலின் தேவைகளுக்காக மட்டுமே சாப்பிட்டேன் தூங்கினேன் சினிமா பார்த்தேன் டாஸ்மார்க் போனேன் என வாழும் வாழ்க்கையிலிருந்து விடுபட்டு தன் மன நிலையை ஓரளவு கட்டுப்படுத்தி அறிவை சீர் செய்து ஒரு தரமான தன்மான வாழ்வு வாழ யோககலைகள் நிறையவே பலன் கொடுக்கின்றன . ஆனால் இவை சுயமுன்னேற்றம் ; சுய நம்பிக்கை என்பதையே சார்ந்து இருப்பதால் மனித முயற்சிக்கும் அப்பற்றபட்ட ஊழ்வினைகளை இறைவனால் மட்டுமே சரி செய்யமுடியும் என்பதை மறைக்கின்றன . இவைகள் பக்தி ; தாழ்மை என்பதை கற்றுக்கொடுக்காமல் இயற்கை மனித முயற்சி சமூக சீர் திருத்தம் என்பதாக நவீன நாத்திக வாதமாக தடம் பிரளுவதே பிரச்சினையை உருவாக்குகிறது

இந்த நவீன நாத்திகவாதிகளால் ஒருவர் ஓரளவு ஆன்ம வாழ்வில் தேரியபிறகு அவரை அவரது ஊழ்வினைகள் அழுத்துபோது அவர்கள் சஞ்சலத்தில் விழுவது தவிர்க்கமுடியாததாகிறது . அப்போது தன்னம்பிக்கை விழித்தெழு உலகை திருத்து என்பதெல்லாம் அடங்கி ஒடுங்கி விடுகிறார்கள் . அப்போது சிறிது காலம் யோககலைகள் ; தியான பயிற்சிகள் தடைபட்டு போனாலும் அவர்கள் தாழ்மையடைந்து பக்திக்குள்ளாவார்கள் . அந்த பக்தியில் ; பிரார்த்தனையில் இந்த தியான பயிற்சிகள் ஒரு புதிய பரிணாமத்தில் வெளிப்படும்

தியானப்பயிற்சி இல்லாதவர்கள் பிரார்திப்பதற்கும் ; தியானப்பயிற்சி உள்ளவர்கள் பிரார்திப்பதற்கும் நிறைய வேறுபாடுகளை இறைவன் காட்டியே வருகிறார் .

சுயநம்பிக்கை ; யோகம் மட்டுமே முக்தியை கொடுத்துவிடும் குண்டலினியை ஏத்தினால் போதும் உச்சியில் நிறுத்தினால்போதும் என்ற ரஜோகுண வகைப்பட்ட தவங்கள் ; இறைவனை கொஞ்சம் ஓரந்தள்ளியவை என்ற குறைபாட்டை தவிர அதை இறைவன் சரியான திசைக்கு கொண்டுவந்து சேர்ப்பார் என்ற ஆறுதலும் அதில் உள்ளது . ஏனென்றால் இவை தன்னை சீர்திருத்துதல் என்ற இயல்பில் தன்னை உணர்தல் என்ற பயிற்சிக்கு மிகவும் உதவியாகவும் இருப்பவை ; இவைகளைவிட மிகுந்த ஆபத்தை விளைவிக்கும் தவங்களும் உள்ளன ; அவையே தமோகுண வகைப்பட்ட தவங்களாகும் .

**3)தமோகுண தவம்**

**கீதை 17 : 19 தன்னை வருத்தி ஆத்மாவை துன்புறுத்தி சித்திகளை அடையும் தவங்கள் தமோகுண வகைப்பட்டவையாம் . முட்டாள்தனமான இத்தகைய தவங்கள்**

## தனக்கும் பிறருக்கும் அழிவையே விளைவிப்பவை .

சித்திகளை அடைய வேண்டி மிக கடும் தவங்கள் செய்யப்பட்டால் ; அவையும் சிலகாலம் சித்திக்கும் . ஆனால் அந்த சித்திகள் பலன் விரும்பி பயன்படுத்தப்படும்போது பிறருக்கு பல கேடுகள் உண்டாகி பாவத்தையே சம்பாதிக்கும் . உலக நன்மைக்காகவே பயன்படுத்துகிறேன் என்றாலும் அது எப்படியாயினும் சிலருக்கு கேடுகளை துன்பங்களை கொடுப்பதை தவிர்க்கவே முடியாது

இறைவன் சொல்லாமல் ஒரு நபருக்கு உதவுவது என்பது கூட அந்த ஆத்மாவை பக்குவப்படுத்தும் இறைவனின் நோக்கத்திற்கு நாம் இடைஞ்சல் செய்ததாக ஆகி விடும்

ஆகவேதான் இந்த சித்திகள் எதற்கும் ஆகாதவை என்பதாக ஞானிகள்

சொல்கிறார்கள் . சித்திகளை விரும்பி கொடூரமான தவங்களில் ஈடுபடுவதை முட்டாள்தனமானது என்றே யுகபுருஷன் ஸ்ரீகிரிஷ்ணர் கண்டிக்கிறார் . ராஜயோகம் சித்தித்தவர்கள் கூட எவ்வளவோ சித்திகள் இருந்தும் அதை பயன்படுத்தாமல் இறைவனிடம் சரணாகதி ஒன்றையே குறிக்கோளாக வைத்து வாழ்ந்தார்கள் என்பதற்கு உதாரணங்கள் நிறைய உள்ளன .

அவர்கள் எவ்வளவோ இருந்தும் ஒன்றும் இல்லாதவர்களின் மன நிலையிலேயே இருந்தார்கள் . வள்ளலார் ; ராமகிருஷ்ண பரஹம்சர் , முகமதுநபி போன்ற எண்ணிறந்த ஞானிகள் சமீபத்திய உதாரணங்கள் . எந்த நிமிடமும் பின்னே விழுந்து பிறவிகள் நீண்டு விடுமோ ; மரணமில்லா பெரு வாழ்வு என்ற தகுதி பெற்று பரலோகத்தில் தேவதூதானாக நுழைய முடியாமல் போய் விடுமோ என கடைசி நேரம் வரையிலும் அவர்கள்

இறைவனிடம் அஞ்சிக்கொண்டுதான் இருந்தார்கள் .

அப்படியில்லாமல் சித்திகளை உலகத்தில் செயல்படுத்தி விழுந்துபோனவர்களின் பட்டியல் இரண்யன் ; இராவணன் என்று நீண்டுகொண்டே உள்ளது .
இப்படிப்பட்டவர்கள் மிகுந்த தமோகுணத்தில் வீழ்ந்து ; கீழான குணங்கள் நிரம்பிய நபர்களின் மத்தியில் பிறவியெடுத்து பல இடறல்களை அனுபவித்தே மீண்டும் வளரமுடியும் .

ஆகவேதான் இறை அச்சமும் ; தாழ்மையுமே மேன்மையானது என்று சகல வேதங்களும் சொல்கின்றன .

குரான் : 39:20. ஆனால், எவர்கள் தங்கள் இறைவனுக்கு பயபக்தியுடன் நடந்து கொள்கிறார்களோ அவர்களுக்கு அடுக்கடுக்கான மேன்மாளிகைகள் உண்டு; அவற்றின் கீழே ஆறுகள் சதா ஓடிக் கொண்டிருக்கும்.

98:8. அவர்களுடைய நற்கூலி, அவர்களுடைய இறைவனிடத்திலுள்ள அத்னு என்னும் சுவர்க்கச் சோலைகளாகும் .அவற்றின் கீழே ஆறுகள் ஓடிக்கொண்டு இருக்கும்; அவற்றில் அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள்; அல்லாஹ்வும் அவர்களைப் பற்றி, திருப்தி அடைவான், அவர்களும் அவனைப்பற்றி திருப்தி அடைவார்கள்; தன்இறைவனுக்குப் பயப்படுகிறாரே அத்தகையவருக்கே இந்த மேலான நிலை உண்டாகும்.

தானத்தின் வகைகள் :

கீதை 17 :20 எது கொடுக்கத்தக்கதோ அத்தகையவை உரிய நேரத்தில் உரிய இடத்தில் உரிய நபருக்கு பிரதி பலன் எதிர்பார்க்காமல் தானமாக வழங்கப்பட்டு அது இறைவனுக்கு அர்ப்பணம் செய்யப்பட்டால் ; அத்தகைய தானங்கள் சத்வகுணமுள்ள தானமாக கருதப்படும்

கீதை எதைச்செய்தாலும் அதை இறைவனுக்கு அர்ப்பணம் என்ற மன நிலையிலேயே செய்ய வேண்டும் என திரும்ப திரும்ப வற்புருத்துகிறது .

குரானும் கூட மாஷா அல்லா – எல்லா புகழும் இறைவனுக்கே என்று மொழிகிறது . அல்லாஹு அக்பர் – இறைவனே மிகப்பெரியவன் என்று புகழ் பாடுகிறது .

இந்த வார்த்தைகள் ஸ்டைலாக நுனி நாக்கில் உச்சரிக்கத்தக்கதல்ல . அது உள்ளார்ந்து இதயத்திலிருந்து விளைந்து வரவேண்டும்

ஏசாயா 29:13 இந்த ஜனங்கள் தங்கள் வாயினால் என்னிடத்தில் சேர்ந்து, தங்கள் உதடுகளினால் என்னைக் கனம்பண்ணுகிறார்கள்; அவர்கள் இருதயமோ எனக்குத் தூரமாய் விலகியிருக்கிறது; அவர்கள் எனக்குப் பயப்படுகிற பயம் மனுஷராலே போதிக்கப்பட்ட கற்பனையாயிருக்கிறது..

எதையும் ஒரு ஸ்டைலாக நுனி நாக்கில் உச்சரித்து விட்டு அதற்காக பெருமையும் பாராட்டிக்கொள்கிற பழக்கம் மனிதர்களுக்கு நிறையவே உள்ளது . ஒவ்வொரு மார்க்கத்தாரும் இப்படி ஏதாவது ஒரு வார்த்தையை வைத்துக்கொண்டிருக்கிறார்கள் .

இதை உருவாக்கிய ஞானிகள் இப்படி பல முறை வாயிலாவது சொல்லும்போது கொஞ்சம் சொரணை வந்து அதை கடைப்பிடித்து விட மாட்டார்களா என்றுதான் அவைகளை உருவாக்குகிறார்கள்

ஆனாலும் இறைவனது ஆதங்கம் வாயினாலும் உதடுகளினாலும் கனம் பண்ணும் அளவு உள்ளார்ந்து இதயத்தில் பலர் இறைவனை கனம் பண்ணுவது இல்லை என்பதுதான் .

அப்படித்தான் இந்த தானங்கள் ; தொண்டுகள் ; இறைபணி ; ஊழியங்கள் எல்லாமே இருக்கின்றன . அவைகள் பல தினுஷுகளில்

பல ரகங்களில் பூமியில் இருக்கின்றன . இறைவனுக்காக என்று ஆரம்பித்து செய்கையில் அவை அர்ப்பணம் என்பதற்கு பதிலாக பிழைப்புவாதங்கலாக மாறிவிடுகின்றன . இத்தகைய திசை திருப்புதல்களில் அசுர ஆவிகளின் கைங்கர்யம் நிறையவே இருக்கிறது

வெளியே இருந்து எதிர்க்கும் எதிரியைக்காட்டிலும் உள்ளிருந்து ஒத்துப்பாடி திசை திருப்பும் வேலை அதிக பலன் கொடுப்பது என்பது அசுரர்களுக்கு நன்றாகவே தெரியும்

இறைவனது வார்த்தைகளில் மெல்ல தங்கள் வார்த்தைகளை கலப்பதை அசுரர்கள் காலம்காலமாக செய்து அவைகளை கலக்கி குழப்பி விடுகிறார்கள் . குரானையும் கூட தங்கள் நாவுகளை கொஞ்சம் சுழற்றி ஓதி நீட்டி குறைத்து ஓதி அவைகளின் அர்த்தத்தை மாற்றுகிறார்கள் என்ற குற்றச்சாட்டு குரானிலேயே உள்ளது

சர்வ வல்லமை உள்ள இறைவன் யாரை எப்போது திருத்துவது என்பதை நன்றாகவே அறிவார் . ஆனால் இறைவனையும் அவனது மார்க்கத்தையும் காக்க பிற மனிதர்களின் மீது பலாத்காரத்தை பிரயோகப்படுத்துகிறேன் ; ஆயுதம் ஏந்துகிறேன் என்பது இறைவனை மனிதர்கள் காப்பாற்ற வேண்டிய அளவு கையாலாகதவர் என்பதாகும்

இறைவனை சார்ந்து வாழ்வது என்பது வேறு இறைவனுக்காக நான் இதை செய்கிறேன் அதனால் இறைவன் சொர்க்கத்தை எனக்கு கொடுப்பார் என பலன் எதிர்பார்ப்பது என்பது வேறு ,

ஆசை அறுமின் ஆசை அறுமின் ஈசனோடாயினும் ஆசை அறுமின் என்கிறது தமிழ் முதுமொழி

இறைவன் எனக்கு சொரக்கத்தை கொடுப்பார் என எதிர்பார்த்து இறைவனுக்கும் தொண்டு செய்யாதே ; நிச்சயம் அது தவறாகவே முடியும்

இறைவனை சார்ந்து அவருக்கு பயந்து வாழ்வதும் எதை செய்தாலும் அதை அர்ப்பணம் என்று செய்வதும் மட்டுமே சரியானதாகும் யுக புருஷன் இயேசுவின் வார்த்தைகளை கேளுங்கள் :

**மத்தேயு 6**

11. மனுஷர் காணவேண்டுமென்று அவர்களுக்கு முன்பாக உங்கள் தர்மத்தைச் செய்யாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள்; செய்தால் பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதாவினிடத்தில் உங்களுக்குப் பலனில்லை.

2. ஆகையால் நீ தர்மஞ்செய்யும்போது மனுஷரால் புகழப்படுவதற்கு, மாயக்காரர் ஆலயங்களிலும் வீதிகளிலும் செய்வதுபோல, உனக்கு முன்பாக தாரை ஊதுவியாதே; அவர்கள் தங்கள் பலனை அடைந்து தீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

3. நீயோ தர்மஞ்செய்யும்போது, உன் தர்மம் அந்தரங்கமாயிருப்பதற்கு, உன் வலது கை செய்கிறதை உன் இடது கை அறியாதிருக்கக்கடவது;

4. அப்பொழுது அந்தரங்கத்தில் பார்க்கிற உன் பிதா தாமே உனக்கு வெளியரங்கமாய்ப் பலனளிப்பார்.

5. அன்றியும் நீ ஜெபம்பண்ணும்போது மாயக்காரரைப் போலிருக்கவேண்டாம்; மனுஷர் காணும்படியாக அவர்கள் ஜெப ஆலயங்களிலும் வீதிகளின் சந்திகளிலும் நின்று ஜெபம்பண்ண விரும்புகிறார்கள்; அவர்கள் தங்கள் பலனை அடைந்து தீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

6. நீயோ ஜெபம்பண்ணும்போது, உன் அறைவீட்டுக்குள் பிரவேசித்து, உன் கதவைப்பூட்டி, அந்தரங்கத்திலிருக்கிற உன்

பிதாவை நோக்கி
ஜெபம்பண்ணு; அப்பொழுது, அந்தரங்கத்தில் பார்க்கிற உன் பிதா வெளியரங்கமாய் உனக்குப் பலனளிப்பார்.

ஆனால் அப்படியில்லாமல் பலன் எதிர்பார்த்து பிரபலப்படுத்திக்கொண்டோ அல்லது பிரபலம் இல்லாமலும் கூட தர்மங்கள் ; தொண்டுகள் ; இறைபணிகள் பல செய்யப்படுகின்றன . இவை சுயம் என்ற ரஜோகுணத்தின் வெளிப்பாடுகளே ஆகும்

கீதை 17 :21 எந்த விதமான பிரதி உபகாரத்தை எதிர்பார்த்தோ அல்லது திரும்ப பலன் கிடைக்கும் என்ற நம்பிக்கையிலோ செய்யப்படும் தானங்கள் ரஜோகுண தானங்கள் எனப்படுகின்றன .

எல்லா வேதங்களும் இறைவனுக்கு அடியவனாக மாறுவதே முக்தி அல்லது முழுமை என்கின்றன . அந்த அடியவனாகுதல் என்பது சகலவற்றையும் கடந்து அவர் கரத்தில் ஒரு கருவியாக

மட்டுமே இருக்கும் ஒரு நிலை . சும்மாயிரு என்பதுவே உபதேசம் . செயலில் செயலின்மையையும் ; செயலின்மையில் செயலையும் அடைகிறவனே முழுமை எய்தியவன் . மன சமநிலை எய்தி இறைவன் கரத்தில் கருவியாக இருக்க அவனால் மட்டுமே முடியும் .

இவைகளுக்கு அப்பாற்பட்டு உலக மாந்தர்களால் குடி கூத்துகளிலும் அற்ப சந்தோசம் ; அடிமைகள் அல்லக்கைகளை உருவாக்க ஊக்குவிக்க தானங்கள் பல செய்யப்படுகின்றன . இவைகள் தரம் தாழ்ந்த தானங்கள் ஆகும்

**கீதை 17 :22 தூய்மை அற்ற இடங்களில் ; தூய்மை அற்ற செயல்களில் மரியாதை இல்லாமல் தரக்குறைவாக மனிதர்களை நடத்தி கொடுக்கப்படும் தானங்கள் தமோகுண வகைப்பட்டவையாம் .**

**நவீன நாத்திகவாதம் நீடித்த பலன் தராது**

**கீதை 17 :23 ஓம் தத் சத் என்ற நித்தியமான வார்த்தை மூன்று வகையில் உணரப்படவேண்டும் .அது ஞானிகளாலும் யோகிகளாலும் பூசாரிகளாலும் பூசைகளின் போதும் வேள்விகளின் போதும் தவங்களின் போதும் வேதமந்திரங்கள் உச்சரிக்கும் முன்பு கடவுளை குறிக்க ஆதியில் பயன்படுத்தப்பட்டு வந்தது**

ஸ்ரீகிரிஷ்ணர் ஆதி வழக்கத்தை – ஆதி இசுலாத்தை ஞாபகப்படுத்துகிறார் . எந்த ஆன்மீக பணிக்கு முன்பும் கடவுளை குறிக்க ஓம் தத் சத் என்ற வாசகம் உச்சரிக்கப்படவேண்டும் .
அது மூன்று அர்த்தத்தில் புரிந்துகொள்ளப்படவேண்டும்

ஓம் – ஓரிறைவனையே துதிக்கிறோம்
தத் – அவரே
சத் – என்றென்றும் நித்தியமானவர்

ஓம் – ஓரிறைவனையே துதிக்கிறோம்
தத் – அவரே

சத் – எங்கெங்கும் நிறைந்திருப்பவர்

ஓம் – ஓரிறைவனையே துதிக்கிறோம்
தத் – அவரே
சத் – உனக்குள்ளும் இருப்பவர்

இப்படி மூன்று விதமாக உச்சரிக்கப்பட்டே சகல உபன்யாசங்களையும் யாகங்களையும் பூசைகளையும் செய்விக்கப்படவேண்டும் என்ற ஆதி வழக்கம் காலப்போக்கில் மறைந்து விட்டது

கீதை 17 :24 ஆனாலும் உண்மையை உணர்ந்த ஆன்மீகிகள் கடவுளை அடைய யாகம் ; தானம் ; தவம் ; அன்றாட செயல்களை மேற்கொள்ளும்போது சாஸ்திர விதிகளுக்கு ஏற்ப ஓம் தத் சத் என்றே துவங்குவர் .

எப்பணியை செய்தாலும் ஓம் – ஓரிறைவனையே துதிக்கிறோம் என்று அருவ ஏக இறைவனை துதித்தே தொடரவேண்டும் . அந்த கடவுள் இவர்தான் அவர்தான் என்று சிற்றறிவை கொண்டு தர்க்கம் செய்யலாகாது .

கீதை 17 :25 இப்படி பரிபூர்ணத்துடன் ஒத்திசையும் மனதுடன் யாகம் ; தவம் ; செயல்கள் செய்து பலனை கடவுளுக்கே அர்ப்பணம் செய்துவிட்டால் நமது பல்வகையான செயல்களும் நம்மை உன்னதத்தை நோக்கி உயர்த்தும் .

கீதை 17 :26 சத் என்னும் சத்தம் பிரயோகப்படுத்தப்பட்டு பரத்தைப்பற்றிய உணர்வுடன் செயல்கள் செய்யப்படுவதால் பக்தர்களின் இயல்பில் பரமனின் இயல்பு பிரயோகமாகும் . இதனால் பார்த்தா அச்செயல்கள் பரத்தால் அங்கீகரிக்கப்பட்டவையாக பரிணமிக்கும்

கீதை 17 :27 இவ்வாறு கடவுளின் உணர்வில் நிலைத்து செய்யப்படும் யாகங்களும் ; யோகங்களும் ; தானங்களும் அனைத்து கர்மங்களும் கடவுளால் செய்யப்பட்டதாகவே கருதப்படும் .

கீதை 17 :28 கடவுளின் மீது நிலைக்காமல் அர்ப்பணிக்கப்படும் யாகப்பொருட்களாலும் ;

நோர்க்கப்படும் யோகாப்பியாசங்களாலும் ; அசத் எனப்பட்ட நிலையற்றவைகளே விளையும் . அவைகளால் பூமிக்குரிய பலன்கள் சில கிடைக்குமே அன்றி பரத்தை அடைய பலன் கொடுக்காது .

இன்றைக்கு நாத்திகவாதம் எடுபடாமல் போய்விட்டது . அதை பிரபலப்படுத்தியோர் தங்களின் பிழைப்புவாதம் சுயநலம் விளம்பரம் ஆடம்பரத்தால் கேவலப்பட்டு இழிவு பட்டு விட்டனர்

அதனால் தங்களின் அறிவை ; சுயத்தை மெச்சிக்கொள்ளும் அறிவுஜீவிகளான நாத்திகவாதிகள் நாத்திகம் என்று தங்களை காட்டிக்கொள்வதை மறைத்து ஆன்மீகவாதிகளாக காட்டிக்கொள்ளும் ஒரு ஆன்மீகத்தை கண்டுபிடித்து விட்டனர் .

அதற்கு அவர்களுக்கு கிடைத்த ஒரு கூடாரம் சித்தர்கள் நெறி . சித்தர்களில் பாதிக்கு பாதி பக்தியும் மறுமையையும் பரப்பியவர்கள் . மரணமில்லாபெருவாழ்வு ஒளி சரீரம்

அடைய இறைவனை நாடியவர்கள் . பாதி கடவுள் நம்பிக்கையை ஒதுக்கி சாதகம் செய்தால் நாமும் கடவுளாகலாம் என்றவர்கள்

கடவுளை புறக்கணித்து யோகம் செய்தால் போதும் குண்டலினியை ஏற்றி இறக்கினால்போதும் சித்து செய்தால் போதும் வைத்தியம் மூலிகை காயகல்பம் முப்பு என்றலைந்து அதிகபட்சம் பூமியில் ஜீவசமாதியடைந்து உலகை இவர்கள்தான் கட்டிக்காப்பதாக அலட்டிக்கொள்ளும் ஒரு கூட்டம் இன்று பெருத்து விட்டது . பெரிய பெரிய யோகா வியாபாரிகள் வந்து அறிவை நம்பு யோகம் செய் உலகில் சிறப்பாக வாழலாம் என்று சக்கை போடு போடுகின்றனர்

உலகை மூழ்கடிக்கும் ஆன்மீக பேரலை புறப்படவேண்டிய தமிழ் சமூகத்தை இந்த நவீனநாத்திகவாதிகள் ஆன்மீக

போர்வையில் வளர விடாமல் தடுத்துக்கொண்டுள்ளனர் .

கடவுள் நம்பிக்கையும் பக்தியும் இல்லாத யோகாப்பியாசங்களால் உடலையும் மனதையும் சீர் செய்து பூமியில் கொஞ்சம் லெகுவாக வாழலாமே ஒழிய நிலையான பலன் நிம்மதி வரவே வராது .

பக்தியால் கீழ்படிதலும் கடவுளின் மீது நிலைத்த உணர்வுடன் அவனுக்கு அர்ப்பணமாக செயல்கள் அனைத்தையும் செய்கிற மனநிலையோடு யோகாப்பியசத்தையும் தியானத்தையும் பிரார்த்தனையையும் கடைபிடிக்கிறவனே முழுமை அடைவான் ; பரத்தை அடைவான் .

நாராயணனாக வெளிப்பட்ட
ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம்
ஓம் நமோ நாராயணாய

ஆதிசேஷனாக வெளிப்பட்ட
ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம்
ஓம் நமோ ஆதிசேஷாய

**நாராயணியாக வெளிப்பட்ட**
**ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம்**
**ஓம் நமோ நாராயணியாய**

**சிவனாக வெளிப்பட்ட ஓரிறைவனையே**
**நமஸ்கரிக்கிறோம்**
**ஓம் நமோ சிவாய**

**அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி**
**தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி**

கீதை 18 : பக்குவ யோகம்



கீதை 18 : 1 அர்ச்சுனர் கேட்டார் :
வலிமையான புயங்களை உடையவரே ;
புலன்களை ஆள்பவரே ; மாயாவியான
கேசியை கொன்றவரே . துறவறத்தின்
உட்பொருளையும் பல்வேறு தியாகங்களின்
நுட்பங்களையும் உணர்ந்துகொள்ள
விரும்புகிறேன்

கீதை 18 : 2 யுகபுருஷன் கிரிஷ்ணர் கூறினார் ;
ஆசைகளின் வேட்கைகளால் உந்தப்படும்
செயல்களை செய்யாதிருத்தல் சந்நியாசம்

என்பர் சான்றோர் . மேலும் அனுபவசாலிகள் தங்கள் செயல்கள் அனைத்தையும் கடவுளுக்கு அர்ப்பணித்துவிட்டு அதன் பலன்களில் அக்கறை அற்று இருந்துவிடுகிறார்களே அதுவே தியாகம் எனப்படும்

கீதை 18 : 3 கர்மங்கள் அனைத்தையும் தோஷமாக கருதி தியாகம் செய்வதை துறவறம் என சிலரும் ; இருப்பினும் அதில் யாகம் தானம் மற்றும் யோகாப்பிசியங்கள் மட்டும் கைவிடலாகாது என்று சிலரும் கூறுகின்றனர்

கீதை 18 : 4 உண்மையில் மிகச்சிறந்த ஆத்மாக்களையும் யாகம் தானம் மற்றும் யோகாப்பிசியங்கள் மென்மேலும் தூய்மைப்படுத்துகின்றன. யாகம் தானம் மற்றும் யோகாப்பிசியங்கள் மட்டும் அல்ல கர்மங்கள் எவையுமே துறக்கப்படலாகாது .

கீதை 18 : 5 கர்மங்கள் அனைத்துமே கடமையாக கருதப்பட்டு செய்யப்படவேண்டும் . அவற்றின் பலன் விளைவுகளில் பற்றுதலை துறந்து விடவேண்டும் என்பதே எனது முடிவான அபிப்ராயம் .

அர்ச்சுனர் துறவறம் பற்றிய சந்தேகங்களை இங்கு கேட்கத்தொடங்குகிறார் . ரிஷிகேசவ் என்ற வார்த்தையால் அவர் ஸ்ரீகிரிஷ்ணரை விளிக்கிறார்

ரிஷி என்றால் ஆள்கிறவர் கேசம் என்றால் புலன்கள் . மனிதனை இச்சைகளில் வேட்கை அடையச்செய்து வாட்டிவதைக்கும் புலன்களை அடக்கி ஆளும் வல்லமை உள்ளவராம் ஸ்ரீகிரிஷ்ணர்

அடியேனுக்கும் ரிஷிகேஷ் செல்லும் ஒரு வாய்ப்பு கிடைத்தது . அங்கு தூய்மையான கங்கையை கடந்து அனேக ஆசிரமங்கள்

சாந்தம் தழுவி நிற்கின்றன . அனேக சாதுக்கள் வயதானவர்கள் துறவறமாக கூட்டம் கூட்டமாக வாழ்கிறார்கள் . ஆசிரம ஒழுங்குகளின் படியாக அவர்களின் வாழ்க்கை பிரார்த்தனையோடும் சேவையோடும் சென்றுகொண்டிருக்கிறது . கடமைகள் அனைத்தும் முடிந்துவிட்டால் இப்படி நாமும் கூட இருந்துவிடலாமே என ஏக்கமாக இருந்தது

எப்படியோ இந்தோ மங்கோலிய இனமான திராவிடர்களுக்கு ரிஷிகேஷ் என்பது துறவற வாழ்க்கைக்கு பன்னெடுங்காலமாக பயன்பட்டு வந்துள்ளது

ஆனால் எது துறவறம் என்பதைக்குறித்து பரமாத்மாவுக்கும் பக்குவம் பெற்ற ஆத்மாவான அர்ச்சுனருக்கும் இங்கு விசாரம் தொடங்குகிறது . பாருங்கள் அர்ச்சுனர் அப்போதுதான் 12 வருட வனவாசமும் 1 வருட அஞ்ஞாதவாசமும் முடித்துவிட்டு

வந்திருக்கிறார் . இந்த நிலையிலேயே அவருக்கு அனேக மனைவிகள் அருளப்பட்டு அந்த குடும்பங்கள் அனைத்தும் பிள்ளை குட்டிகளோடு செவ்வனே ஓடிக்கொண்டுதான் இருந்தன

முந்தய பிறவியில் ராமரோ மனைவியோடு வனவாசம் செய்தார் என்றால் அவர்களைக்காக்க தன் இளம் மனைவியை பிரிந்து இலக்குமணன் வனவாசம் செய்தாரல்லவா அதன் பரிசாக இப்பிறவியில் பல மனைவிகளும் குடும்பங்களும் அருளப்பட்டன . பெரிய குடுமி ; ஆனாலும் வனவாசம் . இறைவன் நாடினால் துறவறத்திலும் இல்லறமும் இல்லறத்திலும் துறவறமும் நடக்கும் . இங்கு நான் துறவறம் என்பதை உலக வழக்கத்தின் படியாக வனவாசம் என்பதைப்போல குறித்துள்ளேன் . ஆனால் உண்மையான துறவறம் என்பது வேறு . அது உலகத்தின் பார்வையின் படியாக அல்ல என்பதை அனுபவத்தால்

அர்ச்சுனரும் கொஞ்சம் புரிந்துவைத்திருந்ததாலேயே இக்கேள்வியை எழுப்பி அது சரிதானா என்பதை தெளிவு பெற விரும்பினார்

ஸ்ரீகிரிஷ்ணரும் ரெண்டே ரெண்டு சூத்திரங்களை எளிதாக முன்வைத்து பதில் சொன்னார் . உலகத்தில் நாம் சரீரத்தில் வாழ்ந்துகொண்டிருக்கிறோம் . அதில் உள்ள ஐம்புலன்களும் தங்களால் அனுபவிக்க முடியுமான இச்சைகளை ஆங்காங்கே சந்தர்ப்பம் கிடைக்கும்போதெல்லாம் வெளிப்படுத்திக்கொண்டேதான் இருக்கும் . அது வெறும் இந்திரியம் . நல்லது கெட்டது நியாய அநியாயம் சமுக நியதி ஒழுங்கு கடவுளின் நியதி ஆத்மசுத்தி பற்றியெல்லாம் அந்த இந்திரியங்கள் கவலைப்படவேண்டிய அவசியமில்லை

அந்த இந்திரியங்கள் மூலமாக வாழ்ந்துகொண்டிருக்கும் ஆத்மா மட்டுமே

அவைகளை சமப்படுத்தி ஆண்டுகொள்ள வேண்டும் . நிர்வகிக்க வேண்டும் . ரிஷிகேஷவனாக இருக்க வேண்டிய ஆத்மா உடல் இச்சித்துவிட்டது சந்தர்ப்பமும் சூழ்நிலையும் அமைகிறது என்பதற்காக புலன்களின் பின்னால் ஓடலாகாது அனுபவிப்போம் என்று கிளம்பிவிடலாகாது . அதை அனுபவித்துவிட முடியுமென்றாலும் எதற்காக ஆத்மாவில் இன்னும் இன்னும் வாசனைகளை பதிவுகளை கூட்டுக்கொண்டே செல்லவேண்டும் ?

நமது இன்ப நுகர்ச்சிகள் அனைத்தும் பதிவுகளாக சம்ஸ்காரங்களாக ஆத்மாவில் குவிந்துகொண்டே இருக்கும் வரை ஆத்மசுத்தி என்பதோ ஆத்மா கடைத்தேறுவதோ சாத்தியமே இல்லாத ஒன்று . உடல் இச்சித்துவிட்டது ஆத்மாவும் ஆசைப்பட்டு அல்லாடுகிறது என்றிருக்கும் வரை பிறவிகள் நீள்வதை தவிர்க்கவே முடியாது

இச்சைகள் எழுந்தாலும் சந்தர்ப்பமும் சூழ்நிலையும் வாய்த்தாலும் அதை அனுபவிக்க வேண்டிய அவசியம் என்ன இருக்கிறது முடிந்தளவு அதை அவசியமற்றதாக மாற்றிக்கொள்வோம் என பயிற்சி செய்துகொண்டே வருவதுதான் புலன்களை சமப்படுத்துவது .

அப்படியே தொடரும்போது ஒருபிறவியில் அந்த இச்சையால் இயல்பாகவே பாதிப்பு இல்லாத ஒரு நிலையை ஆத்மா அடையும் . அதுவே முக்தி . அந்தப்பதிவுகள் தூய்மை அடையும்போது இயல்பாகவே ஆத்மா அதனை கடந்து விடுகிறது ஒவ்வொரு ஆசையாக நாம் கடரும் போதும் நம் ஆத்மாவில் ஒரு முக்தி விளைந்துவிடும் எதுவும் இயல்பாக உள்ளே விளைந்து நாம் பக்குவப்படும்வரை அளவு முறையோடு அனுபவித்தே கடரமுடியும்

இருக்கிற இடத்திலேயே இருக்கிற சரீரத்திலேயே ரிஷிகேஷவனாக நாம் முயலவேண்டும் . எல்லாவற்றையும் விட்டுவிட்டு வம்பாக ரிஷிகேஷில் போய் உட்கார்ந்துகொள்வதால் ஆத்மாவுக்கு எந்த முன்னேற்றமும் இல்லை . அப்படி வம்பாக ஒரு ஆசிரமத்தில் இளம் துறவியாக இருப்பவர்கள் பலர் மீண்டும் அடுத்த பிறவியில் இல்லறவாசிகளாகவே வாழ்கிறார்கள் . இல்லறத்தில் துறவறம் என்ற மனசமநிலையை கற்று ஒவ்வொன்றும் அவசியமில்லாமல் போகும்போது மட்டுமே சித்தியை நாம் நெருங்கமுடியும்

பல முக்திக்கு பின்பே ஆத்மா முழுமை என்ற சித்தியை அடைகிறது . அதுவரை அது பூமியில் பிறந்துதான் ஆகவேண்டும்

இந்திரியங்களின் வேட்கைக்காக
செயல்படாத வாழ்வே துறவு .
ஒவ்வொன்றாக துறக்கவேண்டும் .

வாழ்வில் நம் மீது சுமரும் கடமைகள்
அனைத்தையும் கடமைக்காக கடமை
கர்மத்திற்காக கர்மம் செயலுக்காக செயல்
என முடிந்தளவு நேர்த்தியாக செய்துவிட்டு
அதை இறைவனுக்கு அர்ப்பணம்
செய்துவிட்டு என்ன பலன் என சிந்திக்காது
இருக்கவேண்டும் . சோர்வோ சலிப்போ
அலட்டலோ இருக்காது சமப்படவேண்டும்
நாம் சலிப்பதெல்லாம் நம் உள்ளிருக்கும்
கடவுள் வெறுப்பு என்ற குணத்தின் பின்னணி.
நம் ஆதிதகப்பன் சிவன் ஆரம்பத்தில் தவறு
செய்து சபிக்கப்பட்டு ; சபிக்கப்பட்ட இந்த
பூமிக்கு அனுப்பப்பட்டார் . அதன் பிறகு
அவரும் படாதபாடுகள் பட்டே சித்தியடைந்து
வைரவனாகி ருத்ரனாக பரலோகில்
நுழைந்தார்

பரலோகத்திலிருந்து சஞ்சலம் நிறைந்த பூமிக்கு துரத்திவிடப்பட்டதன் வெறுப்பு கடவுள் வெறுப்பு ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் ஆழமாக மறைந்துகிடைக்கிறது . அது சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் சலிப்பாக வெளிப்படுகிறது . என்ன நடந்தாலும் எதை செய்தாலும் இறைவனிடமே வேண்டி இறைவனிடமே ஒப்புபித்துவிட்டு நிம்மதியாக இருக்கும் மனநிலையை அருளும்படி நாம்தான் மன்றாடிக்கொள்ளவேண்டும் . இல்லாவிட்டால் இறைவா இறைவா என சொல்லிக்கொண்டே இறைவனுடன் மனஸ்தாபம் என்ற கலங்கத்திலேயே நாம் வாழவேண்டியதுதான்

இந்தப்பாவத்திலிருந்து தப்பவேண்டுமானால் அனுபவசாலிகள் தங்கள் கர்மங்கள் யாவற்றையும் செய்துவிட்டு அதை உடனடியாக அர்ப்பணம் செய்துவிட்டு ஒதுங்கிக்கொள்கிறார்களாம் . அப்படிப்பட்ட

கர்மயோகிகளை எந்தப்பாவமும்
பற்றுவதில்லை . இந்த உபதேசம்
நடந்துகொண்டிருக்கும் போதே அப்படிப்பட்ட
நபராக பீஷ்மர் எதிரிலேயே இருந்தார் . அவர்
மரணிக்கும் முன்பு அவரிடம் உபதேசமும்
ஆசிர்வாதமும் பெற்றுக்கொள்ளும்படியாக
பாண்டவர்களை கிரிஷ்ணர்
அழைத்துசென்றார் . அப்போது அவர்
விஷ்ணு சகஸ்ரநாமம் உபதேசித்தார் .
ஆயிரம் நாமங்களின் மூலமாக
பரமாத்மாவின் ஆயிரம் குணாதிசயங்களை
சித்தரித்து அனைத்தையும் இறைவன்
பரமாத்மா மூலமாக
பரமாத்மாவிற்குள்ளேயே செய்கிறார் நாம்
கருவி மட்டுமே பரமாத்மாவில் நின்று
நிலைக்கிற ஒரு ஜீவாத்மா ஆகவே நாம்
கடமையை செய்தோம் என அவனிடம்
ஒப்படைத்துவிட்டால் எந்தக்கர்மமும் நம்மை
பற்றாது என்பதே அந்த உபதேசத்தின் சாரம்

இப்படி பலன் விளைவுகளில் பற்றை துறந்து சகலத்தையும் இறைவனுக்கு அர்ப்பனித்தாலே தியாகமாகும் .

தியாகம் என்பதைவிட புத்திசாலித்தனம் என்றே சொல்லவேண்டும் . ஏனென்றால் எந்த புண்ணியங்களும் எனக்கில்லை என மறுத்துவிட்டால் நிச்சயமாக பாவங்களும் என்னை பற்றாது . எந்த நற்செயலுக்கும் ஆன புகழ்சியை நான் அர்ப்பனித்துவிட்டால் எந்த அவமானங்களாலும் நான் கூனி குறுகாத மனநிலையை அவரே தந்துவிடுவார் . நிஸ்காமியகர்மம் என்கிறார்களே அது பெரும் பாதுகாப்பான கோட்டை

இந்தப்பூமியில் நாம் இருக்கும் வரை எதை இறைவனின் சித்தப்படியாக செய்தோம் அல்லது சுயத்திலே செய்து பாவத்தை வளர்த்துக்கொண்டோம் என்று குழம்பாதபடி நாமே செய்தாலும் அதை இறைவனுக்கு

அர்ப்பனித்துவிடுவது மிக உத்தமம் அவர் நம்மை தீமைகளின் பக்கம் செல்லாதபடி தடுத்துக்கொள்வார் .

சிலர் பல பிறவிகளாக வளர்ந்து பக்குவம் அடைந்து இறைவனின் கருவிகளாக அடிமைகளாக மாறி தங்களை இறைவனுக்கு அர்ப்பணித்த சமயங்களில் அவர்களை இறைவன் தனது இறைதூதராக மகா குருவினர்களாக பயன்படுத்தியுமுள்ளார்

முழுமை அடையும் நேரம் ராஜயோகம் சித்திக்கும் என்பார்கள் ராஜாவைப்போல பொன்னும் பொருளும் புகழ் பாடும் சீடர்கள் கூட்டமுமாக இருக்கும் . ஆனால் அவைகளால் மயக்கமுறாத முழுசரணாகதி அடைந்த அடியவர்களுக்கே அத்தகைய ராஜயோகம் சித்திக்கும் .

அப்படியிருக்க இந்த தியாகம் என்ற வார்த்தை இங்கு ஏன் வந்தது என்றால்

அந்தக்காலத்திலும் சரி இப்போதும் சரி சிலர் இறைத்தொண்டு செய்ய வாழ்க்கையை தியாகம் செய்துவிட்டு சந்நியாசி ஆனதாக சொல்லிக்கொண்டுள்ளனர் . அது தியாகமே அல்ல மடாதிபதிகள் தங்கள் மடங்களை காக்க சந்நியாசம் மேற்கொள்கிறார்களே தவிர அந்த சந்நியாசத்தால் அவர் முழுமை அடையமுடியாது . மீண்டும் அவர் அடுத்த பிறவியில் கிரகஸ்தன் ஆகியே தீரும்

ஆகவே தியாகம் என்ற வார்த்தையை உலக வார்த்தையாக அவர்கள் பயன்படுத்துகிறார்கள் . அதிலும் அடுத்த சுலோகத்தில் அவர்களின் அறியாமை கண்டிக்கப்படுகிறது

அவர்கள் சொல்கிறார்களாம் தாங்கள் சந்நியாசிகள் என்று எந்த செயலையும் தள்ளிவைத்து விடுகிறார்களாம் . தங்கள் மடத்தின் பேரால் அவர்கள் கடும் விரதங்களை கடைப்பிடித்து பொதுமக்களை

விட உயர்வானவர்களாக காட்டிக்கொள்ளும் நிலைக்கு ஆளாகிறார்கள் ; அதில் சிலரோ இருப்பினும் யாகம் தானம் மற்றும் யோகாப்பிசியங்கள் மட்டும் கைவிடலாகாது என்று விதிவிலக்கு உள்ளதாக அறிவித்து அவைகளை மட்டும் செய்கிறார்களாம் .

யுகபுருஷனோ எதையும் கைவிடலாகாது என்கிறார் . அன்றாட வாழ்வில் நம் மனநிலையில்தான் அர்ப்பணமும் துறவும் அடங்கியிருக்கிறது . பூசாரிகள் மடாதிபதிகள் தங்கள் உடலை தீட்டில்லாமல் காக்கிறோம் என்று ஒதுக்கிவைத்துக்கொள்வதால் எந்த பரிசுத்தமும் வந்துவிடாது . அவர்கள் தங்களை பரிசுத்தமாக காத்துக்கொள்கிறோம் என்ற பெயரில் மாபெரும் தீண்டாமை கொடுமைகள் வரை போய் பெரும் பாவத்தை சம்பாதித்துக்கொண்டார்கள்

ஆகவே உடலால் பரிசுத்தம் வரவே வராது ; அது மனதில் வரவேண்டியது .

கோவிலுக்குள் நுழையும் போது ஒரு உடல் சுத்தம் போதுமானது அதற்கு குர்ஆனில் சுட்டப்பட்ட வழி உள்ளது . கைகால் அலம்பி முகத்தை கழுவி தண்ணீரை தலையில் தடவிக்கொண்டால் போதுமானது . நாம் கர்ப்பகிரகம் வரை தாரளமாக செல்லலாம் . கடவுளை தூய்மையாக காப்பாற்ற யாரையும் தொடாமல் இருக்கிறேன் என்ற அஞ்ஞானத்தை கடைபிடித்து மனிதர்களை அவமதிக்கலாகாது .

அடுத்து எவ்வளவு உயர்ந்த ஆத்மாவாக இருந்தாலும் யாகம் தானம் மற்றும் யோகாப்பிசியங்கள் பிரார்த்தனை என்று பயிற்சி செய்துகொண்டே இருக்கவேண்டும்

ஆன்மீகவாழ்வில் உள்ளோர் பலர் இறைவனைப்பற்றி பேசுவதற்கு நேரம் எடுத்துக்கொள்ளும் அளவு தியானம் பிரார்த்தனை செய்வதற்கு நேரம் ஒதுக்குவதில்லை . அது பெரும்

பின்னடைவை உண்டாக்கி விடுகிறது .
டயருக்கு அவ்வப்போது காற்றை
நிரப்புவதுபோல அப்பியாசங்கள் நம்
ஆன்மாவில் ஆன்ம பலத்தை நிரப்புபவை .
அதிலும் கூட்டு பிரார்த்தனை மிகவும்
உன்னதமானது .

வீட்டிலே தனித்து தியானம்
செய்வதைக்காட்டிலும் பலர் பிராத்தனை
செய்கின்ற கோவிலில் அமர்ந்து தியானம்
செய்யுங்கள் என்பதை சமரசவேதம்
வலியுறுத்துகிறது

நீங்கள் எங்கும் எந்தக்கோவிலுக்கும்
போங்கள் அங்குள்ள மூர்த்தம் ஒரு
குருவைப்போன்றதே . இந்த பூமியிலுள்ள
எந்த கோவிலும்
ஆவாகானப்படுத்தப்பட்டிருப்பவை நான்கு
அதிதேவர்களுக்கு கீழான தேவர்களே . எந்த
மார்க்கங்களும் நான்கு அதிதேவர்களுக்கு
கீழான குருகுலங்களே .

அங்குள்ள மூர்த்தங்கள் ஆகம விதிகளாலும் பூஜை புனஸ்காரங்களாலும் கும்பத்தின் மூலமாக பரவெளியோடும் ஏக இறைவனோடும் தொடர்பு படுத்தப்பட்டுள்ளன .

ஆகவே அந்த மூர்த்தங்களை குருவாக வைத்து கடவுளை தியானித்து கடவுளிடம் வேண்டுங்கள் மார்க்கபேதங்கள் எதுவும் கிடையாது அன்றாடம் ஒரு கோவிலில் ஏக இறைவனை தியானித்து கலியுக முடிவை துரிதப்படுத்துங்கள் எதையும் ஒதுக்காதிருங்கள் எல்லாமும் இறைவனால் அருளப்பட்டவையே . மனிதர்களே அவற்றில் கலியுகத்தின் நிமித்தம் பேதத்தை கலந்துகொண்டார்கள் .

மேலும் ஶ்ரீகிரிஷ்ணர் அர்ப்பணங்கள் மூன்று வகையாக வியாக்கியானப்படுத்தப்படுவதாகவும்

அறிவிக்கிறார் . அவற்றை அடுத்து காண்போம்

கீதை 18 : 6 பரதவர்களில் சிறந்தோனே ; தியாகத்தின் உன்னத இலக்கு எதுவாக இருக்கவேண்டும் என்பதை இப்போது என்னிடமிருந்து கற்றுக்கொள் . மனிதர்களில் புலியைப்போன்றவனே ; தியாகங்கள் மூன்று வகையாக அப்பியாசப்படுகின்றன

கீதை 18 : 7 நம் மேல் சுமரும் கடமைகளை என்றுமே துறக்கலாகாது . தகுதியுடைய செயல்களை தடுமாற்றத்தால் ஒருவன் துறந்தால் அந்த துறவு தமோ குணத்தால் செய்யப்படுபவை ஆகும் .

நாம் அருள்பணியில் இருப்பதால் சில காரியங்களை செய்யலாமா செய்யக்கூடாதா என தடுமாற்றம் அடைந்து தீட்டு என விலகி செல்லலாகாது . விபத்தில் உதவுவது வியாதியஸ்தர்களை கைதூக்கி விடுவது

போன்ற காலத்தால் செய்யும் உதவிகளை பலர் புறக்கணிக்கின்றனர் இதை தமோகுணம் என்கிறார் யுகபுருஷன் கிரிஷ்ணர் . அவரது அடுத்த இயேசு அவதாரத்திலும் பூசாரிகளின் இந்த போக்கை கடுமையாக கண்டித்துள்ளார்

லூக்கா
10 25. அப்பொழுது உபன்யாசகன் ஒருவன் எழுந்திருந்து, அவரைச் சோதிக்கும்படி: போதகரே, நித்திய ஜீவனைச் சுதந்தரித்துக்கொள்ளும்படிக்கு நான் என்ன செய்யவேண்டும் என்று கேட்டான்.

26. அதற்கு அவர்: நியாயப்பிரமாணத்தில் என்ன எழுதியிருக்கிறது? நீ வாசித்திருக்கிறது என்ன என்றார்.

27. அவன் பிரதியுத்தரமாக: உன் தேவனாகிய கடவுளிடத்தில் உன் முழு இருதயத்தோடும் உன் முழுஆத்துமாவோடும், உன்

முழுப்பலத்தோடும் உன்
முழுச்சிந்தையோடும் அன்புகூர்வாயாக,
உன்னிடத்தில் அன்புகூருவதுபோலப்
அடுத்தனிடத்திலும் அன்புகூருவாயாக என்று
எழுதியிருக்கிறது என்றான்.

28. அவர் அவனை நோக்கி: நிதானமாய்
உத்தரவு சொன்னாய்; அப்படியே செய்,
அப்பொழுது பிழைப்பாய் என்றார்.

29. அவன் தன்னை நீதிமான் என்று
காண்பிக்க மனதாய் இயேசுவை நோக்கி:
எனக்குப் அடுத்தவன் யார் என்று கேட்டான்.

30. இயேசு பிரதியுத்தரமாக: ஒரு மனுஷன்
எருசலேமிலிருந்து எரிகோவுக்குப்
போகையில் கள்ளர் கையில் அகப்பட்டான்;
அவர்கள் அவன் வஸ்திரங்களை
உரிந்துகொண்டு அவனைக் காயப்படுத்தி,
குற்றுயிராக விட்டுப் போனார்கள்.

31. அப்பொழுது தற்செயலாய் ஒரு சன்னியாசி அந்த வழியே வந்து, அவனைக்கண்டு, பக்கமாய் விலகிப்போனான்.

32. அந்தப்படியே ஒரு பூசாரியும் அந்த இடத்துக்கு வந்து, அவனைக் கண்டு, பக்கமாய் விலகிப்போனான்.

33. பின்பு சமான்யன் ஒருவன் பிரயாணமாய் வருகையில், அவனைக் கண்டு, மனதுருகி,

34. கிட்ட வந்து, அவனுடைய காயங்களில் எண்ணெயும் திராட்சரசமும் வார்த்து, காயங்களைக் கட்டி, அவனைத் தன் சுயவாகனத்தின்மேல் ஏற்றி, சத்திரத்துக்குக் கொண்டுபோய், அவனைப் பராமரித்தான்.

35. மறுநாளிலே தான் புறப்படும்போது இரண்டு பணத்தை எடுத்து, சத்திரத்தான் கையில் கொடுத்து: நீ இவனை விசாரித்துக்கொள், அதிகமாய் ஏதாகிலும்

இவனுக்காகச் செலவழித்தால், நான் திரும்பிவரும்போது அதை உனக்குத் தருவேன் என்றான்.

36. இப்படியிருக்க, கள்ளர்கையில் அகப்பட்டவனுக்கு இந்த மூன்றுபேரில் எவன் அடுத்தவனாயிருந்தான் ? உனக்கு எப்படித்தோன்றுகிறது என்றார்.

37. அதற்கு அவன்: அவனுக்கு இரக்கஞ்செய்தவனே என்றான். அப்பொழுது இயேசு அவனை நோக்கி: நீயும் போய் அந்தப்படியே செய் என்றார்.

பரிசுத்தம் கடவுளை காப்பாற்ற பரிசுத்தம் என்ற பெயரில் மனிதர்களை தீண்டாமல் இருக்கிறோம் என்று மனித சம்பிரதாயமாக சிலர் ஆரம்பித்து அதன் பலனை எவ்வளவு கேவலப்பட வேண்டுமோ அவ்வளவு கேவலப்பட்டார்கள் . கர்ப்பகிரகத்தில் நுழையும்போது மட்டும் கைகால் கழுவி

தண்ணீரை தெளித்துக்கொண்டால் போதுமானது . மனிதர்களை தொடமாட்டோம் என்பதெல்லாம் இறைவனுக்கு விரோதமானது . தமோகுண வகைப்பட்ட துறவு என்ற அலட்டல் ஆகும் .

கீதை 18 : 8 துயரம் நிறைந்தவை என்பதாலோ உடலுக்கு அசௌகரியம் விளைவிக்கும் என்பதாலோ சுமரும் கடமைகளை துறப்பவன் ரஜோ குணத்தால் துறந்தவனாவான் . இது துறவின் பலனை கொடுக்காது

இன்னும் சிலர் வாழ்வின் பிரச்சினைகளை ஓரங்கட்டுவதற்காக ஏதாவது ஒரு மடத்தில் பிரம்மச்சாரியாகி விடுகிறார்கள் . தாங்கள் சந்நியாசி ஆகிவிட்டதால் உற்றார் உறவிணர் பெற்றோர் பராமரிப்பு என்ற கடமையிலிருந்து விதிவிலக்கு பெற்றுக்கொண்டதாக தங்களைத்தாங்களே

ஏமாற்றிக்கொள்கிறார்கள் . இது ரஜோகுணமாகும்

கீதை 18 : 9 ஓ அர்ச்சுனா தன் மேல் சுமரும் கடமைக்காக கடமை செய்து விட்டு எவனொருவன் அதனை மறந்துவிடுகிறானோ அதன் பலன் விளைவுகளை கடவுளுக்கு அர்ப்பணித்துவிடுகிறானோ அவனது துறவு சத்வகுணத்தால் செய்யப்படுபவை ஆகும் .

ஆன்மீக வட்டாரத்தில் பரவலாக உள்ள ஒரு குறை -ஞானப்பெருமை செய்த செயல்களை விளம்பரப்படுத்திக்கொள்வது . சத்சங்கம் என்ற பெயரால் சீடர்கள் எனக்கு இது தெரியும் அது தெரியும் என்று புளகாங்கிதமாக பேசி பொழுதை போக்குவதை கூட்டங்கள் பயிற்சி வகுப்புகளில் காணமுடிகிறது . இப்படி ஞானசம்பாசனை செய்துகொண்டிருப்பதும் ஒரு வேண்டாத சுயமாகத்தான் வளர்ந்துகொண்டே இருக்கும்

ஆனால் செய்த செயல்களையும் அவற்றின் விளைவுகளையும் அடுத்த கணமே கடவுளுக்கு அர்ப்பணித்துவிட்டு மறந்துவிடுகிறவனே சிறந்த பக்தன் யோகி . அவைகளை மறக்காவிட்டால் அவற்றைப்பற்றிய எண்ணம் சுயபெருமையாக வளர்ந்து அலட்டல் வந்துவிடும் .

யாராவது நம்மைப்பற்றி பேசினால் கூட யாரோ அடுத்தவரைப்பற்றி பேசிக்கொண்டிருக்கிறார்கள் போல இருப்பதும் ஒரு யோகமாகும் . எப்போதும் எதையும் கற்றுக்கொள்கிற கிரகிக்கிற மனநிலையோடு இருக்கவேண்டும்

கீதை 18 : 10 சத்வ குணத்தில் நிலைத்திருக்கும் யோகிகள் அமங்களமான செயல்களுக்கு விலகி ஓடுவதில்லை ; மங்களமான செயல்களுக்கு விரும்பி

மகிழ்வதுமில்லை ; சந்தேகப்பட்டு தங்களை ஒதுக்கிக்கொள்வதுமில்லை .

கீதை 18 : 11 ஸ்துல சரீரத்தில் இருப்பவன் எல்லா செயல்களையும் துறப்பது நிச்சயம் சாத்தியம் அல்ல . ஆனால் செயலின் பலன்விளைவுகளை யாரேனும் முற்றிலும் அர்ப்பணித்தால் அவனே உண்மையான துறவி ஆவான் .

இங்கு ஒரு முக்கியமான விபரம் சுட்டப்படுகிறது . யார் நற்காரியங்களையும் புண்ணியங்களையும் இறைவன் நம்மை கருவியாக வைத்து செய்துகொண்டார் என்ற மனநிலையோடு இருக்கிறார்களோ அதுவே அர்ப்பணத்தின் இன்னொரு அம்சம் . அததகைய மனநிலையில் உள்ளவன் ஏதாவது அறியாமையால் பாவங்கள் செய்தாலும் அதுவும் அவனைப்பொருத்த அளவில் இறைவனுக்கு அர்ப்பணம் செய்யப்படும் ; அதை இறைவன் சீர்செய்வார்

**என்பதாகும் . உலக வாழ்வில் பாவங்களை குறைக்கவே சமப்படுத்தவே பிறவி நீள்கிறது . அப்படியாயின் இப்பிறவியில் வரும் துன்பங்கள் சோதனைகள் கர்மங்களை குறைக்க ஒரே வழி சுமரும் கடமைகள் அனைத்தையும் இறைவன் மீது பாரத்தைப்போட்டு அவருக்காக அவரின் ஏவுதலால் செய்வதாக செய்து அர்ப்பணித்து விட்டு நான் செய்தேன் என்பதை மறந்துவிடுவதாகும் . அவனை பாவங்கள் பற்றாது .**

**கீதை 18 : 12 இவ்வாறு அர்ப்பணம் செய்யாதவர்கள் பாவங்கள் ; புண்ணியங்கள் இவ்விரண்டும் கலந்தவை என மூன்று வகையான பதிவுகளை ஆத்மாவில் சுமந்தவர்களாக மரணிக்கிறார்கள் . ஆனால் அர்ப்பணித்தவர்களையோ அவை பற்றுவதில்லை .**

ஆக துறவு என்பது உலக வாழ்வில் இருந்துகொண்டே மனதால் செயல்கள் அனைத்தையும் கடவுளுக்காக என்று செய்து ஒப்புவித்து விடுவதாகும் என்கிறார் ஸ்ரீகிரிஷ்ணர் .

**இறைசித்தம் இல்லாமல் எதுவும் நடவாது :**

**கீதை 18 : 13 பலம் பொருந்திய புயங்களை உடையவனே ! சாங்கிய யோகத்தில் செயல்கள் முடிவு பெற ஐந்து காரணிகள் அவசியம் என கூறப்பட்டுள்ளதே அதன் விளக்கத்தை இப்போது கேட்பாயாக**

**மனித வாழ்வில் நம் மேல் சுமரும் செயல்கள் , கடமைகள் அவற்றை நாம் முடித்தாகவேண்டும் என்ற நெருக்கடிக்குள்ளாக்குகின்றன . ஒருவகையில் பொறுப்பற்றவனாக இல்லாமல் செயல்களை நிறைவு செய்வதற்கு அக்கறை கொள்வது**

பாராட்டத்தக்கதே . ஏனெனில் சுயநலமிகளும் தன் தேவை நிறைவடைந்தால் போதும் என்று இருக்கும் தமோ குணத்தினரும் தம்மை சார்ந்தோர் மனைவி மக்கள் உறவினர் மீதும் பொறுப்பற்று இருப்பதை அங்கீகரிக்க இயலாது . ஆனாலும் அக்கறை கொள்ளும் நற்குணமே உணர்வு வயப்பட்டு நம்மை நாமே நெருக்கடிக்குள்ளாகும் ரஜோகுணமாக துன்பம் தரலாகாது

மிகமிக வயாதாகி துவண்டு போனவர்களும் வாழ்வில் அற்ப காரணங்களுக்காக நொந்துபோன உள்ளத்தோடு இருப்பதை ஆங்காங்கு காணமுடிகிறது . அது ஏதென்றால் பேரனுக்கு அப்படி இப்படி என்ற கவலை அதற்கு பெற்றோர்கள் பொறுப்பாக இருக்கும் போது இறைவனிடம் பிரார்த்தித்து விட்டு தம் ஆத்மலாபத்திற்கு நேரத்தை ஒதுக்குவோம் என்று எத்தனை பேர் இருக்கிறார்கள்

நாம் இறைவனைத்தேடும்போது
பிரார்த்தனை தியானம் சிறு தொண்டு
கோவிலில் செய்யும் போது அது
வாரீசுகளுக்கு எவ்வளவு அருள்பலத்தை
அனுகூலத்தை கொண்டுவரும் என்பதை
நிறையப்பேர் உணர்வதில்லை

எதோ இவர்கள் கவலைப்படாவிட்டால்
எல்லா காரியமும் கெட்டு குடிமுழுகிவிடும்
என்பதுபோலவே பலர் இருக்கிறார்கள்

லூக்கா 12 (இயேசுவின் உபதேசம்)
25. ஆகையால் என்னத்தை உண்போம்,
என்னத்தைக் குடிப்போம் என்று உங்கள்
ஜீவனுக்காகவும்; என்னத்தை உடுப்போம்
என்று உங்கள் சரீரத்துக்காகவும்
கவலைப்படாதிருங்கள் என்று, உங்களுக்குச்
சொல்லுகிறேன்; ஆகாரத்தைப் பார்க்கிலும்

ஜீவனும், உடையைப்பார்க்கிலும் சரீரமும் விசேஷித்தவைகள் அல்லவா?

26. ஆகாயத்துப் பட்சிகளைக் கவனித்துப்பாருங்கள்; அவைகள் விதைக்கிறதுமில்லை, அறுக்கிறதுமில்லை, களஞ்சியங்களில் சேர்த்துவைக்கிறதுமில்லை; அவைகளையும் உங்கள் பரமபிதா பிழைப்பூட்டுகிறார்; அவைகளைப்பார்க்கிலும் நீங்கள் விசேஷித்தவர்கள் அல்லவா?

27. கவலைப்படுகிறதினாலே உங்களில் எவன் தன் சரீர அளவோடு ஒரு முழத்தைக் கூட்டுவான்?

28. உடைக்காகவும் நீங்கள் கவலைப்படுகிறதென்ன? காட்டுப்புஷ்பங்கள் எப்படி வளருகிறதென்பதைக்

கவனித்துப்பாருங்கள். அவைகள் உழைக்கிறதுமில்லை, நூற்கிறதுமில்லை;

29. என்றாலும் சாலொமோன் முதலாய்த் தன் சர்வ மகிமையிலும் அவைகளில் ஒன்றைப்போலாகிலும் உடுத்தியிருந்ததில்லை என்று, உங்களுக்குச் சொல்லுகிறேன்.

30. அற்ப விசுவாசிகளே! இன்றைக்கு இருந்து நாளைக்கு அடுப்பிலே போடப்படும் காட்டுப் புல்லுக்குத் தேவன் இவ்விதமாக உடுத்துவித்தால், உங்களுக்கு உடுத்துவிப்பது அதிக நிச்சயமல்லவா?

31. ஆகையால், என்னத்தை உண்போம், என்னத்தைக் குடிப்போம், என்னத்தை உடுப்போம் என்று கவலைப்படாதிருங்கள்.

32. இவைகளையெல்லாம் அஞ்ஞானிகள் நாடித்தேடுகிறார்கள்; இவைகளெல்லாம் உங்களுக்கு வேண்டியவைகள் என்று உங்கள் பரமபிதா அறிந்திருக்கிறார்.

33. முதலாவது தேவனுடைய ராஜ்யத்தையும் அவருடைய நீதியையும் தேடுங்கள்; அப்பொழுது இவைகளெல்லாம் உங்களுக்குக் கூடக் கொடுக்கப்படும்.

34. ஆகையால் நாளைக்காகக் கவலைப்படாதிருங்கள்; நாளையத்தினம் தன்னுடையவைகளுக்காகக் கவலைப்படும். அந்தந்த நாளுக்கு அதினதின் பாடு போதும்.

கீதை 18 : 14 செயல் புரியும் இடம் ; செய்பவன் ; வெவ்வேறு விதமான கருவிகள் அல்லது புலன்கள் ; பலதரப்பட்ட முயற்சிகள் ; எல்லாவற்றிற்கும் மேலாக இறைவனின்

சித்தம் என்ற ஐந்தும் செயல்கள் நடக்க காரணிகளாகும்

இடம் ; பொருள் ; ஏவல் ;முயற்சி ; இறைசித்தம் இவ்வைந்தும் இல்லாமல் காரியசித்தி கைகூடாது

புறத்தில் இடம் என்பது அகத்தில் நம் சரீரமாகும் . புறத்தில் பொருள் என்பது அகத்தில் நம் ஆத்மாவாகும் . புறத்திலே கருவிகள் என்பது அகத்திலே நமது புலன்களாகும் இத்தோடு பலதரப்பட்ட முயற்சிகளும் இறைசித்தமும் இல்லாமல் எக்காரியமும் நிறைவடையாது

அப்படியாயின் ஒரு காரியம் நிறைவடைவது நமது கரத்தில் மட்டும் இல்லை . பொறுப்புதாரி நாம் என்றாலும் முடிவு இறைவனின் சித்தத்தை பொறுத்து அமைகிறது

இந்த ஐந்தில் நான்கு நாம் நமது உடல் ; ஆத்மா ; புலன்கள் ; முயற்சி ஒரு தட்டு என்றால் அடுத்த தட்டு இறைவன் . நாம் இறைவனை வேண்டாது அவரிடம் ஒப்புவிக்காது நமது அக்கறை பாதிக்கிணறு தாண்டாது . இறைவனின் கிருபை இல்லாமல் எதுவும் நடவாது என்ற தெளிவில்லாத ஆத்மாக்கள் தாங்கள் செய்ததை அப்படி செய்தேன் இப்படி செய்தேன் என பெருமை பேசுவதுபோலவே தங்களால் ஆகாத காரியத்தை ஜீரணிக்க முடியாமல் நொந்துபோன உள்ளத்தோடு கடைசி நாட்களை கடத்துகிறார்கள்

ஆனால் மாபெரும் காரிய சித்தியாளர்களும் இறைசித்தத்தால் இவை நடந்தது என்ற உணர்வால் அலட்டாமலேயே இருந்துகொள்கிறார்கள் ; அவர்கள்

நிறைவேறாத எவற்றுக்காகவும்
கவலைப்படுவதுமில்லை ; ஏங்குவதுமில்லை

கீதை 18 : 15 மனிதன் தன்னுடைய உடல் ; மனம் ; வாக்கால் நல்லதோ கெட்டதோ எந்தவொரு காரியம் செய்தாலும் அதற்கு இவ்வைந்தும் காரணமாம்

கீதை 18 : 16 இவ்வாறாக கூட இருந்து காரியம் செய்கிறவனாக மட்டுமே தன்னை உணராதவன் முட்டாள் . அவன் இறைவனைக்குறித்த அறிவின்மையாலேயே அப்படி உணர்கிறான் .

கீதை 18 : 17 எவனுடைய இயல்பு அகங்காரமின்றி இருக்கிறதோ ; எவனுடைய புத்தி உலகப்பற்று இல்லாமல் இருக்கிறதோ அவன் பூமியில் கொலை செய்யவே நேர்ந்தாலும் பாவம் அவனை பற்றாது .

ஸ்ரீகிரிஷ்ணர் பூமிக்குரிய வாழ்வில் ஒரு மனிதன் கெட்டது செய்யாமல் இருக்கவே முடியாது என்பதாகவே பேசுகிறார். ஏனெனில் ஒரு காரியம் அந்த இடத்தில் உள்ள அனைத்து ஆத்மாக்களின் பாவபுண்ணியங்களின் ஒட்டு மொத்த காரணத்தால் நடக்கிறது . அங்கு ஒரு ஆத்மாவுக்கு முற்பிறவி பலனாக ஒரு கெடுதல் நடந்தாக வேண்டுமானால் இருக்கிற நம்மைக்கொண்டு அது இறைவனால் செய்யப்படலாம் . ஆகவே கைப்பிசகாக பல நடந்துகொண்டே இருக்கும் . அந்த தவறுகளைக்குறித்து இறைவனிடம் வருந்தி பிரார்த்தித்துக்கொள்ள மட்டுமே நமக்கு அவகாசம் கொடுக்கப்பட்டுள்ளது . நம்மால் பாதிக்கப்பட்டவர்களுக்காக பிரார்திக்கமட்டுமே பிராயச்சித்தமாக உள்ளது . ஆனால் மனித முயற்சியால் நம்மை உத்தமனாக ஆக்கிக்கொள்ள முடியாது ; உத்தமானாகவும் கருதக்கூடாது எப்போதும்

இறைவனிடம் தாழ்ந்த மனநிலை ஒன்றே நம்மை கடைத்தேற்றும் .

நாம் செய்த நன்மைகளையும் இறைவனுக்கே ஒப்புவித்துவிட்டு அதைக்குறித்து பெருமைப்படாத ஒருவரால் மட்டுமே நாம் செய்த தீமைகளையும் இறைவனுக்கே ஒப்புவித்துவிட்டு அந்த பாவத்திலிருந்து தப்பித்துக்கொள்ள முடியும் .

செய்த நன்மைகளுக்காக பாராட்டுதல்கள் குவியும்போதும் அதை இறைவனே நம்மை கருவியாக வைத்து செய்துகொண்டார் என்று சுயபெருமைப்படாத ஒருவராலேயே அவர் கைப்பிசகாக கொலை செய்யநேர்ந்தாலும் அல்லது இறைவனின் சித்தப்படியாகவே மரணத்துக்கு ஒப்புக்கொடுக்கப்பட்ட ஒரு நபரை கொல்ல நேர்ந்தாலும் அதன் பாவத்தால் பீடிக்கப்படாது இறைவனிடம் ஒப்புவிக்க முடியும்

இந்த உபதேசம் நடந்து கொண்டிருக்கும்போதே அப்படிப்பட்ட நபர்களாகவே அந்த குருஷேத்திர யுத்த களத்தில் இருந்தார்கள் . துவாபர யுக முடிவு நெருங்கிவிட்டது அந்த யுகத்தின் மனிதர்கள் நல்லவர்களும் கெட்டவர்களும் அழிவை சந்தித்தாகவேண்டும் என்பது இறை சித்தமாகவே இருந்தது . பாரதப்போரில் பல லட்சக்கணக்கான மனிதர்கள் போரில் கலந்துகொள்ள அங்குவந்து குவிந்திருந்தனர் .

பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் ஆன யுத்தத்தில் ஏன் இந்தியாவின் அனைத்து மன்னர்களும் பங்கெடுக்கவேண்டும் . ஆளாளுக்கு ஒரு காரணம் பகை பலி தீர்க்க அங்கு கூடினார்கள் .

பாண்டிய மன்னன் ஒருவனே இருவருக்கும் உணவளிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டு யுத்தத்தில் சண்டை இடாது இருந்தான் . ஏனென்றால் முதல் யுகத்தின் முதல் மனிதன் தமிழன் . அவனே உலகில் சமாதானத்தை கொண்டுவரும் வரலாற்று தகுதி படைத்தவன் என்பதை உணர்த்தவே இறைவன் அவனுக்கு உணவளிக்கும் பொறுப்பை ஒப்படைத்து மற்ற மன்னர்கள் அனைவரும் அவனது சேனைகளும் யுத்தத்தில் சாகும்படி வைத்தார்

பாண்டவர்கள் தர்மவான்களாக இருந்தாலும் அவர்கள் பக்கமிருந்த பலரும் தங்கள் கர்மத்தால் சாவுக்கு நியமிக்கப்பட்டவர்களாகவே இருந்தனர் . அவர்களை யுத்தத்திற்காக யுத்தம் செய்த கர்மயோகிகளான பீஷ்மர் துரோணர் போன்றோர் கொன்று குவித்தனர் . அவர்களும் வீரமரணத்தை பரிசாக ஏற்றனர்

## அது இறைசித்தம் இதுவென உணர்ந்து யுத்தத்திற்காக யுத்தம் செய்த கர்மயோகிகளின் நிலை

யுத்தம் தொடங்குமுன்பு தங்களின் ஆசி நாடி நின்ற பாண்டவர்களைப்பார்த்து யுத்தத்திற்காக யுத்தம் செய் ஈவு இறக்கம் பார்க்காதே நாங்கள் பார்க்கமாட்டோம் அசந்தால் உங்களை கொன்றுவிட தயங்கமாட்டோம் ஆனாலும் தர்மம் உங்கள்பக்கம் இருப்பதால் நீங்கள் வெற்றி பெற ஆசிர்வதிக்கிறோம் என்றுதான் இருவரும் சொன்னார்கள் . அதுவே தெளிந்த ஞானமுள்ளோரின் நிலை அவர்கள் செய்த கொலைகளால் அவர்களை பாவங்கள் பற்றாது என்பதே இங்கு ஸ்ரீகிரிஷ்ணரின் தெளிவு ஆகும்

**கர்மத்தின் செயல் கூறுகள்**

கீதை 18 : 18 அறிவு ; அறியப்படுவது ; அறிபவன் இம்முன்றும் சேர்ந்தால் அங்கு கர்மம் விளைய தூண்டுதல் உண்டாகிறது . அத்தூண்டுதல் பெற்றவன் அச்செயலுக்கு கர்த்தா ஆகிறான் . அவனது கரணங்கள் (மனம் , புத்தி , புலன்கள்) மூலமாக கர்மம் விளைகிறது

கர்மம் விளையும்போது யானை அர்ரமாகவும் குதிரை குர்ரமுமாக வெளிவருகிறது . ஒரு சாலை போட 1 கோடி ரூபாய் அரசு ஒதுக்கினால் அது நிர்வாகம் கமிசன் ஒப்பந்தகாரர் லாபம் என விரையமானது போக 50 லட்சம் ரூபாய்க்கே ரோடு போடப்படும் . இப்படி எங்கெங்கும் திட்டம் ஒன்று செயல் ஒன்றாகவே செயல் வெளிப்படும் . இந்த விரையம் எவ்வளவு சதவீதம் குறைக்கப்படுகிறதோ அவ்வளவு அது நல்ல அரசாக அமையும் . விரையம் தவிர்க்கப்படமுடியாத ஒன்று . கர்மயோகிகள் விரையத்தின் சதவீதத்தை குறைப்பார்களே

தவிர நடைமுறை சாராத வறட்டு சித்தாந்திகளாக வெட்டி வேதாந்தம் பேசிக்கொண்டு தாமும் செயல்படாமல் அடுத்தவரையும் செயல்படவிடாமல் முட்டுக்கட்டைகளாக இருக்கமாட்டார்கள்

நடைமுறை வேதாந்தம் ;வெட்டி வேதாந்தம் என இரண்டு எப்போதுமே இருக்கிறது . எதுவுமே விரையத்துடன் வெளிவரும் நெகிழ்வுத்தன்மை செயலில் மட்டுமல்ல திட்டமிடுதலிலும் இருக்கிறது

ஸ்ரீகிரிஷ்ணர் கர்மம் யாருக்கு தூண்டப்படுகிறதோ அந்த கர்த்தாவுக்கே நெகிழ்வு இருக்கிறது என்கிறார்

கர்த்தாவுக்கு ஏற்கனவே என்ன அறிவு இருக்கிறதோ அதற்கு ஏற்பவே அறியப்படுவதை அறிந்துகொள்கிறான்

அறியப்படுவது உண்மையில் யானையாக இருக்கலாம் . ஆனால் அறிகிற குருடன் யானையை தடவிப்பார்த்த இடம் காலாக தூணாக இருக்கிறது . அவனைப்பொருத்த அளவில் அது ஒரு தூண் மட்டுமே

விஞ்ஞானம் என்கிறோமே அதுவே ஒட்டு மொத்த சமுதாயம் அனுபவத்தின் மூலமாக ஏற்கனவே அறிந்துகொண்ட அறிவின் அடிப்படையானது . இந்த அறிவு நாளும் அதே விசயத்தில் முன்னேறிக்கொண்டிருகிறது . அறிகிறவர்களின் அறிவுதான் முன்னேறியதே தவிர அறியப்பட்ட பொருள் ஆதியிலிருந்து அப்படியேதான் இருக்கிறது .

நடைமுறை வேதாந்திகள் நம் அறிவே குறைபாடுகளாக இருந்து வளர்ந்து விரிவதை அனுபவித்து உணர்ந்தவர்களானதால்

மற்றவர்களிடம் புரிதல் குறைபாடு இருக்கும் என்பதில் நெகிழ்வோடு இருப்பார்கள்

என் வார்த்தை பிரயோகத்தில் நெகிழ்வு என்பது சரியான வார்த்தையாக இல்லாமல் இருக்கலாம் . புரிந்துகொள்ள முயற்சியுங்கள்

நெகிழ்வோடு இருப்பது என்பதில் சமாதான சாத்வீகம் இருக்கிறது . தன் குறையையும் பிறர் குறையையும் அங்கீகரிப்பதாக அது இருக்கும் . சத்யாகிரகம் என்ற ஒன்றை இயேசுவின் சீடர் ஜானாக இருந்து காந்தியாக வந்தவர் கண்டுபிடித்தாரே அதன் ரகசியமும் இதுதான் . அஹிம்சை என்பது தன் குறையையும் பிறர் குறையையும் அங்கீகரித்தல் . அவனால் மட்டுமே ஒரு கன்னத்தில் அடித்தால் மறு கன்னத்தை திருப்பி காட்ட முடியும்

அப்படியானால் சத்யாகிரகம் என்பது என்னவென்றால் தன் குறையையும் பிறர் குறையையும் களைய முயற்சிப்பதே ஒழிய அந்த மனிதர்களை அழிப்பதல்ல

மனிதர்களை அழிக்காமல் மனிதர்களை தாக்காமல் அவர்களின் குறைகளை மட்டும் களைய முயற்சித்தல் . அதற்கு அவன் தன் அன்பால் சாத்வீகத்தால் எதிர்ப்பை வேள்வியை விளைய வைக்கிறான்

காந்தி நாம் வெள்ளையர்களை வெறுக்கவில்லை ; அவர்களின் ஆதிக்க குணத்தை சுரண்டலை ஒடுக்குதலை மட்டுமே எதிர்க்கிறோம் ; அதற்கு ஒத்துழைக்காமல் இருக்கும் போராட்டத்தின் மூலமாக நம் சுதேசியத்தை நாமே உற்பவித்துக்கொள்கிறோம் என்றார் . இந்தியர்களின் சுதேசியம் வளர்ந்தபோது வெள்ளைக்காரர்கள் தாங்கள் நினைப்பது

செயல்படாமல் போவதை உணர்ந்து இங்கிருப்பது வீண் வேலை என அவர்களாக கிளம்பிவிடும்படி நேர்ந்தது

எங்கும் சுதந்திரபோராட்டக்காரர்கள் வெள்ளையர்களை வெறுக்கவில்லை ; மனிதர்களை தாக்கவில்லை அவர்களின் ஆதிக்கத்திற்கு ஒத்துழைக்கவில்லை என பலமுறை நிரூபித்தார்கள்

வெள்ளைகாரர்கள் நாட்டிலிருந்த மனிதாபிமானிகள் நல்லவர்களின் ஆதரவை இங்கிருந்து பெற்றார்கள் . வின்ஸ்ட்டன் சர்ச்சில் போன்ற கடுமையான ஆட்சியாளர்கள் இருக்கும்போதே காந்திக்கு பிரிட்டன் பொதுமக்களின் ஆதரவும் அன்பும் அதிகரித்து மகாத்மா என போற்றத்தொடங்கினார்கள் . கிறிஸ்துவின் போதனைகளான அன்பையும் அஹிம்சையையும் வாயிலே

பிரசங்கித்துக்கொண்டும்
கேட்டுக்கொண்டிருக்கும் இருந்த
வெள்ளைக்காரர்கள் ; கிறிஸ்தவன் இல்லாத
இந்து ஒருவன் அதை செயல்படுத்தி
காட்டிக்கொண்டிருப்பதை உணர்ந்தபோது
அப்படியே அவருக்கு அபிமானிகள்
ஆனார்கள் . காந்தி இங்கிலாந்து
சென்றபோது பெருந்திரளான மக்கள்
அவரைக்காண வந்ததையும்
மதிப்பளித்ததையும் கண்டு ஆட்சியாளர்கள்
பணிந்தார்கள்

இயேசுவின் போதனைகள் ஏற்கனவே
எழுத்தாகவும் வாக்கியங்களாகவும்
ஐரோப்பாவில் இருந்ததுதான் . ஆனால்
அதை ஞானமாக அடைந்து
கடைபிடித்தவர்கள் அங்கில்லை . அதாவது
அறிந்தோர் அங்கில்லை ; ஆனால் காந்தி
தென் ஆப்ரிக்காவுக்கு வேலைக்கு சென்ற
போது அதை அறிந்தார் .உணர்ந்தார்

## சத்யாகிரகத்தை அமுல்படுத்தி அங்கே வெற்றியும் பெற்றார்

கீதையில் கிரிஷ்ணர் இந்த சுலோகத்தில் இந்த உண்மையைத்தான் வெளிப்படுத்துகிறார் . அறியப்படுவது எதுவோ அதை அறிகிறவன் தன் தரத்திற்கு ஏற்றாற்போல் அறிந்துகொள்கிறான் . அதுமட்டுமல்ல அதைக்குரித்து அறிவைத்தருகிறவரான இறைவன் வெளிப்படுத்தாமல் அவனால் அதை உணர்ந்துகொள்ள முடியாது . இன்னும் சரியாக சொன்னால் இறைவனால் உணர்த்துவிக்கப்பட்டாலும் அதை அறிகிறவன் அதில் கொஞ்சம் குறைவாகவே உணர்ந்துகொள்கிறான் . எங்கும் முழுமை கிடையாது . மின்சாரத்தில் கடத்தி இழப்பு ஒன்று இருப்பதுபோல ஒருவரை விட்டு ஒருவருக்கு செய்தி மாறும்போது அது குறைவாகவே மாறுகிறது

சரி கர்த்தாவுக்கு செய்தி வந்துவிட்டது தான் அறிந்துகொண்டதையாவது அவரால் முழுமையாக செயல்படுத்த முடியுமாவென்றால் அவன் மனதில் எண்ணியதை எண்ணியவாறு அவனது புலன்கள் செயல்படுத்தாது . அதிலும் குறைபாடு உண்டாகும் , அச்செயலுக்கு அவனோடு இயங்கவேண்டிய நபர்கள் ஆளாளுக்கு அவர்கள் தரப்பில் உலட்டியது போக வெளியே வருவது கொஞ்சமாகத்தான் இருக்கும்

இது மனித வாழ்க்கையில் தவிர்க்கவே முடியாது . எங்கெங்கும் இறைவனின் பலம் கிடைக்காமால் பெரிதாக ஒன்றையும் சாதிக்க முடியாது

ராஜராஜ சோழன் பேரரசை நிறுவ கனவு கண்டான ; பிரயாசையும் பட்டான் , கூட

இருந்து பாடுபட்ட மகன் ராஜேந்திர சோழன் காலத்தில் கடாரம் வரை அப்பேரரசு விரிந்தது அப்புறம் பேரனால் அதை தக்க வைக்கமுடியவில்லை . அப்படியே சோழ ராஜ்ஜியமே காணாமல் போய் விட்டது . இதற்கா இவ்வளவு பிரயாசை

தக்க வைத்துக்கொள்ள முடியாத ஒன்றுக்காக வாழ்நாளெல்லாம் படை நடத்தி போரிட்டதால் ஆத்மாவுக்கு என்ன பலன் ?

இறைவனை சார்ந்துகொண்டு மனச்சம நிலை பேணிக்கொள்வது ; வாழ்நாள் கடமைகளை பிராதித்துக்கொண்டே கடந்து செல்வது ; சாந்தமாக இருப்பது மேன்மையானது . இன்ப துன்பத்தால் அலசடி படாமல் நிதானமாக இருப்பது ஆன்மீகம் சார்ந்த வாழ்வாகும் ; அவர்கள் உலக வாழ்வில் குறைபாடில்லாமல் நிறைவை இறைவனிடம் பெறுவார்கள்

இந்த நிறைவுக்கு அடிப்படை காரணம் : குறைபாடுகள் எங்கெங்கு உண்டாவதையும் அங்கீகரித்து அவற்றை கடந்து எது கிடைக்கிறதோ அது இறைவனின் கிருபையால் கிடைத்தது என்ற நம்பிக்கை ஆகும் . என் கடன் பணி செய்து கிடப்பதே என உழைப்பையும் குறைப்பதில்லை பிரார்த்தனையும் குறைப்பதில்லை . கிடைப்பதில் சலிப்படைவதுமில்லை

முடிந்தளவு கர்மத்தை யோகமாக செய்துவிடுகிறார்கள்

செயலில் செயலின்மையையும் ; செயலின்மையில் செயலையும் விளைய வைக்கிரவனே யோகி என்கிறார் யுகபுருஷன் ஸ்ரீகிரிஷ்ணர் .

நான் செய்கிறேன் என்பவனால் கர்ம யோகம் விளையாது . இறைவன் கருவியாக என்னைக்கொண்டு காரியம் நடத்திக்கொண்டிருக்கிறார் என்பவனால் மட்டுமே இந்த யோகம் விளையும் .

ஆகவே பலன் விளைவுகளில் அவன் தவதாயப்படுவதில்லை .

திரித்துவமும் திரியேகத்துவமும்

இறைவன் படைப்புகள் எதுவும் மூன்று பிரகிருதிகள் ஒன்றாக இயங்குவதாகவே இருக்கிறது திரித்துவம் என்பார்கள்

கீழான நிலையில் உள்ளவைகள் மூன்றும் இணைந்து செயல்பட்டால் மட்டுமே இயங்கும்

பிரிந்துவிட்டாலோ இயங்காது முடங்கிவிடும்

ஆனால் மேலான நிலையை எட்டியவர்களோ மூன்றும் தனித்தனியே பிரிந்தும் தனித்து இயங்குவதாகவும் மூவரும் இணைந்து ஒருவராகவும் இயங்க முடியும்

மூவர் ஆனால் இணைந்து ஒருவர்

இதை திரியேகத்துவம் என்பார்கள்

ஆன்ம வாழ்வில் குறிப்பிட்ட தரத்தை நீங்கள் அடைய திரித்துவம் திரியேகத்துவம் என்பதை உணரவேண்டும்

மனிதன் = ஆவி + ஆத்மா + அழியக்கூடிய ஸ்தூல சரீரம்

தேவர் = ஆவி + ஆத்மா + அழிவில்லாத ஒளிசரீரம்

இது திரித்துவத்தின் உதாரணம் என்றால்

திரியேகத்துவத்தின் உதாரணம் முகுந்தன்

அதாவது மூவர் ஒருவராக இருப்பது

ஆதிசேஷன் + விஷ்ணு + நாராயணி
இம்மூவரும் தனித்தனியே இயங்குவார்கள்

மூவரும் ஒன்றாக நாராயணன்
என்பவராகவும் இருப்பார்கள்

இந்த திரியேகத்துவமாக அறிவு ஞானம் புத்தி
குணங்கள் கர்மங்கள் கர்மங்களை
செய்கிறவர்களும் இருக்கிறார்களாம்

இதை நான் சொல்லவில்லை

கீதை 18 : 19 சுலோகத்தில் யுகபுருஷன் கிரிஷ்ணர் சொல்கிறார்

திரிதா ஏவ ப்ரோச்யதே என்கிறார்

மூன்று மூன்றாகவும் மூன்றும் ஒன்றானதாகவும் தோன்றுகின்றன இருக்கின்றன இயங்குகின்றன

கீதை 18 : 19 குணங்களை பகுத்துக்காட்டும் சாங்கிய சாஸ்திரத்தில் ஞானமும் கர்மமும் கர்மத்தை செய்கிறவனையும் அவைகளின் இயல்புகளால் மூன்று மூன்றாகவும் மூன்றும் ஒன்றானதாகவும் சித்தரிக்கப்படுகின்றன . அவைகளையும் இப்போது என்னிடமிருந்து அறிந்துகொள்வாயாக

**20 முதல் 40 வரையிலான சுலோகங்களில் பலவற்றில் இந்த திரியேகத்துவம் இருப்பதை விளக்குகிறார்**

**ஆகவே ஞானம் பயில்வோர் நாங்க அந்த மார்க்கம் இந்த மார்க்கம் என்று சொல்லிக்கொண்டிராமல் திரியேகத்துவத்தின் முக்கியத்துவத்தை உணர முயலுங்கள்**

**கீதை 10 : 20 அர்ச்சுணா ! தனித்த பரமாத்துமாவாக நான் இருப்பினும் ஒவ்வொரு மனிதனிலும் ஜீவாத்துமாவாகவும் நானே குடிகொண்டிருக்கிறேன் ! படைப்பினங்கள் அனைத்திற்கும் துவக்கமும் நடுவும் முடிவுமாக நானே இருக்கிறேன் !**

**--------------------------**

**கீதை 8:4 வானவர்களான தேவர்கள் அசுரர்கள் அதிதேவதைகள் அல்லது தேவதூதர்கள் என அறியப்படுகின்றனர்**

!சூரியசந்திர நட்சத்திரங்கள் உள்ளிட்ட வானமண்டலசேனைகள் மற்றும் பூமியிலுறையும் படைப்பினங்கள் அனைத்தும் எதிலிருந்து உருவாக்கபட்டதோ அந்த பரமாத்வான நானே ``ஆதியஜ்னா `` அல்லது வேள்விகளின் புருஷனாவேன் !

பூமியிலுறையும் படைப்புகளும் , வாணமண்டல படைப்புகளான தேவதூதர்கள் மற்றும் அசுரர்களும் நாராயணனிலிருந்தே படைக்கப்பட்டுள்ளனர் ! இந்த தேவதூதர்களில் பல வகையினர் உள்ளனர் !

உதாரணமாக அஸ்வினிகள் ருத்திரர்கள் கந்தர்வர்கள் வசுக்கள் அசுரர்கள் மற்றும் மஹரிஷிகளும் தேவர்களாக உள்ளதாக குறிப்புகள் உள்ளன !
அப்படி ருத்திரர்கள் வகைப்பட்ட தேவதூதர்களில் ஒருவராக சிவன் உள்ளார் !
அஸ்வினிகளில் ஒருவராக விஷ்ணு உள்ளார்

! தேவர்கள் மற்றும் அசுரர்களும் நாராயணனுக்குள் படைக்கப்பட்ட படைப்புகளே ! இவர்களுக்கு ஒவ்வொரு பொறுப்புகளும் நிர்வாகமும் கடவுளாலும் நாராயணனாலும் வழங்கப்பட்டுள்ளன ! அவைகள் நாராயணனுக்கு கீழான சக்திகள் !! ஆனாலும் மனிதர்களை விட அவைகள் மேலான சக்திகள் !

மனிதர்களுக்கு தன்னை விட மேலான சக்திகளுக்கு பயப்படுதல் என்பது இயல்பாகவே வந்துவிடுகிறது ! செல்வந்தர்களை கண்டால்கூட கூழைக்கும்பிடு போடும் மனிதர்கள் அவர்களை விட பெரிய வாணமண்டல சக்திகளை பிரியப்படுத்துவது என்பது இயல்பாக வந்த ஒன்று !

**ஆனால் எல்லாபுகழும் கடவுளுக்கே என்பதுதான் ஆதியிலேயே மனிதர்களுக்கு உபதேசிக்கப்பட்டது !**

**கடவுளை யார் மூலமாக நாம் படைக்கப்பட்டுள்ளோமோ அந்த நாராயணன் மூலமாக வழிபடுவது சரியானது !**

**ஓரிறைவனை நாராயணன் மூலமாக துதிக்கிறோம் என்பதையே மகா மந்திரமாக `` ஓம் நமோ நாராயணாய `` என்பதாக முதல் மகாமந்திரமாக மனித இனத்திற்கு வழங்கப்பட்டது !**

**ஆனாலும் மனிதனை விட மேலான சக்திகளான தேவதூதர்கள் மற்றும் மனிதர்களில் தூய்மயடைந்த மஹரிஷிகள் - குருனாதர்கள் மூலமாகவும் கடவுளை வழிபடுவதும் ஆத்ம கல்விக்கு ஏற்புடையது**

என்பதால் அவர்கள் மூலமாகவும் கடவுளை வழிபடுவது வழக்கத்தில் வந்தது !

மகா மந்திரத்தில் இரண்டு முக்கியமான பகுதிகள் உள்ளன !
முதலாவது பகுதி ஓரிறைவனையே துதிக்கிறோம் -- ஓம்
+
இரண்டாவது பகுதி யார் மூலமாக துதிக்கிறோம் என்பது -- நாமத்தினாலே

ஓம் நமோ நாராயணாய
ஓம் நம சிவாயா
ஓம் சிவாய நம
ஓம் பிரம்மாய நம
ஓம் வருணாய நம
ஓம் அகத்தியாய நம
ஓம் வசிஸ்ட்டாய நம
ஓம் விஸ்வாமித்ராய நம

ஓம் நம சிவாய. சிவாய என்றுதானே உள்ளது
சிவனாக ஆனவனை நமஸ்கரிக்கிறேன்
ஓம் நம சிவ என மந்திரம் இல்லை சிவனை வழிபடுகிறேன் என மந்திரமே இல்லை

ஓம் நமோ நாராயணாய நாராயணனாக ஆனவனை வழிபடுகிறேன் பஞ்சாக்கரமும் அஸ்ட்டாங்கமுமே ஆதி மூலமந்திரங்கள்

ஆனவனை வழிபடுகிறேன் அறியப்பட்டவன் மூலமாக அறியப்படாதவனை வழிபடுகிறேன்

இப்படி குருமூலமாக கடவுளை துதிப்பது என்ற சரியான வழக்கம் அசுரர்களின் துர் உபதேசத்தால் கலப்படம் அடைந்து ஓமை அர்த்தமற்றதாக்கி விட்டார்கள் ! கடவுளை விட்டுவிட்டு குருவையே கடவுளாக மாற்றிவிட்டனர் !

ஏக இறைவனை ஓரம்கட்டி தேவர்களையும் குருக்களையும் பல கடவுள்களாக சித்தரித்துவிட்டனர் !

பிறகு எல்லாமும் கடவுள்தான் என சப்பைகட்டும்கட்டி ஒரு பெரிய கூட்டத்தில் கடவுளை முக்கியத்துவம் இல்லாதவராகவும் மாற்றிவிட்டனர்

ஆனால் சரியானது எதுவென்றால் நீ அறிந்த எவரையும் குருவாக வைத்து அறியப்பட முடியாதவரான இறைவனையே வழிபடு என்பதாகும்

கீதை 18 : 20 சகல சிருஷ்டிகளும் அந்த ஏகனின் சித்தத்தால் உண்டானது ; அங்கிங்கெனாதபடி நீக்கமற எங்கும் நிறைந்திருப்பது பரமாத்மா என எவனால் உணரப்படுகிறதோ அதுவே சாத்வீகஞானமாகும்

பொதுநோக்கு என்பது சாத்வீகத்தின் வெளிப்பாடாகும்

பொதுநோக்கு உடையவன் சகலத்தையும் தன்னைப்போலவே முக்கியத்துவம் கொடுப்பான்

தனக்கு எவ்வளவு மதிப்போ அதே மதிப்பை அவன் சகலருக்கும் கொடுப்பான்
தன் நிறைகுறைகளை எவ்வளவு சகிப்பானோ அவ்வளவு சகிப்பான்

எங்கும் எதிலும் இறைவனின் சித்தமே இறுதியாக செயலாக்கத்துக்கு வருகிறது ; அதுவரை அசுரர்களுக்கும் சுரர்களுக்கும் போராட்டம் பூமியில் நடந்துகொண்டே இருக்கிறது என்பதை எவன் ஒருவன் உணர்ந்திருக்கிரானோ அவன் எதைக்கண்டும் கோபப்படுவதில்லை

இந்த இடத்தில் நமது பங்கு என்னவோ அதை நிறைவேற்றினால் போதும் என்கிற அளவில் அவனின் துடிப்புகள் சமப்பட்டு விடுகின்றன

எது ஆக்கப்புரவமானதோ ; நமக்கு நன்மையாக எது தேவையோ அதை ஆக்ரோஷமாக அடைய முயற்சி செய்யாமல் இறைவனிடம் ஒப்புவித்துக்கொண்டு கிடைப்பதை பெற்றுக்கொள்ளும் பொறுமை உண்டாகி விடுகிறது

எது ஒட்டுமொத்த இறை ராஜ்ஜியத்திற்கு தேவையான முன் நகர்வு என இறைவனால் சுட்டிக்காட்டப்படுகிறதோ அதனை நோக்கிய ஆக்கப்பூர்வமான சிறு சிறு நகர்வுகள் கருத்து விதைப்புகள் செய்துகொண்டு திருப்தியாக இருக்கும் நிலை உண்டாகிவிடும்

**கலியுகத்தில் அசுரர்களால் தீமைகள் கொடுமைகள் நடந்தாலும் அவைகளின் மத்தியிலிருந்து இறை பேரரசுக்கான நகர்த்துதல் நம்மைப்போன்ற நபர்களைக்கொண்டு இறைவன் செய்துகொண்டிருக்கிறான் ; ஆகவே நம்மை அவ்வளவு எளிதாக இறைவன் கைவிடமாட்டான் என்கிற தெளிவோடும் சாட்சியத்தொடும் உலகில் பார்வையாளனாகவே இருப்பான்**

**கலியுகம் அசுரர்களுக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கிறது . கடவுளால் படைக்கப்பட்ட மனிதர்களாகவே இருந்தாலும் பூமியில் அவர்கள் அசுரர்களின் ஆளுகைக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டு இச்சைகளோடு மாயைகளோடும் அநித்தியமானவைகளுக்காக வாழ்ந்துகொண்டும் போராடிக்கொண்டும் இருக்கிறார்கள்**

அவர்களின் மத்தியில் இறைநெறி உணர்ந்தோர் அந்நிய தேசத்தார் போலத்தான் இருக்கிறோம் ; அந்நிய தேசத்தில் என்ன நேர்ந்தாலும் பொறுமையோடும் சகிப்புத்தன்மையோடும் நெழிந்து சுழிந்து பிரார்தித்துக்கொண்டுதான் வாழ முடியுமே தவிர ஆக்ரோஷமாக போராடவே முடியாது

ஆனால் நாம் நம்பியிருப்பவர் சகலவற்றையும் விட பெரியவர் ; எதையும் எந்த நேரத்திலும் செய்ய திராணியானவர் ; இல்லாதவற்றையும் இருப்பதுபோல அழைக்க வல்லவர் ; கடைசி நேரத்தில் நம்மை காப்பாற்றி கைதூக்கி விட இயல்கிறவர் என்ற நம்பிக்கை இருந்தால் போதுமானது ; தெளிவு இருந்தால்போதுமானது அவன் எதற்காகவும் கலங்க மாட்டான்

மனிதர்களின் சிந்தனையை கெடுக்க அதிகாரம் பெற்றுக்கொண்ட அசுர ஆவிகள் தங்கள் விதையை மாயைகளை விதைத்துக்கொண்டேதான் இருப்பார்கள்

யார் இறைவனை கொஞ்சமேனும் உணர்ந்தவர்களோ ; அவர்கள் மூலமாக மட்டுமே இறைவன் தன் விதைகளை விதைக்க முடியும் பொறுமையும் நீடித்த பொறுமையும் அவசியம்

3. கேளுங்கள், விதைக்கிறவன் ஒருவன் விதைக்கப்புறப்பட்டான்.

4. அவன் விதைக்கையில், சில விதை வழியருகே விழுந்தது; பறவைகள் வந்து அதைப் பட்சித்துப்போட்டது.

5. சில விதை அதிக மண்ணில்லாத கற்பாறை இடங்களில் விழுந்தது; மண்

ஆழமாயிராததினாலே அது சீக்கிரமாய் முளைத்தது.

6. வெயில் ஏறினபோதோ, தீய்ந்துபோய், வேரில்லாமையால் உலர்ந்து போயிற்று.

7. சில விதை முள்ளுள்ள இடங்களில் விழுந்தது; முள் வளர்ந்து அதை நெருக்கிப்போட்டது.

8. சில விதையோ நல்ல நிலத்தில் விழுந்து, சிலது நூறாகவும், சிலது அறுபதாகவும், சிலது முப்பதாகவும் பலன் தந்தது.

24.பரலோகராஜ்யம் நல்ல நிலத்தில் விதைக்கப்பட்ட நல்ல விதையை விதைத்த மனுஷனுக்கு ஒப்பாயிருக்கிறது.

25. மனுஷர் நித்திரை பண்ணுகையில் அவனுடைய சத்துரு வந்து, கோதுமைக்குள் களைகளை விதைத்துவிட்டுப் போனான்.

26. பயிரானது வளர்ந்து கதிர் விட்டபோது, களைகளும் காணப்பட்டது.

27.வேலைக்காரர் அவனிடத்தில் வந்து: ஆண்டவனே, நீர் உமது நிலத்தில் நல்ல விதையை விதைத்தீர் அல்லவா? பின்னை அதில் களைகள் எப்படி உண்டானது என்றார்கள்.

28. அதற்கு அவன்: சத்துரு அதைச் செய்தான் என்றான். அப்பொழுது வேலைக்காரர்: நாங்கள் போய் அவைகளைப் பிடுங்கிப்போட உமக்குச் சித்தமா? என்று கேட்டார்கள்.

29. அதற்கு அவன் வேண்டாம், களைகளைப் பிடுங்கும்போது நீங்கள்

கோதுமையையுங்கூட வேரோடே பிடுங்காதபடிக்கு இரண்டையும் அறுப்பு மட்டும் வளரவிடுங்கள்.

30. அறுப்புக்காலத்தில் நான் அறுக்கிறவர்களை நோக்கி: முதலாவது களைகளைப்பிடுங்கி, அவைகளைச் சுட்டெரிக்கிறதற்கு கட்டுகளாகக் கட்டுங்கள்; கோதுமையையோ என் களஞ்சியத்தில் சேர்த்துவையுங்கள் என்பேன் என்று சொன்னான் என்றார்.

இப்பிறவியிலேயே நாம் சாதிக்கவேண்டும் என்ற துடிப்பு அவசியமில்லை . கலியுகம் எப்போது முடியுமோ இறைவனே அறிவார்

கலியுகத்தின் பல மாயைகள் சமுகத்தை வாட்டும்போது மாயைகள் எவையோ அவைகளை அழிக்குபடியாக வசனத்தை மட்டுமே விதையுங்கள்

சத்திய யுகம் வரட்டும் என்ற எண்ணத்தில்
நீங்கள் பேசுகிற சின்ன சின்ன
வார்த்தைகளுக்கும் மிகுந்த பலன் உண்டு

அவைகளை எந்த நேரத்தில் எவர்கள்
மத்தியில் வளரச்செய்ய வேண்டுமோ அதை
இறைவன் வளரச்செய்வார்

அசுரர்களின் மாயைகளுக்கு எதிரான உங்கள்
வார்த்தைகள் யுத்தகளத்தின்
பிரமாஸ்திரங்கள் என்பதை மனிதர்கள்
அறியமாட்டார்கள்

அசுர ஆவிகள் பலகீனப்படும்

உங்கள் மூலமாகவே இறைவனது வல்லமை
வார்த்தை பூமியில் விளங்கும்

ஏசாயா 32:20 மாடுகளையும் கழுதைகளையும் நடத்திக்கொண்டுபோய், நீர்வளம் பொருந்திய இடங்களிலெல்லாம் விதைவிதைக்கிற நீங்கள் பாக்கியவான்கள்.

மனிதனாக பிறந்த யாரும் கடவுளுடன் நேரடியாக கலந்து விட முடியாது ! இடையில் ஒரு நிலை - ஏழு வானங்கள் லோகங்கள் உள்ளன ! அதை அடைவதற்கே தகுதியடையாத நிலையில் அங்கு சென்ற பிறகு மட்டுமே உணர முடியக்கூடிய விசயங்களை பேசுவதால் என்ன பயன் ?

கீதை 8:15 பக்தியில் யோகம் விளைந்த மகத்துவமான ஆத்துமாக்கள் யுகபுருஷனின் வாசஸ்தலத்தை அடைந்தபிறகு துயறங்கள் நிறைந்த தற்காலிகமான இப்பூவுலகுக்கு எப்போதும் திரும்ப வரவே மாட்டார்கள் ; ஏனென்றால் அதிஉண்ணத வெளிச்சத்தை அவர்கள் அடைந்து கொண்டார்கள் !

**கீதை 8:16 பிறப்பும் இறப்பும் திரும்பதிரும்ப சம்பவிக்கும் இப்பூவுலகில் வளமிக்க இடங்கள் முதல் வளம்குறைந்த இடங்கள் வரை எங்கும் துயறங்களே நிறைந்துள்ளன ; ஆனால் யுகபுருஷனாகிய எனது வாசஸ்தலத்தை வந்தடைந்தவனோ ``மரணமில்லாத பெரு வாழ்வு` அடைகிறான் !**

**கீதை 8:20 பிறப்பு இறப்பை கடந்த நித்தியஜீவன் அருளப்பெற்ற ஆத்துமாக்கள் மரணமில்லாத பெரு வாழ்வு என்றொரு உண்ணதமான நிலையை அடைகின்றன ! அவைகள் ஒருபோதும் மரிப்பதில்லை ! இவ்வுலகம் முழுமையும் அழிவுக்குள்ளான பிறகும் அவைகள் மாத்திரம் மரணமில்லா பெருவாழ்வில் நிலைக்கின்றன !**

**கீதை 8:21 மரணமில்லாவாழ்வு என்று தத்துவஞானிகளால் வர்ணிக்கப்படும் அந்த உண்ணத இலக்கை அடைந்த பிறகு ஒருவன்**

ஒருபோதும் திரும்ப பூமிக்கு வருவதில்லை ! அந்த இடமே எனது பரலோக வாசஸ்தலமாகும் - யுகபுருஷனின் இருப்பிடமாகும் !

கீதை 8:22 சகல ஆத்துமாக்களையும் விட பெரியவரான பெருமாள் - யுகபுருஷன் கலப்படையாத பக்தியால் எளிதில் அடையப்படக்கூடியவரே ! பரலோக வாசஸ்தலத்தில் அவர் இருந்தாலும் அவர் மூலமாக படைக்கபட்ட இந்த பூலோகத்தில் எங்கும் விரவியிருக்கிறவராகவும் ; உண்டான சகலமும் அவருக்குள்ளேயே நிலைபெற்றிருக்கிறவராகவும் உள்ளார் !

கீதை 8:23 பரதவர்களுள் சிறந்தோனே ! இப்பூவுலைகை விட்டு கடறும் யோகிகள் பலர் மீண்டும் இப்பூமிக்கு திரும்ப வருவார்களா அல்லது வரமட்டார்களா என்பதை அவர்கள் கடறும் காலத்தை

பொருத்து நிர்னயைக்கலாம் என்பதை உணக்கு அறிவிக்கிறேன் !

கீதை 8:24 யார் உண்ணதமான கடவுளை உணர்ந்து அறிந்தவர்களோ அவர்கள் ஒளிமயமானவரான கடவுளின் ஆதிக்கத்திற்குள்ளாகி ஒளிமயமாகி பரலோகத்தை அடைவர் ! வளர்பிறையிலோ அல்லது உத்திராயணத்திலோ ஒரு நாளின் பரிசுத்தமான பகல்நேரத்தில் அவர்கள் பூமியை கடறுவார்கள் ! அவர்கள் திரும்ப வருவதில்லை !

கீதை 9:25 யார் ஞானிகளையும் மஹான்களையும் வழிபடுகிறார்களோ அவர்கள் அவர்கள் பிறவியெடுத்துள்ள இடத்தில் பிறப்பர் ! யார் முன்னோர்களை வழிபடுகிறாற்களோ அவர்களும் அவர்கள் பிறவியெடுத்துள்ள இடத்தில் பிறப்பர் ! யார் அசுரர்களை வழிபடுகிறாற்களோ அவர்களும்

அவர்களின் ஆதிக்கம் உள்ளோரிடத்தில் பிறப்பர் ! ஆனால் யார் என் மூலமாக கடவுளை வழிபடுகிறார்களோ அவர்கள் எனது நித்திய இடத்தை அடைந்து மரணமில்லா பெரு வாழ்வு பெறுவர் !!

வைகுண்டம் ; சிவலோகம் அல்லது பரலோகத்தில் பிரவேசித்த பிறகு அங்கிருந்தே கடவுளை பற்றிய நேரடி அணுபவத்தை பெற முடியும்

நாம் எந்த குருகுலத்தில் இருந்து ; எந்த அதிதேவர் மூலமாக இறைவனை தொடர்பு கொள்ளுகிறோமோ அந்தந்த அதிதேவர்களின் லோகங்களில் சென்று தங்கி பின்பே இறைவனின் நேரடி புரிதலுக்கு வரமுடியும்

யோவான் 14:2 என் பிதாவின் வீட்டில் அநேக வாசஸ்தலங்கள் உண்டு; இதோ ஒரு

**ஸ்தலத்தை உங்களுக்காக ஆயத்தம்பண்ணப்போகிறேன். இயேசுவின் பிரியா விடை உபதேசம் இவ்வார்த்தைகள்**

**அவரவர்கள் அவர்களது குருவுக்கு பரத்திலே உள்ள வாசதலங்களுக்கே செல்லமுடியும்**

**அங்குபோய் தரிசிக்க வேண்டிய இறைவனை அவரவர் குருவின் நாமத்தால் தொழுது கொள்வதே சரியான நெறி**

**கீதை 18 : 21 எந்த ஞானத்தின் மூலமாக சகல சிருஸ்ட்டிகளிலும் அவைகளுக்குரிய தனித்த இயல்புகளையும் அவற்றின் குணபேதங்களால் உருவாகும் முரண்பாடுகளையும் பிரித்தறிய முடிகிறதோ அது ரஜோஞானம் ஆகும்**

**ரஜோகுணம் என்பது போர் வீரர்களுக்கு மட்டுமே உரியது என்பதாக மேலோட்டமாக பேசப்படுகிறது . போர் வீரர்களுக்கு மிக**

அவசியமான ஒன்று எதிராளிகளை நிதானித்தல் ஆகும்

எதிராளியின் இயல்பு தாக்கும் திறன் ; வேகம் உத்தி ஆகியவைகளை சரியாக நிதானித்தால் மட்டுமே அதை தடுக்கும் யுத்தி தெரியும் . எதிராளியை முடக்கியபிறகே அவனை வெற்றிகொள்ளவோ அல்லது அழிக்கவோ முடியும்

விடுதலைப்புலி பிரபாகரனின் மாபெரும் தவறுகளில் ஒன்று சிங்களவர்களுக்கும் வடக்கு இலங்கைக்கும் இடையில் அதாவது கிழக்கு பிராந்தியத்தில் பல ஆண்டுகளாக வெற்றிகரமாக சிங்களவர்களை தடுத்து வைத்திருந்த அனுபவத்தில் தேர்ந்த கருணாவை ஒன்றுமில்லாத உப்புசப்பு பெண் விசயத்திற்காக பகைத்துக்கொண்டது .யுத்தகாலத்தில் சில விசயங்களை முக்கியப்படுத்தலாகாது என்பார்கள்

அவரின் போதாத காலம் கருணாவை கொல்ல முயற்சித்து தப்பவிட்டது

கருணா தப்பியபோதே பிரபாகரனின் அழிவு உறுதிபடுத்தப்பட்டுவிட்டது

யுத்த தந்திரங்களை அடுக்கடுக்காக கையாண்ட ராஜபஷே ; பலரை கொன்றவர் கருணா என கோபம் வைக்காமல் நிதானமாக அவருக்கு மந்திரி பதவி கொடுத்து விடுதலைபுலிகளின் சகல நுணுக்கங்களையும் அவரிடம் அறிந்துகொண்டார்

விடுதலைப்புலிகளின் தாக்கும் திறனை யுத்திகளை பின்புலத்தை மிக சரியாக கணித்ததால் எளிதாக வெற்றி கண்டார்கள்

வெற்றி வேல் வீரவேல் என
கத்திக்கொண்டே விட்டில் பூசிக்களாக
புலிகளின் முப்படைகளும் அழிந்தன

பிறரை அவர்களின் தனித்த இயல்புகளை
கணித்தல் ; பேதங்களின் தன்மையை
உணர்தல் ரஜோஞானம் என ஸ்ரீகிரிஷ்ணர்
வர்ணிக்கிறார்

ஆன்மவாழ்வின் முன்னேற்றத்திற்கு
பரமண்டல சக்திகளின் தனித்த இயல்புகளை
தரம்பிரித்து உணர்தல் மிக மிக அவசியம்

இறைவன் மட்டுமே அங்கிங்கென்னாதபடி
நீக்கமற நிறைந்திருக்கிறார் என்று
படர்க்கையாக அறிகிற பலர் நானும்
இறைவனாக இருக்கிறேன் ; ஆகவே என்
மூலமாக மட்டுமே இறைவனை
உணரமுடியும் என ஆரம்பித்து தன்னை
உணர்கிறேன் என்கிறார்கள் . தனக்குள்

**என்னென்ன சஞ்சித கர்மங்கள் இருக்கின்றன என்பதை ஒவ்வொன்றாக கண்டறிந்து கடந்து வரவேண்டும்**

**அப்படி எதுவும் கடந்து செல்லாமல் வெறுமனே நானே கடவுள் நானே கடவுள் என பத்து தடவை சொல்லிவிட்டு எல்லாம் உணர்ந்துவிட்டேன் என ஞானிப்பட்டத்தோடு ஞானதாகத்தை முடித்துக்கொள்பவர்களும் உண்டு**

**பிரம்மம் ஒன்றே ஒன்றுதான் தந்தனா நானனே தந்தனா நானனே தன தந்தனான என ஆனந்தகழிப்பு பாடல் ஒன்று ஒன்று . அதை ஆழமாக உணர்ந்த சித்தர்கள் பாடியது . அதை சத்வஞானம் என்றே முந்திய சுலோகத்தில் ஸ்ரீகிரிஷ்ணர் பாராட்டுகிறார்**

**ஆனால் பரமண்டலத்தில் கடவுள் மட்டுமே இல்லையே . 33 கோடி தேவர்களை**

உருவாக்கி அவர்களுக்கு பொறுப்புகளை பகிர்ந்து கொடுத்து அவர்கள் மூலமாகத்தானே சகல காரியங்களையும் நடத்துகிறார்

இந்த தேவர்கள் ஒவ்வொருவரும் தனித்தவர்கள் . தனித்த பிரகிருதிகள்

இறைவனை மீறி கலகம் செய்யும் தேவர்கள் சிலர் அசுரர்களாகவும் மாறி பேதங்களும் அரசியலும் அங்கும் நடந்துகொண்டிருக்கிறதே

விஷயம் என்னவென்றால் ஞானவானே உனக்குள் இருக்கும் சஞ்சித கர்மங்களை கண்டுணரவே அசுரர்கள் விடமாட்டார்கள்

நானே கடவுள் என்பதை மட்டும் விதவிதமாக சொல்லித்தருவார்கள் ;உனது

சஞ்சித கர்மங்கள் ஒன்றையாவது தம்பிடி உன்னை உணரவிடமாட்டார்கள்

ஏனென்றால் நானும் கடவுளாகிவிட்டேன் ; அந்த கடவுளை சரணடைய வேண்டிய அவசியம் இல்லை என்பதுதான் அசுரர்களின் ஒரே தாரக மந்திரம்

ஸ்ரீகிரிஷ்ணர் இங்கு முக்கியப்படுத்தும் விஷயம் சகலமும் பிரமம் என்று மட்டும் உணர்ந்தால்போதாது ; அதே பிரமம் தனித்தனி பிரகிருதிகளாக குணபேதங்களுடன் ஒன்றை ஒன்று முரண்பட்டு நிற்கிறது என்பதையும் சரியாக நிதானிக்கவேண்டும்

பரமாத்மா ஒன்றே ஆனால் குணங்களால் பேதப்பட்டு தனித்தவைகளாக உள்ள பல ஜீவாத்மாக்களுள் விரவியும் கிடக்கிறது ; தனித்தும் செயல்படக்கூடியது

ஒன்றாய் அரும்பி, பலவாய் விரிந்து, இவ் உலகு எங்குமாய்
நின்றாள், அனைத்தையும் நீங்கி நிற்பாள்—
என அபிராமி அந்தாதி அதிதேவர் நாராயணியைப்பற்றி பாடுகிறது

அதிதேவர்களும் கடவுளைப்போல சகலத்தில் விரவியும் தனித்தும் செயல்படக்கூடியவர்கள்

அதிதேவர்களுக்கு கீழான தேவர்களுக்கு இவ்வியல்பு இல்லை ; தனித்தவர்கள் ; மனிதர்களும் மற்ற சிருஷ்டிகளும் அவ்வாறே

தனித்தவை ; குணபேதங்கள் உள்ளவை

மனிதர்களுக்குள் ஓயாது தர்க்கபேதங்களும் சண்டை சச்சரவுகளும் உள்ளதே ; இந்த பேதத்தை பலவாறாக தூண்டி விடுகிரவர்களே அசுரர்கள் ஆகும்

ஆக ஆன்ம முன்னேற்றத்திற்கும் சமூக முன்னேற்றத்திற்கும் சத்வஞானம் மட்டும் இருந்தால் போதாது ரஜோஞானமும் அவசியம் என்கிறார் .

மனித சமுதாயத்தில் புரையோடிப்போன பேதங்களை களையவேண்டுமானால் மனிதர்களை கண்டித்து பலனே இல்லை .

மனிதர்களுக்கு பின்னணியில் இயங்கும் அசுர சக்திகளை இறை பேரரசின் சார்பாக அடக்கும் இறை அவதாரங்கள் ; இறை தூதுவர்கள் வந்தால் மட்டுமே சாத்தியப்பட்டிருக்கிறது .

காந்தி சொன்ன சத்யாகிரகம் அதுதான் .மனிதர்களை நாம் தாக்கலாகாது ; அவர்களின் தீய குணத்தை மட்டுமே வெல்லவேண்டும்

மனிதர்களின் பின்னணியில் இயங்கும் அசுர ஆவிகளை நாராயணன் நாமத்தாலும் சிவனின் நாமத்தாலும் இறைவன் கடிந்துகொள்ளட்டும் என்று மட்டுமே நீங்கள் பிரார்த்தித்து வரவேண்டும்

இது ஆவிமண்டல யுத்தம்

ஆவிமண்டல யுத்தத்தில் பின்னணியில் இயங்கும் ஆவியின் தன்மை ;பெயர் நமக்கு இறைவனால் வெளிப்படுத்தப்பட்டால் அந்த பெயரை உச்சரித்தவுடன் அவைகள் விலகி ஓடுவதை நாம் உணரலாம்

நம்மோடு பிணங்கும் மனிதர்களிடம் என்றும் நாம் கசந்துகொள்ளவே கூடாது ; அவர்கள் எவ்வளவு இடர்கள் செய்தாலும் நாம் இழித்தவாயர்களோ என அவர்கள் நினைக்கும் அளவு அன்போடு நடந்துகொள்ளவேண்டும்

ஆனால் அந்த தீய குணத்தை தூண்டும் அசுர ஆவியை நாம் கடிந்து பிரார்த்தித்துக்கொண்டே இருக்க வேண்டும்

தர்மயுத்தம் செய்க என்ற ஸ்ரீகிரிஷ்ணரின் கீதை உபதேசம் இன்றைய காலகட்டத்தில் அசுர ஆவிகளுக்கு எதிரான பிரார்த்தனையே ஆகும்

சாத்வீக யுத்தமும் இதுவே ஆகும்

இதற்கு ஆவிகளை பிரித்தறியும் ரஜோஞானம் மிகமிக அவசியம்

**ஆவிகளை பிரித்தறியும் வரத்தால் இடைவிடாது ஆவிமண்டல யுத்தம் செய்யும் அர்ச்சுணர்களே இப்போது அவசியமானவர்களும் கூட . அப்படிப்பட்டவர்களே எதிர்காலத்தில் வரப்போகிற சமரச வேதாந்தி @ அல்மஹதி யாக தரம் உய்ரத்தப்படுவார்கள்**

**நான் அடிக்கடி சொல்லும் விஷயம் ராமரோடு பூமிக்கு வந்த வானவர் சேனையில் பலர் காலம் காலமாக மனிதர்களாக பூமியில் பிறந்துகொண்டே இருக்கிறார்கள் . ஒவ்வொரு யுக மாறுதலின் போதும் யுத்தங்களில் பங்காற்றி இருக்கிறார்கள்**

**அடுத்தடுத்த மனித பிறவிகளில் பாவங்களும் தோஷங்களும் ஆட்பட்டு தேங்கிப்போயும் இருக்கிறார்கள்**

ஏதோ ஒரு ஆன்மீக வட்டாரத்தில் இருந்துகொண்டு போராடிக்கொண்டேயும் இருக்கிறார்கள்

இவர்களுள் ஒருவர் அல்மஹதியாகும் தகுதியை பெற்றவுடன் கலியுக மாறுதலுக்கான உலகம் தழுவிய ஆண்மீகபேரலை ; சகல பேதங்களையும் சமாதனப்படுத்தும் வல்லமையுள்ள பேரியக்கம் இந்தியாவிலிருந்து புறப்படும்

முன்னோடிகளான வள்ளல்பெருமானும் ; சாலை ஆண்டவரும் ஏற்றி வைத்த சன்மார்க்க கொடி கோலோச்சும் காலம் நெருங்கி வந்துகொண்டே இருக்கிறது

கீதை 18 : 22 ஆனால் எவர்களுடைய ஞானம் பேதப்பட்ட குணங்கள் செயல்பட கிடைக்கப்பட்ட சரீரத்தையே நான் என

மயங்கி பற்றிக்கொன்டுள்ளதோ அது உண்மைப்பொருளை உணராதது ; அற்பமானது ; தாமச ஞானம் என்று கூறப்படுகிறது

மனிதன் என்ற தரத்திலேயே கூட முந்திய பிறவியில் எந்த மதத்தில் நாட்டில் பிறந்திருந்தோம் அடுத்த பிறவியில் எந்த மதத்தில் நாட்டில் பிறப்போம் என்றே தெரியாத அற்ப அறிவுள்ளவர்கள் ; இப்பிறவியில் பிறந்த மத கடவுளை தங்களை விட்டால் காப்பாற்ற ஆள் இல்லை என்பதுபோல மதவெறி கொண்டு அடுத்தவரை அழித்தால் சொர்க்கம் கிடைக்கும் என்று நம்பிக்கொள்கிரார்களே ; இப்போது யாரை காரித்துப்புகிறோமோ அடுத்த பிறவியில் அதே மதத்தில் பிறக்கவைத்து இறைவன் வேடிக்கை பார்ப்பார் என்ற அச்சம் அற்று இருக்கிறார்களே அவர்களை ஸ்ரீகிரிஷ்ணர் தாமச ஞானம் உள்ளவர்கள் ; உண்மையை

உணர திறனில்லாத அற்ப அறிவுள்ளவர்கள் என்கிறார்

தற்காலிகமான அழிவுக்கேதுவான சரீரத்தை நான் என நம்பி அழிவில்லாத தனது ஆத்மாவை உணராத மதியீனர்கள் என்கிறார் ஸ்ரீகிரிஷ்ணர்
கீதை 18 : 22 ஆனால் எந்த ஞானம் பிரகிருதியின் காரணமாக வெளித்தோன்றும் உடலையே நான் என நம்பித்திரிகிறதோ அது முக்திக்கு உதவாது . உண்மையை விட்டு விலகிச்செல்லும் மாய்மாலம் அது .இது தாமச ஞானம் எனப்படுகிறது

பூமியில் மனித ஆத்மாக்கள் செயல்படவேண்டுமானால் அதற்கு இறைவன் இரண்டு காரணிகளை அருளவேண்டும்

முதலாவது அதற்கு ஒரு ஸ்தூல சரீரம் அவசியம்

ஆத்மா ஆவிவடிவானது . அது ஒரு தேகம் இல்லாமல் செயல்பட முடியாது . எந்த தேகம் அருளப்படுகிறதோ அந்த தேகத்திற்கு அடிமையாகி அதுவாகவே ஆகியும் விடும் . அதுமட்டுமல்ல அந்த தேகத்தின் புலன்களை கொண்டுதான் புற உலகத்துடன் தொடர்பு கொண்டு தன் அறிவையோ ; ஞானத்தையோ ; இறைவனுடனான தனது தொடர்பையோ வளர்த்துக்கொள்ள முடியும்

ஆத்மாவும் தேகமும் இருந்தால் மட்டும் போதுமா என்றால் இந்த இரண்டும் இயங்க உயிர் அருளப்படவேண்டும் . உயிர் இருக்கும் வரைதான் இரண்டும் இயங்க முடியும்

உயிர் எடுத்துக்கொள்ளப்பட்டால் உடல் அழுகி மண்ணுக்கு திரும்பிவிடும் . ஆத்மா செயலற்ற ஒடுக்கத்துக்கு வந்துவிடும் .

உயிரும் உடலுமற்ற ஆத்மாக்கள் இருக்கின்றன ; ஆனால் இருந்தும் இல்லாதது போல முடக்கப்படுகின்றன

அவை எதிலும் கரைந்துபோய் விடுவதில்லை . இதில் தெளிவில்லாத காரணத்தால் மனிதர்களாக தங்களுக்கு ஏதாவது ஒரு சாக்கு சொல்லி திருப்தி அடைகிறார்கள்

சிவலோகபதவி ; வைகுண்டபதவி ; கர்த்தருக்குள் நித்திரை ; என்றெல்லாம்

மரணித்தல் என்பது எதிலாவது கரைந்துபோவதே அல்ல ; முடக்கப்படுவது

அழியாத ஒளி சரீரம் ஆத்மாவில் உள்ளொளி பெருகி அடைந்தால் ஒழிய ; மீண்டும் மீண்டும் ஒரு கர்ப்பத்தில் தங்கி அழியக்கூடிய ஸ்தூல சரீரத்தை பெறாமல் ஆத்மா முன்னேறாது

சித்தி அடையும் வரை பிறவி எடுப்பதே நாம் நல்லதோ தீயதோ செய்து ஞானம் அடையமுடியும் . இறைதொடர்பில் வளர முடியும்

அரிது அரிது மானிடராய் பிறத்தல் அரிது

அதிலும் செய்த பாவங்கள் காரணமாக தாழ்ந்த மிருக ஜீவன்களாக பிறந்துவிட்டால் நிலைமை இன்னும் மோசமாகும்

இதைக்காட்டிலும் கொடுமை கொடிய பாவம் செய்தவர்கள் பிறவி எடுக்க முடியாமல் பூமியில் அல்லாடித்திரிவதுதான்

ஆயுள் கைதி போல

அப்படிப்பட்டோருக்கு வாரிசுகள் தங்கள் புண்ணியத்தை தானம் செய்து அடுத்த பிறவிக்கு அனுப்பிவைக்கலாம் .

அல்லது தகுதி உள்ள அருளாளர்களிடம் அவை கெஞ்சித்திரியும் .

பல ஆத்மாக்களை பிரார்த்தனை செய்து சிறையில் இருந்து விடுதலை ஆக்கி பிறவிக்கு அனுப்பி வைத்த அனுபவங்கள் அடியேனுக்கும் உண்டு

இதை எதற்காக சொல்கிறேன் என்றால் ஆத்மா முன்னேற்றம் அடைவதற்கு சரீரம் பிறவி இல்லாமல் முடியாது

ஆத்மாவே பிரார்த்தனை செய்து இறை அருளை பெற்றுக்கொள்ள முடியாது . பிறவி எடுத்தே தன் பாவ சாபங்களை கழுவிக்கொள்ள முடியும்

இவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த சரீரம் ; பிறவி என்பது ஆத்மாவில் அருளை பெருக்கிக்கொள்ள என்ற தெளிவு பலருக்கில்லை

வந்து பிறந்த இடத்தின் உறவுகள் ; சொத்துபத்துக்கள் ; கௌரவம் ; சாதி மத பேதங்களில் மாட்டிக்கொள்கிறார்கள்

குறைந்த பட்ச குடும்ப கடமைகளை ; தேவைகளை நிறைவேற்றுவது மனிதனின்

உலக கடமைகள் என்பதை மறுப்பதற்கில்லை

ஆனால் தாமரை இலை தண்ணீரில் இருப்பதுபோல இறைவனின் கிருபையோடு உலக கடமைகளை செய்துவரவேண்டும்

நம் ஆத்மாவில் குடும்பத்தில் இருக்கிற பாவசாபங்கள் என்ன ;இவைகளை எப்படி கடரலாம் என்ற ஆன்ம வாழ்வில் முக்கிய கவனம் இருக்க வேண்டும்

இவைகள் தாம் முந்திய சுலோகங்களில் சொல்லப்பட்ட சத்வ ;ரஜோ ஞானங்கள்

அப்படியில்லாது வந்து மாட்டிக்கொண்ட குடும்பத்தையும் சரீரத்தையும் மட்டுமே நான் என கருதிக்கொண்டு சுயநலத்தோடு தேவைகளை நிறைவேற்றிக்கொள்ளவே பல

**மனிதர்கள் பாடுபட்டுக்கொண்டு இருக்கிறார்கள்**

**இதை அற்பமான தாமச ஞானம் என்கிறார் ஸ்ரீகிரிஷ்ணர்**

**கீதை 18 : 23 எந்த செயல் உன் மீது சுமர்த்தப்படுகிறதோ ; அக்கர்மத்தை நான் செய்கிறேன் என்ற கர்வம் இன்றியும் ; விருப்பு வெறுப்பு இன்றியும் ; இறைவனுக்கு அர்ப்பணம் என்ற உணர்தலோடு செய்யப்பட்டால் அது சாத்வீக கர்மமாகும்**

**இந்த சுலோகத்தில் நியதம் என்றொரு சமஸ்கிரத வாசகம் வருகிறது . அதாவ்து நியதி என்பதற்கு சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட காரியங்கள் என்பதாக அரைகுறைகள் வியாக்கியானம் சொல்லி வருகிறார்கள் .**

சாஸ்திரங்கள் காலத்திற்கு காலம் மாறியிருக்கின்றன .நாட்டுக்கு நாடு சாஸ்திரங்களில் மாற்றங்களும் இருக்கின்றன

அதில் உள்ள ஆகமங்களை யாகங்களை அப்படியே செய்ய வேண்டும் ; புரோகிதர்கள் சொல்லுகிற விதிகளை அப்படியே கடைபிடிக்க வேண்டும் ; அந்த யாகங்களை இறைவனுக்கு அர்ப்பணம் என சொல்லிவிட வேண்டும் என சொல்லிவருகின்றனர் சாஸ்திரங்கள் என்பது சடங்குகள் என்பதாக புரோகிதர்கள் தங்கள் வருமானத்திற்காக சொல்லியதாகும்

நியதி என்பதற்கு விதிக்கப்படுகிற அல்லது நம் மீது வம்பாக வந்து சுமர்கிற விவகாரங்கள் என்பதும் அர்த்தமாகும்

இன்றைய நம் வாழ்வில் நமது சுற்று சூழ்நிலைகளில் ஒரு காரியம் நாம் செய்தாக வேண்டும் என்பது போல ஒன்று வருவதை நாம் பலமுறை பார்த்திருப்போம்

அக்காரியத்தில் நமக்கு ஆதாயம் இருக்கிறதா விருப்பு வெறுப்பு இருக்கிறதா என்பதைப்பொருத்து நாம் ஆக்ரோஷமாக அல்லது ஏனோ தானோவென்று கொஞ்சம் செய்துகொண்டிருப்போம்

ஆனால் யுக புருஷர் ஸ்ரீகிரிஷ்ணர் இறைவனுக்கு அர்ப்பணம் என்பதில் அதிக அழுத்தம் கொடு என்பதை முக்கியப்படுத்துகிறார்

இறைவனுக்கு அர்ப்பணம் என்றால் முதலாவது இது இறைவனுக்கு சித்தமா ; இறைவனா நம் மீது இதை சுமத்துகிறார்

என்பதில் முக்க்யத்துவம் கொடுத்து பிரார்தித்து பார்ப்போம்

இறை சித்தம் என்ன என்று அறிய முக்கியத்துவம் கொடுத்தாலே ஒருவேளை இறை சித்தம் உணரமுடியாமல் நாம் இருந்தாலும் அது பெரிய குற்றமாகாது

இறைவன் எவ்வழியிலாவது அக்காரியம் நடந்துகொண்டிருக்கும் போதே நமக்கு உணர்த்துதல் செய்வார்

தொடர்வதா வேண்டாமா பின்வாங்குவதா என்பதை அவரின் உணர்த்துதலுக்கு தகுந்து நம்மால் அனுபவமாக்க முடியும்

இறை சித்தமா என்ற வினவுதலோடும் இறைவனுக்கு முழு அர்ப்பணமாகவும் ; இதற்கு இன்றைய உடனடியான பலனை விட மிக சரியாக என்றாவது ஒரு நாள் அவர்

நமக்கு தகுந்த பலன் கொடுப்பார் என்ற நம்பிக்கையோடும் உலட்டாமல் அலட்டாமல் முடிந்தளவு நேர்த்தியாக அக்காரியத்தை நிறைவேற்ற முயலவேண்டும்

இப்படி செயல்படும்போது அது இறை சித்தமா என நாம் அறியாத போதும் ஒருவேளை தவறான விளைவுகளை அக்காரியம் கொடுத்தாலும் அதனால் நமக்கு பெரும் பாதிப்பு உண்டாகது

காரிய சித்தி ; நடைமுறை வேதாந்தம் ; செயல் பூர்வ சித்தாந்தம் என்றெல்லாம் பலவாறாக ஞானிகள் சொல்லுகிற காரியங்கள் இப்படிப்பட்டதே

இதுவே சாத்வீக கர்மத்தின் இலக்கணம் என்கிறார் ஸ்ரீகிரிஷ்ணர்

கீதை 18 : 24 ஆனால் எக்காரியங்கள் ஆதாயம் விரும்பியோ ; அதிகாரம் விரும்பியோ கடும்

பிரயத்தனத்தோடு செய்யப்படுகிறதோ அவை ராஜச கர்மங்களாகும்

தனக்கோ அல்லது பிறருக்கோ பலனளிக்க கூடிய காரியங்கள் தன் மீது சுமர்ந்தால் அது இறைவனால் வரப்பெற்றதோ என்ற எண்ணத்தோடு விருப்பு வெறுப்பின்றி நிதானமாக முடிந்தளவு நேர்த்தியாக காரியங்கள் செய்யப்பட்டால் அது சாத்வீக கர்மங்கள் என்று பார்த்தோம்

அப்படியில்லாமல் தனக்கு அதில் என்ன ஆதாயம் என கணக்கிடப்பட்டு அதிக பிரயத்தனத்தோடு ஆக்ரோஷமாக காரியங்கள் செய்யப்படுமானால் அது ராஜச கர்மங்கள் ஆகும்

காரியங்கள் பலனளித்தால் அதில் விருப்பும் ; ஏதேனும் இடரல் உண்டாகுங்கால் அடுத்தவர் மீது வெறுப்புமாக இக்காரியங்கள் நடக்கும்

தனக்கு ஆதாயம் இல்லை என்று தெளிந்த காரியங்களில் அவ்விடத்தில் நாம் இருந்தும் தெரியாதது போல இருந்துகொள்வது ; அக்கறை இல்லாமல் அரைகுறையாக செய்வது ; செய்துகொண்டிருப்பது போல நடித்து காலம் கழிப்பது ; ஓலட்டுவது ; காரியம் கெடுவதில் கொஞ்சம் சந்தோஷமும் பட்டுக்கொள்வது என்றெல்லாம் இவை நீளும் .

ஆதாயம் கருதிய விசய்ங்களில் மனம் பிரயத்தனம் படுவது மட்டுமல்ல ஆயாசமும் படுகிறது என்கிறார் ஸ்ரீகிரிஷ்ணர்

பகுலாயாசம் என்ற வார்த்தை பிரயோகப்படுத்தப்பட்டுள்ளது

சந்தோஷம் ; வெறுப்பு ; துக்கம் என மன உணர்வுகள் நம் மனதை பலகீனப்படுத்துகின்றன

இதனால் தனக்கோ பிறருக்கோ நோவுகள் ; பாவங்கள் உண்டாகின்றன

கீதை 18 : 25 ஆனால் விளைவுகள் எதைக்குறித்தும் அக்கறை இல்லாமல் ; உணர்வு வகைப்பட்டவுடன் செய்யப்படுபவை தாமச கர்மங்களாகும்

தாமச கர்மத்தை விட முந்திய கர்மங்கள் மேலானவை என்றே வேதங்கள் சொல்லுகின்றன

நாம் செய்யப்போகிற காரியம் என்ன விளைவை உண்டாக்கும் என்ற தெளிவு ; நிதானத்தோடு ஆதாயம் கடந்தோ

ஆதாயத்துடனோ காரியங்கள் செய்யப்படும் போது அது பரிசீலனையோடு நடக்கிறது

செய்லகள் நடக்கும்போதே அவை கண்காணிப்புக்கும் உள்ளாகின்றன . சமயத்தில் மாற்றமும் செய்யப்படுகிறது

ஆனால் காரண காரியங்கள் இன்றி ; எவ்வித தெளிவும் இன்றி ; இலக்கும் இன்றி ; சந்தரப்ப சூழ்நிலைகளில் உணர்வு வயப்பட்டதால் மட்டுமே நடந்தேறுகிற காரியங்கள் அல்லது தன்னை வெளிக்காட்டிக்கொள்வதற்காக நடக்கிற காரியங்கள் ; காரியம் செய்கிறவருக்கே உடனடியாக கெடுதலை வரவழைத்ததாக முடிகிறது

சொந்த செலவில் சூனியம் வைத்ததாக ஆகிறவை தாமச கர்மங்களே ஆகும் கீதை 18 : 26 வெற்றி தோல்விகளில் பற்று அற்றவனும் ; நான் செய்கிறேன் என்ற

அகம்பாவம் அற்றவனும் ஊக்கமும் உறுதியும் உள்ளவனும் ; இன்பம் துன்பத்தால் மனம் உழலாதவனும் எவனோ அவனே சாத்வீக கர்த்தா எனப்படுகிறான்

செயலுக்காக செயலை யோகமாக செய்கிறவனும் ; செய்த செயலின் விளைவை இறைவனுக்கே அர்ப்பணித்து விட்டு ; சாதக பாதக அம்சங்களை அனுபமாக கற்றுக்கொள்கிறவனால் மட்டுமே சாத்வீக கர்மத்தை பூமியில் வெளிப்படுத்த முடியும்

கர்ம யோகி என்பதோடு இறைவன் பேரில் சரணாகதி அடைந்த மனதால் மட்டுமே அப்படி வாழமுடியும்

கலியுகத்தில் இவ்வகைப்பட்ட அர்ப்பணிப்பை கூட இருக்கும் நபரோ அல்லது வேறு யாரோ கூட சுயலாபத்துக்காக அறுவடை செய்துகொள்ளலாம்

உழைக்கிறவன் ஒருவன் அறுக்கிறவன் ஒருவன் என்பது கலியுக நியதிகளில் ஒன்று என இயேசுவே சொல்லியுமுள்ளார்

ஆனால் அதுவும் கூட இறைவனால் அனுமதிக்கப்பட்ட நபரால் மட்டுமே அடையக்கூடும் என்பதால் அதில் சாத்வீகி சஞ்சலப்படுவதில்லை

காந்தியின் உழைப்பை தந்திரமாக நேரு தன் தகப்பனாரின் குடும்பத்திற்கு அறுவடை செய்துகொண்டது போல

அண்ணாத்துரையின் உழைப்பை அவர் அமரர் ஆனவுடன் அறுக்க முன்னேற்பாடாக கருணாநிதி இருந்தது போல

தனக்கு நிகராக யாரும் கட்சியில் இருந்து விடக் கூடாது என்பதற்காக கண்ணதாசன் வெறுப்படைந்து தி.மு.க வை விட்டு வெளியேறட்டும் என ஆரம்பத்திலிருந்தே திட்டமிட்டது போல

கலியுகத்தில் சூது வாழ்வுதனை கவ்வும்

ஆனாலும் இறைவன் முடிவில் நன்மையாக்கி சத்திய யுகத்தில் மேன்மையாக்குவார் என்ற நம்பிக்கை சாத்வீகிக்கு உண்டு

தன் குடும்பத்தையே காத்துக்கொள்வார் என்ற நம்பிக்கை உண்டு

கலியுகத்தில் இன்றைக்கே முடிவு வராது என்பதால் ; சாத்தியப்பட்ட அளவு நன்மையான காரியங்களோடு ஒத்து வாழும் இயல்பும் இருக்கும்

ஆனால் ராஜோ குணத்தானோ இன்றைக்கே முடிவை விரும்பி எதற்காகவாவது சண்டையிடுவோம் என்றே இருந்து ஏதாவது ஒரு கட்சியில் போய் சேர்ந்துகொள்வார்கள்

ஒத்து வாழ்தல் என்பதற்கு பதிலாக சண்டையிடுதல் என்பதாகவே செயல்பாடுகள் இருக்கும்

கீதை 18 : 27 செயலின் பலன்களை அறுவடை செய்யும் பற்று கொண்டு இன்பத்தாலும் துன்பத்தாலும் அலசடி படுபவன் ; பேராசை கொண்டு எதிராளியை கடும் நெருக்கடிக்கு ஆளாக்குபவன் ; தூய்மையும் அமைதியும் அற்றவன் எவனோ அவனே ராஜச கர்த்தா எனப்படுவான்

ராஜாக்கள் ; அதிகாரிகள் ராஜோ குணமில்லாமல் நிர்வாகமும் செய்யமுடியாது என்ற நிலை உறுவாகும்

வரலாற்றில் சக்ரவத்திகளாக அறியப்படுபவர்கள் ; பேரரசர்களாக திகழ்ந்தவர்கள் பலர் ; ஈவு இரக்கம் இல்லாமல் முதலாவது அண்ணன் தம்பிகளை கொன்றவர்களாகத்தான் இருப்பார்கள்

உள் பகையை சரிக்கட்ட முடியாமல் போராடிக்கொண்டே இருப்பவர்களால் வெளிப்பகைவர்களை வென்று சாதிப்பதோ இயலாத காரியம் ஆகி விடும்

கலியுகத்தில் கொடுங்கோலர்களைத்தான் பேரரசர்களாக படித்துக்கொண்டிருக்கிறோம்

ஆனாலும் ராஜயோகிகளும் இருந்தார்கள்

தசரதனை ராஜ யோகி என்பார்கள்

அவரின் வாரீசான ராமரும் பத்தாயிரம் ஆண்டுகள் இறை பேரரசு ஒன்றை நீதிநெறியோடு பரிபாலித்தார்

கலியுகம் பிறக்கும் வரை தர்மரும் சில ஆண்டுகள் பரிபாலித்தார்

பிசாசுக்கு பேய் மேல் என்பது இன்றைய கலியுக நடைமுறை

இதில் சாத்வீகிகளின் ; ஆன்மீகார்களின் ஆலோசனையை மதித்து நடக்கிற ராஜாக்கள் இருந்தால் மேன்மை உண்டாகும்

சாத்வீக குணம் என்பது கொஞ்சம் அசந்தால் தாமோ குன்மாக மாறி விடும்

**தாமோ குணத்தை விட ராஜச குணம் எவ்வளவோ மேலானது**

கீதை 18 : 28 அறிவுக்கு அடங்காத மனமும் புலன்களும் ; விவேகம் அற்றவனும் ஆலோசனைக்கு இடம் கொடாதவனும் ; கர்வமுடையவனும் ; வஞ்சகத்தால் பிறர் வாழ்வை கெடுப்பவனும் ; கவலை ; சோம்பலால் காலத்தை கடத்துபவனும் எவனோ அவனே தாமச கர்த்தா எனப்படுவான்

தாமச கர்த்தா இறை அச்சம் ; மனித நேயம் கடந்து புலன்களுக்கு அடிமையாகி ஆசைகளை நிறைவேற்ற சூதுவாதால் பிறர் வாழ்வை கெடுப்பான் ; ஆனால் ராஜோ குணத்தானோ சாம பேத தான தர்மத்தால் வசப்படுத்துவானே தவிர அழிக்கமாட்டான்

**நல்ல சாத்வீகர்களின் தொடர்பு கிடைத்தால் ; அவர்களின் வழிகாட்டுதல்களை ஏற்று நன்மை செய்யவும் தயங்க மாடடார்கள்**

**தாமச கர்த்தாவை விட ராஜோ கர்த்தாவே மேலானவன்**

**ராஜோ கர்த்தாவை விட சாத்வீக கர்த்தாவே மேலானவன்**

**ஒவ்வோர் மனிதனிடம் ஏதாவது இரண்டு தன்மை கலந்தே இருக்கும்**
**கீதை 18 : 29 அர்ச்சுணா மூன்று வகையான குணங்களிலிருந்து இயல்பாக வெளிப்படும் புத்தி ; தெளிவு ஆகியவை ஒருங்கிணைந்தும் தனித்தும் செய்ல்படும் மூன்று வகைகளை இப்போது கேள்**

ஒவ்வோர் மனிதனிடமும் அவனுடைய ஆத்மாவின் வெளிச்சமாக அவனது புத்தி மிளிர்கிறது

அவனிடம் செயல்படும் முக்குணங்களின் அளவீடுகளை பொறுத்த அளவு புத்தியும் அதனது தெளிவும் இயங்கி அவனை வழிநடத்துகிறது

கீதை 18 : 30 எந்த புத்தி புண்ணியத்தை விருத்தியாகும் மார்க்கத்தையும் பாவங்களை நிவிர்த்தியாக்கும் மார்க்கத்தையும் ; செய்யத்தகுந்தது செய்யத்தகாதது என்ற தெளிவால் பயம் ; குருட்டுதைரியம் கடந்த நிலையில் தளைகளிலிருந்து விடுதலை பெறுகிறதோ அந்த புத்தி சாத்வீக புத்தி ஆகும்

ஸ்ரீகிறிஷ்ணர் உள்முக வளர்ச்சியையும் அதன் தொடர்பாக சமுதாயத்தின்

வளர்ச்சிக்கு அந்த மனிதன் செய்யக்கூடிய ஆன்மீக சேவையையும் சேர்த்தே சொல்கிறார்

சாத்வீக புத்தி நாளும் தன் ஆத்மாவில் புண்ணிய வளர்ச்சியை ஒழுங்கு படுத்திக்கொள்கிறது ; தன் ஆத்மாவில் உறைந்துள்ள பாவங்களை கண்டுணர்ந்து அதிலிருந்து விடுபடும் வழியையும் ஒழுங்கு படுத்திக்கொள்கிறது

இந்த அனுபவமே செய்யத்தகுந்தது செய்யத்தகாதது என்ற ஞானத்தை விருத்தியாக்குகிறது

மயங்கிய புத்தி வீணாக பயப்படும் ; அல்லது குருட்டு தைரியத்தால் வாங்கி கட்டிக்கொள்ளும்

ஞானத்தால் செழுமைப்படும் சாத்வீகியோ தான் வளர்வது போலவே சமூதாயத்தையும் இழுத்து மேலே உயர்த்தும் தன்மையையும் அடைவான்

கீதை 18 : 31 பிருதையின் மைந்தனே ; எந்த புத்தி தர்மம் எது அதர்மம் எது ; செய்யத்தகுந்தது எது செய்யத்தகாதது எது என தெளிவுர முடியாமல் அல்லாடுகிறதோ அது ராஜச புத்தி எனப்படும்

ராஜச புத்திக்கு அனுபவம் ஞானம் கொஞ்சம் உண்டு ; அது குறிப்பிட்ட அளவை கடராததால் அல்லாடுதல் இருக்கும்

நாம் செல்லுகிற பாதை சரிதானா என்ற குழப்பம் உண்டாகும்

அததகைய நிலையில் சாத்வீகியின் ;
குருமார்களின் ஆலோச்னையை
கேட்டுக்கொள்வது நல்லது

கீதை 18 : 32 ஆனால் எந்த புத்தி தர்மத்தை
அதர்மம் என்றும் செய்யத்தகாததை
செய்யத்தகுந்தது என்றும் செய்யத்தகுந்ததை
செய்யத்தகாதது என்றும் தீர்மானிக்கிறதோ
அந்த புத்தி மாயையால் சூழப்பட்ட தாமச
புத்தியாகும்

சாத்வீகி தெளிந்த ஞானத்தால் அச்சம்
அற்றவனாக இருப்பான் ; அதே போல
தாமசமும் குருட்டு தைரியம் உள்ளதாக
இருக்கும்

சாத்வீகம் என்பது அசப்பில் தாமசம்
போலவே தோன்றும் என்பார்கள் ; அசந்தால்
தாமசமாக தாழ்ந்து விடக் கூடிய வாய்ப்பும்
உண்டு

அப்படி நேராமல் இருக்க இறைவனின் பரிபூரண ஆசிகள் வேண்டும் என்பதை சாத்வீகி அறிவான்
கீதை 18 : 33 அர்ஜுணா ; இறைவனைத்தவிர வேறேதிலும் நம்பிக்கை இல்லாத சகஜ யோகத்தை அப்பியாசித்து மனதையும் ஐம்புலன்களையும் உயிரில் சதா நிலைநிறுத்துகிறவனே சாத்வீகி

கீதை 18 : 34 ஆனால் பலன் விளைவில் பற்று கொண்டு அறம் ; பொருள் ; இன்பம் என உலகியலில் அங்கீகரிக்கப்பட்டவகைகளிலே கவனம் வைக்கிறவன் ராஜசத்தில் நிலை நிற்கிறவன் ஆவான்

கீதை 18 : 35 துர்க்குணம் உள்ளோன் அச்சம் கவலை தூக்கம் துயரத்துடன் செருக்கையும் விடாமல் செயல்படுகிறானோ அவன் தாமசத்தில் நிலை நிற்பவன் ஆவான்

வெளியே செயல்பாடுகளில் இறைவனையே நம்பி இறைவனையே சார்ந்து செயல்படுவதாக காட்டிக்கொள்கிற பக்தி யோகிகள் உள்ளார்ந்த செயல்பாடுகளில் மனம் மற்றும் புலன்கள் அவர்களது உயிரிலேயே நிலைத்திருக்கும் என்கிறார் ஸ்ரீ கிறிஷ்ணர்

ஏனென்றால் யோகத்தை தொழில் நுட்பமாக்கி அதை அப்பியாசிக்கிறவர்கள் சித்தர் பாடல்கள் & சூஃபி ஞானிகள் உபதேசங்கள் மூலமாக பல உன்னதமான தொழில் நுட்பங்களை கற்றுக்கொள்கிறார்கள் . பெரும்பாடு பட்டு அவர்கள் அடைந்தும் அடையாததை பக்தி யோகத்தில் தன்னியல்பாகவே அடைந்துகொள்கிறார்கள் என்கிறார் ஸ்ரீகிறிஷ்ணர்

சாத்வீகத்தின் நிலை இதுவென்றால் ராஜசம் தாமசம் இவைகளோ ஆன்மீக அப்பியாசத்தை உலகியல் காரியங்களில் வெற்றிகரமாக பயன்படுத்தும் மார்க்கத்தாரிடம் இருக்கின்றன

இத்தகைய குருகுலங்களை ஸ்ரீகிறிஷ்ணர் கண்டிக்கவில்லை . அவரவர் தகுதிக்கேற்ற குருமார்கள் இருக்கவே செய்வார்கள் . அப்படி பல படித்தரங்களில் ஆன்மாக்கள் வளர்ந்தே உன்னதம் அடைவார்

ஆனால் அந்த ஆன்மீக பயிற்சிகள் ராஜோ மற்றும் தாமசத்திற்குள்ளேயே ஊசலாடுபவை

தியான யோக பயிற்சியோடு சமுதாய சட்டங்களால் அறம் பொருள் இன்பம் என வரையறுக்கப்பட்ட எல்லைகளை மீறாமல்

உலகியலில் சாதனை செய்வோர் ராஜஸீகம் உள்ளவர்கள் ஆவார்கள்

ஆனால் அசந்தால் அவர்கள் அச்சம் கவலை தூக்கம் துயரத்துடன் செருக்கையும் விடாத நிலைக்கும் ஆளாவார்கள் அது ராஜோ அல்ல தாமசத்தில் நிலை நிற்பதாகி விடும் என எச்சரிக்கிறார் ஸ்ரீகிறிஷ்ணர்

கீதை 18 : 36 பரத குல செம்மலே ; இப்போது அப்பியாசிக்கப்படும் மூன்று விதமான சுகம் பற்றிய இலக்கணத்தையும் என்னிடம் கேள்

கீதை 18 : 37 ஆரம்பத்தில் விஷம் போலவும் முடிவிலோ அமிர்தம் போல தித்திக்கும் பஜனை ; தியானம் ; சேவை ஆகியவைகளில் எவனின் மனம் நிலைக்கிறதோ ; அந்த பயிற்சியால் இன்ப துன்பத்தை கடந்தவன் ஆகிறானோ அவன் சதா இறை பேரின்பத்தில் நிலைத்தவன் ஆவான்

கீதை 18 : 38 ஆரம்பத்தில் அமிர்தம் போலவும் முடிவிலோ விஷம் போலவும் இம்ஸிக்கும் புலன்களால் இன்பமாக நுகரப்படுபவைகளில் எவனின் மனம் நிலைக்கிறதோ ; அந்த பயிற்சியால் அவன் சதா ராஜச இன்பத்தில் நிலைத்தவன் ஆவான்

கீதை 18 : 39 எந்த சுகம் ஆரம்ப காலத்திலும் அனுபோகத்தின் போதும் பின் விளைவிலும் மயக்கத்தை உண்டாக்குகிறதோ ; ஆத்மா மாயையால் பீடிக்கப்படுவதால் சோம்பல் தூக்கம் கவனமின்மை ஆகியவற்றால் அல்லாடுகிறதோ ; அவன் சதா தாமச இன்பத்தில் நிலைத்தவன் ஆவான்

மேற்கண்ட மூன்றும் அவரவ்ர் ஆத்மாவின் தரத்தை பொறுத்த அனுபவமாகும்

சாத்வீகத்தில் முற்பிறவியில் வளர்ந்த அளவு இப்பிறவியில் இயல்பாகவே பஜனை ; தியானம் ; சேவை ஆகியவைகளில் எவனின் மனம் நிலைக்கிறதோ அவன் அவ்வப்பொழுது இறை பேரின்பத்தில் நிலைப்பான்

ராஜசத்தில் முற்பிறவியில் வளர்ந்த அளவு இப்பிறவியில் இயல்பாகவே ராஜரீக செயல்பாடுகளில் காரிய சித்தி உள்ளவன் ஆவான் . ஆனால் அதில் அவன் பிறரின் நியாயத்தை அடக்கி ஒடுக்குகிறவன் ; அளவுக்கும் அதிகமாக பணம் சம்பாதிக்கிறவன் ; அதை தொழில் நேர்த்தி ; தொழில் தர்மம் என சாக்கு சொல்லிக்கொள்கிறவன் பிறரின் பாவத்தையும் சேர்த்தே சம்பாதிக்கிறவன் ஆகிறான்

உலகியல் வாழ்வில் காரிய சித்தி போல இனித்தாலும் முடிவிலே பாவத்தையும் துன்பத்தையும் வருவிக்கும்

இதற்கு எளிய பரிகாரம் தன்னால் பின்பற்ற முடியாவிட்டாலும் இறைமனிதன் ஒருவனை போஷித்து அவனின் செயல்பாடுகளுக்கு பக்கபலமாக இருப்பதாகும்

இப்படித்தான் ஆன்மீகர்களுக்கு பக்க பலமாக இருந்த அரசுகள் நிலைத்தன

ஆனால் முற்பிறவியில் பாவத்தால் பீடிக்கப்பட்டவர்களோ ; அதின் விளைவாக மனோ மாயைகளால் பீடிக்கப்பட்டவர்களாக கீழான உடல் இச்சைகளுக்கே வாழ்வை செயல்படுகிறவர்களாக அல்லாடுவார்கள்

கீதை 18 : 40 இயற்கையாகவே உண்டாகும் இம் முக்குணங்களின் ஆதிக்கத்திலிருந்து

தம்மை விடுவித்துக்கொண்ட பிரகிருதிகள் இப்பூவுலகிலோ ; வானத்திலோ அல்லது தேவலோகத்திலும் கூட இல்லை

கீதை 18 : 41 இயல்பாக அவரவ்ரிடம் உள்ள முக்குணங்களின் கலவைகளை பொறுத்தே அவன் பிராமணனா ; ஷத்ரியணனா ; வைசியணனா அல்லது சூத்ரணனா என ஆத்ம தரம் அடைகிறான்

கீதை மிகத்தெளிவாகவே பிறப்பால் யாரும் பிராமணர் இல்லை என்றே சொல்கிறது

எல்லா ஜாதிகளிலும் ; எல்லா மததினரிலும் ; எல்லா நாட்டினரிலும் அவர்வர் இயல்பால் நான்கு வர்ணாசிரமங்கள் உண்டாகி செயல்படுகின்றன என்பதை சுட்டிக்காட்டுகிறது

எனது பக்கத்து கிராமத்தில் ஏழைத்தாய் ஒருத்தி கல்லுடைத்து இரண்டு மகன்களை ஆளாக்கினாள் . மூத்தவன் அரசு பள்ளிகளிலேயே கல்வியில் திறனால் பொறியியல் படித்து அரசில் மாவட்ட அதிகாரியாக பரிணமித்து பேரும் புகழும் அதிகாரமும் ஆக வலம் வந்தார் . ஓய்வு பெற்றார்

அவரின் சொந்த தம்பி கல்வி வராததால் அண்ணன் சம்பாதித்த பண்ணையில் பண்ணை வீட்டில் ஒட்டுக்குடித்தனம் பண்ணையாளாக வேலை செய்து வருகிறார்

அவரவ்ர் தகுதிக்கேற்ப புதிய சம்பந்தங்கள் பிள்ளைகள் தரம் பிரிந்து விட்டன . ஒரே தாயின் வயிற்றில் அடுத்தடுத்து பிறந்தவர்கள் ஒருவர் ஷத்ரீயனாகவும் ஒருவர் சூத்ரனாகவும் பரிணமித்துவிடுகிறார்கள்

ஒவ்வொரு வீட்டுக்குள்ளும் ஜாதிகளிலும் இந்த நான்கு வர்ணத்தார் பரிணமித்து அந்தந்த வர்ணத்தார் உறவுக்குள் வருகிறார்கள்

சமுதாயம் சீராக இயங்க அந்தந்த வர்ணத்தார் இயல்பு என்ன அவர்கள் செய்ய வேண்டிய தர்மம் என்ன என்பதை இலக்கணமாக கீதை சுட்டிக்காட்டியதை கீதை ஜாதிகளை தூக்கி பிடித்து இந்தியாவை கெடுத்து விட்டதாக திருட்டு திராவிட பிழைப்புவாதிகளும் மதமாற்றிகளும் மதத்துவேசிகளும் பரப்புரை செய்து வருகிறார்கள்

கீதை 18 : 42 மன அடக்கம் ; புலன் அடக்கம் ; ஆன்ம வாழ்வை கடைபிடிப்பதற்கான சுய பரிசோதனையும் புற பொறுமையும் ; அகத்தூய்மை மற்றும் புறத்தூய்மைக்கான முயற்சியும் ; பிறர் குற்றம் பொறுத்தலும் ;

மனம் உடல் வாக்கு ஆகியவற்றில் முடிந்தளவு நேர்மையும் ; வேதம் சாஸ்திரம் கடவுள் பரலோகம் முதலியவற்றில் தேடலும் ; கற்றலும் கற்பித்தாலும் ; பரமார்த்துவத்தை அனுபவத்தில் துய்த்தாலுமே பிராமணத்துவம் ஆகும்

கீதை 18 : 43 வீரமும் சூரமும் ; மிடுக்கும் ; பலமும் ; சாதுர்யமும் ; போரில் சளைக்காமல் முன்னேறுதலும் ; தானமும் தர்மமும் ; நிர்வாகமும் ஷத்ரியத்துவம் ஆகும்

கீதை 18 : 44 உழவு முதலான உற்பத்தி செய்தலும் ; பசுக்களை காப்பதும் ; வியாபாரத்தில் தர்மத்தை கடைபிடித்தலும் வைசியத்துவம் ஆகும் . அனைவருக்கும் சேவை செய்வதுமே ஸூத்ரத்துவம் ஆகும் .

பிராமணத்துவம் என்று சொல்லப்பட்ட சுய பரிசோதனையுடன் கூடிய ஆன்ம வாழ்வில் இடையறாத தேடல் என்பது பிறப்பால் வருவதல்ல . ஒரு பெருங்கூட்டத்திற்கு இருக்க கூடியதுமல்ல . இங்கொன்றும் அங்கொன்றுமாக சில நபர்களே இப்பயிற்சியில் இருப்பார்கள்

பூசைப்பணியை பிராமணத்துவம் என்று கீதை சொல்லவே இல்லை .
உண்மையில் பூசைப்பணி சேவை வகைப்பட்டது ஆனதால் சூத்ரத்துவதிலேயே வருகிறது

ஆனால் கருவறைப்பணியில் இருக்கும் போது ; கருவறைக்குள் நுழையும் போது கடைபிடிக்க வேண்டிய தூய்மை ; புறசுத்தம் மற்றும் அகசுத்தம் செய்து மடிகட்டிக்கொள்ளுதல் அவசியம் . மேலும் அங்கு வரும் மனிதர்களின் அசுத்தங்கள்

தோஷங்கள் தொட்டு தீட்டு கருவறைக்குள் நுழைய கூடாது என்ற ஆகம நியமங்கள் கருவறைப்பணியில் இல்லாத போது செய்யக்கூடியவை அல்ல . அவசியமும் இல்லை

கருவறைப்பணியில் இல்லாத சமயம் மடி கட்டிக்கொள்ளாதபோது சாதாரண மனிதர்களுடன் இயல்பாக தொட்டு பேசுவது தவறே இல்லை

மிக ஆதியிலும் கிராம கோவில்களில் இன்றளவும் அவரவ்ர் குலத்தில் ஒரு குறிப்பிட்ட பூசாரி குடும்பம் பாராம்பர்யமாக வந்துகொண்டேதான் உள்ளது

அவர்கள் அன்றாட தொழில்களுடன் பூசைப்பணியை கூடுதலாக செய்வார்கள் . ஆனால் யார் வேண்டுமானாலும் கருவறைக்குள் நுழையலாம் என அங்கும்

இல்லை . பிறப்பால் அந்த குடும்பங்களுக்கே அந்த தகுதி வருகிறது

அதாவது பூசைப்பணி என்பது ஒரு தேர்வு ; அந்தந்த தேவர்கள் அதற்கான ஒரு அங்கீகாரம் கொடுக்க வேண்டும்

கிறிஸ்தவத்திலும் அந்த தகுதியை அடைந்தவர்கள் மட்டுமே அல்டர் என சொல்லப்படும் பீடத்தில் நிற்க முடியும்

அதுபோல இசுலாத்திலும் இமாம் என்ற தகுதியுடையவர்களே மிம்பரில் நிற்க முடியும்

ஆனால் யூதர்களில் அதாவது ஆப்ரகாமிய வேதங்களின் துவக்க காலத்தில் மோசே மற்றும் அவரது தம்பி ஹாரூன் குலத்தாருக்கு மட்டுமே என பூசைப்பணி

பிறப்பால் ஒதுக்கப்பட்டு அவர்கள் வேறு தொழில் செய்வதும் தடை செய்யப்பட்டது

அப்படி பூசைப்பணிக்கு மட்டுமே வேறு பிரிக்கப்பட்ட பூசாரிகள் காலப்போக்கில் தங்களின் பாதுகாப்பு கருதி மேட்டிமையை பிற குலத்தார் மீது பில்டப் செய்தது பைபிளிலேயே எழுதவும் பட்டுள்ளது

ஆக தீண்டாமை என்ற கொடுமைக்கு மூல காரணமானவர்கள் ஆப்ரகாமியர்களும் அவர்களின் வகையறாக்கள் ஆன கிறிஸ்தவர்களும் இசுலாமியர்களும் ஆகும்

இஸ்ரேலில் ஒரே கோவிலில் பூசைப்பணி செய்து ஹாரோனியர்கள் பிழைக்க முடியவில்லை என்றான பிறகு அவர்கள் வேறு இனத்தார் ; நாட்டுக்கும் ஏன் இந்தியாவுக்கும் வந்து அங்கு

பூசைப்பணியை செய்கிறவர்களாக தங்களை மாற்றிக்கொண்டார்கள்

ஆனால் முந்தி வந்த ஹாரோனியர்கள் தாங்கள் வந்த இடத்தின் கலாச்சார பண்பாடுகளை வேதங்களை ஏற்றுக்கொண்டு தங்களை மாற்றிக்கொண்டார்களே தவிர தங்கள் மதத்தை திணிக்கவில்லை . மதமாற்றம் ; இனமாற்றம் செய்யவில்லை

ஆனால் யூதர்களில் இன்றளவும் ஹாரோனியர்கள் தங்களை ஆசாரியர்கள் என்ற மேட்டிமையை காட்டியே வருகிறார்கள் . அதுபோல பாஸ்ட்டர்கள் பாதிரிகளும இமாம்களும் மேட்டிமையை காட்டியே வருகிறார்கள்

ஆனால் இந்தியாவைப்போல ஒரு குலமே மேட்டிமையை கடைபிடிப்பதாக இல்லை

இந்து மதத்தில் முந்தி வந்த ஹாரோனியர்களே இந்த மேட்டிமையை கடைபிடித்து ; இப்போது அது அடக்கப்பட்டு விட்டது

தீண்டாமை என்ற கொடுமையே ஆப்ரகாமியர்களின் சரக்கு ஆக இருக்கும் நிலையில் பிந்தி வந்த ஆப்ரகாமிய கிறிஸ்தவர்களும் இசுலாமியர்களும் இந்துமதம் தீண்டாமை கொடுமையுள்ளது என தவறாக பரப்புரை செய்கிறார்கள் .இன்னும் பொய்யின் உச்சத்திற்கே சென்று இந்துமதமே இந்தியர்களின் மதமல்ல என அதை விட்டு வெளியே வாருங்கள் ; நாங்கள் உங்களை வேறு இனத்தானாக மதம் மாற்றி விடுகிறோம் என்கிறார்கள் .

ஆனால் இந்து மதத்தின் வேதங்களை கொடுத்த எவரும் அவதாரங்களும் பிறப்பால் சாதாரண ஜாதிகளை சேர்ந்தவர்களே .

ஞானிகளாகவும் சித்தாந்திக்களாகவும் சாமியார்களாகவும் மகான்களும் வந்து சீர்திருத்துகிறவர்கள் இந்திய குடிகளே

ஏற்கனவே சேவை வகைப்பட்ட சூத்திரர்களே பூசாரிகள் என்றாலும் அவர்களை பிராமணர்கள் என ஜாதிப்பெயர் சொல்லப்பட்டது பிற்காலத்திய தவறு

ஆதியில் இல்லை.

ஆகவே பிராமணர்கள் என்ற ஜாதிபெய்ரை அவர்கள் பயன்படுத்தக் கூடாது என தடை செய்யப்படவேண்டும்

எல்லா ஜாதிகளிலும் குருமார்களே பிராம்ணர்கள் ; மற்றவர்கள் பூசைப்பணியாளர்களே ஆகும்

அதுபோல எல்லா ஜாதிகளிலும் அரசியல் தலைவர்கள் ; அரசு அதிகாரிகள் சத்ரியர்கள் ஆகும்

அதுபோல எல்லா ஜாதிகளிலும் தொழில் வியாபாரம் செய்வோர் வைசியர்களே

அதுபோல எல்லா ஜாதிகளிலும் முதல் போடாத நிர்வாகம் இல்லாத சேவைத்தொழில் செய்வோர் - பூசைத்தொழில் உட்பட சூத்திரர்களே ஆகும் .

இதில் சத்ரியர்கள் வைசியர்கள் நிர்வாகம் நிமித்தம் பிறரை அடக்கும் வேலை செய்வதால் அவர்கள் சந்ததி நீடித்திருக்க ஏதாவது ஒரு குருவை சார்ந்துகொண்டு பொருளால் அவரை தாங்குவது உத்தமம் . சுயதர்மத்தை கைவிடாதே

**கீதை 18 : 45 தன் மேல் தானாக வந்த கர்மங்களில் முழு முனைப்புடன் ஈடுபடும் மனிதன் சித்தி அடையும் பாதையில் பயணிக்கிறான்**

**அது எவ்வாறு என்பதை கேட்பாயாக**

**இறைவனின் அனுமதி இல்லாமல் சந்தர்ப்ப சூழ்நிலைகளால் சிலகர்மங்களை நாம் செய்யும் படியாக நாம் மேலே சுமருவதில்லை**

**பாவ சாப காரியங்கள் தவிர ; நமக்கு அதில் ஏதும் ஆதாயமில்லை ; சம்மந்தமில்லை என தட்டிக்கழிக்கலாகாது**

**தட்டிக்கழிப்பதால் அப்பொருப்பை இறைவன் மாற்றாருக்கு மாற்றியும் விடுவார்**

அல்லது அரைகுறையாக செய்வதாலும் செயலை கெடுத்த பாவம் வரும்

இறைவனுக்காக என்று நாம் மேல் சுமரும் நல்ல கர்மங்களை முழு அக்கறையுடன் நிறைவேற்ற முயல வேண்டும்

கீதை 18 : 46 எந்த பரம்பொருளிலிருந்து சகல அசையும் அசையா பிரகிருதிகள் உண்டாகிறவையோ : எந்த பிரபஞ்சத்திலிருந்து உலகம் முழுமையும் உண்டாயிருக்கின்றபவோ அந்த பரமாத்மாவின் அங்கமாக தன்னுடைய கர்மங்களை அர்ப்பிக்கிறவன் பரம சித்தியை அடைவான்

தான் அந்த பரமாத்மாவின் அங்கம் என உணர்ந்து பிரபஞ்சம் முழுமையும் செயல்படுவதில் தன்னுடைய பங்கை

நிறைவேற்றுகிறேன் என்ற அக்கறையுடன் நிறைவேற்ற வேண்டும்

லாபம் ஆதாயம் குறித்த சிந்தனைகள் நம்மை கட்டுப்படுத்தலாகாது

கீதை 18 : 47 நேர்த்தியாக வடிவமைக்கப்பட்ட பிறரது தர்மத்தை காட்டிலும் ; தன்னுடைய சொந்த தர்மம் எதுவோ அதை குறைகளுடன் நிறைவேற்றுவதே உத்தமம்

தன் மேல் சுமர்ந்த கடமைகளை நிறைவேற்றுகிற மனிதன் பாவத்தை அடையமாட்டான்

கீதை 18 : 48 குந்தியின் மகனே ! குறையே உள்ளதாயினும் தன் மேல் சுமந்த கர்ம்த்தை விட்டுவிடலாகாது

நெருப்பை சூழ்ந்துள்ள புகை போலவே எல்லா செயலகளும் ஏதோ ஒருவகையில் குறை உள்ளதாகவே உள்ளது

கீதை 18 : 49 எதிலும் பற்றற்ற மனநிலையுடன் ; ஆசைகளை கடந்து ; உள்ளத்தை அடக்கியவன் சாங்கிய யோகத்தால் கரமத்தளைகலிருந்து விடுதலை அடைகிறான்

அவதார தூதர் கிறிஷ்ணர் இயல்பாக வாழ்க்கையின் நிகழ்வுகள் வழியாக ஓடிக்கொண்டிருக்கும் மனிதர்களும் உய்வடைவார்கள் என்று ஆறுதல் கொடுக்கிறார்

தானுண்டு தான் பெண்டு பிள்ளைகள் உண்டு என வாழ்வுக்காகவே சிலர் ஓடிக்கொண்டிருப்பார்கள்

அவர்களின் கடமைகளை பூர்த்தி செய்வதே அவர்களை சிறை படுத்தி விடுகிறது

அதை யுகபுருஷன் தவறு என்று சொல்லவில்லை

ஆனால் பிறர் வாழ்வை கெடுக்கலாகாது என்ற நியதியை தாண்டிவிடலாகாது

தான் வாழ பிறரை கெடுக்காதே என்ற லட்சியமே இறை பக்தி ஆகிவிடுகிறது

தன் மேல் சுமத்த கடமையாகிய குடும்பத்தை ஆளாக்குதல் ; சமுதாயத்திற்கு பாரம் ஆகாமல் சொந்த காலில் அவர்களை நிற்க வைத்தால் ; ஆரோக்கியமான வளமான அடுத்த தலைமுறையை உருவாக்குதல் ; இவையும் இறை தொண்டே ஆகும்

நேர்த்தியான முறையில் வளர்க்கப்படாத பிள்ளைகள் சமுதாயத்திற்கு தீங்கு ; துன்பம் தருகிறவர்களாக ஆகிவிடுவார்கள்

ஆகவே அதற்கென காலமும் திறனும் உள்ளவர்களை இறைவன் எழுப்புவார்

அதனால் தீமைகளை கண்டு விலகி ஓடினாலும் தன்னால் இயலாததை இறைவனிடம் பிரார்த்தனையாக வைத்துவிட்டால் போதுமானது

ஆனாலும் சந்தர்ப்ப சூழ்நிலைகளில் நாம் நமக்கு சம்பந்தம் இல்லாத பொது காரியங்கள் சிலவற்றை செய்யும் படியாக அமையும்

அங்கு வேறு யாரும் இருக்கமாட்டார்கள் ; நாமே அதை செய்யும்படியாக இருக்கும்

**அதனால் நமக்கென்ன ஆதாயம் என ஒதுங்கலாகாது என்றும் கிறிஷ்ணர் வழிகாட்டுகிறார்**

**இறைவனுக்கு அர்ப்பிதமாக அதை முடிந்தளவு முழு மானதுடம் செய்யவேண்டும்**

**தன் மேல் சுமரும் கடமைகள் என்ற அர்த்தம் இறைவனால் உண்டாக்கப்பட்டவை என்னும் அர்த்தத்தை நாம் உணர்ந்து கொள்ளவேண்டும்**

**இவை எல்லாமே சுய தர்மமே ஆகும்**

**சொந்த வாழ்வில் குடும்பத்தை ஆளாக்குவது சுய தர்மம் என்றால் பிறப்பால் குலம்**

**கோத்திரம் என்று ஒரு சுய தர்மம் என்று உள்ளது**

**ஜாதி என்பதே இல்லை என்பதாக பரப்புரை செய்யும் கிறிஸ்தவ்ர் ; இசுலாமியர் அவர்களின் வேதத்தில் குலம் கோத்திரம் பற்றிய குறிப்புகள் திரும்ப திரும்ப வருவதை கவணிக்க தவறுகிறார்கள்**

**மத்தேயு 1 : 1. ஆபிரகாமின் குமாரனாகிய தாவீதின் குமாரனான இயேசுகிறிஸ்துவினுடைய வம்ச வரலாறு:**

**2. ஆபிரகாம் ஈசாக்கைப் பெற்றான்; ஈசாக்கு யாக்கோபைப் பெற்றான்; யாக்கோபு யூதாவையும் அவன் சகோதரரையும் பெற்றான்;**

**இப்படி சோர்ந்துபோய் படிக்கமுடியாத அளவு 42 தலைமுறை பெயர் சொல்லப்பட்டுள்ளது**

16. யாக்கோபு மரியாளுடைய புருஷனாகிய யோசேப்பைப் பெற்றான்; அவளிடத்தில் கிறிஸ்து எனப்படுகிற இயேசு பிறந்தார்.

17. இவ்விதமாய் உண்டான தலைமுறைகளெல்லாம் ஆபிரகாம்முதல் தாவீது வரைக்கும் பதினாலு தலைமுறைகளும்; தாவீதுமுதல் பாபிலோனுக்குச் சிறைப்பட்டுப்போன காலம் வரைக்கும் பதினாலு தலைமுறைகளும்; பாபிலோனுக்குச் சிறைப்பட்டுப்போன காலமுதல் கிறிஸ்து வரைக்கும் பதினாலு தலைமுறைகளுமாம்.

மொத்தம் 42 தலைமுறை குறிப்பு எதற்காக பைபிளில் கொடுத்துள்ளார்கள் என்று சிந்திப்பதேயில்லை

யூதர்களின் எந்த குடும்பத்திற்கு சென்றாலும் இது போல வம்ச அட்டவணை அவர்கள் குடும்பத்தில் வைத்திருப்பார்களாம்

இதுவே குலம் பைபிள் முழுவதிலும் எல் அல்லது ஜெகோவா என்ற இறைவன் தன்னை யூதர்களின் குல தெய்வமாகவே வெளிப்படுத்திக்கொள்கிறார்

அவர்களில் 12 கோத்திரம் உண்டு

வெளி 21 :10. பெரிதும் உயரமுமான ஒரு பர்வதத்தின்மேல் என்னை ஆவியில் கொண்டுபோய், தேவனுடைய மகிமையை அடைந்த எருசலேமாகிய பரிசுத்த நகரம் பரலோகத்தைவிட்டு தேவனிடத்திலிருந்து இறங்கிவருகிறதை எனக்குக் காண்பித்தான்.

11. அதின் பிரகாசம் மிகவும் விலையுயர்ந்த இரத்தினக்கல்லைப்போலவும்,

பளிங்கினொளியுள்ள வச்சிரக்கல்லைப்போலவும் இருந்தது.

12. அதற்குப் பெரிதும் உயரமுமான மதிலும், கிழக்கே மூன்று வாசல்கள், வடக்கே மூன்று வாசல்கள், தெற்கே மூன்று வாசல்கள், மேற்கே மூன்று வாசல்கள் ஆகப் பன்னிரண்டு வாசல்களும் இருந்தன.

13. வாசல்களின் அருகே பன்னிரண்டு தூதர்களிருந்தார்கள்; அந்த வாசல்களின்மேல் இஸ்ரவேல் சந்ததியாராகிய பன்னிரண்டு கோத்திரத்தாருடைய நாமங்களும் எழுதப்பட்டிருந்தன.

எதிர்காலத்தில் சம்பவிக்க உள்ளதாக வெளிப்பட்ட தீர்க்கதரிசனத்தில் கூட 12 கோத்திரத்தார் அவரவர் வாசல் வழியாகத்தான் பிரவேசிக்க முடியுமாம்

**இந்த 12 கோத்திரத்தார் அல்லாமல் மதம் மாறி கிறிஸ்தவர்கள் ஆனவர்களை பைபிள் புறஜாதியார் (Jentiles) என்கிறது .**

**அதுபோல குரான் நெடுகிலும் குறைசி கோத்திரம் பனு கோத்திரம் என மனிதர்களின் முன்பு சேர்த்தே சொல்லப்படுகிறது**

**13:11. மனிதனுக்கு முன்னாலும், பின்னாலும் தொடர்ந்து வரக்கூடிய (மலக்குகள்தேவர்கள் ) இருக்கிறார்கள். அல்லாஹ்றவின் கட்டளையால் அவர்கள் அவனைப் பாதுகாக்கிறார்கள்; எந்த ஒரு சமூதாயத்தவரும், தம் நிலையயைத் தாமே மாற்றிக் கொள்ளாத வரையில், அல்லாஹ்ற அவர்களை நிச்சயமாக மாற்றுவதில்லை; இன்னும் அல்லாஹ்ற ஒரு சமுதாயத்தாருக்குத் தீவினையை நாடினால், அதைத்தடுப்பவர் எவருமில்லை -**

**அவர்களுக்கு அவனைத்தவிர துணை செய்வோர் எவரும் இல்லை.**

**42:5. மலக்குகள் தங்களுடைய இறைவனின் புகழைக் கொண்டு தஸ்பீஹு செய்து, உலகில் உள்ளவர்களுக்காக மன்னிப்புத் தேடுகின்றனர்; அறிந்து கொள்க! நிச்சயமாக அல்லாஹ்வே மிகவும் மன்னிப்பவன்; மிக்க கிருபையுடையவன்.**

**மனிதர்களை காக்கும் மலக்குகள் குலதெய்வங்கேளே ஆகும் . அவாகள் தத்தமது குலத்தினருக்காக அல்லாஹ் விடம் பரிந்தும் பேசுகிறார்களாம்**

**இந்துமதத்தில் குலதெய்வத்தை வருடம் ஒருமுறையாவது கொண்டாடவேண்டும் அதாவது குலதெய்வத்தின் நாமத்தால் அல்லாஹ் வை வழிபடவேண்டும்**

இந்த குலதெய்வங்களை மதிக்காமல் போனால் சிரியா லெபனான் ஈராக் ஆப்கானிஸ்தான் பாக்கிஸ்தான் ஆகிய நாடுகளில் எடுத்ததெற்கெல்லாம் குண்டை வெடித்து குய்யோ முறையோ என அலறி நாட்டை சுடுகாடாக மாற்றிய நிலைமை வருகிறது

இத்தனை கலேபரத்திலும் அரேபியாவில் எந்த கலவரமுமில்லை

ஏனென்றால் ஆப்ரகாம் மூலமாக வந்த கிருபை என்னவென்றால் யூதர்களுக்கும் அரபியர்களுக்கும் அல்லாஹ் வே பரம்பரை குலதெய்வமும் கூட

அதில் தடுமாற்றம் ஆன அரபியர்களையே அடித்து உதைத்து கொன்று அச்சமூட்டி இஸ்லாத்திற்கு மாற்றினார் முகமது நபி

அவர் அடுத்த இனமக்களையோ
நாடுகளையோ தாக்கவில்லை
இஸ்லாத்துக்கு மதம் மாற்றவில்லை

முகமதுநபிக்கு பிந்திய நாடுபிடி
பேராசைக்கார காலிப் கள் ஈரான் ஈராக்
எகிப்து சீரியா லெபனான் துருக்கி என
தாக்கி இசுலாத்துக்கு மாற்றினர்

தங்கள் குலதெய்வத்தை புறக்கணித்து
அல்லாஹ் வை மட்டுமே வழிபடுவதால்
இந்த நாடுகளில் குழப்பங்களே
மிஞ்சுகின்றன்

ஆப்ரகாமியர் அல்லாத மக்களுக்கு ஆப்ரகாம்
தகப்பனாக மாட்டார்

ஆகவே மாற்று இன முஸ்லீம்கள் தங்கள்
குலதெய்வத்தின் நாமத்தினால் அல்லாஹ்
என்று வழிபடுவதே உத்தமம்

**அந்த குல தெய்வங்களும் அல்லாஹ் விடம் பரிந்துபேசுவார்கள்**

**கீதை 18 : 50 ஞான யோகத்தினால் அடையக்கூடிய உயரந்த நிலை எதுவோ அந்த நிஷ்காமிய சித்தியை அடைந்த மனிதன் பிரம்மத்தோடு ஒன்றுகிறான் ; அந்த முறையை சுருக்கமாக கூறுகிறேன் கேள்**

**கீதை 18 : 51 தெளிந்த புத்தியும் அதனால் விளையும் நுட்பமும் ; சாத்வீக உணவை அளவுடன் உண்பவனாகவும் : ஒலி முதலான பௌதீகத்தால் பாதிக்கப்படாத பயிற்சியுடையவனாகவும் ; ஏகாந்த இடத்தில் தனித்திருந்து ; உள்ளத்தையும் புலன்களையும் பரத்தில் நிலைநிறுத்தி ; மனம் வாக்கு காயம் (உடல்) இவற்றை வசப்படுத்தியவன் விருப்பு வெறுப்பு ; இன்பம் துன்பம் போன்ற இருமைகளை கடந்து**

விடுகிறான் .அதுவே திடமான வைரவ நிலை எனப்படுகிறது .ஆத்ம பலம் எனப்படுகிறது

கீதை 18 : 52 அகங்காரத்தையும் ,கர்வத்தையும் , காமத்தையும் ,குரோதத்தையும் , சொத்து குவித்தலையும் கடந்து எப்போதும் பரத்தோடு ஒன்றி இருமைகளை வென்று மங்காத சாந்தியோடு இருப்பான்

கீதை 18 : 53 அவனே சத்,சித்,ஆனந்தமயமாகி பரப்பிரமத்தில் இரண்டர கலப்பத்தற்கு தகுதி பெறுகிறான்

நிஷ்காமிய கர்மா ; நிஷ்கலங்கா என அடிக்கடி சிவன் ; நாராயணன் முதலான அதிதேவர்களைப்பற்றி கேள்விப்படுகிறோம்

அந்த தூய்மையான புனித நிலை ஆத்மா பெற வேண்டுமானால் ; யோக தியான தவ

தானம் மட்டும் போதாது ; அவையெல்லாம் ஒரு பயிற்சி சாதனை முயற்சி மட்டுமே

ஆனால் விளையக்கூடியது எது ; தேவை எது என்றால் நமது ஆத்மா கலங்கங்கள் ஒவ்வொன்றாக களைந்து தூய்மை அடைவதுதான்

பல பிறவிகளாக நமது ஆத்மாவில் என்னென்ன கறை திரைகள் பதிவாகி உள்ளது என்பதை நாமே அறியோம்

சந்தர்ப்பமும் சூழ்நிலையும் வராததால் வெளியே வராமல் நமக்குள்ளேயே ஒளிந்தும் இருக்கலாம்

வெளிப்பட்ட விஷயங்களை கடப்பதற்கே நாம் பெரும் போராட்டங்களை நடத்தி வெற்றியும் பெற்றிருக்கலாம்

அப்படிபட்ட பட்டறிவு இல்லாமல் அந்த விஷயத்தில் முக்தி இல்லை

ஒவ்வொன்றாக நாம் முக்தி அடைய அடைய எப்போது ஆத்மா முழு தூய்மை அடைகிறதோ அப்போது மட்டுமே எதனாலும் பாதிக்கப்படாத மன நிலையை நாம் எய்த முடியும்

ஞானிகள் ; மார்க்கங்களை உற்பத்தி செய்த அவதாரங்கள் எல்லாம் இப்படி நீ முயற்சித்தால் முழுமை அடையலாம் என தைரியத்தையும் தெம்பையும் டோக்கன் போட்டு நமக்கு கொடுத்திருக்கிறார்களே தவிர இந்த மார்க்க வழிபாடுகளை அல்லது பயிற்சியை தியானத்தை பிரார்த்தனையை செய்துகொண்டிருந்தாலே போதும் என சொல்லவில்லை

இப்பயிற்சிகள் செய்துகொண்டிருக்கும் போது
அவரவர் ஒவ்வொரு விஷயத்திலும்
ஒவ்வொன்றாக நாமே முக்தியை
அடைந்தோமா என உள் முகமாக
உணர்வதே தனிமனித முக்திக்கும் முடிவான
சித்திக்கும் வழி

முக்தி என்பது முன்னுறு சாதனம்
சித்தி என்பது முடிவான பேரின்பமாம்

ஜீவகாருண்யமே மோட்ச வீட்டின்
திறவுகோல் என்றார் வள்ளலார் ; ஆனால்
மோட்ச வீடு என சொல்லவில்லை

இதோ இது ஒரு சாவி ; இதை வைத்து
நீதான் பயணித்து மோட்சத்தை
அடையவேண்டும்

இப்பயிற்சிகள் அனைத்துமே உயவு முன்னுறு
கருவி அவ்வளவே

உடனே ஏதாவது ஒரு குரு மார்க்கத்தை அடைந்தவுடன் ஆகா ஓகோ எங்க குரு தண்டி ; எங்க மார்க்கமே உயர்ந்தது என மத பிரச்சாரம் செய்தாலே போதும் பரலோகம் போயிரலாம் என புற மார்க்கமாக எளிதாக பாதை கிடைத்து விட்டதாக மனிதர்கள் நம்பிக்கொள்கிறார்களே தவிர ; இவை எவையுமே புண்ணியம் பலம் கொடுக்குமே தவிர உன்னை நீ உணராமல் ; உன்னை நீ தூய்மை செய்யாமல் உனக்கு எந்த ஆத்ம முன்னேற்றமில்லை

உன்னை நீ உணர்வதும் பிரம்மத்தை உணர்வதும் ஒன்று

ஏனெனில் இறைவன் தனது முழு சாயலில் தன்னைபோலவே மனிதனை படைத்துள்ளார்

ஆதியாகமம் 1 : 26. பின்பு தேவன்: நமது சாயலாகவும் நமது ரூபத்தின்படியேயும் மனுஷனை உண்டாக்குவோமாக; அவர்கள் சமுத்திரத்தின் மச்சங்களையும், ஆகாயத்துப் பறவைகளையும், மிருகஜீவன்களையும், பூமியனைத்தையும், பூமியின்மேல் ஊரும் சகலப் பிராணிகளையும் ஆளக்கடவர்கள் என்றார்.

27. தேவன் தம்முடைய சாயலாக மனுஷனைச் சிருஷ்டித்தார், அவனைத் தேவசாயலாகவே சிருஷ்டித்தார்; ஆணும் பெண்ணுமாக அவர்களைச் சிருஷ்டித்தார்.

28. பின்பு தேவன் அவர்களை நோக்கி: நீங்கள் பலுகிப் பெருகி, பூமியை நிரப்பி, அதைக் கீழ்ப்படுத்தி, சமுத்திரத்தின் மச்சங்களையும் ஆகாயத்துப் பறவைகளையும், பூமியின்மேல் நடமாடுகிற சகல ஜீவஜந்துக்களையும்

ஆண்டுகொள்ளுங்கள் என்று சொல்லி, தேவன் அவர்களை ஆசீர்வதித்தார்.

29. பின்னும் தேவன்: இதோ, பூமியின்மேல் எங்கும் விதைதரும் சகலவிதப் பூண்டுகளையும், விதைதரும் கனிமரங்களாகிய சகலவித விருட்சங்களையும் உங்களுக்குக் கொடுத்தேன், அவைகள் உங்களுக்கு ஆகாரமாயிருக்கக்கடவது

தனது சாயலில் படைத்ததும் அல்லாமல் தன்னைப்போலவே ஆக்கல் ; அழித்தல் ; காத்தல் என்கிற முத்தொழிலும் ஓரளவு உள்ளவனாகவும் திறன் கொடுத்துள்ளார்

குரான் 7:11. நிச்சயமாக நாமே உங்களைப் படைத்தோம்; பின்பு உங்களுக்கு உருக்கொடுத்தோம். அதன்பின், “ஆதமுக்கு (சிவனுக்கு) ஸுஜூது செய்யுங்கள் (சிரம்

**பணியுங்கள்)” என்று மலக்குகளிடம் (தேவர்களிடம்) கூறினோம்; இப்லீஸைத் தவிர (மற்ற மலக்குகள்) யாவரும் (அவருக்குத்) தலைவணக்கம் செய்தார்கள்; அவன் (மட்டும்) தலைவணக்கம் செய்தவர்களில் ஒருவனாக இருக்கவில்லை.**

**7:12. “நான் உனக்குக் கட்டளையிட்ட போது, நீ ஸஜ்தா செய்யாதிருக்க உன்னைத் தடுத்தது யாது?” என்று அல்லாஹ் கேட்டான்; “நான் அவரை (ஆதமை)விட மேலானவன் - என்னை நீ நெருப்பினால் படைத்தாய், அவரை களிமண்ணால் படைத்தாய்” என்று (இப்லீஸ் பதில்) கூறினான்.**

**7:16. (அதற்கு இப்லீஸ்) “நீ என்னை வழி கெட்டவனாக (வெளியேற்றி) விட்டதன் காரணத்தால், (ஆதமுடைய சந்ததியரான) அவர்கள் உன்னுடைய நேரான பாதையில்**

(செல்லாது தடுப்பதற்காக அவ்வழியில்) உட்கார்ந்து கொள்வேன்” என்று கூறினான்.

7:17. “பின் நிச்சயமாக நான் அவர்கள் முன்னும், அவர்கள் பின்னும், அவர்கள் வலப்பக்கத்திலும், அவர்கள் இடப்பக்கத்திலும் வந்து (அவர்களை வழி கெடுத்துக்) கொண்டிருப்பேன்; ஆதலால் நீ அவர்களில் பெரும்பாலோரை (உனக்கு) நன்றி செலுத்துவோர்களாகக் காண மாட்டாய்” (என்றும் கூறினான்).

மனிதர்களுக்கு முந்திய படைப்புகளான தேவர்களில் சிலர் இறைவனை பகைத்து அசுரர்களாக மாறியாதே மனிதனை படைத்ததை வைதுத்தான்

அந்த முதல் மனிதனே சிவன்

இறைவனின் சாயலில் படைக்கப்பட்டவர் ; மட்டுமல்லாது அல்லாஹ் வை வழிபடுவது போலவே தேவர்கள் அனைவரும் சிவனையும் (ஆதமையும்) வழிபடவேண்டும் என்றே உத்தரவிட்டார்

சிவன் அல்லாஹ் வால் படைக்கப்பட்டவர் என்றாலும் அதிதேவர் அந்தஸ்தோடு வழிபடப்பட வேண்டியவர் என்றே ஆப்ரகாமிய வேதங்களும் சொல்கின்றன

மேற்போக்காக மதம் மாற்றுவது ஒரு பக்தி தொண்டு என மனிதர்களாக மதபேதம் செய்துகொண்டார்களே தவிர வேதங்களை உற்று நோக்கினால் ஒன்றினால் ஒன்று செழுமைப்படுவதாகவே உள்ளது

இறைவனின் தூதர்கள் அருளாளர்கள் அவதாரங்கள் சொன்ன இறை வாக்குகளை ; தங்கள் ஆட்சி அதிகாரத்திற்காக மத

பேதமாக செய்து இன மாற்றம் ; பெயர் மாற்றம் செய்து மக்களை பிரிப்பதற்காக பயன்படுத்திக்கொண்டார்கள்

மத பேதங்கள் ; மத வெறிகள் ; மத சண்டைகள் அசுர ஆவிகளின் வழிகேடு ஆகும்

இருமைகள் அற்ற தூய்மை ஆத்மாவில் அடையாமல் இறைவனை உணரமுடியாது ; சொர்க்கம் செல்லவும் முடியாது

மத்தேயு 5:8 இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் தேவனைத் தரிசிப்பார்கள்.

5:9 சமாதானம் பண்ணுகிறவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் தேவனுடைய புத்திரர் என்னப்படுவார்கள்.

5:5 சாந்தகுணமுள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் பூமியைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்.

கீதை 18 : 54 சத் , சித் ,ஆனந்த மயமான பிரம்மத்தில் ஒன்றி அதன் பிரசன்னத்திலேயே திளைக்கும் ஆத்மாவாக மாறிவிடுகிறான் . அதானால் அவனுக்கு எதிலும் ஈர்ப்புகளும் இல்லை ; வருத்தமும் இல்லை என்னும் நிலை அடைகிறான் . அனைத்து படைப்புகளிடமும் சம பாவனை ; சாந்தியோடு பரபிரம்மத்தின் மீதான பக்தியை எட்டுகிறான்

பிரம்மம் ; பரப்பிரமம் என்ற இரு வார்த்தைகளும் மேலோட்டமாக ஒன்று போல அறியப்படுகின்றன

ஆனால் கீதையின் சாரத்தை உணர்ந்த பிறகே பிரம்மம் வேறு பரப்பிரமம் வேறு என்ற நுட்பமான ஞானம் எட்டப்படுகிறது

சர்வ படைப்புகளும் ஆனது பிரம்மம் என்றால் பரப்பிரமம் என்பது அந்த பிரபஞ்சத்தை தன்னிலிருந்து வெளிப்படுத்திய வெட்டவெளியை குறிக்கிறது

பிரம்மம் என்பது பஞ்சபூதம் அடிப்படையான ஜடம் அதாவது பால்வெளிமண்டலத்தில் இயங்கிக்கொண்டுள்ள ஜடமான நட்சத்திரங்கள் அவற்றின் கோள்கள் விண்மீன்கள் உட்பட அனைத்தும் அவைகளில் உயிருடன் இயங்கி வருகிற சகல தேவர்கள் ; அசுரர்கள் ; விலங்குகள் ; மனிதர்கள் ; பல லோகங்களில் தங்கியிருக்கிற ஆத்மாக்கள் ; பாதாளத்தில் அடைக்கப்பட்டுள்ள ஆத்மாக்கள் ; இன்னும் இடமில்லாமல் பூமியின் வான மண்டலத்தில்

அலைந்து திரிக்கிற தண்டிக்கப்பட்ட ஆத்மாக்கள் உட்பட அனைத்தும் பிரம்மத்தில் அடங்கும்

இந்த முழுபடைப்பும் பரமாத்மா - பிரம்மம் என்ற நாராயணனே ஆகும் . ஆகவேதான் அறிதுயில் கொள்கிறவராக அவரை உருவம் கொடுத்தார்கள்

ஃப்ரஹ்மபூத ஃப்ரஸந்நாத்மா என்ற பதம் முமுக்தன் -என்ற நிலையை அடைந்த சகஜயோகியை குறிக்க ஶ்ரீகிறிஷ்ணர் பயன்படுத்துகிறார் .

பிரம்மஶ்ரீ என்று சிலர் இப்போது ஸ்டைலாக பட்டம் போட்டுக்கொள்கிறார்களே அவர்கள் இந்த நிலையை அடைந்துவிட்டார்களா என தெரியாவிட்டாலும் இந்த நிலையே பிரமரிஷி என்பது .

அப்படி பிரமரிஷி நிலையை அடைந்த பிறகே அதையும் உருவாக்கிய பரபிரம்மம் என்ற அருவநிலை இறைவனை - ஆதியும் அந்தமும் இல்லாத ஆதிபகவனை பற்றிய வெளிப்பாடு தொடர்பே கிடைக்கும் .

அந்த உன்னதமான இறைவனின் தொடர்பு ; பக்தி லாபமாக கிடைக்கும்

லாபதே என்ற பதம் இங்கு பயன்படுத்தப்படுகிறது

பிரம்மமாகிய ஸ்ரீகிறிஷ்ணர் தன்னில் நிலைத்து தன்னோடு இரண்டர கலந்த ஜீவாத்மனுக்கே தன்னை விட பெரியவரான அருவ இறைவனைப்பற்றிய ஞானம் தொடர்பு போனஸாக கிடைக்கும் என்கிறார்

இன்னும் கீதை 9:25 ல் பூமியை விட்டு கடந்து தனது வாசஸ்தலமான வைகுந்தத்தை

அடையும் தகுதியை நீ அடைந்தால் அங்கிருந்து உன்னதமான இறைவனை தரிசித்து பக்தி செய்ய உனக்கு வழிகிடைக்கும் என்கிறார்

இதே கருத்தை ஸ்ரீகிறிஷ்ணர் வெளிநாட்டுக்காரர்களுக்கான அடுத்த அவதாரமான இயேசுவாக வந்து பரம் ஏறுமுன்பும் வலியுறுத்துகிறார்

யோவான் 14 : 1. உங்கள் இருதயம் கலங்காதிருப்பதாக; இறைவனிடத்தில் விசுவாசமாயிருங்கள், என்னிடத்திலும் விசுவாசமாயிருங்கள்.

2. என் பிதாவின் வீட்டில் அநேக வாசஸ்தலங்கள் உண்டு; அப்படியில்லாதிருந்தால், நான் உங்களுக்குச் சொல்லியிருப்பேன்; ஒரு ஸ்தலத்தை உங்களுக்காக ஆயத்தம்பண்ணப்போகிறேன்.

3. நான் போய் உங்களுக்காக ஸ்தலத்தை ஆயத்தம்பண்ணினபின்பு, நான் இருக்கிற இடத்திலே நீங்களும் இருக்கும்படி, நான் உங்களை என்னிடத்தில் சேர்த்துக்கொள்ளுவேன்.

அவதார தூதர்கள் பூமியில் இருந்த காலத்தில் மிக சரியாகவே தங்களை குரு என்றுதான் வெளிப்படுத்திக்கொண்டார்கள்

அவர்கள் சென்றுபோன பிறகு அவரது சீடர்களே அவரை இறைவனுக்கு இணையாக்கிக்கொண்டார்கள் . அவர்கள் நாமத்தால் இறைவா என வழிபட வழிகாட்டப்பட்டிருந்தும் இறைவனை விட்டுவிட்டு குருவையே வழிபடுகிறவர்களாக மாறிக்கொள்கிறார்கள்

ராமரை விட ராம நாமமே பெரியது என பட்டிமன்றம் போடுவார்கள் ; ராம நாமம் என்பதும் ராமரும் ஒன்றுதான் என செயல்படுத்துவார்கள்

ராமநாமம் என்றால் என்ன என்பதைக்குறித்த தெளிவான விளக்கத்தை இயேசுவாக வந்த போதும் சொன்னார்

யோவான் 16 : 23. அந்த நாளிலே நீங்கள் என்னிடத்தில் ஒன்றுங் கேட்கமாட்டீர்கள். மெய்யாகவே மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன், நீங்கள் என் நாமத்தினாலே பிதாவினிடத்தில் கேட்டுக்கொள்வதெதுவோ அதை அவர் உங்களுக்குத் தருவார்.

24. இதுவரைக்கும் நீங்கள் என் நாமத்தினாலே ஒன்றும் கேட்கவில்லை;

கேளுங்கள், அப்பொழுது உங்கள் சந்தோஷம் நிறைவாயிருக்கும்படி பெற்றுக்கொள்வீர்கள்.

25. இவைகளை நான் உவமைகளாய் உங்களுடனே பேசுகிறேன்; காலம் வரும், அப்பொழுது நான் உவமைகளாய் உங்களுடனே பேசாமல், பிதாவைக்குறித்து வெளிப்படையாக உங்களுக்கு அறிவிப்பேன்.

26. அந்த நாளில் நீங்கள் என் நாமத்தினாலே வேண்டிக்கொள்வீர்கள். உங்களுக்காகப் பிதாவை நான் கேட்டுக்கொள்வேனென்று உங்களுக்குச் சொல்லவேண்டியதில்லை.

27. நீங்கள் என்னைச் சிநேகித்து, நான் இறைவனிடத்திலிருந்து புறப்பட்டுவந்தேனென்று விசுவாசிக்கிறபடியினால் பிதாதாமே உங்களைச் சிநேகிக்கிறார்.

28. நான் பிதாவினிடத்திலிருந்து புறப்பட்டு உலகத்திலே வந்தேன்; மறுபடியும் உலகத்தைவிட்டுப் பிதாவினிடத்திற்குப் போகிறேன் என்றார்.

அருவமான அறியமுடியாத இறைவனை இன்றைக்கு பெரும்பான்மையான மனிதர்கள் அல்லாஹ் என அரபியில் அழைக்கும் நிலை உருவாகிவிட்டது

முகமதுநபி அதிதேவர்கள் ஜிப்ரீல் (நாராயணன்) மீகாயீல் ( சிவன்) தரிசனம் பெற்று அவர்கள் மூலமாக அல்லாஹ் வுடன் தொடர்பும் அறிவிப்பும் பெற்று இறக்கிய குரானில் அல்லாஹ் வைப்பற்றி அறிந்து அல்லாஹ் அல்லாஹ் என இசுலாமியர் தொழுதாலும் அல்லாஹ் வின் ஸ்பரிசம் தொடர்பு உணர்வு அற்றவர்களாகவே உள்ளனர் . ஸ்கூல் பிள்ளைகளாக கீழ் படிகளிலேயே வாழ்கிறார்கள் .

ஆகவேதான் ரூபத்தில் அறிந்தவர் மூலமாக அரூபத்தை வழிபாடு என்று இந்துதர்மத்தில் மந்திரங்கள் அனைத்திற்கும் ஒரு பார்மேட் - வடிவம் பீஜமந்திரம் என கொடுத்துள்ளார்கள்

எந்த தேவரின் சிலையின் முன்பு நிற்கிறோமோ அந்த தேவராக ஆனவனை வழிபடுகிறேன் என்ற அர்த்தம் வரும்

ஓம் நம .................... யாய

பெண்ணாக இருந்தால் யை யாய என மந்திரம் சொல்ல பிரார்திக்கவேண்டும்

இன்னும் சிவனுக்கு உருவம் இருந்தும் உருவ வழிபாடு செய்யாமல் உருவமாகிய சிவனும் அருவமாகிய அல்லாஹ் வும் சேர்ந்த அரு

உருவம் என சிவலிங்கத்தை ஆலயங்களில் அமைத்து வழிபட்டார்கள்

ஓம் நம சிவா ய - சிவனாக ஆன அல்லாஹ்றவை வழிபடுகிறேன்

ஆனால் காலப்போக்கில் இந்த உண்மை மறைந்து ; அறியாதவரை வழிபடுவதற்கு பதிலாக அறிந்தவரையே வழிபடுகிறவர்களாக மாறிக்கொள்கிறார்கள்

இயேசு இவ்வளவு சொல்லியிருந்தும் இயேசுவையே கிறிஸ்தவர்கள் இறைவனாக்கி கொண்டதுபோல

இறைவனை விட்டுவிட்டு தங்கள் மதத்தையே இறைவனாக ஆக்கிக்கொகிறார்கள்

**மதமாற்றம் செய்து மதசண்டைகளை போட்டு இன்பம் காண்கிறார்கள்**

**இதனை சரிப்படுத்தவே மும் மத சமரச வேதம் இப்போது வெளியாகிக்கொண்டுள்ளது**

**கீதை 18 : 55 பராபக்தியின் மூலமாக அநாதி காலம் முதல் இருக்கிறவரான அருவமான இறைவனைப்பற்றி உள்ளது உள்ளபடியாக தன்மைகளை தத்வார்த்தமாக உணரத்தொடங்குவான் .அதுபோலவே பிரம்மமாகிய என்னையும் உணர்வான் .**

**கீதை 18 : 56 தத்வார்த்தமான அந்த சமரச நெறியில் எங்களில் நிலைத்திருக்கிறவன் சதா சர்வ கர்மங்களை செய்துகொண்டிருந்தாலும் ; எங்களது அருளால் நித்திய ஜீவனை அடைவான்**

**கீதை 18 : 57 எல்லா கர்மங்களையும் எங்களிடம் அர்ப்பணம் செய்து ஆத்ம சமநிலை யோகத்தை உடையவனாக எப்போதும் எங்களையே உள்ளத்தில் கொண்டு அடைக்கலம் புகுவாயாக**

**கீதை 18 : 58 மேற்கூறியபடி எங்களில் நிலைத்திருந்து எங்களது அருளால் இவ்வுலகத்தின் எல்லா இன்னல்களையும் எளிதாக கடந்து பரலோக வாழ்வை அடைவாய். சுயத்தின் காரணமாக இப்போதனைகளை அலட்சியம் செய்தால் நித்திய ஜீவனை அடையாமல் பெரும் பாடுகளை இவ்வுலகில் அனுபவிப்பாய்**

**யோவான்**

**15 : 1. நான் மெய்யான திராட்சச்செடி, என் பிதா திராட்சத் தோட்டக்காரர்.**

2. என்னில் கனிகொடாதிருக்கிற கொடி எதுவோ அதை அவர் அறுத்துப்போடுகிறார்; கனிகொடுக்கிற கொடி எதுவோ, அது அதிக கனிகளைக் கொடுக்கும்படி, அதைச் சுத்தம்பண்ணுகிறார்.

3. நான் உங்களுக்குச் சொன்ன உபதேசத்தினாலே நீங்கள் இப்பொழுதே சுத்தமாயிருக்கிறீர்கள்.

4. என்னில் நிலைத்திருங்கள், நானும் உங்களில் நிலைத்திருப்பேன்; கொடியானது திராட்சச்செடியில் நிலைத்திராவிட்டால் அது தானாய்க் கனிகொடுக்கமாட்டாததுபோல, நீங்களும் என்னில் நிலைத்திராவிட்டால், கனிகொடுக்கமாட்டீர்கள்.

5. நானே திராட்சச்செடி, நீங்கள் கொடிகள். ஒருவன் என்னிலும் நான் அவனிலும் நிலைத்திருந்தால், அவன் மிகுந்த

கனிகளைக் கொடுப்பான்; என்னையல்லாமல் உங்களால் ஒன்றும் செய்யக்கூடாது.

6. ஒருவன் என்னில் நிலைத்திராவிட்டால், வெளியே எறியுண்ட கொடியைப்போல அவன் எறியுண்டு உலர்ந்து போவான்; அப்படிப்பட்டவைகளைச் சேர்த்து, அக்கினியிலே போடுகிறார்கள்; அவைகள் எரிந்துபோம்.

7. நீங்கள் என்னிலும், என் வார்த்தைகள் உங்களிலும் நிலைத்திருந்தால், நீங்கள் கேட்டுக்கொள்வதெதுவோ அது உங்களுக்குச் செய்யப்படும்.

8. நீங்கள் மிகுந்த கனிகளைக் கொடுப்பதினால் என் பிதா மகிமைப்படுவார், எனக்கும் சீஷராயிருப்பீர்கள்.

9. பிதா என்னில் அன்பாயிருக்கிறதுபோல நானும் உங்களில் அன்பாயிருக்கிறேன்; என்னுடைய அன்பிலே நிலைத்திருங்கள்.

10. நான் என் பிதாவின் கற்பனைகளைக் கைக்கொண்டு அவருடைய அன்பிலே நிலைத்திருக்கிறதுபோல, நீங்களும் என் கற்பனைகளைக் கைக்கொண்டிருந்தால், என்னுடைய அன்பிலே நிலைத்திருப்பீர்கள்.

11. என்னுடைய சந்தோஷம் உங்களில் நிலைத்திருக்கும்படிக்கும், உங்கள் சந்தோஷம் நிறைவாயிருக்கும்படிக்கும், இவைகளை உங்களுக்குச் சொன்னேன்.

குரு இல்லாத வித்தை பாழ் என்பார்கள்

கண்ணால் காணாத இறைவனை வாயிலேயே தொழுது கொண்டிருந்தாலும்

பேப்பரில் வாசித்துக்கொண்டிருந்தாலும் அவரை உணர்வது கடினம்

அதையே அவரின் பிரதிநிதியான அறிந்தவரை குருவாக வைத்து அல்லாஹ்றை வழிபட்டால் தொடர்பு எளிதாகும்

20:109. அந்நாளில் அர்ரஹ்மான் எவரை அனுமதித்து, எவருடைய பேச்சை உவந்து கொள்கிறானோ, அவர்களைத் தவிர வேறு எவருடைய ஷஃபாஅத்தும் (பரிந்துரையும்) பலனளிக்காது.

எவருடைய பரிந்துரை அனுமதிக்கப்படும் என்றால் யார் இறைபணிக்கென இறைவனால் பரத்திலிருந்து பூமிக்கு அனுப்பப்பட்டார்களோ அத்தகையவர்களின் பரிந்துரை ஏற்கப்படும்

வேதங்களில் யார் இறைவனால் அனுப்பபட்டவர்கள் என்ற சாட்சி உண்டு

மனித தரத்திலிருந்து உயர்ந்து குருவாகிறவர்களுக்கு அத்தகைய தகுதி இல்லை

இசுலாத்திலும் தக்பீர் முழக்கத்தில் முக்மது ரசூல் அல்லாஹு என முகமதுநபியை குருவாகவே அடையாளப்படுத்துகிறது

முகமதுநபியின் நாமத்தினால் அல்லாஹ் என அவ்வப்போது பிரார்த்திக்கிறவர்களுக்கு இறைவனின் அருள் தொடர்பு சித்திக்கும்

அவ்வாரும் இல்லாமல் நேரே அல்லாஹ் என்று அவர்கள் அழைப்பதால் பலர் அல்லாஹ் வை உணராதவர்களாகவே காலம் கழிக்கிறார்கள்

கீதை 18 : 59 எந்த சுயத்தின் காரணமாக நீ யுத்தம் செய்யமாட்டேன் என தயங்குகிராயோ ; அது அர்த்தம் அற்றது ; உன்னுடைய பிறப்பின் அர்த்தமே உன்னை போரில் ஈடுபடுத்துகிறது என உணர்வாயாக

கீதை 18 : 60 குந்தியின் மகனே ; அறிவு மயக்கத்தின் காரணமாக தயங்கினாலும் ; உன்னுடைய கர்ம வினையால் ஆட்கொள்ளப்பட்டு அரைகுறையாக செய்ய நேரிடுவாய்

மனிதன் தன் சிற்றறிவினால் நன்மை செய்வதாக நினைத்து தன் கண்ணை தானே குத்திக்கொள்கிறான் என்பது

இறைவனின் ஒட்டுமொத்த திட்டத்தில் சந்தர்ப்ப சூழ்நிலையால் ஒரு காரியம் நம் மேல் சுமரும் . அது ஆழமான பல் நோக்கில் நடக்க வேண்டிய ஒரு காரியமாக இருக்கும்

அதை முழு மனதாக செய்து முடித்தால் உலகத்தாருக்கும் நமக்கும் பேராசிர்வாதமாக் முடிந்திருக்கும்

ஆனால் அதை நமோ சுய பாட்சாபாதம் சுய நீதி பாராட்டிக்கொண்டு செய்யாது தட்டிக்கழித்துக்கொண்டிருப்போம்

ஆனாலும் சூழ்நிலை ஸந்தர்பம் உருவாகி நம்மை வீழ்த்தும் போது உணர்வு வயப்பட்டு அரைகுறையாக அக்காரியம் நடந்தேறும்

இறைவனின் திட்டங்கள் மனிதர்களால் அரைகுறையாக செய்யப்பட்டு கால நீடிப்பு அடைகின்றன

அதற்கும் வேறு வேறு நபர்களை அவர் பயன்படுத்தி காரியம் நிறைவேறும்

அதற்குள் எதிர்தரப்பும் சமுதாயத்தில் வேறு பல பாதிப்புக்களை உண்டாக்கியிருப்பார்கள்

பூமியில் தேவ அசுர யுத்தம் என்பது மனிதர்கள் மூலமாக இன்றளவும் நடந்து கொண்டுதானே உள்ளது

அதில் கருவியாக பயன்படும் மனிதர்கள் தங்கள் சுய அறிவால் அதில் உலப்புதல் செய்ய அதிகாரம் இருக்கிறது . ஏனென்றால் மனிதன் தேவசாயலில் படைக்கப்பட்டவன்

அப்படியில்லாமல் இறைவனது திட்டத்தை உணர்ந்து அதை முழு மூச்சாக செய்து முடித்தால் அது பெரும் பேறாக உலகிற்கே பயன் விளைவிக்கும்

அதை எப்படி அறிவது என்பதே இப்போதைய பிரச்சினை

இறை தூதுவர் ; இறைவனது வாயாக இருப்பவர் பூமிக்கு ராமர் , கிறிஷ்ணர் , இயேசு , முகம்துநபி போல நேரடியாக வந்த காலத்தில் வாழ்ந்தோர் மிக பேறு பெற்றவர்கள்

ஆனாலும் அவருக்கு கீழ்படிந்து ஆசீர்வாதத்தை சுவீகரித்தவர்களைக்காட்டிலும் அவரை புறக்கணித்து விழுந்து போனவர்களும் அதிகம்

2:87. மேலும், நாம் மூஸாவுக்கு நிச்சயமாக வேதத்தைக் கொடுத்தோம். அவருக்குப்பின் தொடர்ச்சியாக (இறை) தூதர்களை அனுப்பினோம்; இன்னும், மர்யமின் குமாரர் ஈஸாவுக்குத் தெளிவான அத்தாட்சிகளைக்

ரூஹுல் குதுஸி (என்னும் பரிசுத்த ஆத்மாவைக்) கொண்டு அவருக்கு வலுவூட்டினோம்; உங்கள் மனம் விரும்பாததை (நம்) தூதர் உங்களிடம் கொண்டு வரும்போதெல்லாம் நீங்கள் கர்வம் கொண்டு (புறக்கணித்து) வந்தீர்களல்லவா? சிலரை நீங்கள் பொய்ப்பித்தீர்கள்; சிலரை கொன்றீர்கள்.

6:10. (நபியே!) உமக்கு முன்னர் வந்த தூதர்களும் நிச்சயமாக (இவ்வாறே) பரிகசிக்கப்பட்டனர்; முடிவில் அவர்கள் எதைப் பரிகசித்துக் கொண்டிருந்தனரோ அதுவே பரிகசித்தவர்களை வந்து சூழ்ந்துகொண்டது.

6:48. (நன்மையைக் கொண்டு) நன்மாராயம் கூறுவோராகவும், (தீமையை விட்டு) எச்சரிக்கை செய்வோராகவுமேயன்றி நாம் தூதர்களை அனுப்பவில்லை; எனவே எவர்

நம்பி, சீர்திருந்தி நடந்தார்களோ, அவர்களுக்கு அச்சமுமில்லை; அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்.

இன்றைய காலகட்டத்திற்கு சமரச வேதத்தை கொண்டுவந்து உலகம் முழுவதும் சமாதானத்தை நிலைநாட்டி சத்திய யுகத்திற்கு மக்களை தயார் படுத்தக் கூடிய சமரச வேதாந்தி (அல்மஹ்தி) ஒருவர் இறைவன் புறத்திலிருந்து வரப்போகிறார் என அனைத்து மதங்களிலும் தீர்க்கதரிசனங்கள் உள்ளன

அவருக்கு இரண்டு அடையாளங்கள் முன் மொழியப்பட்டுள்ளன

வள்ளல்பெருமான் வடலூரில் எழுவார்மேடை ஒன்றை கட்டிவைத்து போயிருக்கிறார்

யார் வடலூரில் ஜீவசமாதியில் உள்ள கல்பட்டு ஐயா முதல் மூவரை மீண்டும் உயிரோடு எழுப்பி இந்த மேடையில் சாட்சி சொல்ல வைக்கிறாரோ அவரே வரப்போகிற ஆண்டவர் என்று அறிவித்துள்ளார்

முகமதுநபியிடம் வரப்போகிற அல்மஹ்றதியின் அடையாளம் என்ன என கேட்டதற்க்கு யார் வானத்திலிருந்து தங்க காசுகளை பெற்று வாரி வாரி வழங்கி பூமியில் வறுமையை ஒழிக்கிறாரோ அவரே என்றார்

இப்படி ஒருவர் வந்தால் மட்டுமே பூமியை கலியுகத்தை விட்டு சத்திய யுகத்திற்குள் நடத்த முடியும்

அப்படி ஒருவர் வரும்வரை அவர் விரைவில் வரட்டும் என்று பிரார்திப்பது உணர்ந்தோர் கடமையாகும்

**கீதை 18 : 61 அர்ச்சுனா ; உடல் என்ற இயந்திரத்தில் ஏற்றி வைக்கபட்டுள்ள சர்வ பிராணிகளையும் மனிதர்களையும் ஆதி அனாதியான இறைவன் தனது மாயையினால் கட்டி அவரவர் கர்ம வினைகளுக்கேற்ப இயங்க செய்துகொண்டுள்ளார்**

**கீதை 18 : 62 நீ எல்லாவகைகளிலும் அந்த ஏக இறைவனையே தஞ்சம் அடைவாயாக .பரமாத்மாவாகிய எனக்கும் கீழ்படிவாயானால் மங்காத சமாதானத்தையும் நிலையான பரம பதத்தையும் சுவீகரிப்பாய்**

**கீதை 18 : 63 இவ்வாறு மறைபொருளுக்கெல்லாம் மறைபொருளான ஞானம் என்னால் உனக்கு உபதேசிக்கப்பட்டது . ரகசியமான இந்த**

**ஞானத்தை முழுமையாக ஆராய்ந்து குரு வழியை விருப்பத்தோடு பின்பற்றுவாயாக**

**மறைபொருளான அந்த ஏக இறைவனை ; ஆதியும் அந்தமும் இல்லாதவனை ; வெட்டவெளியானவனை ; அருவமானவனை ; உலகின் பெரும்பான்மை மக்களால் அல்லாஹ் என்று அழைக்கப்படும் பொதுவானவனை என்னை குருவாக வைத்து வழிபாடு என தெளிவாகவே யுகபுருஷன் ஸ்ரீகிறிஷ்ணர் உபதேசித்துள்ளார்**

**அறியாப்படாத இறைவனை அறிந்தவர் நாமத்தால் அறிந்தவர் மூலமாக வழிபடு என்பதே ராமராக அவர் பூமியில் அவதரித்த போது கொடுத்த உபதேசம்**

**ராம நாமம் என்பது வழ்பாட்டு முறை**

**நாமத்தால் வழிபடுதல்**

இந்துமதத்தின் பீஜ மந்திரங்கள் இரண்டே இரண்டுதான்

ஓம் நம் சிவா ய - சிவனாக வெளிப்பட்ட இறைவனை நமஸ்கரிக்கிறேன்

ஓம் நம நாராயணா ய - நாராயணனாக வெளிப்பட்ட இறைவனை நமஸ்கரிக்கிறேன்

நாராயணனாகவும் சிவனாகவும் உருவமாக வெளிப்பட்ட அருவமே ஆதி

நாம் அறிந்த தேவர்கள் யார் மூலமாகவும் இதே மந்திரத்தை பயன்படுத்தி வழிபடுவதே ஆதி இந்து நெறி

அதுவே பொதுநெறி

**இயற்கை தொன்மையாம் ஆதிநெறி**

**இந்த ஆதிநெறியே இஸ்லாம் ஆக இருந்ததாக முகமது நபிக்கும் அறிவிக்கப்பட்டது**

**இஸ்லாம் என்றால் தூய மார்க்கம் என்று பொருள்**

**ஆதியில் படைக்கப்பட்ட மனிதர்களாகிய தமிழர்கள் எந்த நெறியில் வாழ்ந்தார்களோ அதுவே ஆதி இஸ்லாம் என்றே குரானும் சொல்கிறது**

**30:30. ஆகவே, நீர் உம்முகத்தை தூய (இஸ்லாமிய) மார்க்கத்தின் பக்கமே முற்றிலும் திருப்பி நிலைநிறுத்துவீராக! எ(ந்த மார்க்கத்)தில் அல்லாஹ்ற**

மனிதர்களைப் படைத்தானோ அதுவே அவனுடைய (நிலையான) இயற்கை மார்க்கமாகும்; அல்லாஹ்வின் படைத்தலில் மாற்றம் இல்லை; அதுவே நிலையான மார்க்கமாகும். ஆனால் மனிதரில் பெரும்பாலோர் (இதை) அறியமாட்டார்கள்.

குரானில் இறக்கப்பட்ட 20000 வசனங்களில் தங்களுக்கு புரியாத வசனங்களை எடுத்துவிட்டு வெறும் 7000 வசனங்களை வைத்து மதபேதம் செய்து வருகிறார்கள்

ஆனால் வரப்போகிற அல்மஹ்தி இவை அனைத்தையும் சீர் செய்து சமாதானத்தை சாந்தியை உலகம் முழுவதும் நிலைநாட்டுவார்

கீதையின் சிறப்பு



கீதை 18 : 64 சகல ஞானத்தின் நுட்பங்களையும் எனக்கு உற்ற நண்பனாக நீ இருப்பதால் உனக்கு உபதேசித்தேன் . அதனை சுருக்கமாக்கி மீண்டும் கூறுவேன் கேட்பாயாக

கீதை 18 : 65 எனக்கு பிரியமானவனே ! பொது வழக்கில் இறைவன் என அழைக்கப்படுபவர் மீதே மனதை நிலைநாட்டி பக்தி செழுத்துவாயாக . இறைவனை என்னை குருவாக வைத்து வணங்குவாயாக . இப்படி செய்வதால் பரமாத்மாவான என்னிடமே வந்து சேர்வாய் .

கீதை 18 : 66 செய்யவேண்டிய சகல தர்மங்களையும் கர்மங்களையும்சர்வ வல்லமையுள்ள ஏக அருவ இறைவனுக்கே ; எல்லாவற்றிக்கும் ஆதாரமான என் மூலமாக அர்ப்பணம் செய்வாயாக ; என் நாமத்தினால் அவரை சரணடைவாயாக . பாவங்கள் அனைத்திலிருந்தும் விடுவிப்போம் வருந்தாதே !

கீதை 18 : 67 உனக்கு கூறப்பட்ட இந்த ரகசியமான கீதா உபதேசத்தை தவம் இல்லாதவர்களால் புரிந்துகொள்ளமுடியாது . பக்தியில்லாதவனுக்கும் விருப்பமில்லாதவனுக்கும் என்னிடம் ஈடுபாடு இல்லாதவனுக்கும் சொல்ல வேண்டியதுமில்லை .

கீதை 18 : 68 எந்த மனிதன் என் மீது மாறாத குருபக்தி பூண்டு இந்த உயர்ந்த ரகசியமான கீதாசாஸ்திரத்தை என்னுடைய சீடர்களுக்கு புரிய வைக்கிறானோ அவன் என்னுடனே ஒத்ததிர்ந்து இயைய தொடங்குகிறான் ;

சந்தேகமேயில்லை

கீதை 18 : 69 அந்த பக்தனைக்காட்டிலும் எனக்கு பிரியமான காரியத்தை செய்யக்கூடியவன் மனிதர்களில் வேறு எவனுமில்லை. அப்படியே பூமியில் அவனைக்காட்டிலும் எனக்கு மிகபிரியமான வேறொருவன் இருக்கப்போவதில்லை

கீதை 18 : 70 எந்த மனிதன் நம் இருவருடைய உரையாடல் வடிவில் இறைநெறியாக உள்ள கீதா சாஸ்திரத்தை உள்ளார்ந்த பக்தியுடன் கற்க முனைகிறானோ ; அவன் ஞான வேள்வியினால் நம்மை மகிமைப்படுத்தியவன் ஆவான் என்பது என் அபிபிராயம்

கீதை 18 : 71 எந்த மனிதன் உணர்ந்துகொள்ள முடியாவிட்டாலும் ஆசையுடனும் சிரத்தையுடனும் கேட்கவாவது செய்கிறானோ ; அவனுக்கும் பாவங்களிலிருந்து விடுபட்டு புண்ணிய காரியங்கள் செய்யும் மனிதர்கள்

செல்லக்கூடிய புண்ணிய லோகங்களை அடைந்து நற்பேறடையும் பிறவி அடைவான் .

கீதை 18 : 72 பார்த்தா ! இந்த கீதா சாஸ்திரம் ஆழ்ந்த அக்கறையோடு உன்னால் கேட்கப்பட்டதா ? அஞ்ஞானத்தினால் உண்டான உன் மயக்கம் நீங்கியதா ?

கீதை 18 : 73 அர்ஜுனன் கூறினார் : அச்சுதா ! உங்கள் அருளால் என் மயக்கம் நீங்கியது இப்போதோ சந்தேகம் நீங்கி தெளிவும் ஞானமும் அடைந்தேன் . நிச்சயமாக உங்கள் ஆணைப்படி நடப்பேன் .

கீதை 18 : 74 சஞ்சயன் திருதராஸ்ட்டரரிடம் கூறினார் : இவ்வாறு அதிதேவர் கிறிஷ்ணருக்கும் மகாத்மாவான பாத்தனுக்கும் இடையே நடந்த இந்த அற்புதமான ஞானோ உபதேசத்தை கேட்டேன் .

கீதை 18 : 75 அரசே ! மேன்மையான கிறிஷ்ணருக்கும் அர்ஜுணனுக்கும் இடையே

நடந்த புண்ணியமிக்க அற்புதமான உரையாடலை கேட்டதை நினைத்து மீண்டும் மீண்டும் புழகாங்கிதம் அடைகிறேன்

கீதை 18 : 76 பாவங்கள் அனைத்தையும் போக்கி பரிசுத்தம் கொடுக்கும் சற்குரு கிறிஷ்ணரின் ஞானோ உபதேசத்தை உள்வாங்கியதால் பெரும் புண்ணியம் பெற்றேன்

கீதை 18 : 77 அரசே ! இனி சொல்ல இருக்கிறது ? எங்கே யோகேஸ்வரணான சற்குரு கிறிஷ்னரும் காண்டீபம் ஏந்திய அர்ஜுணனும் இருக்கிறார்களோ அங்கே வெற்றியும் ; நிலைத்த நீதியும் ; நீடிய சமாதானமும் ; மகாலஷ்மியின் ஐஸ்வர்யமும் இருக்கும் என்பதே என் முடிவு

கீதையை உணர்ந்துகொள்வது என்பது முற்பிறவிகளில் ஆத்மாவில் விளைந்துள்ள ஞானம் என்ற அடிப்படை ஆனது .

ஆனால் ஆன்மீக சாதனையின் எந்த மார்க்கமானாலும் ; வேதங்களானாலும் கீதையின் வெளிச்சத்தில் ஆராயப்படுமானால் ஆழ்ந்த மறைபொருட்கள் அவிழ்க்கப்படும் ; வேதத்தின் நுட்பங்கள் வெளியரங்கமாகும்

சமரச வேதம் வெளியரங்கமாகும் இக்காலத்தில் ; கீதையும் பைபிளும் குரானும் ஒன்றை ஒன்று வெளிச்சப்படுத்துவதாகவும் மேன்மைப்படுத்துவதாகவும் ; இறைவனது வாக்கில் அசுர சக்திகளாலும் ; மனிதர்களாலும் கலக்கப்பட்ட இருள்களை அகற்றுவதாகவும் கோலோச்சுவதாகவும் பலரும் உணர்வார்கள்

வாழ்க கீதை

அதிதேவர்கள் நாராயணன்நாமத்தாலும்; சிவனின் நாமத்தாலும் அல்லாஹ்  வின் பேரருள் ; ரட்சிப்பு ;  மேன்மை ஒளிரட்டும்

உலகம் முழுவதும் சாந்தியும்
சமாதானமும் உண்டாகட்டும் !

சத்திய யுகம் மலரட்டும் !

எல்லா புகழும் இறைவனுக்கே !